# ஆசிரியர் உரை

கிறிஸ்துவுக்குள் அன்பான தேவனுடைய ஊழியர்கள், பிள்ளைகளுக்கு எங்களது 1984-ம் புத்தாண்டு வாழ்த்துக்களை இயேசுவின் நாமத்தில் கூறிக் கொள்கிறோம். வருஷம் பிறக்கிறது என்றால் நமக்கு மகிழ்ச்சிதான். வருஷத்தின் ஆரம்ப முதல் முடிவுவரை நம்மை விசாரிக்கும் இறைவன் ஆண்டு துவக்கத்தில் நம்மை சந்தித்தாரல்லவா! தேவன் கொடுத்த ஆசீர்வாத வாக்குகள் எச்சரிப்புகள் என்ன? கடமைகள், கட்டளைகள் என்ன? நீங்கள் தேவ சந்நிதியில் கொடுத்த வாக்கு, எடுத்துக் கொண்ட தீர்மானங்கள் என்ன? அதை ஒவ்வொரு நாளும் எண்ணி ஜீவியுங்கள். தீர்மானங்களை, நிறைவேற்றுவதில் தீவிரப்படுங்கள். அவைகளை நிறைவேற்ற தேவகிருபைக்காக தேவனை நோக்கி ஜெபம் செய்யுங்கள். இதோ கர்த்தர் உங்களோடு பிரயாணப்பட்டு வருகிறார், உங்களோடு சேர்ந்து வழி நடக்கிறார், வழி நடத்துவார். நாங்களும் உங்களுக்கு உதவி செய்வோம், மாதிரி காட்டுவோம், கை கொடுப்போம். புதிய எருசலேம் செய்தி உங்களுக்கு நல்ல உறுதுணையாயிருக்கும். புதிய எருசலேம் செய்திக்காக ஜெபியுங்கள். ஏவப்படுகிறபடி உதவி செய்யுங்கள். இந்த ஊழியத்தில் உங்களுக்கும் பங்குண்டு. இறைவனால் பலனும் கிடைக்கும். இதை வாசிக்கிற எல்லோருக்கும் இறை ஆசீர் உண்டாவதாக!

கிறிஸ்துவுக்குள்,

N. Lazar

Chief pastor N. LAZAR.

# ஜெபம் பண்ணுகிற ஊழியம்

"நாங்கள் தேவ வசனத்தைப் போதியாமல் பந்தி விசாரணை செய்வது நல்லதல்ல......"

"நாங்களோ ஜெபம் பண்ணுவதிலும் தேவ வசனத்தைப் போதிக்கிற ஊழியத்திலும் இடைவிடாமல் தரித்திருப்போம்..." அப். 6 : 2, 4.

எல்லோரும் எல்லா வேலையும் செய்யக் கூடாது. அது செவ்வையாய் இருக்காது. நல்லதுமல்ல. உலக காரியத்திலேயே அப்படியென்றால் ஜீவனுக்கேதுவான ஆவிக்குறிய காரியம் எவ்வளவு திட்டமாய் வரையறுக்கப் பட்டிருக்கிறது பாருங்கள்.

அப்போஸ்தலர்கள் சொல்லுகிறார்கள் மற்ற வேலைகளுக்கு மற்ற ஊழியர்களை நியமிக்கலாம்; நாங்களோ ஜெபம் பண்ணுகிற ஊழியத்திலும், தேவ வசனத்தைப்போதிக்கிற ஊழியத்திலும் இடைவிடாமல் தரித்திருப்போம் என்றார்கள். (இறை வெளிப்பாடு)

நாங்களோ ஜெபம்பண்ணுகிற ஊழியத்திலும் தரித்திருப்போம். ஜெபம் பண்ணுவது விசுவாசிகள் எல்லோரும் தேவைகளுக்காக செய்யவேண்டிய காரியமே. ஜெபிப்பதில் பலபடிகளுண்டு. ஒவ்வொருவருடைய ஆவிக்குறிய வளர்ச்சிக்குத்தக்கஜெபத்தின் நோக்கம், தன்மை, வார்த்தைகள், தொனி, ஏவுதல்கள் வித்தியாசப்படும். ஆனால் நாம் இங்கு கவனிக்கப்போவதோ ஜெபம் பண்ணும் ஊழியமாகும்.

இந்த ஜெபம் பண்ணுகிற ஊழியத்திற்கென்று முக்கியமாக தேவன் தமது ஊழியர்களை நியமிக்கிறார். தேவனால் தெரிந்துகொள்ளப்பட்ட ஊழியர்களின் ஜெபமே தேவனிடம் எடுபடும். ஏனெனில் தேவன் அதற்காக தமது ஊழியர்களை நியமிக்கிறார்.

...அன்றியும், மனுஷரில் தெரிந்துகொள்ளப்பட்ட எந்தப் பிரதான ஆசாரியனும் பாவங்களுக்கா... காணிக்கைகளையும் ப...களையும் செலுத்தும்ப... மனுஷருக்காகத் தே... காரியங்களைப் பற்றி நியமிக்கப்படுகிறான். -எபி.5 : 1. ஆதிசபையின் வீழ்ச்சியினால் புராடஸ்டண்டு (Protestant) சபைகள் எழும்பிய அஸ்திபாரமோ ஒருவருக்கும் இடையாமல் போயிற்று. அதனால் நவீன கொள்கைகள் கிறிஸ்தவர்கள் மத்தியில் தலைதூக்கி வருகின்றன. அவைகளில் ஒன்று விசுவாசிகள் எல்லோருமே சமம்தான். அதில் குருவென்றோ மேய்ப்பன் என்றோ, அப்போஸ்தலன் ... ஊழியன் என்றோ இடையாது. யாரு... யும் செய்யலாம், பேசலாம், எப்படியு... லாம், ஞானஸ்நானம் கொடுக்கலா... விருந்துநடத்தலாம், பிரசங்கிக்கலாம் ... இதற்கென்று ஒருஊழியக்காரன்தேவை... எல்லோரும் ஊழியர்கள்தான். அ... லோரும் சகோதரர்கள் (Brethren) ... அழைக்கப்பட வேண்டுமென்பதே ... வாதம்.

ஆனால் தேவனுக்கு ஒரு மாதி... (தேவதிட்டம்) என்பதை தேவஜனம் ... கொள்ள வேண்டும். ஒவ்வொன்றுக்கு... உண்டு. அது வேதாகமத்தில் தேவ... வார்த்தையின் மூலம் தெளிவாய் எடு... துள்ளார்.

எகிப்திலிருந்து விடுதலையான இஸ்ரேலரெல்லாரும் தேவனுடைய ஊழியர்களே.—லேவி. 25 : 42. ஆனால் ஊழிய...காக பிரத்தியேகப்பட்ட ஊழியக்கார... தலைவர்கள், ஆசாரியர்கள், கோ... உண்டு.—எண். அதி. 18. அப்படிப்போ... ஏற்பாட்டின் மக்களெல்லாரும் இ... களும், ஆசாரியர்களுமே— வெளி... I பேது. 2: 5, 9. ஆனால் நான் ... ஊழியத்திற்காக பர்னபாவையும், ... யும் பிரித்து விடுங்கள் என்று தே... யானவர் திருவுளம் பற்ற, பிரித்தெ... ஊழியத்திற்காக பிரதிஷ்டை செய்யப்ப... ...வ ஊழியர்கள் உண்டு என்பதை (அப். 13:2, 3) அந்த ஊழியங்களிலும், வி...யாசமான ஊழியங்கள் உண்டு என்... உறுதி செய்து கொண்டு வி... அவ்விதமே ஜெபம் பண்ணுகிற... திற்கு தேவ ஊழியர்களை ...சேஷமா அப்போஸ்தலர்களைத் தேவன் ... அதிகார படுத்தியுள்ளார்.

ஆதி. 20 : 7 "அவன் ஒரு தீர்க்கதரி... அவன் உனக்காக வேண்டுதல் செய்வான்

கொடுத்த முடிவு பரியந்தம் நிலை நின்று அவருடைய வருகைக்கு ஆயத்தப்படல் வேண்டும் என்பதே தேவனை அறிந்திருக்குதல் ஆகும்.

நீ தேவனை அறிந்திருக்கிறாயா? அல்லவென்றால் அறிந்து கொள். தொடர்ந்து அவரை அறிந்துகொள்ள முன்னேறு—ஓசி.6:3 அப்பொழுது அவர் தம்மை உனக்கு வெளிப்படுத்துவார்—யோவா. 14 : 21. அவரை கர்த்தரென்று அறிந்து (எரே 24: 7) பரிசுத்தமாக்குகிற கர்த்தர் என்று அறிந்து (லேவி. 22: 31, 32, 33; யோவா 3: 10; 1யோவா 4 :8). அன்புள்ள கர்த்தர் என்று அறிந்து அதற்கேற்றபடி ஜீவிப்பதே கர்த்தரை அறிந்திருக்குதல் ஆகும்—தீத். 1 : 16.

---

"அவராலேயன்றி (இயேசு கிறிஸ்துவாலன்றி) வேறொருவராலும் இரட்சிப்பு இல்லை." —அப். 4: 12.

---

# மோட்ச வழி

## குரு-சிஷ்ய உரையாடல்

**சிஷ்யன்:** குருவே! எனக்கு பரலோகம் செல்ல வழி காட்ட வேண்டும் மோட்சம் செல்லநான் என்ன செய்யவேண்டும்?

**குரு:** வழி காட்டுவோம்!

**சிஷ்யன்:** மோட்சம் போக எத்தனை வழியுண்டு?

**குரு:** ஒரே ஒரு வழிதான் உண்டு. அது 'இயேசுவின் மார்க்கமாகும்' (வழியாகும்).

**சிஷ்யன்:** சிலர் ஒரு ஊருக்கு பல வழிகளிருப்பதுபோல் மோட்சம் போக பல வழிகளுண்டு, எந்த வழியிலும் போய்ச் சேரலாம் என்று சொல்லுகிறார்களே.

**குரு:** இராஜ பாதை என்று ஒன்று உண்டு. பக்க வழிகளில் போகிறவர்கள் இராஜ பாதையை விட்டு விடுவதினால் அன்று சோதோமின் மக்கள் வாசலைத் தேடி, தேடி அலைந்துப் போனதுபோல் அலைந்துப் போவார்கள் —ஆதி. 19: 11. சிலர் பக்க வழியாய் போய் இடறலடைவார்கள்—நீதி. 5: 6-8 இராஜபாதையும் உண்டு; வாசலும் உண்டு.

**சிஷ்யன்:** நான் போக வேண்டிய வழியைக் காண்பிக்கவும்.

**குரு:** சத்தியத்திலுள்ளபடி காண்பிப்போம்: முதலாவது நீர் பாவி என்பதை உணர்ந்து தேவனிடம் மனந்திரும்ப வேண்டும். பாவத்தை வெறுத்து, அறிக்கைசெய்து விட்டுவிட வேண்டும்.

**சிஷ்யன்:** பாவமென்றால் என்ன?

**குரு:** தேவன் செய்யச் சொல்லுகிறதைச் செய்யாததும்; செய்யவேண்டாம் என்று சொல்வதை செய்வதும் பாவமாகும்.

**சிஷ்யன்:** பாவம் எத்தனை வகைப்படும்?

**குரு:** பாவம் மூன்று வகைப்படும். அவை யாவன:

1. தேவனுக்கு விரோதமானவை.
2. மனிதனுக்குவிரோதமானவை.
3. தனக்கு விரோதமானவை.

பொதுவாக பாவமெல்லாம் தேவனுக்கு விரோதமானவையே.

**சிஷ்யன்:** பாவத்துக்கு விளக்கம் தேவை.

**குரு:** 1. கடவுளுக்கு விரோதமான பாவங்கள்: இரட்சிப்பை ஏற்றுக் கொள்ளாதது; தேவனைப்பக்தியோடு ஆராதியாதது; ஆராதனைக் கூட்டங்களைஅசட்டைபாய்விட்டது, அலட்

சியம் செய்தது. காலையிலும் மாலையிலும் வேதம் வாசியாதது, ஜெபியாதது, சாட்சிகூறுதது;பாவத்தை மறைத்தல் போன்றவைகள்.

2. பிறர் மட்டில் நம் கடமைகள்: பெற்றோர்களை நேசிக்காதது; அவர்களுக்கு கர்த்தருக்குள் கீழ்ப்படியாதது; உதவி தேவைப்பட்டவர்களுக்கு உதவி செய்யாதது; பொய் சொல்வது; திருடுதல்; சண்டை செய்தல், தூஷணமாய் பேசுதல்; கொலை செய்தல், பிறருடைய சொத்துக்களைச் சேதப்படுத்துதல் இப்படிப் போன்றவைகள்.

3. சோம்பேறியாயிருத்தல் பெருமை, பொறாமை, கண்ணடக்கமில்லாமை, கெட்ட புஸ்தகங்களை வாசித்தல், கெட்ட செய்கை செய்தல், ஜெபியா திருத்தல் போன்றவைகள்.

சிஷ்யன்: பாவத்தை விட்டு மனந்திரும்பினால் போதுமா?

குரு: தேவனை—இயேசு கிறிஸ்துவை விசுவாசிக்க வேண்டும்.(சுவிசேஷத்தை விசுவாசிக்க வேண்டும்.)

சிஷ்யன்: இயேசு கிறிஸ்து யார்? இயேசு கிறிஸ்துவை விசுவாசிப்பதென்றால் என்ன? எப்படி விசுவாசிக்க வேண்டும்? சுவிசேஷமென்றால் என்ன ?

குரு: இயேசு கிறிஸ்து மனிதனை மீட்கும்படி மனிதனாய் வந்த கடவுள். தேவனுக்குச் சமமான தேவகுமாரன். இயேசு கிறிஸ்துவை விசுவாசிப்பதென்றால் இயேசு கிறிஸ்துவை தெய்வமாக ஏற்றுக் கொண்டு, பாவத்தை விட்டு மனந்திரும்பி, பாவத்தை அறிக்கைசெய்து, விட்டுவிட்டு, பாவமன்னிப்புக்கென்று ஞானஸ்நானம் பெற்றுக் கொள்வதும்; தொடர்ந்து அவருடைய உபதேசத்தைக் கைக்கொள்வதுமாகும். சுவிசேஷமென்றால் இயேசு கிறிஸ்து நம் ஒவ்வொருடைய பாவத்துக்காக மரணமடைந்து, அடக்கம் பண்ணப்பட்டு, மூன்றாம் நாள் உயிர்த்தெழுந்தார் என்பதே— I கொரி. 15: 3, 4. விசுவாசிப்பதென்றால் இதை விசுவாசித்து சுவிசேஷத்தைக் கைக்கொள்ள வேண்டும். அப்பொழுது இரட்சிக்கப்படுவோம். மற்றபடி நமது விசுவாசம் வீணாகும்-I கொரி 15 : 2.

சிஷ்யன்: சிலர் இயேசுகிறிஸ்துவை விசுவாசித்தால் போதும் மனந்திரும்பவோ, ஞானஸ்நானம் பெறவோ தேவையில்லை, இரட்சிப்புக்கு விசுவாசம் ஒன்றே போதும் என்கிறார்களே; அதற்கு ஆதாரமாய் இப்படிப்பட்ட வசனங்களைக் காண்பிக்கிறார்களே—யோவா. 3: 16; அப். 16 : 31; யோவா 6 : 40, 47.

குரு: யோவானை விசுவாசிப்ப தென்றால் —யோவானை விசுவாசித்து அவர் உபதேசத்தை ஏற்றுக் கொண்டு ஞானஸ்நானம் பெறுவது என்று அர்த்தம்—மத். 21 : 24-32; லூக். 7 : 29,30. யோவானை விசுவாசிக்கவில்லை என்றால்— யோவானை விசுவாசித்து ஞானஸ்நானம் பெறவில்லை என்று அர்த்தம். மனந்திரும்பி இயேசு கிறிஸ்துவை விசுவாசித்து முழுகி ஞானஸ்நானம் பெறாதவர்கள் இயேசுவை விசுவாசிக்கவில்லை. இயேசு கிறிஸ்துவை விசுவாசிப்பதென்றால் இயேசு கிறிஸ்துவை விசுவாசித்து, கீழ்ப்படிந்து, நம்பி பற்றிக்கொண்டு, அவர் மேல் சாய்ந்து கொள்ளல் என்று அர்த்தம். வெறும்விசுவாசம் மனிதனை இரட்சிக்காது. இந்த வெறும் விசுவாசம் பிசாசுகளுக்கும் உண்டு—யாக். 2 : 14, 19. பிசாசுகள் இயேசுவை தேவகுமாரனென்று விசுவாசித்து நடுங்குகின்றன. ஆனால் கீழ்ப்படிவது தான் கிடையாது. இப்படிப்பட்ட பேயின் விசுவாசத்தைப்பற்றியும் வேதத்தில் சொல்லியிருக்கிறதே.

இயேசு கிறிஸ்துவை விசுவாசித்து விசுவாசமுள்ளவனாய் ஞானஸ்நானம் பெற்றவனே இரட்சிக்கப்படுவான். மாற்.16 : 16.

---

"அதற்கு இயேசு: நானே வழியும், சத்தியமும், ஜீவனுமாயிருக்கிறேன்.........என்னாலேயல்லாமல் ஒருவனும் பிதாவினிடம் வரான்.
—யோவா. 14 : 6.

# தேவன் அன்பாகவே இருக்கிறார்

நாம் ஆராதிக்கும் தேவன், நாம் நம்பியிருக்கும் தேவன் எப்படிப் பட்டவர் என்பதை நம்மில் அனேகர் இன்னமும் சரியாக அறிந்து கொள்ளவில்லை. இறைவனைப்பற்றி நாம் எவ்வளவு அறிந்திருக்கிறோமோ, அந்த அளவுக்குத்தக்கபடிதான் அவரிடமிருந்து ஆசீர்வாதங்களையும் நாம் பெற்றுக் கொள்ள முடியும். "நம்முடைய கர்த்தரும் இரட்சகருமாகிய இயேசுகிறிஸ்துவை அறிகிற அறிவிலே வளருங்கள்" என்று பரிசுத்த பேதுரு கூறுகிறார். -IIபேது. 3 :18.

"தேவன் அன்பாகவே இருக்கிறார்" (Iயோவா 4 : 8) என்று அவருக்கு மிகவும் அன்பாயிருந்த சீஷனாகிய யோவான் கூறுகிறார். ஆம்! பிரியமானவர்களே, தேவன் அன்பாகவே இருக்கிறார். முழு வேத புத்தகத்தையும் நாம் ஆராய்ந்து பார்க்கும் பொழுது, மனுக்குலத்தின் மீது தேவன் வைத்திருக்கும் அன்பு எத்தனை பெரியது என்பதை நாம் உணரமுடியும். இறைவனின் படைப்புகளை ஆராய்ச்சி செய்த இஸ்ரவேலின் அரசனாகிய தாவீது உணர்ச்சிப் பெருக்கினால் ஆ! என் ஆண்டவரே, இந்த மனிதனுக்கு இத்தனை பெரிய மேன்மையா? மனிதனை நீர் இவ்விதமாய் நினைப்பதற்கு அவன் எம்மாத்திரம் என்கிறார். (சங். 8: 3-8)

இந்த அன்பு ஒருபோதும் அவரில் குறைந்து போகிறதில்லை. சகல பரிசுத்தவான்களோடுங் கூடக் கிறிஸ்துவினுடைய அன்பின் அகலமும், நீளமும், உயரமும், ஆழமும், இன்னதென்று உணர்ந்து, அறிவுக்கெட்டாத அந்த அன்பை அறிந்து கொள்ள வல்லவர்களாகவும், தேவனுடைய சகல பரிபூரணத்தாலும் நிறையப்படவும், அவர் தமது மகிமையினுடைய ஐசுவரியத்தின்படியே, உங்களுக்கு அனுக்கிரகம் பண்ணவேண்டுமென்று வேண்டிக் கொள்கிறேன்.

"தேவன் நம்மேல் வைத்திருக்கிற அன்பை நாம் அறிந்து விசுவாசித்திருக்கிறோம்" (Iயோ. 4 : 16) என்று யோவான் கூறுகிறார். அந்த அன்பின் மகத்துவத்தை அறியாதவர்கள் அதை விசுவாசிக்கமுடியாது என்றுபார்க்கிறோம்.

இறைவனின் அன்பு, தாயின் அன்பைவிட மேலானது என்று வேதம் கூறுகிறது. "ஸ்திரீயானவள் தன் கர்ப்பத்தின் பிள்ளைக்கு இரங்காமல், தன் பாலகனை மறப்பாளோ? அவள் மறந்தாலும் நான் உன்னை மறப்பதில்லை"- ஏசா. 49 : 15.

ஒரு தாய் தன்னுடைய அன்பை வெளிப்படையாக தன் பிள்ளை மீது காண்பிப்பதற்கு அடையாளமாக, தன் பிள்ளையைக் கட்டி அணைத்து முத்தமிடுகிறாள். அது போலவே இறைவனாகிய ஆண்டவரும் தம்முடைய பிள்ளைகளை கட்டி அணைத்து முத்தமிடுகிறார். தேவ அன்பின் பிணைப்புக்குள் வந்தவர்களுக்கு இது தெரியும்— "அவர் தமது வாயின் முத்தங்களால் என்னை முத்தமிடுவாராக." (உன். 1 : 2)

இன்னும் பார்க்கும் போது தாயானவள் தன் குழந்தையின் மழலைச் சொற்களைக் கேட்டு மகிழ்ந்து கொண்டேயிருப்பாள் அது போலவே பரலோகத்தில் வாசம் செய்யும் ஆண்டவர் பூலோகத்தில் வசிக்கும் தமது பிள்ளைகளுடைய அன்பு முகத்தைப் பார்க்கவும், அவர்களுடைய இன்ப சத்தத்தைக் கேட்கவும் விரும்புகிறார்.— "கன்மலையின் வெடிப்புகளிலும், சிகரங்களின் மறைவிடங்களிலும் தங்குகிற என் புறாவே! உன் முகரூபத்தை எனக்கு காண்பி, உன் சத்தத்தை நான் கேட்கட்டும்; உன் சத்தம் இன்பமும், உன் முகரூபம் அழகுமாயிருக்கிறது என்றார்." -உன். 2: 14.

தாயினால் நேசிக்கப்படும் பிள்ளைகளை இந்த உலகத்திலே புத்திசாலிகளாக, ஞானவான்களாக, பக்தியுள்ளவர்களாக, நல்லொழுக்கமுடையவர்களாக வளர்ப்பதற்கு அதற்கான ஏற்பாடுகளைப் பெற்றோர்கள் செய்கிறார்கள். அது போலவே இறைவனாகிய ஆண்டவரும், தம்மால் அன்பு கூறப்படும் மக்கள், இவ்வுலகத்தில் ஞானவான்களாக, தம்மைப் போல் அறிவுடையவர்களாக, பக்தியுள்ளவர்களாக, அன்பிலும், நற்கிரியைகளிலும் தேறினவர்களாக விளங்க வேண்டும் என்பதற்காக, இவ்விதமான ஏற்பாடுகளை இறைவன் உண்டு பண்ணி வைத்திருக்கிறார்.

-எபே. 4: 11- 15; (எபி. 10: 24, 25); ஏசா. 66: 13, 14; எரே. 3: 15.

உலகிலே நாம் காணும் அன்பில் சிறந்த அன்பு அன்னையின் அன்பே. இந்த அன்பை எல்லா உயிரினங்களிலும் நாம் காண்கிறோம். இத்தகைய பாசம் நிறைந்த அன்னைகூட தன் கர்ப்பத்தின் பிள்ளைக்கு இரங்க முடியாத சந்தர்ப்பங்கள் உண்டு. அவர்கள் அவ்வாறு இரங்க முடியாது, உன்னில் அன்பு கூற முடியாது, உன்னைக் கைவிட்டு விடக்கூடிய வேளை வந்தாலும் நான் உன்னை மறப்பதில்லை என்று உன்னை உருவாக்கிப் படைத்த உன் ஆண்டவர் கூறுகிறார்.

இதை வாசிக்கும் அருமை சகோதரனே, சகோதரியே, தாயின் அன்பைவிட மேலான ஒரு அன்பு கிடையாது. ஒரு தாய் தன் பாலகனை எப்படி மறக்கமுடியும்? என்று உனக்குள்ளே நினைக்கிறாயா? ஒரு சம்பவத்தை நினைப்பூட்ட விரும்புகிறேன். ஒரு தேவனுடைய ஊழியக்காரர், ஒரு கல்லூரி மாணவனுக்கு இறைவனின் அன்பைப்பற்றி அடிக்கடி போதித்து வந்தார். நல்ல வசதியுள்ள குடும்பத்திலுள்ள வாலிபன் பெற்றோருக்கு ஒரே பையன். பெற்றோர்கள் தங்கள் உயிரிலும் அதிகமாய் இவனை நேசிக்கிறார்கள். இவனுக்கு வயதான பாட்டி ஒன்றுண்டு. ஒரு நிமிஷங்கூட பேரனைக் காணாது இருந்து கொள்ள மாட்டார்கள். இப்படிப்பட்ட அன்பின் பிடிப்பில் வளர்ந்தபடியால் அன்னையும், பிதாவுமே முன்னறி தெய்வம் என்ற கொள்கையைப் பற்றிக் கொண்டு இறைவனின் அன்பை அறிந்து உணர்ந்து கொள்ள இந்த வாலிபன் முன்வரவில்லை. இவனுக்கு உபதேசம் கொடுத்த தேவனுடைய மனுஷன் தொடர்ந்து ஆண்டவரிடம்: ஆ! கர்த்தாவே உம்முடைய அன்பு எப்படிப்பட்டது என்பதை இந்த வாலிபன் கண்டு கொள்ளும்படி நீர் இவனுடைய மனக் கண்களைத் திறக்க வேண்டும் என்று விண்ணப்பம் செய்து கொண்டிருந்தார். ஒருநாள் இந்த வாலிபன் ஒரு தரிசனம் கண்டான். எப்படி யென்றால், "திடீரென்று இவனுக்கு ஒரு வியாதி வந்து மரண அவஸ்தைப்படுகிறான். மருத்துவர்களெல்லாம் கை விட்டு விடுகிறார்கள். பெற்றோர்களும், வயதான பாட்டியும் தங்களுடைய அன்புக்குரியவன் இனி பிழைக்க மாட்டான் என எண்ணி அழுது புலம்புகிறார்கள். தெய்வமே! உனக்கு ஒரு உயிர் வேண்டுமானால் என்னை எடுத்துக் கொள், என் பிள்ளையை பிழைக்கவை என்று கூறி தாயாரும், தகப்பனும் அழுகிறார்கள். இந்த வயது முதிர்ந்த பாட்டி ஆண்டவனே, உனக்கு கண் இல்லையா? நான் வயதான காலம் என்னை வேண்டுமானால் எடுத்துக்கொள் என் அன்புப் பேரனை பிழைக்கவை நான் சாகவேண்டியவள் என்னை எடுத்துக்கொள் என் பிள்ளை வாழ வேண்டியவன், அவனை வாழவிடு என்று அழுது புலம்புகிறாள். இப்படி இவர்கள் அழுது ஓய்ந்த வேளையில் காவி உடை அணிந்த ஒரு பெரியவர் இந்த வாலிபனுடைய வீட்டிற்கு வருகிறார். படுக்கையில இருக்கும் வாலிபனை பார்க்கிறார். அவனுடைய உயிர் ஊசலாடுகிறது. அருகில் அங்கலாய்த்துக் கொண்டு நிற்கும் தகப்பனுடைய முகத்தைப் பெரியவர் பார்க்கிறார் உங்கள் வீட்டிலிருந்து ஒரு உயிர் இன்றைக்குப் போகப் போகிறது. உங்கள் மகன் மரிக்கக்கூடாது என்று நீங்கள் விரும்பினால், நீங்கள் அவனுக்குப்பதில் உங்கள் உயிரைக் கொடுப்பீர்களா? என்று பையனின் தகப்பனிடம் பெரியவர் கேட்டார். இதுவரை பையனுக்காக ஏங்கி நின்ற தகப்பனின் முகம் சிறிது தயக்கத்துக்குள்ளாகி, பெரியவரைப் பார்த்து அது எப்படி முடியும்? என்று பதில் உரைத்தார் பெற்று வளர்த்த தாயார் தலைவிரித்த கோலமாய் பிள்ளையின் தலைமாட்டில் விம்மி விம்மி அழுது கொண்டு இருக்கிறாள் அவளைப் பார்த்துப் பெரியவர் அம்மா! பிள்ளை சாகவேகூடாதுஎன்று நீ விரும்புகிறாயா? என்று கேட்டார். ஆம் ஐயா, நான் பத்து மாதம் சுமந்து பெற்று வளர்த்த என் பாலகனை இழந்து நான் ஒரு நிமிஷங் கூட வாழமுடியாது. ஆகவே என் மகன் சாகவே கூடாது என்று கட்டிலில் முட்டி முட்டி கதறினாள். அப்படியானால் மகளே ஒன்று செய். உன் மகனுக்காக உன்னுடைய உயிரை விடுவாயானால், உன் மகன் பிழைப்பான் என்று பெரியவர் கூறினார் பெரியவரின் வார்த்தையைக் கேட்ட தாய் சிறிது நேரம் யோசித்து, தன் தலை முடிகளை சரியாய் கட்டிக் கொண்டு பெரியவரைப் பார்த்து அது எப்படிங்க முடியும். அவன் தலைவிதி அவ்வளவுதான் என்று பதில் கூறினாள். அடுத்து வயதான பாட்டியைத் தனியே

அழைத்து பெரியவர் பேசினர். என்ன பாட்டியம்மா பேரன் மேல் ரொம்ப பாசந் இல்லையா என்று கேட்டார். ஆமய்யா அவனுக்கு ஒன்னுன்னு என்றலே வாழவே முடியாது. இந்த ஆண்டவன் என்னை எடுத்துக் கொள்ளக் கூடாதா? என் பிள்ளை உயிருக்காக ஊசலாடுகிறனே என்றுள் பாட்டி. பெரியவர்: அப்படியானல் பாட்டி உங்கள் பேரன் பிழைப்பதற்கு ஒரே ஒரு வழி இருக்கிறது. ஐயா! அதை சீக்கிரமாய் சொல்லுங்க அது எவ்வளவு செலவானலும் பார்க்கலாம் என்றுர்கள். அது நீங்கள் உங்கள் உயிரைப் பையனுக்குப் பதில் கொடுத்தால் உங்கள் பையன் பிழைப்பான். நீங்கள்தான் இந்த உலகத்தில் எல்லாம் அனுபவித்தாச்சு தானே, இனி போகிறதில் ஒன்றும் கவலையில்லையே என்றுர் பெரியவர் சவம் நமக்கு கொடுத்து வச்சது அவ்வளவுதான் என்று பாட்டியும் சலித்துக் கொண்டாள். சிறிது நேரத்தில் வாலிபன் மரித்து விடுகிறன். எல்லாரும் ஓலமிட்டு சிறிது நேரம் கதறுகிறர்கள். ஊரார் உறவினர்கள் வந்து இறுதிச் சடங்குகள் நடத்துகிறர்கள். மறுமையைக் குறித்த நம்பிக்கையற்றவர்கள், வாலிபனின் சடலத்தை சுடுகாட்டில் கொண்டுபோய் கட்டைகளை அடுக்கி உடலை வைத்து தீக் கொழுத்திவிட்டு எல்லோரும் போய் விடுகிறர்கள். துள்ளத்துடிக்க போய் விட்டானே என்று ஊரெல்லாம் பேசிக் கொள்கிறர்கள். இப்பொழுது நேரம் நள்ளிரவாகத் தெரிகிறது. இந்த வாலிபனுடைய வீட்டிற்கு வந்த அதே பெரியவர், எரிந்து கொண்டிருந்த கட்டைகளை விலக்கி அந்த வாலிபனை உயிரோடே எழுப்பி விடுகிறர். இவன் தான் சுடு காட்டில் நிற்பதை உணருகிறன. பெரியவர் தம்பி என்னோடு வருகிறயா! என்று அழைக்கிறர். இல்லை ஐயா, நான் என்னுடைய வீட்டிற்குப் போகிறேன்.

நான் உயிர்பெற்று வந்துவிட்டேன் என்பதை என் அப்பா, அம்மா காணும்போது மிகவும் சந்தோஷப்படுவார்கள். நான் இல்லாமல் என் பெற்றோர்கள் வாழவே மாட்டார்கள். அதோடு என் பாட்டி இருக்கிறதே, அவர்கள் என்மீது உயிரையே வைத்திருக்கிறர்கள் என்று இந்த வாலிபன் கூறுகிறன்.

தம்பி! நீ உயிருடன் போனலும் உன்னை உன் பெற்றோர்கள் ஏற்றுக்கொள்ளமாட்டார்கள். வேண்டுமானல் நானும் உன்னோடு வருகிறேன் என்று கூறி இந்த வாலிபனோடு அவனுடைய வீட்டிற்கு நள்ளிரவு நேரத்தில் இந்தப் பெரியவரும் போகிறர். இவன் மிகுந்த சந்தோஷத்தோடு வீட்டுத் தலைவாசலைத் தட்டுகிறன். அப்பா, அப்பா என்று கூப்பிட்டான். பையனின் சப்தத்தை தகப்பனர் புரிந்துகொண்டார், பதில் கூறவில்லை. அம்மா! அம்மா!! நான் உயிருடன் வந்துவிட்டேன். கதவைத் திறவுங்கள் என்று கூறினன். தாயார் ஐயோ, அதற்குள் பேயாக வந்துவிட்டானே. எனக்குப் பயமாய் இருக்கிறதே என்று கணவனைக் கட்டிப் பிடித்துக்கொண்டாள். பின் வாசலில் போய் பாட்டி! பாட்டி!! கதவைத் திறவுங்களேன் என்று கதறினன். சீ! நாயே, செத்த நாய் நீ இங்கே எதுக்கு வந்தாய். போறியா, இல்லியா என்று உள்ளே இருந்தே துரத்தினள். வாலிபன் பெரியவரைப்பார்த்து கண்ணீர் வடித்தான். ஐயா இந்த உலகத்தின் பாசமெல்லாம் இவ்வளவு தானு, இனி நான் என்ன செய்வது என்று கதறினன். பெரியவர் மகனே அழாதே! நான் உன்னை நேசிக்கிறேன். நீ என்னோடு வா என்று அழைத்தார். ஐயா நீங்கள் யார்? நீங்கள் எங்கே இருக்கிறீர்கள்? என்று பெரியவரைப்பற்றி வாலிபன் கேட்டான். அவர் தம்முடைய இரு கரங்களையும் விரித்து தன்னை யார் என்று அவன் அறிந்து கொள்ளும்படி காண்பித்தார். தேவனுடைய ஊழியர் மூலம், கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவைப் பற்றி அவன் கேள்விப்பட்டிருந்தபடியால் தன்னோடு உரையாடுவது இறைவனே என்பதை அறிந்துகொண்டவன், ஆண்டவரே! என்று அவரின் பாதத்தில் விழுந்தான், விழித்துக்கொண்டான். தான்கண்டது தரிசனம் என்பதை உணர்ந்தான். தாயின் அன்பைவிட இறைவனின் அன்பு பெரிது என அவன் உணர்ந்தான். தேவனுடைய ஊழியரிடம் போய் அவருடன் சேர்ந்து இறைவனின் அன்பின் ஆழம், நீளம், உயரம் இன்னதென்று அறிந்து அனுபவிக்கலானன்.

பரிசுத்த வேதாகமத்திலும் ஒரு சம்பவத்தை நாம் பார்க்கிறேம். ஆபிரகாமின் மறுமனையாட்டியாகிய ஆகார், தன்னுடைய பிள்ளையாகிய இஸ்மவேலுடன் பெயர்செபாவின் வனந்திரத்தில் அலைந்து திரிகின்ற பொழுது, தன்னுடைய அருமை பிள்ளை தண்ணீர் இல்லாமையால் சாகும் வேளை வந்துவிட்டது. பிள்ளை சாகிறதை நான் பார்க்கமாட்டேன் என்று எதிரே அம்பு பாயும் தூரத்தில் போய் உட்கார்ந்து சத்தமிட்டு அழுதாள். (ஆதி 21: 15,16) என்று வாசிக்கிறேம்.

ஒரு தாயானவள் இதற்கு மேல் ஒன்றும் செய்ய முடியாது. அப்படியே பிள்ளையின் பிரிவாற்றுமையால் சில தாய்கள் துக்கத்தினல் உயிர் துறப்பதும் உண்டு. ஆனல் அந்த உயிர் இழந்துபோன பிள்ளையை மறுபடியும் கொண்டு வருவதில்லை.

ஆனல் நாமெல்லாரும் என்றென்றைக்கும் பிழைத்திருக்க வேண்டும் என்பதற்காக, நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து நமக்காக மரித்தார்.—I யோ. 4 : 9, I தெச. 5 : 10 இந்த அன்பு எவ்வளவு பெரிதென்று பாருங்கள்.

(தொடரும்)

---

"தேவன் அன்பாகவே இருக்கிறர்."
I யோவா 4: 8

---

| | | | |
|---|---|---|---|
| ஆதாம் | 130 ம் | வயதான போது | சேத்தைப் பெற்றான் |
| சேத் | 105 ம் | ,, | ஏனோசைப் பெற்றான் |
| ஏனோஸ் | 90 ம் | ,, | கேனானைப் பெற்றான் |
| கேனான் | 70 ம் | ,, | மகாலலெயேலைப் பெற்றான் |
| மகாலலெயேல் | 65 ம் | ,, | யாரேதைப் பெற்றான் |
| யாரேத் | 162 ம் | ,, | ஏனோக்கைப் பெற்றான் |
| ஏனோக் | 65 ம் | ,, | மெத்தூசலாவைப்பெற்றான் |
| மெத்தூசலா | 187 ம் | ,, | லாமேக்கைப் பெற்றான் |
| லாமேக் | 182 ம் | ,, | நோவாவைப் பெற்றான் |
| நோவாவின் | 600 ம் | | வயதில் ஜலப்பிரளயம் உண்டானது. |
| | 1656 | | |

மகா ஆழத்தின் ஊற்றுகளெல்லாம் பிளந்தன. வானத்தின் மதகுகளும் திறவுண்டன. நாற்பது நாள் இரவும் பகலும் பூமியில் மழை பெய்தன.

7: 17—23 ஜலம் பெருகி பேழையை மிதக்கப் பண்ணிற்று. ஜலம் பெருகி மலைகளெல்லாம் மூடப்பட்டது. பூமியில் நடமாடுகிற மனிதர் முதல் ஜீவராசிகள், பறவைகளெல்லாம் மாண்டுபோயின. நோவாவும் அவனுடன் பேழையிலிருந்த உயிர்களும் மாத்திரம் காக்கப்பட்டன. இப்படியே முடிவு காலத்திலும் நடக்கும். பேழை கட்டுமானம் நடந்துகொண்டிருக்கிறது. பேழை—திருச்சபையே. சபைக்குட் பிரவேசிப்பதே இரட்சிப்புக்கு ஆரம்பம்.

நோவா காலத்தின் ஜலப்பிரளயத்தைப் போல் ஒவ்வொரு தேசத்தாருக்கும், சமயத்தாருக்கும் முற்காலத்திலுண்டான ஒரு ஜலப்பிரளயத்தைப் பற்றிய கதைகள் உண்டு. அவைகள் அனேகமாக தேவர்களுக்குள் உண்டான பிரிவினையினால் ஜலப்பிரளம் உண்டாயிற்று என்றும், அதில் ஒரு மனிதன் குடும்பமாய் தப்பியதாகவும் கூறப்பட்டுள்ளன.

இதற்கு மாறாய் பாவ உலகத்தின் மேல் தேவனுடைய ஆக்கினைத் தீர்ப்பாய் ஜலப்பிரளயம் உண்டாயிற்று என்று வேதம் கூறுகிறது. வேதாகமத்தில் அநேக தேவர்கள் உண்டு என்பதற்கான எந்த ஆதாரமும் இல்லை. -II பேது 2: 5, 6. ஜலப்பிரளயத்திலிருந்து பேழைக்குள்ளிருந்த நோவாவும் உயிர்களும் காக்கப்பட்டதுபோல்; ஜலத்தினால் ஞானஸ்நானம் பெற்றவர்கள் அழிவுக்குத் தப்பிக் கொள்கிறார்கள். -I பேது 3: 21. விசுவாசமுள்ளவனாகி ஞானஸ்நானம் பெற்றவன் இரட்சிக்கப்படுவான்—மாற் .16: 16. நோவா காலத்து ஜலப்பிரளயம் உலகத்துக்கு ஓர் எச்சரிப்பு—மத்: 24: 3 38, 39.

---

"கர்த்தர் தேவபக்தியுள்ளவர்களை...... இரட்சிக்கிறார்" —II பேது. 2: 9.

---

பாலர் பகுதி

# துதிக்குப்பாத்திரராகிய கர்த்தரை நோக்கிக் கூப்பிடுவேன்

தன் வீட்டு வாசற்படியில் கவலையோடு உட்கார்ந்து கொண்டிருந்தான் டேவிட். அவனது சிந்தனையில் பலவிதமான எண்ணங்கள் ஓடிக்கொண்டிருந்தது. அன்று பள்ளிக்கூடத்தில் நடந்த சம்பவமும், ஞாயிறு பள்ளிகளிலும், ஆலயத்திலும் கேட்ட தாவீதின் பக்திவைராக்கியங்கள் அவனது உள்ளத்தில் உணர்ச்சிகளை உண்டாக்கியது. அந்த தியானத்திலே ஆழ்ந்திருந்தான் டேவிட்.

"இதோ ஆடுகளை மேய்த்துக் கொண்டிருந்த தாவீது அப்போது வீட்டிற்கு வந்தான். அவனது அம்மாவும் அப்பாவும் தாவீதிடம் பட்சணங்கள் கொடுத்து போர்க்களத்தில் இருக்கும் அவனது அண்ணன்மார்களிடம் கொடுத்து சுகம் விசாரித்து வரும்படி அனுப்பினார்கள் தாவீதுக்கு ஒரே சந்தோஷம். போர்க்களத்திற்கு போக பயமா? இல்லவே இல்லை. துள்ளிக்குதித்து ஓடினான் தாவீது. சண்டை நடக்கும் இடத்திற்கு ஓடிவந்தான். வந்த தாவீதுக்கு அங்கே எரிச்சல் மூட்டும் சம்பவம் நடந்தது ஜீவனுள்ள தேவனை ஒரு செத்த நாய் தூசித்துக் கொண்டிருந்ததைக் கண்டான். கோலியாத் என்ற பெரிய அரக்க உருவம் படைத்தவன், இஸ்ரவேல் ராணுவத்திற்கு சவால்விட்டுக் கொண்டிருந்தான். எதிர்த்து சண்டையிடாமல் இஸ்ரவேல் ராணுவம் தயங்கிக்கொண்டிருந்தது. சிறுவனாகிய தாவீதுக்கு பொறுக்க முடியவில்லை. உடனே அரசனிடம் அனுமதிவாங்கி தேவன் மேல் உள்ள விசுவாசத்தில், யுத்தம் கர்த்தருடையது என்று புறப்பட்டுச்சென்றான். கவண் கல்லெறிந்து ஆயுததாரியாயிருந்த கோலியாத்தைக் கொன்று பெரிய ஜெயம் உண்டாக்கினான்." இந்த சம்பவம் டேவிட்டின் எண்ணங்களில் நிழலாடியது

இந்த தாவீதைப் போல டேவிட்டும் தேவனுக்காக வைராக்கியம் உடையவனாயிருந்து அவனது பெயரைப் போல் நடந்தான். அன்று பள்ளிக்கூடத்தில் அவனது பிரின்ஸிபால் (Principal) பாடம் எடுக்கும் போது தேவனையும் பைபிளையும் தாக்கி பேசிக்கொண்டு இருந்தார். டேவிட்டுக்கோ பொறுக்க முடியவில்லை. மற்ற கிறிஸ்தவ மாணவர்களெல்லாம் கேட்டு சிரித்துக் கொண்டிருந்தார்கள். இயேசுகிறிஸ்து ஒரு தற்பெருமைக்காரர், அவர் தான் தான் கடவுள், தேவகுமாரன் என்று அடிக்கடி சொல்லி தற்பெருமை கொண்டார் என்று சொன்னதும்; கொஞ்சம் கூட பொறுக்காமல், தாமதிக்காமல் கோபத்துடன் எழுந்தான் டேவிட். சார் என்றதும் பிரின்ஸ்பால் (Principal) திரும்பி என்ன என்றார். சார் யாராவது உங்களிடமாய் வந்து நாங்கள் பிரின்ஸிபாலை (Principal) பார்க்கணும், அவர் யார்? எங்கே இருப்பார்? என்று கேட்டதும் நீங்கள் என்ன சொல்லுவீர்கள் என்றான். உடனே அவர் நான்தான் பிரின்ஸிபால் (Principal) என்றும் என்ன வேண்டும் என்றும் விசாரிப்பேன் என்றதும், டேவிட் உடனே, ஆம், அப்படியே இயேசு கிறிஸ்துதான் தேவன்; அவர் ஒருவரே தேவனாயிருப்பதால் அவர் தன்னை தேவன் என்று அவரை தெரியாத உலகத்திற்குத் தன்னை காட்டுகிறார் என்றதும் பிரின்ஸிபாலுக்கு (Principal) ஒன்றும் ஓடவில்லை. அப்படியே திகைத்து விட்டார், சட்டென்று தன்னை மடக்கிய சிறுவனாகிய டேவிட்டை உற்றுப்பார்த்தார். டேவிட் சிரித்துக்கொண்டு நின்றான். பிரின்ஸிபால்கோபத்துடன்வெளியே சென்று விட்டார்.

இதுதான் அன்று பள்ளிக்கூடத்தில் நடந்த சம்பவம். இதினிமித்தமே கவலையோடு உட்கார்ந்திருந்தான். பிரின்ஸிபாலின் (Frincipal) இமிரை அடக்கிய சம்பவம் அதற்குள் பள்ளிக்கூடம் முழுவதும் பரவிவிட்டது. பிரின்ஸிபால் அவன் மேல் கோபம் கொண்டு ஏழை சிறுவனாகிய டேவிட்டுக்கு பள்ளிக்கூடத்தில் கொடுத்து வந்த இலவச படிப்பை நிறுத்தி விட்டார். இனி அவன் படிக்க வேண்டும் என்றால் பீஸ் கட்டணும். அவனது ஏழை பெற்றோர்களால் அது முடியாது.அதனால்தான் கவலையோடு யோசனையில் உட்கார்ந்திருந்தான் டேவிட்

திடீரென அவன் உள்ளத்தில் ஒரு எண்ணம் உண்டாயிற்று. தாவீதைக்கைவிடாத

தேவன் தன்னையும் கைவிடமாட்டார். நாம் தாவீதைப் போல் எப்போதும் தேவனை துதிப்போம் என்பதே அந்த எண்ணம். உடனே டேவிட் தன் கவலைகளை மறந்து தேவனை துதிக்க ஆரம்பித்தான்.

"கர்த்தர் என் மேய்ப்பராய் இருக்கிறார் நான் என்றும் தாழ்ச்சி அடையேன்" என்று ஆனந்தமாய்ப்பாடினான். கர்த்தரைத் துதித்தான்.

ஆம், டேவிட் எப்போதும் தேவனைத் துதித்தான். அவனது துதியின் சத்தம் கேட்கப்பட்டது தேவசமூகத்தில், அவனுக்கு படிப்பதற்கான அற்புத வாசல் திறக்கப்பட்டது.

அந்த ஊரில் ஒரு கிறிஸ்தவ பணக்காரர் அவனது பள்ளிக்கூடத்தில் ஒரு நன்கொடை கொடுத்து அதன் மூலம் வகுப்பில் முதல்வனாக வரும் மாணவனுக்கு பள்ளி இறுதியாண்டு வரை படிக்க உதவி செய்தார்.

தேவனை எப்போதும் துதிக்கும் தேவ பிள்ளையான டேவிட்தான் அந்த முதல் மாணவன். தேவன் அந்த இருபையைக் கொடுத்து அவனுக்கும் தேவனுக்கும் சத்துருவாயிருந்த அவனது பள்ளி முதல்வர் முன்பே அவனை ஆனந்த தைலத்தால் நிரப்பினார் அல்லேலூயா !!

சிறுவர்களே, நீங்கள் தேவனுக்காக பக்தி வைராக்கியம் பாராட்டுகிறீர்களா?

நாம் சிறுவர்கள் நம்மால் என்ன செய்ய முடியும் என்று நினையாமல் வேதம் சொல்லும் தாவீதைப்போல் இங்கே காணப்படும் டேவிட்டைப்போல் பக்தி வைராக்கியம் பாராட்டுங்கள். கர்த்தர் கர்ச்சிக்கும் சிங்கங்களையும் உங்கள் கைகளினால் முறியடிப்பார்.

---

"தாவீதை என் இருதயத்திற்கு ஏற்ற வனாகக்கண்டேன் எனக்குச் சித்தமானவைகளையெல்லாம் செய்வான்" —அப். 13 : 22

---

மாதர் பகுதி

## வேதாகமத்தில் காணப்படும் [பரிசுத்த] ஸ்திரிகள்

**சாராள்:**

ஆபிரகாமின் மனைவியாகிய சாராளுக்கு முந்திய பெயர் சாராய் என்பதாகும். இந்த சாராய் மிகுந்த அழகுள்ள ஸ்திரியாகும். சாராள் என்ற பெயருக்கு இராணி (நாயகி) என்று அர்த்தம். இந்த அம்மாள் ஆபிரகாமுக்கு தகப்பன் வழியில் சகோதரியாகும்- அதாவது தகப்பன் ஒன்று தாய் வேறு. -ஆதி. 20 : 12.

ஆபிரகாமின் தகப்பனாகிய தேராகு தன் குமாரனாகிய ஆபிரகாமையும் சாராயையும் தன் பேரனாகிய லோத்தையும் கூட்டிக் கொண்டு கானான் தேசத்திற்குப் போகப் புறப்பட்டு ஆரானிலே வந்து தங்கிவிட்டார்கள். தேராகு மரித்த பின் தேவன் ஆபிராமை பெயர் சொல்லி அழைத்த போது ஆபிரகாமுடன் அவ்வழைப்பை ஏற்று ஆரானைவிட்டுப் புறப்பட சாராள் சம்மதித்தாள். கானான் தேசத்தில் பஞ்சம் உண்டானபோது ஆபிராமும் சாராயும் எகிப்துக்கு போனார்கள். எகிப்திலிருக்கையில் ஜீவனுக்கு ஆபத்து வரும் என்று பயந்து ஆபிராம் இவளைத் தன் சகோதரி என்று சொன்னார். பார்வோன் சாராயை தன் அரண்மனைக்கு அழைத்துக் கொண்டான். ஆனால் அவள் ஆபிராமின் மனைவி என்று அறிந்ததும் அவளைத் திருப்பி அனுப்பி விட்டான்— ஆதி. 12: 12-20 சிலகாலங் கழிந்து ஆபிராம் கேராரில் தங்கியிருக்கையிலும் இதே தவறை ஆபிரகாமும் சாராளும் செய்தார்கள். அதினால் அத்தேசத்தின் இராஜாவாகிய அபிமெலேக் அவளைத் தன் அரண்மனைக்கு அழைப்பித்தான். இது நடந்த காலம் பிள்ளைப் பேறு வாக்குத்தத்தம் பெற்ற பின்பேயாகும். அப்பொழுது சாராளுக்கு வயது 90 ஆகியிருந்தது. கர்த்தர் அவளுடைய சரீரத்தில் அற்புத மாற்றமளித்து யௌவன ரூபியாய் மாற்றியிருந்தார் என்று தெரிகிறது. அவ்வரசன் தேவனால் கடிந்து கொள்ளப்பட்டு அவளைத் திருப்பி அனுப்பி விட்டான். | -ஆதி. 20 2-14

சாராள் தனக்கு பிள்ளையில்லை என்று சொல்லி தன் அடிமைப் பெண்ணாகிய ஆகாரை ஆபிரகாமுக்கு மனைவியாகக் கொடுத்தாள். பின் அவளைக் கடினமாக நடத்தினாள் அதனால் ஆகார் ஓடிப்போனாள். தேவனுடைய சத்தம் கேட்டு திரும்பிவந்து ஆகார் கீழ்ப்படிந்திருந்தாள் ஆகாருக்கு இஸ்மவேல் பிறந்தான்.

தேவன் ஆபிராம் பெயரை ஆபிரகாம் என்றும், சாராயின் பெயரை சாராள் என்றும் மாற்றினார் —ஆதி 17: 16.

கர்த்தருடைய வாக்குத்தத்தின்படி சாராள் தன் முதிர்வயதில் ஆபிரகாமுக்கு ஈசாக்கைப் பெற்றாள். அவனுக்கு ஈசாக்கு என்று பெயரிட்டாள் -ஆதி. 21: 1-3. ஈசாக்கு பால் மறந்த நாளில் ஆபிரகாம் பெரிய விருந்து பண்ணினார். அப்போது ஆகாரின் குமாரன் இஸ்மவேல் ஈசாக்கை பரியாசம் பண்ணினதினால் சாராளுடைய ஆலோசனைப்படி ஆபிரகாம் ஆகாரையும், இஸ்மவேலையும் அனுப்பி விட்டார்- ஆதி. 21 8-14.

சாராள் ஆபிரகாமோடு நீடித்தநாட்களாக ஒரு துணையாக இருந்து அவனுக்கு தேவனிடத்திலிருந்த நம்பிக்கையிலும் விசுவாசத்தின்படி சம்பவிக்கக் கூடாததைப் பெற்றுக்கொள்வதிலும் பங்குள்ளவளாயிருந்து ஆபிரகாமுக்கு அடங்கி அவனை ஆண்டவன் என்று அழைத்து கீழ்ப்படிந்திருந்தாள். I பேது 3. 6. விசுவாசத்தினாலே அவள் வயது சென்றவளாயிருந்தும் பிள்ளை பெற்றாள் -எபி. 11;11 அவள் 127 வயதாகி மரித்தபோது அவள் புருஷனும், மகன் ஈசாக்கும் மிகுந்த துக்கங் கொண்டாடினார்கள். -ஆதி. 24 : 6, 7.

இந்த சாராள் விசுவாசிகளுக்குத் தாய் என்று அழைக்கப்படுகிறாள். இந்த சாராள் தன் புருஷனுக்குக் கீழ்ப்படிந்திருக்கிறதிலும் உறுதுணையாயிருப்பதிலும் கணவனுடைய விசுவாசத்திலும், நம்பிக்கையிலும், தேவன் அருளும் பலனைப் பெற்றுக்கொள்வதிலும், பங்கு பெற்று விசுவாசியான ஸ்திரிகளுக்கு மாதிரியானாள்- தாயானாள்.

சகோதரிகளே, தாய்மார்களே நீங்களும் ஒரு சாராளாயிருங்கள் சாராளைப்பற்றி ஆதியாகமம், ஏசாயா தவிர புதிய ஏற்பாட்டில் ஐந்து இடங்களில் வருகிறது. ரோம. 4: 19; 9 : 9; கலா 4 : 22; I பேது3 : 5, 6' எபி 11: 11.

---

"ஸ்திரிகளும் தேவ பக்தியுள்ள ஸ்திரிகளுக்கு ஏற்றபடியே தங்களை அலங்கரிக்க வேண்டும்" —I தீமோ. 2 : 9, 10

---

# தேவனுடைய திட்டம்

இவ்வுலகமானது என்ன? வீணே தானாய் இயங்கிக்கொண்டிருக்கிறதா? இதற்கு முடிவில்லையா? மனித வாழ்க்கை தான் என்ன? உலகத்தின் நிலை என்ன? மனித வாழ்க்கையின் முடிவுதான் என்ன? எப்படியும் ஜீவித்தால் போதுமா? நல்லதா? அல்லது தீமை வருமா? தேவனிடம் யாதொரு திட்டமுமில்லையா? இது மனிதர் உள்ளங்களில் எழும் கேள்வி இதற்கு வேதம் கூறும் விடை என்ன?

தேவனுக்கு திட்டமுண்டு உலகம் தானாய் இயங்கவில்லை உலகத்தில் நடப்பது எல்லாம் வீணையல்ல கீழ்ப்படுத்தினவரால் கீழ்ப்படுத்தப்பட்டிருக்கிறது "அந்த சிருஷ்டியானது சுய இஷ்டத்தினாலல்ல கீழ்ப்படுத்தினவராலேயே மாயைக்கு கீழ்ப்பட்டிருக்கிறது."— ரோமர் 8:21

தேவன் உலகத்தைக்குறித்து திட்டமிட்டு தீர்மானம் பண்ணி நடத்தி வருகிறார். சிருஷ்டித்தவர். உலகங்களையும், சர்வ சிருஷ்டிகளையும் அவைகளில் நம்மையும் நோக்கமின்றி சிருஷ்டித்திருக்கவில்லை. நாம் கூட எதையாவது பண்ணினால், செய்தால் ஒரு நோக்கத்தோடே செய்கிறோம். நோக்கம் தவறினால் மாறுபட்ட எதிர்மாறான பலன் உண்டாகிவிடுகிறது நமது மாம்சீக நோக்கம் தடைபட்டும் இடறபாடுகளுக்குட்பட்டு நிறைவேறாமலும் போய்விடும்; போய்விடுகிறது. எதிர்பார்க்கும் அளவு எதிர் பார்க்கும் பலனை உண்டாவதில்லை, தனி ஆளோ, சமுதாயமோ போடும் திட்டங்கள் இவ்விதம் நிறைவேறாமலும், அப்படியே நிறைவேறினாலும் எதிர்பார்த்த பலன் கிட்டாமல் (பூரணமாய்) போய்விடுகின்றன.

உலகில் சர்வவல்லவர் திட்டமிட்டு நடத்தி வருகிறாரா? அப்படி அவர் திட்டமிட்டதை நிறைவேற்ற முடியாதபடி தடைபடுமா? அவர் தாம் போட்டதிட்டத்தை முடிக்க இயலாதவரா?

(உலகத்தில்கூட ஒரு மனிதன் ஒரு திட்டமிட்டு அத்திட்டத்தை அவ்விதமே நிறைவேற்றிவிட்டால் அவரைச் சிறந்த மனிதர் என்று மெச்சுகிறோம்; புகழ்கிறோம். அவரும் உலகில் பெயர் பெறுகிறார்.)

இப்படியிருக்க தேவன் திட்டமிட்டால் அதன்படி நடவாதோ? நிச்சயம் நடக்கும். அப்படியில்லை என்றால் அவர் தேவனல்லவே. அவர் திட்டப்படியே செய்து முடிப்பார். "தேவரீர் சகலத்தையும் செய்ய வல்லவர் நீர் செய்ய நினைத்தது தடைபடாது"யோபு 42 : 2 பூமியின் குடிகளெல்லாம் ஒன்றுமில்லை என்று எண்ணப்படுகிறார்கள். அவர் தமது சித்தத்தின்படியே வானத்தின் சேனையையும் பூமியின் குடிகளையும் நடத்தி வருகிறார்; அவருடைய கையைத் தடுத்து அவரை நோக்கி என்ன செய்கிறீர் என்று சொல்லத்தக்கவன் ஒருவனுமில்லை"—தானி 4 : 35. "தானியேல் சிங்கங்களின் கைக்குத்தப்புவித்த அவரேதப்புவிக்கிறவரும், ரட்சிக்கிறவரும், வானத்திலும், பூமியிலும் அடையாளங்களையும், அற்புதங்களையும் செய்கிறவருமாயிருக்கிறார்." —தானி6 : 27 உலகமும் சாத்தானும் எதிர்த்து நடந்தாலும், மனிதர்களெல்லாம் வேண்டுமென்றே பாவம் செய்து தேவனை எதிர்த்து நடந்தாலும், அக்கிரமமும், அநியாயமும், அராஜகமும் பெருகிப் போனாலும் தேவன் உலகத்தை அடக்கி தாம் கொண்ட திட்டத்தை நிறைவேற்றியே முடிப்பார் உலகத்தில் நடக்கும் அநியாயமும், அக்கிரமமும், மீறுதலும், பாவமும், அழிவும், நாசமும் தேவனுடைய திட்டத்திற்குட்பட்டதே (அதாவது தேவ திட்டம் நிறைவேறுமல் தடுக்க முடியாது) உலக சம்பவங்கள் தேவனுக்குத் தெரியாமல் அல்லது தேவனுக்கு மீறி நடக்கிறதென்று எண்ண இடமில்லை.

தேவன் அனுமதித்துள்ளார் என்பதே பதில்.

"தமது சித்தத்தின் ஆலோசனைக்கு தக்கதாக எல்லாவற்றையும் நடப்பிக்கிற அவருடைய தீர்மானம்"—எபேசி. 1: 12.

உலகத் தோற்ற முதல் தேவனுக்கு தம்முடைய கிரியைகளெல்லாம் தெரிந்திருக்கிறது —அப். 15: 18 ஆகையால் உலகைக்குறித்து தேவன் திட்டமிட்டுள்ளார்.

அத்திட்டங்களாவன :

(1) வானத்தையும், பூமியையும், (பூலோகத்தையும்பரலோகத்தையும்)கிறிஸ்துவுக்குள் ஒன்றுக்குதல்—கொலோ1: 20;எபேசியர் 1: 9.

(2) தமக்கு ஒரு சரீரத்தை (சபையை) எழுப்புவது. —எபே. 3 : 3; 2 : 14-16.

(3) சபையை எழுப்பி அநேகம் பிள்ளைகளை மகிமையில் கொண்டு வந்து சேர்ப்பது. -எபி 2:10. அதற்காக(1)முன் குறித்து தெரிந்து கொண்டு இரட்சித்தல் —எபேசி. 1: 5,6,12; அப். 13: 48.

(II) அவர்களைப் பரிசுத்தப்படுத்தி பூரணப்படுத்துதல். எபேசி. 5: 26, 27; II தீமோ. 2:10.

(III) அவர்களைக் கொண்டு உலகத்தை ஆளுதல்- I கொரி. 6: 2, 3 மத்: 19: 28; சங் -149 :6-9; வெளி. 5:8- 10.

இவ்விதம் தேவன் திட்டமிட்டு தீர்மானித்து உலகத்தை நடத்தி வருவதால்,

நீயும் திட்டமிட்ட வாழ்க்கை வாழ். தேவனுடைய திட்டத்துக்குட்படு (இரட்சிப்பு) அவருடைய திட்டத்தில் (ஊழியம்) பங்கு பெறு.

"நாங்களோ தேவனுக்கு உடன் வேலையாட்களாயிருக்கிறோம். —I கொரி. 3: 10

---

"ஆண்டவரே இந்த ஆண்டிலும் இருக்கட்டும்...கனி கொடுத்தால் சரி இல்லாவிட்டால் வெட்டிப் போடலாம் "-லூக். 13: 8, 9

---

# அந்த சந்ததி இன்றைக்கும் ஜீவிக்கிறது

கர்த்தராகிய இயேசு கிறிஸ்து தாம் வளர்ந்த ஊருக்கு தன்னுடைய சீஷருடனே வந்து தேவாலயத்தில் தம்முடைய மகிமையான உபதேசத்தை போதிக்க ஆரம்பித்தார். ஜனங்கள் அவருடைய வசனத்தைக் கேட்டு இந்த ஞானம் இவனுக்கு எங்கிருந்து வந்தது என்று மிகவும் ஆச்சரியப் பட்டார்கள். அவர் மூலமாய் நடப்பிக்கப் பட்ட பலத்த செய்கைகளைக் கண்டு பிரமித்தார்கள். அதே சமயத்தில் அவருடைய குலத்தொழிலையும், அவருடைய சகோதர, சகோதரிகளையும் கவனித்து அவரைக் குறித்து இடறலடைந்து அவரை அசட்டை பண்ணினார்கள்; புறம்பாக்கினார்கள். மாற் 6:1-3. அந்த சந்ததி இன்றைக்கும் ஜீவிக்கிறது. மாம்சமான எவனும் தேவனுக்கு முன்பாக மேன்மை பாராட்டாதபடி தேவன் பைத்தியக்காரர் போன்றவர்களையும், பலவீனர்களையும், இழிவானவர்களாய் காணப்படுகிறவர்களையும், அற்பமாய் எண்ணப்படுகிறவர்களையும் தமக்கு ஏற்றவர்கள் என்று கண்டு தெரிந்து கொண்டு அவர்கள் மூலமாய் தம்முடைய வல்லமையையும், ஞான உபதேசங்களையும் தேவன் வெளிப்படுத்துகிறார். இதை அனேகர் காண்கிறார்கள். ஆனாலும் தேவனுடைய மனிதர்களாகிய இவர்கள் என்ன சொல்கிறார்கள் என்று கவனிக்காமல், இவர்கள் யார்? எந்த குலத்தை சேர்ந்தவர்கள்? எந்த ஊர்க்காரர்கள்? என்ன பாஷை பேசுகிறார்கள்? என்பதையே நோக்கிப்பார்த்து, தேவனால் உண்டாயிருக்கிற தருதியைப் பாராமல், வீணானவைகளை கவனித்து தங்களுக்கு வரும் கிருபையை போக்கடித்து, "எங்கள் மூலமாய் கேள்விப்பட்டதை விசுவாசித்தவன் யார்?..., அவர் (இயேசு) அசட்டை பண்ணப்பட்டவரும்.... (ஏசா 53: 1, 2, 3) என்ற வேதவாக்கியத்தை நிறைவேற்றுகிறார்கள்.

யோவான் ஸ்நானகன் போஜனபானம் பண்ணாதவனாய் வந்தார், அவரை பிசாசு பிடித்தவன் என்றார்கள். இயேசு கிறிஸ்து போஜனபானம் பண்ணுகிறவராய் வந்தார், அவரை போஜனப்பிரியன் என்று குறை சொன்னார்கள்- மத் 11: 18, 19.

இந்நாட்களிலும் கிறிஸ்துவை அறியாதவர்களும், அறிந்திருக்கிறோம் என்று சொல்லியும் அவரை அறியவேண்டிய பிரகாரம் அறியாதவர்களும், தேவ தாசர்களை அவ்விதமே குறை சொல்கிறார்கள். எப்படியெனில் கிறிஸ்து இயேசுவை அறிகிற அறிவின் மேன்மைக்காக லாபமாய் இருந்தவைகளை நஷ்டமும் குப்பையும் என எண்ணி வந்த பவுலைப் போலவும், மற்ற அப்போஸ்தலரும், கர்த்தருடைய சகோதரரும், கேபாவும் இருந்தது போல, குடும்பஸ்தர்களாய் கைத்தொழில் ஏதும் செய்யாமல் (I கொரி. 9:4,5) கர்த்தரை உத்தம இருதயத்தோடு சேவிக்கிறவர்களை பைத்தியக்காரர்கள் என்றும், பொய்யர்கள், மக்களை ஏமாற்றுகிறவர்கள், வயிற்றுப் பிழைப்புக்காக வேஷம் போடுகிறவர்கள், வெளிநாட்டுப்பணத்தில் வீட்டைக் கட்டுகிறவர்கள் என்று இப்படி பலவிதமான தீமையான மொழிகளைப் பொய்யாய் பேசுகிறார்கள். இவர்கள் கிறிஸ்துவை அறியாதவர்கள். உண்மையுள்ள ஊழியர்களை நிந்திக்கிறார்கள்.

தனக்கும் தன்னோடு சேர்ந்தவர்களுக்கும், வேண்டியவைகளுக்காகவும், பலவீனரைத் தாங்கவும், "வாங்குகிறதைப்பார்க்கிலும் கொடுக்கிறதே பாக்கியம்" என்ற இயேசு கிறிஸ்துவின் வார்த்தையை நிறைவேற்றும் வகையிலும், (அப். 20: 34, 35) மந்தைக்கு மாதிரியாய் இருக்கும் படியாகவும் (II தெச. 3: 9) ஒருவனுக்கும் பாரமாய் இராதபடிக்கு இரவும் பகலும் வேலை செய்து கொண்டு சுவிசேஷத்தைப் பிரசங்கித்தார். (I தெச. 2: 9) அப்போஸ்தலனாகிய பரிசுத்த பவுல் வேலை செய்யாமல் கர்த்தருக்கு ஊழியம் செய்ய தனக்கு முழு அதிகாரமும் இருந்த போதிலும் அப்படி செய்யவில்லை என மேன்மை பாராட்டுகிறார் (I கொரி 9: 6, 15) அப்போஸ்தலனாகிய பவுலைப் போலவே பிழைப்புக்கடுத்த அலுவலில் சிக்கிக் கொள்ளாமல் சொந்தக் கைகளால் வேலை செய்துக் கொண்டும், தேவ அனுமதியுடன் கிறிஸ்துவைச் சேவித்தால் நீங்கள் தேவனுடைய ஊழியக்காரர்கள் அல்ல என்று சொல்வாருமுண்டு. உங்களுக்காக குழல் ஊதினோம் நீங்கள் கூத்தாடவில்லை.

உங்களுக்காக புலம்பினோம் நீங்கள் மாரடிக்கவில்லை என்று அன்றைக்கு இயேசுவை குறை சொன்ன சந்ததிக்கு ஒப்பாகவே இவர்களும் இருக்கிறார்கள். .....சுபாவப்படி தங்களுக்குத் தெரிந்திருக்கிறவைகளாலே தங்களைக் கெடுத்துக் கொள்ளுகிறார்கள் (யூதா 10)

கர்த்தராகிய இயேசு கிறிஸ்து தேவ ஆவியினாலே பிசாசுகளைத் துரத்தினார் ஜனங்கள் ஆச்சரியப்பட்டு இவர் தாவீதின் குமாரனோ என்றார்கள். (மத். 12: 22, 23)

தேவனுக்கு மகிமையைத் தேடாமல் தங்களுக்கு மகிமையைத் தேடுகிறவர்களும், மற்றவர்கள் உயர்த்தப்படுவதை சகிக்க மாட்டாத பொறாமைக்காரர்களுமான பரிசேயர்கள் அந்த வார்த்தைகளைக் கேட்டு தேவனுக்கேற்றவைகளை சிந்திக்க மனமற்று, துணிகரத்தினால் கவ்வப்பட்டு இயேசுவானவர் பிசாசுகளின் தலைவனாலே பிசாசுகளை துரத்துகிறான் என்று சொல்லி ஒரு போதும் மன்னிக்கப்படக்கூடாத பாவத்தை தங்களுடைய வீணான வார்த்தையால் கட்டிக் கொண்டு நியாயத்தீர்ப்புக்கு ஏதுவானார்கள்- மத். 12 : 36.

இயேசுவானவர் தம்முடைய பிதாவினிடத்தில் கேட்ட சத்தியத்தை, ஆழத்துவமான மெய்யான சத்தியத்தை அறிவித்தபோது தேவனால் உண்டாயிராத யூதர்கள் இடறி, அவர் உண்மையிலேயே பிசாசு பிடித்தவர் தான் என்று தங்களுடைய ஜென்ம சுபாவத்தின்படியே நிதானித்தார்கள் (யோவா. 8: 48- 52).

வீட்டெஜமானையே பெயல்சபூல் என்று சொன்னவர்கள் வீட்டாரை அப்படி சொல்வது அதிக நிச்சயமல்லவா?

"என்னை விசுவாசிக்கிறவன் நான் செய்கிற கிரியைகளை (works - பாவங்களை மன்னித்தார், பிசாசுகளைத் துரத்தினார், பிணியாளிகளை சுகமாக்கினார், உபதேசித்தார், சுவிசேஷத்தை பிரசங்கித்தார், அற்புதங்களைச் செய்தார்) தானும் செய்வான். இவைகளைப் பார்க்கிலும் பெரிய கிரியைகளையும் செய்வான்" என்று கர்த்தர் சொல்லியிருக்கிறாரே (யோவா. 14: 12) பின்னை ஏன் தேவன் தம்முடையவர்களைக் கொண்டு மகத்துவமானவைகளைச் செய்யும் போது தூஷணம் சொல்கிறார்கள்.

"இன்னும் அநேக காரியங்களை நான் உங்களுக்குச் சொல்ல வேண்டியதாயிருக்கிறது. சத்திய ஆவி வரும்போது சகல சத்தியத்திற்குள்ளும் உங்களை நடத்துவார். (யோவா 16: 12, 13). இயேசுகிறிஸ்து சொல்ல விரும்பின காரியத்தை எல்லாம் சொல்லி தீர்த்து விட்டாரா! பரிசுத்தாவியானவர் தானுடைய கிரியைகளை முடித்து ஓய்ந்து விட்டாரா!! பின்னை ஏன் ஆவியானவராலே ஆழத்துவத்தை, புதிதானவைகளை வசன ஆதாரத்துடன் வெளிப்படுத்தும் போது தூஷிக்கிறார்கள், துர்உபதேசமென்கிறார்கள்? இயேசு கிறிஸ்துவையே பெயல்சபூல் என்று சொன்ன அந்த சந்ததி இன்றைக்கும் ஜீவிப்பதினால தானே. ஆம், அந்த யாம்சீகமான சந்ததி இன்னும் ஜீவிக்கிறது! நீங்கள் எப்படி?

---

"எனக்கு நேரிட்ட சோதனைகளில் என்னோடேகூட நிலைத்திருந்தவர்கள் நீங்களே. ஆகையால்.... நியாயந்தீர்க்கிறவர்களாய் சிங்காசனங்களின் மேல் உட்காருவீர்கள்" (லூக் 22 : 28- 30)

---

# புதிய எருசலேம் சபை நடபடிகளில் சில

இவ்விதமாகத் தேவனுடைய கிருபையினால் நாங்கள் 23—11—1976ல் பம்பாயிலிருந்து ஏர் இந்தியா விமானத்தின் மூலம் மோரீஸசஸ் (Mauritius) செல்ல சந்தாகுரூஸ் விமான நிலயத்துக்குச் சென்றோம். எங்களுடைய தலைமைப் போதகர், உடன் ஊழியர்கள், பம்பாய் புதிய எருசலேம் சபையார் யாவரும் எங்களை வழியனுப்ப வந்திருந்தார்கள். எங்களுடைய பயணச் சீட்டுகள், உடமைகள் எல்லாம் பரிசோதனை செய்த பின் எங்கள் தலைமை மேய்ப்பர் ஜெபித்து எங்களை அனுப்பினார்கள். முதல் தடவையாக விமானத்தில் பிரயாண செய்யப் போகிறோம். முன்பின் தெரியாத வேற்று மொழி பேசும்

மக்களிடம் கடந்து போகிறோம் எங்களுடைய ஊழியத்தில் மொழி பெயர்க்கவிருக்கும் சகோ. கருணாகரனைக் கடிதத்தின் மூலமே அறிந்திருக்கிறோம்; நேரில் பார்த்ததில்லை என்பது போன்ற எண்ணங்களெல்லாம் சிந்தனையில் தோன்றிக் கொண்டேயிருந்தது. பரிசோதனைகளெல்லாம் முடிந்து பயணிகள் தங்கும் அறையில் போய் அமர்ந்து கண்களை மூடி ஜெபித்துக் கொண்டேயிருந்தோம். கர்த்தருடைய ஆவியானவர் உள்ளத்தில் பேசிக் கொண்டேயிருந்தார்: "பலங்கொண்டு திடமனதாயிரு" "திகையாதே கலங்காதே" "உன்னை அனுப்புகிறது நானல்லவா" என்றெல்லாம் ஆறுதலான வார்த்தைகளைப் பேசிப் பெலப்படுத்தினார்.

மோரிசைஸ் செல்லும் பயணிகள் விமானத்துக்குச் செல்லலாம் என்ற அறிவிப்பு கொடுக்கப்பட்டது. பயணிகள் எல்லோரும் புறப்பட்டார்கள்; விமானம் சிறிது தூரத்தில் நிறுத்தப்பட்டிருந்தது அதுவரையிலும் கடந்து போக, வாகனங்கள் ஏற்றிச் செல்ல வந்தது. வாகனத்தில் ஏறி விமானத்தில் சென்று எங்களுக்குரிய ஆசனத்தில் அமர்ந்தோம். உள்ளம் என் தேவனின் அன்பினால் நிரம்பினது. ஆண்டவரை ஸ்தோத்தரித்துக் கொண்டேயிருந்தோம். பஸ்ஸில் செல்லக் காசில்லாமையால் கால்நடையாகவே நடந்து போய் ஊழியம் செய்து வந்த நாட்களில், "உங்களை நான் வெளி நாடுகளுக்கும் அனுப்புவேன். விமானத்தில் நீங்கள் அடிக்கடி பயணம் செய்வீர்கள் என்னுடைய ஊழியத்துக்காகசகலமும் ஆயத்தமாய் உள்ளது. இந்நாட்களிலுள்ள குறைவுகளைக் கண்டு சோர்ந்து போகக்கூடாது" என்றெல்லாம் கர்த்தர் பேசின வார்த்தைகளை நினைவு கூர்ந்து என் ஆண்டவரை ஸ்தோத்தரித்து மகிமைப்படுத்திக் கொண்டேயிருந்தோம்

சில நிமிடிகளில் விமானம் புறப்பட்டது. இடுப்பில் ஆசனத்தில் பொருத்தப்பட்டுள்ள பெல்ட்டை மாட்டிக் கொள்ள வேண்டும்; ஆபத்து ஏற்பட்டால் எவ்வாறு தப்பித்துக் கொள்ள வேண்டும் என்பதற்கான விளக்கங்களை ஒருவர் பயணிகளிடம் கூறினார். ஏற்கனவே நாங்கள் புறப்படு முன்பும், விமானத்தில் தலைசுற்றும், ஜன்னல் வழியாக வெளியே பார்க்க கூடாது வாந்திவரும் என்றெல்லாம் அறிந்த சிலர் எங்களிடம் கூறியிருந்தார்கள். ஆனால் கர்த்தருடைய பெரிதான கிருபையால் எங்களுக்கு ஒரு பெலவீனமும் ஏற்படவில்லை. மாறாக எங்கள் உள்ளம் தேவனுடைய அன்பை எண்ணி மகிழ்ந்து கொண்டேயிருந்தது.

ஜன்னல் வழியாய் தூரத்தில் பார்க்கும் பொழுது இறைவன் படைத்த மேக கூட்டங்கள், நல்ல வெண்மையான பஞ்சைப்போல் உயர்ந்த சிகரங்களாக காட்சி அளித்தது. பம்பாயிலிருந்து நேரே மேற்கே அரபிக் கடலின் மேல் பறந்த எங்கள் விமானம் தென் மேற்கு திசை நோக்கி, தென்ஆப்பிரிக்காவின் கிழக்கு கடலின் மேல் முழுவதும் கடல் மார்க்கமாகவே சென்றது. பூமியிலிருந்து மேலே ஆகாயத்தை நாம் பார்க்கும் பொழுது மேக மண்டலத்தினூடே நீல ஆகாயம் தெரிவது போல் மேகமண்டலத்துக்கும் மிகவும் உயரமாய பறந்து கொண்டிருந்த எங்கள் விமானத்திலிருந்து கீழ் நோக்கிப்பார்க்கும் பொழுது கீழேயுள்ள மேக மண்டலமும் அதனூடே கீழேயுள்ள சமுத்திரமும் நீல நிறமாய் தோன்றினது. அது கீழேயும் ஒரு ஆகாயம் இருப்பது போலவே தெரிந்தது. சில இடங்களில் காற்று அழுத்தம் ஏற்பட்டு, குண்டு குழிகள் உள்ள ரோட்டில் பஸ் ஓடும் பொழுது எவ்விதமாக பஸ் துள்ளுமோ அது போல் ஆகாயத்திலும் விமானம் காற்று அழுத்தம் உள்ள இடங்களில் இடறுவதைக் காண முடிந்தது. சமுத்திரத்தின் சில இடங்களில் பயங்கர கொந்தளிப்புகள் இருந்தது. அப்படிப்பட்ட இடங்களைப் பயணிகளுக்கு காண்பிப்பதற்காக விமானத்தை மிகவும் தாழ்த்தி தண்ணீரின் ஓரத்துக்கு கொண்டு வந்து காண்பித்தார்கள். இவ்விதமாய் இறைவனின் படைப்புகளைப்பார்த்து தேவனை மகிமைப் படுத்திக் கொண்டே சென்றோம். சுமார் நான்கு மணி நேரப் பிரயாணத்திற்குப் பின்பு சிசெல்ஸ் (Sicily) என்ற ஒரு சிறிய தீவில் எங்கள் விமானம் இறங்கியது. கீழே இறங்கி தேநீர் அருந்தினோம் மீண்டும் விமானம் புறப்பட்டு இரண்டு மணி நேரப் பயணத்திற்குப் பின்பு மோரிசஸ் (Mauritius) வந்தது.

விமான நிலையத்தில் விமானம் இறங்கினது. பிதாவாகிய தேவனை ஸ்தோத்தரித்து எங்கள் கைப்பைகளை எடுத்துக் கொண்டு

வெளியே வந்தோம். தமிழைத் தவிர வேறு பாஷை தெரியாது; அதிகாரிகள் என்ன கேட்பார்கள் எப்படி மறுமொழி கொடுப்பது? என்பது போன்ற கலக்கங்கள் ஒருபுறம் உருவாகியது. எப்படியும் கர்த்தர் நமக்காகப் பேசுவார் என்றும் "அப்பொழுது பேசுகிறது உங்கள் பிதாவின் ஆவியானவரே" என்ற வார்த்தையையும் தியானித்துக் கொண்டே கஸ்டம் ஆபீசரை அணுகினோம். அவருடைய இரியோல் பாஷையிலே எங்கே தங்குவீர்கள்? எதற்காக வந்தீர்கள்? எவ்வளவு நாள் தங்குவீர்கள்? உங்களை மிஷனெறிகளாக அனுப்பியது யார்? அதற்குரிய ஆதாரம் இருக்கிறதா? இங்கிருந்து யார் உங்களை அழைத்தது? என்பன போன்ற கேள்விகளையெல்லாம் கேட்டார்.

"நான் உன்னை விட்டு விலகுவதுமில்லை, உன்னை கைவிடுவதுமில்லை" என்று சொன்ன சர்வவல்லமையுள்ள ஆண்டவர் பெந்தெகொஸ்தே நாளில்பொந்து, கப்பத்தோக்யா, மெசாப்பொத்தாமியா நாட்டு மக்களின் பாஷையிலே தேவனுடைய மகத்துவங்களைத் தம்முடைய சீஷர்களைக் கொண்டு பேசின ஆண்டவர் இதே நேரத்தில் இந்த இரியோல் பாஷை பேசிய அதிகாரியோடும் பேசி விளங்கவைத்து எங்களுடையரிக்கார்டுகளையும் காட்டி நம்ப வைத்து, விமான நிலையத்தை விட்டுக் கடந்து வெளியே சென்றோம். ஆம் இயேசு கிறிஸ்து நேற்றும் இன்றும் என்றும் மாறாதவரே. வெளியே சகோதரர் கருணாகரன் தன துணிவியோடு எங்களை அழைத்துச் செல்வதற்காக கார் கொண்டு வந்திருந்தார். எங்களுடைய உடையின் தோற்றத்தைக் கண்டதும் நாங்கள்தான் தாங்கள் எதிர் பார்க்கும் ஊழியர்கள் என்பதை எளிதில் கண்டு கொண்டார்கள். ஆறுதலின் தேவன் எங்களுடைய எல்லாவித கலக்கத்தையும் நீக்கி எங்களுக்குஆறுதல்செய்தார். அவருக்கே மகிமையுண்டாவதாக!

—தொடரும்.

**Pastor S. Sundar Raj**
**Vallioor.**

**சாட்சி**

# குருட்டுச் சாமிகள்

நான் ஒரு இந்து குடும்பத்தைச் சேர்ந்தவன். சிறுவயதில் C. S. I கோயிலுக்குவேளா வேளையில் சென்று கர்த்தரைத் தொழுது வந்தேன். அப்பொழுது கர்த்தர் ஒரு தரிசனத்தை அடிமைக்குத் தந்தார். அதாவது வானத்தில் சந்திரன் தோன்றுகிறது. அதில் சிவப்பு வஸ்திரம் தரித்த ஒருவர் தோன்றுகின்றார். அவர் முகத்தில் இரக்கமும் அன்பும் காணப்படுகின்றது சிறிது நேரத்தில் நட்சத்திரங்கள் அவரைச் சுற்றிலும் வேகமாக சுற்றுகிறது. சற்று நேரத்தில் அவைகள் இரண்டு செட்டைகள் உள்ள தேவதூதர்களாக மாறிவிடுகின்றது.

அந்த சிவப்பு வஸ்திரம் தரித்தவர் ஒவ்வொரு தூதனுக்கும் ஒவ்வொரு கட்டளை பிறப்பிக்கின்றார். அவர்கள் கட்டளைகளை பெற்றுக் கொண்டு பூமிக்கு வருகின்றனர். கடைசியாக ஒரு தூதன் என்னிடத்தில் வந்து இரு பாடல்களைச் சொல்லிக் கொடுக்க நான் பாடுகின்றேன். இவ்வாறாக தேவ அன்பு சிறு வயதில் என் இருதயத்தில் ஊற்றப்பட்டது இருப்பினும் கிறிஸ்துவின் பாதையில் என்னை நடத்துபவர்கள் இல்லாதபடியால் இந்து மார்க்கத்திலே ஜீவித்து வந்தேன். வாலிபப் பிராயத்தில் பக்திவைராக்கியம் உள்ளவனாக காணப்பட்டேன்.

ஒரு நாள் ஒரு பெண் சாமி கோவிலுக்கு சென்றேன். அங்கு ஒரு மனுஷனிடத்தில் சாமி இறங்கியது. நான் உத்தரவு கேட்டேன் எனக்கு பார்வை குறை இருந்ததால் என்னை நோக்கி: நீ 40 நாட்கள்எனக்கு விளக்குபோட வேண்டும், அப்பொழுது உனக்கு பார்வை குறையை நீக்குவேன் என்று சொன்னது. நான் விளக்குப் போட ஆரம்பித்தேன். 15 வது தினத்தில் நான் பார்த்து வந்த வேலை பறிபோய் விட்டது. மிகுந்த துக்கப்பட்டேன். இருப்பினும் சாமி சொன்ன பிரகாரம் செய்ய வேண்டும் என்ற வைராக்கியத்துடன் 40 நாட்கள் இடைவிடாமல் விளக்கு போட்டேன். பார்வைக்குறை

நீங்கவில்லை. பின்பு அந்தசாமியிடம் சென்றேன். அந்த மனுஷனிடத்தில் சாமி இறங்கியது. நீ சொன்ன பிரகாரம் நான் செய்தேன் நீ எனக்கு கொடுத்த வாக்கின்படி ஏன் செய்யவில்லை? என்றேன். நீ ஒரு நாள் குறைவைத்து விட்டாய் என்று சொல்லியது. நான் இல்லை எனக்கு மிகுந்த துன்பம், துக்கம் வந்த போதிலும் இடைவிடாமல் செய்தேன் என்றேன். அதுபதில்பேச முடியாதபடி அந்த மனுஷனைவிட்டு அகன்றது.

ஒரு நாள் ஒரு வாலிபனிடத்தில் ஆண் சாமி ஒன்று இறங்கியது. அதனிடத்தில் எங்கள் குடும்பத்தினர் உத்தரவு கேட்டார்கள். அந்த சாமி: என்னுடைய வார்த்தைக்கு கீழ்ப்படிந்து 30 நாட்கள் கண் கண்ணாடி இல்லாமல் இருந்தால் போதும். கண் பார்வை குறையை நீக்குவேன் என்று சொல்லியது.

கண் கண்ணாடி இல்லாமல் எப்படி நடப்பது என்று நான் யோசித்தேன். என் குடும்பத்தினருக்குப் பயந்து கண் கண்ணாடி இல்லாமல் 30 நாட்கள் நடந்தேன். கண் பார்வை குறைந்ததேயன்றி பார்வைக் குறைவு நீங்கவில்லை. 30 நாட்களும் சிரமத்தைதான் காண முடிந்தது. பின்பு ஒருநாள் அந்த வாலிபனிடம் அந்த ஆண் சாமி இறங்கியது. அதனிடம் கேட்க வேண்டும் என்று ஆவேசத்தோடு அதன் முன் சென்றேன். அந்த வாலிபனை விட்டு உடனே அந்த சாமி நீங்கிற்று. ஒரு நாள் என் குடும்பத்தினர் ஒரு மலைக்கோயிலுக்கு கட்டாயமாக அழைத்துச் சென்றார்கள். அங்கு ஒரு மனுஷனிடத்தில் ஆண்சாமி இறங்கியது. அதனிடம் என் தகப்பனார் என்னைக் குறித்து கேட்டபொழுது இவன் வீட்டிற்கு செல்லு முன் இவனுக்கு பார்வைக் குறைவை நீக்குவேன் என்று அந்த சாமி சொன்னது. ஆனால் நான் மலையிலிருந்து இறங்கும் பொழுது கால் தடுமாறி அங்கிருந்து உருள பார்த்தேனேயன்றி பார்வைக்குறை நீங்கவில்லை.

இப்படியிருக்க என்னிடத்திலும் சாமி வந்து இறங்கும்படி விரும்பினேன். அதன்படி ஒரு பெண்சாமி என்னிடத்தில் இறங்கியது. அதனிடம், என்னிடத்தில் வந்து என் மூலமாக பேசினால் உண்மை பேசு, பொய் பேசாதே, பொய்யை நாடி அல்ல, உண்மையை நாடியே வந்தேன் என்று சொல்வதுண்டு. ஒரு நாள் அதன் இடத்திற்கு சென்று இருந்தேன். அந்த வேளையில் அந்த சாமி என்னிடத்தில் இறங்கியது. அங்கு நின்ற ஒரு அம்மா என் காலில் விழுந்து உத்தரவு சொல் என்றார்கள். உடனே அந்தசாமி என்னை விட்டு அகன்றது. எனக்கு மன வேதனை உண்டாயிற்று. அந்த அம்மா எழுந்திருக்கும் முன் என்னைவிட்டு சாமி போய் விட்டது என்று சொல்லிவிட்டு சீக்கிரமாக வெளியே வந்து விட்டேன். காரணம் என் காலில் விழுந்த அந்த அம்மாவை பார்க்க வெட்கப்பட்டேன். இப்படியாக இவைகள் எல்லாம் உண்மைக்கு புறம்பாக காணப்பட்டது.

ஒரு நாள் என் குடும்பத்தினர் என்னைக் கட்டாயமாக ஒரு மலைக் கோயிலுக்கு கூட்டிச் சென்றார்கள். அங்கு ஒரு மனுஷனிடத்தில் பெண்சாமி இறங்கி இருந்தது. அந்த மனுஷன் இரண்டு பெரிய இரும்பு சங்கிலிகளை நான்காக மடித்து தன் மார்பில் அடித்துக் கொண்டிருந்தான். அப்போது என்மேல் இறங்குகிற பெண் சாமி இறங்கியது. அந்த சாமி உடனே என்னை நோக்கி: நீ ஏன் இங்கு வந்தாய் என்று சொல்லியது. உடனே என்னிடத்தில் உள்ள சாமி அகன்றுவிட்டது. அந்த சாமியோ என்னிடத்தில் சாமி இன்னும் உண்டென்று நினைத்து உனக்கு பெலன் இருந்தால் உள்ளே இருக்கிற சங்கிலியை எடுத்து உன் மார்பில் அடி என்றது. நான் என்னை விட்டு சாமி அகன்றது என்றேன். ஆனாலும் அந்த சாமி அகன்றது என்றேன். ஆனாலும் அந்த சாமி நீ போய் சங்கிலியை எடுத்து வா என்றது. நான் பேசாமல் அசையாமல் நின்றேன். அங்கு நின்ற ஒரு மனுஷன் சங்கிலியைஎடுக்கச் சென்றான். அவனை அந்த சாமி: நீ போகாதே இவன்தான் போய் சங்கிலியை எடுக்க வேண்டும் என்றது. அதாவது என்னிடத்தில் சாமி உண்டென்று நினைத்து இவ்வாறு சொல்லியது பின்பு அந்த சாமி கொண்ட மனுஷன் எனக்கு முன்பாக சாம்பிராணி புகை போடும்படியாக சொன்னவுடனே எனக்கு முன் சாம்பிராணி புகை போடப்பட்டது. என்னை விட்டு அகன்ற சாமி வரவே இல்லை. அந்த சாமி உள்ளே சென்று சங்கிலி ஒன்றை எடுத்து வந்தது, எனக்கு சற்று பயம் உண்டாயிற்று. அந்த சாமி கொண்ட மனுஷன் என் பக்கத்தில் வந்து சங்கிலியை என் கழுத்தில் போட்டு இறுக்கி, மீண்டும் என்னிடத்தில்

சாமி உண்டென்று நினைத்து இவன்மேல் இனி வராதே என்று சொன்னான். பின்பு அங்கிருந்து கடந்து வந்தோம். சற்று தொலைவில் ஒரு மனுஷனிடத்தில் ஆண் சாமி ஒன்று இறங்கி இருந்தது. அந்த நேரத்தில் என்னிடத்தில் பெண்சாமி இறங்கியது நானும் அந்த மனுஷனோடு சேர்ந்து ஆடினேன். என் தந்தை அந்த சாமியை நோக்கி இவனிடத்தில் என்ன சாமி உள்ளது என்று கேட்டதற்கு, அந்த சாமி சொன்னது என்னிடத்தில் உள்ள சாமி (ஆண் சாமி) தான் இவனிடத்தில் இறங்கி உள்ளது என்று சொன்னது. இந்த ஜீவியத்தில் நான் அநுபவரீதியாகக்கண்டது இவைகள் ஒருமனுஷனிடத்தில் சாமி உள்ளதா? இல்லையா? இருந்தால் ஆண்சாமியா? பெண்சாமியா? என்று பகுத்தறியத் திராணியில்லாத குருட்டாட்டம் பிடித்தவைகள் இந்த சாமிகள். இவ்வாறு நான் கண்டிருந்தும்என் மனக்கண்கள் திறக்கப்படாத காரணத்தால் இதில் தொடர்ந்து ஜீவித்து வந்தேன். கடைசியாக ஒரு நாள் நான மேள தாளங்கள் நடுவில் ஆடி புறப்படும் பொழுது சிறு வயதில் என் இருதயத்தில் தேவ அன்பு ஊற்றப்பட்டிருந்தபடியால், அந்த வேளையில், பிதாவே! இந்த பிடியில் இருந்து எனக்கு விடுதலை இல்லையா? என்று வானத்தை நோக்கி பார்த்தேன். என்னிடத்தில் உள்ள சாமிக்கு அதிக கோபம் உண்டாகி என்னை அடித்து தள்ளி கீழே உருட்டியது. என் வலது கை புயத்தில் அடி பலமாக பட்டிருந்தது. சரீரம் முழுவதுமாக வலி அதிகமாக இருந்தது. வலது கை புயவலி இரண்டு வருடகாலமாக இருந்தது. கர்த்தரே சுகப்படுத்தினார். கர்த்தருக்கு ஸ்தோத்திரம். இந்த (ஆ) சாமிகளை விட்டு முக்கியமான சாமியை மாத்திரம் வணங்கும்படியாக திரும்பினேன். 6—நாள் முழுவதும் உபவாசம், 3—நாள் முழுவதும் உபவாசம், மாதம் ஒரு முறை உபவாசம். என் சரீரத்தை ஒடுக்கி முக்கியமான சாமியிடம் பேசும்படியாக முயற்சி செய்தேன், என் மனதை ஒருமுகப்படுத்தி முன் சென்றேன். பதில் இல்லை. தெய்வத்தைக் கண்டு கொள்ள வேண்டும். தெய்வத்தோடு பேச வேண்டும், தெய்வத்தைக் குறித்து அநேகருக்கு சாட்சி கொடுக்க வேண்டும், அநேகரை நல்வழிப்படுத்த வேண்டும், என்ற பேராவல் எனக்கு இருந்தது. அதற்குரிய வழி தெரியாதவனாக காணப்பட்டேன். இறுதியாக மௌன விரதம் அனுஷ்டிக்க ஆயத்தப் பட்டேன். அந்த வேளையில்தான் மெய் தெய்வமாகிய தேவனுடைய கர்த்தர் என் மனக் கண்களைத் திறக்கும்படியாக கழுகுமலை வந்த "புதிய எருசலேம் சபை" பரிசுத்தவான்களை அடியான் சந்திக்கும்படியாக தேவன் கிருபை கொடுத்து அடிமையின் மனக்கண்களைத் திறந்தார். கர்த்தருக்கு ஸ்தோத்திரம். இப்பொழுது நான் இயேசு சுவாமியின் பிள்ளை

Bro. முத்துப்பட்டன் என்றபவுல்
கழுகுமலை.

---

"வானத்தையும் பூமியையும் உண்டாக்காத தெய்வங்கள்......அழிந்து போகும்"
—எரேமி. 10: 11

---

# THE MINISTRY OF PRAYER

It is not reason that we should leave the word of GOD and serve tables."

"But we will give ourselves continually to prayer and to the ministry of the word".
—ACTS 6 : 2, 4.

All should not do the whole work. It won't be in perfection and it will not be good also. If the worldly things are set in order, how much more the Spiritual things ought to be?

Apostles say "For other works other ministers of GOD can be appointed, but we will give ourselves continually to the ministry of prayer and to the ministry of the word." (Revelation of GOD).

"We will give ourselves to the ministry of prayer." It is essential that all believers ought to pray for their needs. There are different steps in prayer. According to the measure of one's spiritual growth, the intention of prayer, quality in words, voice and leadings will differ. Here we are going to concentrate on the study of ministry of prayer.

GOD appoints ministers specifically for this ministry of prayer. GOD accepts only the prayer of ministers, whom He appoints for this ministry.

For every high priest taken from among men is ordained for men in things pertaining to GOD that he may offer both gifts and sacrifices for sins."—Heb. 5 : 1. Due to the falling of ancient churches, the protestant churches sprung up. But not could trace the foundation of the church and

hence modernism raised its head in the midst of Christians. One among the opinions of the modernism is, "All believers are equal. There is no such things as teachers or pastors or apostles or ministers. There is no restriction. Anybody can do anything: Can speak what they like can walk according to their own whims and fancy, can give baptism, can conduct Lord's supper and preach, For this specific purpose, there is no neccessity for appointing a ministers for all are ministers of GOD. All should be considered as barthern,"

People of GOD must understand that GOD has a pattern (Plan of GOD). For every thing there is a pattern of GOD and He has mentioned clearly in Scriptures

All Israelites who had been delivered, from Egypt were servants of GOD.-Lev. 25:42 But there were specific servants of GOD heads over the people, priests, and a tribe for the ministries.- Num. ch. 18. Like wise all the newtestament believers are also Kings and priests. - Rev. 1 : 6; I Pet. 2 ; 5, 9. As the Holy Spirit said, " Seperate me Barnabas and Saul for the work where unto I have called them" (Acts 13 : 2, 3) they were seperated, so also there are specific servants of GOD being dedicated for the ministries. but there are differences in the ministries, Similarly, God has authorised ministers especially apostles for the ministry of prayer.

" He is a prophet, and he shall pray for you." - Gen. 20 : 7. yea, when Abraham Prayed, GOD healed Abimelech and his wife and his maid servants. Moses prayed, and GOD did signs and wonders, seperated the red sea, triumphed over enemies and above all, GOD's people, who are to be perished obtained forgiveness of sin. - Num. 14 : 11 - 21. Joshua prayed and the sun and moon stood still. - Josh 10 : 12 - 14. The prayers Judges were answered. samuel prayed and Lord rained showers with thunders. - I sam. 7 : 5 - 14. Elijah prayed and fire came down. - I kings 18 : 36, 39 Kings, prophets and priests who were raised of GOD stood between GOD and the people and prayed and people received forgiveness of sins goodness and blessings. GOD commanded to the friends of Job, who talked very high about GOD, " Ye have not spoken of me the things, as my servant Job hath, therefore take unto you sacrifices and go to my servant Job, and he shall pray for you; for him will I accept: lest I deal with you after your folly. " - Job 42 : 7 - 10. Fore seeing the destruction which going to be fall Amos prayed and GOD said, " It shall not be, " - Amos 7 : 1 - 6. The prophet Daniel prayed and GOD answered and revealed His plan. - Dan. 9 : 20; 10 : 21.

Similarly there are ministers who are appointed by GOD in the new testament. Among them the apostles are in the line of the priests of the old testament. After resurrection, Jesus Christ appointed apostles and commanded them there are ministers and deacons working under the apostles according to their counsel, and these are ambassadors for christ, ministers and fellow labourers and GOD's people are husbandry. - 11 cor. 5 : 18-20; Heb. 13 : 7, 17; I Thes. 5: 12, 13; I Tim. 5 : 17; acts 20 : 28; Eph. 4 : 11 - 13, I Cor, 12 : 5 ; 3 : 9. Hence ministers, raised of GOD are necessary for prayer and exorting the word continually. All believers are not ministers. - I cor. 12 : 29 A Minister should be a believer, ordained and sent by GOD and the church. -Acts 13 : 2, 3; Acts 6 : 15, 16; 14 : 14; II Tim-1 : 6 I Tim 4 : 14. Ministers of GOD are the labourers together with GOD and they are accountable to GOD. - I cor 4 : 1 - 4 Believers Praying and striving against the servants of GOD are wrong. If the minister does not pray, it will be a sin unto them - I sam. 12:23, Ministers are the representatives of GOD, and GOD appoints them for the ministry of prayer. Glory to GOD!

# புதிய எருசலேம் செய்தி

எக்காளசத்தம்-2 * பிப்ரவரி 1984



"புதிய எருசலேம் சபை"

"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ, நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள்.... விழித்திருங்கள்...உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லோருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்.."

மாற்கு 13 : 35-37

**EDITOR: CHIEF PASTOR N. LAZAR**

BOMBAY, INDIA

# இதழின் உள்ளே



"வள்ளியூர் சபையில் நடந்த ஞானஸ்நான கூட்டங்களில் 1-1-1984 அன்று காலையில் 14 பேர்களும்; 15-1-1984 அன்று காலையில் 6 பேர்களும் அடுத்து கொடைரோடு சபையில் நடந்த ஞானஸ்நான கூட்டத்தில் 29-1-1984 அன்று காலையில் 36 பேர்களும் ஞானஸ்நானம் பெற்று கிறிஸ்துவுக்குள்ளானார்கள். இவர்கள் கிறிஸ்துவுக்குள் பலப்பட்டு தொடர்ந்து நிலைநிற்க எல்லோரும் இவர்களுக்காய் ஜெபிக்கும்படி கேட்டுக்கொள்கிறோம்."

# ஆசிரியர் உரை

''அன்பான தேவனுடைய பிள்ளைகளே, உலகத்தில் அநேகங் கள்ளத் தீர்க்கதரிசிகள் (போதகர்கள்) தோன்றியிருப்பதினால் நீங்கள் எல்லா ஆவிகளையும் நம்பாமல், அந்த ஆவிகள் தேவனால் உண்டானவைகளோ என்று சோதித்து அறியுங்கள்'' என்று வேதம் சொல்லுகிறபடி இந்நாட்களில் பிரசங்கிகளுக்கு குறைவில்லை. அவர்கள் யார்? இவர்கள் அப்போஸ்தல உபதேசமுடையவர்களா? இவர்களுக்கு அப்போஸ்தலனுண்டா? அவர் அப்போஸ்தலனா? என்று சோதித்து அறியுங்கள். அப்போஸ்தலனல்லாதவர்களுக்கு உபதேசிக்க அதிகாரமில்லை. அவர்களுடைய உபதேசத்தை சோதித்துப்பாருங்கள். தேவனுடைய திட்டத்திற்கு மாறாய் (வேதவாக்கியங்களில் தேவனுடைய திட்டம் வெளிப்படுத்தப்பட்டுள்ளது-I பேது. 4 : 11). மனித அபிப்பிராயமாயிருந்தால் தள்ளிப்போடுங்கள். நியாயத்தீர்ப்பு திரளான மனிதருடைய அபிப்பிராயத்தின்படி அவர்கள் சொல்லுகிற அனுபவங்களின்படியல்ல (அனுபவங்கள் ஆளுக்கு ஆள் வித்தியாசப்படும், வேத வசனமோ மாறாதது). தேவனுடைய வசனமே கடைசி நாளில் நம்மை நியாயந்தீர்க்கும் சட்டப்புஸ்தகம் (யோவா. 12 : 48). ஆனபடியால் தேவவசனத்துக்கு திரும்புங்கள். ஜீவ வசனத்தைக் கெட்டியாய்ப் பிடித்துக்கொள்ளுங்கள். இவ்வுலகில் சுடர்களைப் போல் பிரகாசிப்பீர்கள். நம்முடைய கர்த்தரின் வருகைக்கும் ஆயத்தப்படுவீர்கள்.

கிறிஸ்துவுக்குள்,

N. Lazar

Cheif Pastor N. LAZAR

# பாவமும் இரட்சிப்பும்

பாவத்தின் சம்பளம் மரணம்
--ரோமர் 6 : 23

பாவம் என்பது மிகப் பெரியதொரு காரியம். மக்கள், பாவம் உண்டென்று ஒப்புக்கொண்டாலும், ஒப்புக் கொள்ளாமற் போனாலும் பாவம் உலகத்திலிருக்கிறது. அதை மனிதர் மாற்றவோ, மறுக்கவோ, முடியாது.

பாவம் மனுமக்களுக்கடுத்த விஷயம். பறவைகள், மிருகங்கள், மச்சங்கள், பிராணிகளுக்கு ஆத்துமாவோ, நன்மை தீமை அறியத்தக்க அறிவோ இல்லை. ஆதலால் அவைகளுக்கு பாவமும் இல்லை. ஆத்துமாவுடைய எவ்வகை சிருஷ்டிக்கும் பாவ, புண்ணியமுண்டு.

ஆதியிலே பாவம் எப்படித் தோன்றிற்று என்றும், சாத்தானுக்குள் பாவம் எவ்வாறு தோன்றிற்று என்றும் நாம் அறியோம். ஆனால் தேவதூதனாய் சிருஷ்டிக்கப்பட்ட ஒரு தூதன் கெட்டு சாத்தானாய் மாறி விட்டான் என்று அறிகிறோம். எப்படியெனில் இலை பச்சையாயிருந்தாலும் அது தன் நிலை விட்டு தடுமாறி தண்ணீரில் விழுந்தால் கெட்டு அழுகிப் போவது போல் தேவதூதனும், தன் நிலையை விட்டு மாறியதால் பாவம் தோன்றிற்று, மகிமை மிக்க ஒளியை இழந்து கருமை நிற சாத்தானாய்ப் போனான்.

சாத்தான் தேவன் நேசிக்கும் அழகுள்ள மனிதர்கள் மேல் வஞ்சினங்கொண்டு மனித சமுதாயத்துக்குள் ஏதேனில் பாவத்தை ஊதியதை ஆதியாகமத்தில் காண்கிறோம்.

பாவத்தின் முழுநிலை அவிசுவாசம், கீழ்ப்படியாமை, மீறுதல் செய்தல் ஆகியவைகளில் அடங்கியிருக்கிறது. மனிதன் ஒரு ஒட்டு சிருஷ்டியாகும். மிருகங்கள், பறவைகள் போன்ற பிராணிகளைப் போலல்ல. தேவன் தம்முடைய சாயலாகவும், ரூபத்தின்படியும் மனிதனை உண்டாக்கினார். சாயல் என்பது நாணயத்தில் அரசனின் சிரசுருவம் பதிக்கப்பட்டிருப்பது போன்றும், பூரண சந்திரன் காலத்தில் அச்சந்திரனின் சாயல் அமர்ந்த தண்ணீரில் காணப்படுவது போன்றது என்றும் கொள்ளலாம். இதில் முந்திய உதாரணத்தை விட பிந்தியதே சாயலுக்கு நல்ல உதாரணமாகும். சாயல் என்பது உள்ளான தன்மையாகும். சந்திரனுக்கும் தண்ணீருக்கும் இடையில் மேக கூட்டம் வந்துவிட்டாலோ அல்லது தண்ணீரில் ஏதாகிலும் அசைவு ஏற்பட்டாலோ சந்திரன் உடைந்து அல்லது மங்கலாய்க் காணப்படும். பூரணமாய் சந்திரனுடைய சாயல் பிரதிபலிக்காது.

அப்படியே மனிதன் தேவனோடு ஐக்கியமாய் ஜீவிக்க தனக்கு வேண்டிய ஜீவன், சக்தி, நன்மை, பாதுகாப்பு, நன்மை தீமை அறியும் அறிவு ஆகியவற்றை தேவனிடம் பெற்றுக் கொண்டு கீழ்ப்படிதலுள்ள அன்பான பிள்ளையாய் ஜீவிக்கும் போதே தேவ சாயல் இவனில் பிரத்தியட்சயமாய் தெரியும்.

இறைவனாகிய பிதாவின் பிள்ளையாய் அன்புடையவனாய் ஜீவிக்க சிருஷ்டிக்கப்பட்டானே யொழிய அவன் தனி சிருஷ்டியல்ல. மிருகங்கள், பறவைகள், பிராணிகள் தேவசாயலில் சிருஷ்டிக்கப்படவில்லை. மனிதனே அவ்வாறு சிருஷ்டிக்கப்பட்டுள்ளான். இவன் சார்ந்து ஜீவிக்கக் கூடியவன். இவன் தன் சிருஷ்டிகரில் அன்பு கூர்ந்து, கீழ்ப்படிந்து, அவரைச் சார்ந்து, நம்பிக்கையோடு ஜீவிக்க சிருஷ்டிக்கப்பட்டவன். இந்த நிலையிலிருந்து அவனை விழச்செய்ய சாத்தான் தூண்டினான். அவைகளில் சில :

1. சர்ப்பத்துக்குள்ளிருந்து சாத்தான் ஸ்திரீயை நோக்கி : தோட்டத்திலுள்ள சகல விருட்சங்களின் கனியையும் புசிக்கவேண்டாம் என்று தேவன் சொன்னது உண்டோ? என்றது ( ஆதி. 3 : 1). இதன் மூலம் அவளின் நன்மையை நாடும் ஒரு நண்பனைப்போல் தன்னைக் காண்பித்துக்கொண்டது. இன்றும் மக்கள் தேவனைவிட, தேவன் கொடாத இன்பங்களைத் தங்களுக்கு சாத்தான் தர முடியும் என்று நம்பி அவனோடு தொடர்பு கொள்கின்றனர்.

2. விலக்கப்பட்ட மரத்தின் கனியை நீங்கள் புசிப்பதினால், நீங்கள் சாகவே சாவதில்லை (ஆதி. 3 : 4) என்றான். மனிதன் சாவதில்லை என்று அதாவது மரணம் கிடையாது, தண்டனை கிடையாது, நரகம் கிடையாது, தேவன் சொல்லுகிற பிரகாரம் ஜீவிக்காவிட்டால் ஆபத்து ஒன்றுமில்லை என்றான்.

தேவன்மேல் மனிதர்கள் அவிசுவாசம் கொள்ளச் செய்தான். அவர் நல்லவரில்லை பாருங்கள் உங்களுக்கு முழுச்சுதந்தரம் கொடுக்கவில்லை ஒரு மரத்தின் கனியைப் புசிக்க சுதந்தரம் கொடுக்கவில்லையே என்றான்.

அடுத்தபடியாக மனிதன் தேவனுக்கு கீழ்ப்படியாதிருக்க; தேவன் பொய் சொல்லுகிறார் என்றான். நீங்கள் சாகவே சாவதில்லை என்று பொய் சொல்லுகிறான். —ஆதி. 3 : 4.

3. மூன்றாவதாக தேவனைச்சார்ந்து ஏன ஜீவிக்கவேண்டும் நீங்களே நன்மை, தீமையை அறிந்து தேவர்களாகலாம் என்னும் புதிய ஆசையைத் தூண்டினான். சாத்தானுடைய இந்த வார்த்தைகளை–இந்த பாவத்தை ஏவாள் ஏற்றுக் கொண்டாள். தேவன் மேல் அவிசுவாசம் உண்டாயிற்று. சாத்தான் மேல் விசுவாசம் உண்டாயிற்று. மீறுதல் செய்தாள். தேவனின்றி ஜீவிக்க முடிவு செய்தாள். தன் புருஷனையும் அதற்கு உட்படுத்தினாள்.

நீங்கள் இதைப்புசிக்கும் நாளில்உங்கள் கண்கள் திறக்கப்படும் என்றும் நீங்கள் நன்மை, தீமை அறிந்து தேவர்களைப் போல் இருப்பீர்கள் என்றும் தேவன் அறிவார் என்றதும் (ஆதி. 3 : 5); தேவசாயலாக தேவனைச்சார்ந்து தேவனோடு ஐக்யமாய் ஜீவிக்க சிருஷ்டிக்கப்பட்ட மனிதன் தானே தேவனாகிவிட தீர்மானித்தான். நன்மை எது; தீமை எது என்னும் அறிவை தேவனிடம் கேட்டு கற்றுக் கொள்ளவேண்டிய மனிதன் தானே அறிந்துகொள்ள, தீர்மானிக்க முடிவு செய்தான். பாவம் நுழைந்தது. மனிதன் கெட்டான். ஐயோ பரிதாபம்! முதலாவது மனிதர்கள் கண்டது : தங்களுடைய நிர்வாணமே, அடுத்தபடி பயம்; பின் தேவனைவிட்டு தூரம் ஓடுதல், ஒளிதல், தேவன் கூப்பிட்டு கேட்கும் போதும் மற்றவர்கள் மேல் சூழ்நிலையின் மேல் பழியைப் போடுதல், பொய் சொல்லுதல்.

இப்படியாக மனிதன் கெட்டு, தனக்கு ஜீவாதாரமான தேவனைவிட்டு துண்டிக்கப்பட்டு (பிரிவினை) தேவனைவிட்டு மனிதன் பிரிந்து போனான். அது முதற்கொண்டு பிரிவினை, பகை, கொலை, கடமையை மறுத்தல், தன்னுடைய பாதுகாப்பைப் பற்றி கவலை முதலியன உண்டாயிற்று. உலகம் முழுவதும் பாவத்துக்குள்ளாயிற்று. எல்லோரும் விரும்பி செய்வதே பாவம். அன்று முதற்கொண்டு மனிதன் தான் விரும்புகிற நியாயமென்று தோன்றுகிற நன்மையைச் செய்யாமல் தான் வெறுக்கிற தீமையையே செய்கிறான். சில வேளை தீமை நன்மையாகவும், நன்மை தீமையாகவும் தோன்றுகிறது. இதனால் மனிதன் விகார உணர்ச்சிக்குட்பட்டு, தேவனில் திருப்தி அடைய வேண்டிய மனிதன் தன்னுடைய தேவைகளை உலகப் பொருளால் திருப்திப்படுத்த முயற்சிக்கிறான். செய்வதையே மேலும் மேலும் செய்து குடிகாரனாகவும், திருடனாகவும், காமியாகவும், பொருளாசைக்காரனாகவும், திருடனாகவும், பொய்யனாகவும், வஞ்சனைக்காரனாகவும், கொலைகாரனாகவும் மாறுகிறான். முடிவில் அவனுடைய ஆத்துமா மாத்திரமல்ல அவனுடைய சரீரமும் சிதைவுறுகிறது. பரிதாபமாய் மரித்து, தான் விரும்பி ஏற்றுக்கொண்ட நன்மை, தீமை அறியும் அறிவின்படி தேவனால் நியாயம் தீர்க்கப்பட்டு நித்திய அழிவுக்கு, நரகத்துக்கு ஏதுவாகிறான். அங்கே அவர்கள் புழு சாவாமலும் அக்கினி அவியாமலுமிருக்கும் (மாற். 9 : 44,46,48) நான் பாவத்திற்குபொறுப்பாளியில்லை என்று மனிதன் சொல்ல முடியாது. ஏவாள் பழத்தை நீட்டியபோது நான் மாட்டேன் என்று அவனால் தள்ளிவிட முடியும். நானும் செய்வேன் என்றால் அதற்குரிய தண்டனையும் பெற்றுக் கொள்ள வேண்டியதே. தண்டனைக்கு தப்ப வழியில்லை. மனிதன் தன் கல்வியாலோ நற்குலப் பழக்கத்தாலோ, நற்பயிற்சியினாலோ பாவத்துக்கு தப்ப முடியாது. பாவம் மனித ஜாதியைப் பற்றிப் பிடித்திருக்கிற தட்ட முடியாத இராட்சதனைப் போன்றும். அவிக்க முடியாத

நெருப்பை போன்றும் எதிர்த்து நீந்தமுடியாத காட்டாற்று வெள்ளம்போன்றும் இருக்கிறது. பாவத்திலிருந்து மனிதனை இரட்சித்து முழுமையாக்க தேவசாயலில் பூரணப்படுத்த மெய் இறைவன் ஒருவராலேயே முடியும். அதுவும் இறைவனோடு மனிதன் ஒத்துழைத்தால்தான் முடியும். இல்லை என்றால் மனிதனின் பாவத்தை அவனிலிருந்து அகற்ற யாராலும் முடியாது. இந்த பாவத்தீயிலிருந்து மனிதனை தேவன் எவ்வாறு மீட்கிறார் என்பதையும் கவனிப்போம்.

— தொடரும்.

"...மாம்சத்திலே பாவத்தை ஆக்கினைக்குள்ளாகத் தீர்த்தார்"
— ரோமர் 8 : 3

# நீங்கள் உங்களுடையவர்களல்லவென்று அறியீர்களா?

பொருள், உடமை, நிலம், சொத்து, ஊர், தாலுகா, ஜில்லா, நாடு, கண்டம் முதலான இவைகளில் சில தனி நபருக்கும், சில பலருக்கும் உடையவைகளாயிருக்கிறது. இவைகள் எல்லாவற்றையும் உடையவர் இறைவன். நாம் நம்முடைய ஏதாவது பொருளை அல்லது மனைவியை, பிள்ளைகளை, பெற்றோர்களை, சகோதர சகோதரிகளை உடமைகளை என்னுடையது அல்லது என்னுடையவர்கள் என்று சொல்லும் போது இவை எல்லாம் தேவனுடையவைகள் என்பதை மறந்து விடக்கூடாது.

இதை அறியாதபடி இது என்னுடையது இவைகள் எல்லாம் என்னுடையவைகள் என்று மனிதனும் சாத்தானும் வீண் பெருமை கொள்கின்றனர். தேவன் அவரவர்க்குரிய பங்கைக் கொடுத்து சுதந்திரமாக அனுபவிக்க அனுமதித்திருக்கிறார். [(உ-ம்) சரீரம், பொன், பொருள், சொத்து முதலிய வைகள்.] ஆனால் இவைகள் எல்லாம் தேவனுடைய கரத்திலிருந்து வந்தவைகள். தேவன் இலவசமாய் அன்பு கூர்ந்து கொடுத்தவைகள்; இல்லையென்றால் இதை சம்பாதிக்க பெலன் தந்திருக்கிறார். இப்படி நாம் எண்ணவிட்டால் நாம் நன்றியற்றவர்களாவோம். இஸ்ரவேலர்க்கு நன்றி ஏறெடுத்தலாகிய ஒரு பிரமாணம் உண்டு. (உபா. 8: 12—18.) கடவுளுக்கு கொடுக்கும் போது தாவீது இராஜாவும் குடிமக்களும் இதையே நினைவு கூர்ந்தார்கள்—I நாளா. 29 : 10—19.

தேவன் எல்லாவற்றையும் தமக்கென்று படைத்தார். —கொலே 1 : 16.

இதில் மனிதனும் உட்படுவான். அவனுக்காக அவனுடைய வாழ்விற்கென்று அவன் உருவாக்கப்படுமுன் வானமும் பூமியும் உண்டாக்கப் பட்டது. பூமி அவன் வசிப்பதற்கென்றே உருவாக்கப்பட்டது (ஏசா. 45 : 18). வானத்தையும் பூமியையும், அதன் அமைப்பையும் சிந்திக்கும் மனிதன் இறைவனுக்கு நன்றி கூறாமலிருக்கமுடியாது.

இறைவனுடைய சிருஷ்டிப்புகளில் விசேஷித்தவன் மனிதன் (மத். 6 : 26) மற்ற பூமியிலுள்ள சிருஷ்டிகளை அனுபவிக்கவும், ஆளவும் உரிமை பெற்றுள்ளான். அதற்கு அவனில் நான் என்ற ஆத்துமா உள்ளது. நான் என்னுடையது, எனக்குரியது என்று சொல்லவும், பேசவும், வாதிடவும், அதிகப்படி சேர்க்கவும், திட்டமிடவும், சிந்திக்கவும், செயலாற்றவும் கூடியவனாயிருக்கிறான். தொழுகையின் தன்மை இயற்கையிலே அவனுக்குள் அமைந்துள்ளது. மற்ற பிராணிகளுக்கு இந்த திறமையில்லை. ஆகையால் மனிதன் மிக விஷேசித்தவனாகும். இந்த மனிதன் தேவன் மேலுள்ள அன்பை இழப்பது தனக்கு தேவன் கொடுத்த திறமைகளைக் கொண்டு தேவனின்றி ஜீவிக்கவும் தேவனுக்கு நன்றி செலுத்த ஆராதிக்க அவசியமில்லை, அவருக்கு கீழ்ப்படிய வேண்டியதில்லை என்றாற்போல் தன்னை முக்கியப்படுத்த ஆரம்பித்தான். இதனால் பயங்களும், வேதனைகளும், துன்பம், வியாதி, எதிர்பாரா நிகழ்ச்சி, மரணமும் நிகழஆரம்பித்தது. மனிதனுக்குள் சேவை தன்மை உள்ளிருப்பதால் அவன் தன்னை அல்லது பிறரை அல்லது எதையாவது அல்லது அசாதரமானதை வணங்க

ஏவப்பட்டான் சாத்தானல் வஞ்சிக்கப்பட்டு பிசாசை வணங்க ஆரம்பித்து விட்டான்.

நாமும் ஒரு நாள் அப்படி இருந்தோம். பிசாசை வணங்கி வந்தோம், அல்லது பிறரை திருப்தி படுத்தி வந்தோம், அல்லது நம்மை திருப்தி படுத்தி நமது ஆசைகளை நிறைவேற்றி வந்தோம். இந்த விக்கிரகங்களை நாம் வணங்கி வரும் போதே இவைகளல்ல, இவைகளுக்கப்பால் இந்த வானத்தையும் பூமியையும் உண்டாக்கின எல்லாம் வல்ல இறைவன் ஒருவர் உண்டு என்று இறைவனல் அவ்வப்போது உணர்த்தப்பட்டுக் கொண்டே வந்தோம். ஒருநாள் இயேசுவைக் கண்டோம், கேட்டோம் அவர் சுவிசேஷத்தினல் நம்முடைய பாவ ஸ்திதியையும், குருட்டுநிலையும், அபாயநிலைமையும் கண்டு மனஸ்தாபப்பட்டு இறைவனை இறைஞ்சி இயேசு கிறிஸ்துவை விசுவாசித்து நம்மை உணர்ந்து நம்மையும் நம்முடையவைகளையும் தேவனுக்கு ஒப்புக் கொடுத்து இறைவனடி சேர்ந்தால் இறைவன் சந்தோஷப்பட்டு தம் சபை மூலம் நம்மை ஏற்றுக்கொண்டு, தம் சபை மூலம் நமது பழைய வஸ்திரங்களை கழற்றி, குளிப்பாட்டி சுத்திகரித்து புது ஆடை அணிந்து, விருந்திட்டு வீட்டில் எல்லாரோடும் சேர்த்துக் கொள்வார். தகப்பனுடைய ஆவியும் நமக்குள் வரும்—லூக். 15 : 20-24. அப்போது நாம் நம்முடையவர்களல்ல என்பதை உணர்ந்து அன்பும், நன்றியுமுள்ள கீழ்ப்படிதல் உள்ள மகனுய் ஜீவிப்போம். வயலில் போய் வேலை செய்யும் போதும் ஒவ்வொரு சம்பவத்திலும் பிதாவின் விருப்பத்தை நிறைவேற்றுவோம். நான் என்னுடைய சரீரம், இப்போ எனக்கிருக்கிற எல்லாம் பிதாவினுடையது என்பதை மறவாதிருப்போம். தன்னுடைய முந்திய தவறுதலையும் ஓடிப் போனதையும், நன்றி கெட்டந் தனத்தையும் எண்ணி, எண்ணி இப்போ எல்லாம் பிதாவினுடையது என்பதை நன்றியுள்ள இருதயத்துடன் நினைந்து, நினைந்து அவருடையதை அவருக்குப் பிரியமாய் உபயோகிப்போம்.

கவனிக்க, நீங்கள் உங்களுடையவர்களல்லவென்று அறியீர்களா? கிரயத்திற்கு கொள்ளப்பட்டீர்கள் — I கொரி. 6 : 19, 20; I பேது. 1 : 18, 19. நாம் கடவுளுடையவர்கள். இயேசுகிறிஸ்துவின் இரத்தப் பலியினல் மீட்கப்பட்டவர்கள் என்பதை மறந்துவிடாதீர்கள்.

தேவன் கெட்டுப் போன உலகத்திலிருந்து ஒரு கூட்டம் மக்களை தமக்கென்று பிரித்தெடுக்கிறர். அவர்கள் பற்பல நிலைமைகளிலிருந்து தேவனுக்கென்று கனி கொடுக்கும்படி மீட்கப்படுகிறர்கள். இவர்கள் பாவத்திலும், பிசாசின் பிடியிலிருந்தும் பலவித தீமைகள், துன்ப, துக்கங்களிலிருந்து மீட்கப்படுகின்றனர். மீட்கப்படுவது கடவுளுக்கென்று தேவனேடு ஐக்யமாயிருப்பதற்கு, தேவனுக்கு மகிமையாயிருப்பதற்கு, தேவனுக்கு முன் ராஜாக்களும், ஆச்சாரியர்களாவதற்கென்று, தேவ குமாரனைப் போல் ஆவதற்கென்று, தேவனை தரிசிப்பதற்கென்று, உலகத்தை ஆளுகை செய்வதற்கென்று மீட்கப்படுகின்றனர்.

இவர்கள் தேவஜனம் என்றும், தேவனுடைய பிள்ளைகள் என்றும் அழைக்கப்படுகிறர்கள். தேவனுடைய பிள்ளைகள் தேவனுடையவர்கள்.

நீங்கள் தேவனுடைய பிள்ளைகளாகி விட்டீர்களா? இல்லை என்றல் இன்றே இயேசு கிறிஸ்துவை விசுவாசித்து தேவனுடைய பிள்ளைகளாகுங்கள்.

---

"கிரயத்துக்குக் கொள்ளப்பட்டீர்களே..."
—I கொரி. 6 : 20

---

# மோட்ச வழி

## குரு – சிஷ்ய உரையாடல்

(சென்ற இதழ் தொடர்ச்சி)

சிஷ்யன் : அப்படியென்றால் ஞானஸ்நானம் பெற்றுவிட்டால் உடனே இரட்சிக்கப்படுறோம் அப்படித்தானே.

குரு : இரட்சிப்பு என்றால் என்ன என்று நீ புரிந்திருக்கிறாய்?

சிஷ்யன் : இரட்சிப்பு என்றால்... இயேசு கிறிஸ்துவை விசுவாசித்ததுடன் இயேசு கிறிஸ்துவை விசுவாசித்து முழுகி ஞானஸ்நானம் பெற்றுக் கொண்டதும் இரட்சிக்கப்பட்டு விட்டோம் இனி மோட்சம்தான் என்று நம்பிக் கொண்டிருக்கிறேன்.

குரு : மனந்திரும்பி, இயேசுகிறிஸ்து என்னுடைய பாவங்களுக்காக இரத்தம் சிந்தி மரித்து அடக்கம் பண்ணப்பட்டு உயிர்த்தெழுந்தார் என்று விசுவாசித்து, பாவ அறிக்கை செய்து பாவங்களை விட்டுவிட்டு பிதா, குமாரன், பரிசுத்த ஆவியின் நாமத்திலே ஞானஸ்நானம் முழுகி பெறுவதோடு அவன் காத்திருந்து பரிசுத்த ஆவியின் அபிஷேகமும் பெற்று தேவனுடைய ஜனங்களோடு சேர்ந்து தேவனை ஆராதித்து சாட்சியாய் ஜீவித்து அவருக்குள் முடிவு பரியந்தம் நிலை நின்று, தனக்கு முடிந்தமட்டும் தேவசித்தப்படி இந்த உலகத்தில் தேவனுக்கு ஊழியம் செய்து கர்த்தருடைய வருகையை எதிர்நோக்கி ஆயத்தமாய் (வாழ்க்கையில்) காத்திருக்க வேண்டும். அப்பொழுது இரட்சிக்கப்படுவோம்—மோட்சம் சேர்வோம்.

சிஷ்யன் : அப்போ இயேசு கிறிஸ்துவை ஏற்றுக்கொண்ட உடனே அல்லது பாவ அறிக்கை செய்து ஞானஸ்நானம் பெற்றுக்கொண்டதும் இரட்சிக்கப்படவில்லையா?

குரு : இரட்சிப்புக்குள்ளாக வந்திருக்கிறோம். இரட்சிப்பு என்றாலே முழுமை ஆக்குதல் ஆகும். ஆதலால் இரட்சிக்கப்பட்டோம், இரட்சிக்கப்பட்டுக் கொண்டே இருக்கிறோம்—இரட்சிக்கப்படுவோம்.

ஒரு மனிதன் ஞானஸ்நானம் பெற்று சபைக்குள்ளாகும்போது மனந்திரும்பி பெரிய பாவங்களை விட்டுவிடுகிறான். தொடர்ந்து அவன் கிறிஸ்தவ ஜீவியத்தில் வளரும்போது சிறிய, சிறிய பாவங்களிலிருந்தும்; பாவ எண்ணங்களிலிருந்தும் இரட்சிக்கப்படுகிறான்; இன்னும் அவன் தேவனோடு நடக்கும்போது, தேவனுக்குப் பிரியமானதை செய்து தன் ஆவியில் (சுபாவத்தில்) உள்ள அசுசிகளும் நீங்கி தேவ அன்பில் பூரணப்பட்டு பரிசுத்தமடைந்து இயேசுகிறிஸ்துவின் வருகையின் போது அவனுடைய சரீரமும் மீட்படையும் போதே (மறுரூபம்) பூரண இரட்சிப்படைகிறான். இதெல்லாம் சுவிசேஷத்தைக் கைக்கொள்வதினால் மாத்திரம் நிகழும்.

சிஷ்யன் : சுவிசேஷத்தை கைக்கொள்வது என்றால் என்ன?

குரு : இந்நாட்களில் அனுப்பப் படாதவர்களும், அஸ்திபார மில்லாதவர்களும் தெளிவில்லாதவர்களுமான கள்ளப்போதகர்களால் சத்தியம் குழப்பப்பட்டிருக்கிறது. இந்தக் கள்ளத் தீர்க்கதரிசிகள் தங்கள் மனதிலுள்ளதையே பிரசங்கிக்கிறார்கள்—எரேமி 29 : 8, 9; 23 : 26. எப்படியென்றால் கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவை விசுவாசியுங்கள்; அவரை நோக்கி பாவ அறிக்கை

செய்து ஜெபம் பண்ணுங்கள்; நீங்கள் இரட்சிக்கப்படுவீர்கள் என்று பிரசங்கிக்கிறார்கள். இப்படி வேதத்தில் நாம் பார்க்கிறதில்லை. அப்போஸ்தலர்களும், பரிசுத்தவான்களும் இயேசுவைப் பற்றி போதிக்கும் போதே ஞானஸ்நானத்தைப் பற்றியும் உபதேசித்தார்கள்; கேட்ட மக்களும் உடனே ஞானஸ்நானம் முழுகிப் பெற்றுக் கொண்டார்கள். நீ எங்கே இருந்தாலும் சரி, மனந்திரும்பி இயேசுகிறிஸ்துவை விசுவாசி, அவரை நோக்கி உன் பாவங்களை அறிக்கை செய்து ஜெபம் செய், தேவன் உன் பாவங்களை மன்னிப்பார், உன்னை இரட்சிப்பார்; நீ இரட்சிக்கப்பட்டுவிட்டாய் என்று நம்பு என பிரசங்கிக்கிறவர்களெல்லாம் அனுப்பப்படாத அரைகுறை பிரசங்கிகளாகும். வாசித்துப்பார்—அப். 2 : 38-42.

ஒரு மனிதன் சுவிசேஷத்தை விசுவாதிப்பது மாத்திரமல்ல சுவிசேஷத்தை ஏற்றுக் கொள்ள வேண்டும். அதற்கு அடையாளமாக பாவ அறிக்கை செய்து முழுகி ஞானஸ்நானம் பெற்றுக் கொள்வதினாலேதான் பாவம் மன்னிக்கப்படும். (வெறும் ஜெபம் பண்ணுவதினாலல்ல).
—அப். 2 : 38; 22 : 16; மாற். 1 : 4, 5; மத். 21 : 28-32; லூக். 7 : 29, 30, 35.

புதிய ஏற்பாட்டின் சுவிசேஷமே யோவானின் ஞானஸ்நானத்திலிருந்துதான் ஆரம்பமாகிறது. இங்கே குழந்தை ஞானஸ்நானமோ, தெளிப்புஸ்நானத்திற்கோ இடமில்லை.

"அப்பொழுது எருசலேம் நகரத்தாரும் யூதேயா தேசத்தார் அனைவரும், யோர்தானுக்கு அடுத்த சுற்றுப் புறத்தார் யாவரும் அவனிடத்திற்குப் (ஸ்நானகர் யோவானிடத்திற்கு) போய் தங்கள் பாவங்களை அறிக்கையிட்டு, யோர்தான் நதியில் அவனால் ஞானஸ்நானம் பெற்றார்கள். மனந்திரும்புதலுக்கேற்ற கனிகொடுக்கும்படி போதிக்கப்பட்டார்கள்-மத். 3 : 5,6,8. பெந்தகொஸ்தே நாளுக்குப் பின்னும் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசித்து வெறும் ஜெபம் பண்ணுவதினாலல்ல; ஜெபத்தோடு சரியான ஞானஸ்நானத்தின் மூலமே பாவமன்னிப்பு, பாவம் போக கழுவப்படுதல் நிகழுகிறது—அப். 2 : 38; 22 : 16; 10 : 44-46; 8 : 35-38.

அடுத்தபடி சுவிசேத்தைக் கைக்கொள்வது: விசுவாச வாழ்க்கையில் மூன்று படிகள் உண்டு :

முதல்படி : சுவிசேஷம்—இயேசுகிறிஸ்து என்னுடைய பாவங்களுக்காய் கல்வாரி சிலுவையில் இரத்தம் சிந்தி மரித்தார், அடக்கம் பண்ணப்பட்டார், மூன்றும் நாள் உயிர்த்தெழுந்தார் என்று விசுவாசிப்பது. — I கொரி. 15 : 3, 4; கலா. 2 : 20.

இரண்டாம்படி: சுவிசேஷத்தோடு ஐக்கியப்படுவது — இயேசு கிறிஸ்து எனக்காக மரித்தார். அடக்கம் பண்ணப்பட்டார், உயிர்த்தெழுந்தார் என்பதோடு நில்லாமல் அவர் எனக்காக மரித்தார் ஆனபடியால் நான் மரித்தேன். அடக்கம் பண்ணப்பட்டேன் என்பதற்கு அடையாளமாக கர்த்தருடைய அடக்கம் பண்ணுதலுக்கு அடையாளமான முழுக்கு ஸ்நானத்தைப் பெற்றுக்கொள்ளுதல். ஆம்! ஞானஸ்நானம் ஒரு மனிதனை கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினுடைய மரணம், அடக்கம் பண்ணுதல், உயிர்த்தெழுதலோடு (விசுவாசத்தினால்) இணைக்கிறது.

—கொலே. 2 : 12; ரோம. 6 : 3,4; கலா. 3 : 27

மூன்றாவதுபடி: சுவிசேஷத்தைக் கைக்கொள்ளுதல் — கிறிஸ்துவோடு சிலுவையில் அறையப்பட்டேன், மரித்தேன், மூன்றும் நாள் உயிர்த்தெழுந்தேன் என்பதற்கு அடையாளமான ஞானஸ்நானத்தைப் பெற்றுக்கொள்வதோடு, மரித்தேன் ஆயினும் பிழைத்திருக்கிறேன். பிழைத்திருக்கிறது எனக்காக அல்ல என்னில் அன்புகூர்ந்து எனக்காக மரித்துயிர்த்த தேவனுடைய குமாரனுக்காக பிழைத்

திருக்கிறேன்; அவருக்கு பிரியமாயிருப்பதே என் வாழ்க்கையின் நோக்கம் என்று, பாவத்துக்கு மரித்து அடக்கம் பண்ணப்பட்டவனாகவும், இயேசுவுக்கென்று பிழைத்திருக்கிறவனாகவும் / பிழைத்திருக்கிறவளாகவும் ஜீவித்து சாதித்தலே சுவிசேஷத்தைக் கைக்கொள்தல் ஆகும். நாம் இரட்சிக்கப்படுவோம். அல்லது இயேசு கிறிஸ்துவைப் பற்றிய விசுவாசம் வீணும் விரயமுமாகும் (விருதாவாகும்). கிறிஸ்தவர்கள் என்று சொல்லப்படுகிறவர்களில் பெரும் பகுதியினர் வஞ்சிக்கப்பட்டு ஏமாந்து போகிறவர்களாயிருக்கின்றனர்.

"நான் உங்களுக்குப் பிரசங்கித்த பிரகாரமாய், நீங்கள் அதைக் கைக்கொண்டிருந்தால்,அதனாலே நீங்கள் இரட்சிக்கப்படுவீர்கள்,மற்றப்படி உங்கள் விசுவாசம் விருதாவாயிருக்குமே. நான் அடைந்ததும் உங்களுக்குப் பிரதானமாக ஒப்புவித்ததும் என்னவென்றால் கிறிஸ்துவானவர் வேதவாக்கியங்களின்படி நமது பாவங்களுக்காக மரித்து, அடக்கம் பண்ணப்பட்டு, வேதவாக்கியங்களின்படி மூன்றாம் நாளில் உயிர்த்தெழுந்தார்" (I கொரி. 15 : 2,3,4) என்று வேதம் சொல்லுகிறதை நன்றாய்க் கவனிக்கவும்.

—தொடரும்.

"நானே வழியும் சத்தியமும் ஜீவனுமாயிருக்கிறேன்."-யோவான் 14 : 6

# இயேசுவின் நாமத்தில் விக்கிரகம்

### விக்கிரக ஆராதனை

கெட்டுப்போன மனித இருதயத்தினிலிருந்து எழும்பியதே விக்கிரக ஆராதனை— பம்பாய் மாநகரிலிருந்து (India) நியூ லைஃப் ஃபெல்லோஷிப் என்ற பெந்தெகோஸ்தே கிறிஸ்தவ ஸ்தாபனத்தார் Gospel Literature Service என்ற பிரதரன் மிஷனைச் சேர்ந்த கிறிஸ்தவ அச்சகத்தில் அச்சடித்து 1984-ம் ஆண்டு கால அட்டவணை (Calender) ஒன்று வெளியிட்டுள்ளனர். இதில் இறைவன் இயேசுவை குறிப்பிடும்படி நிழற்படம் (Photo) போட்டு விக்கிரக ஆராதனையைப் பரப்புகின்றனர். இவர்களின் கூட்டாளிகளாக பம்பாயில் கிறிஸ்தவர்கள் என்று சொல்லிக் கொள்ளுகிற அநேக சபையார்கள் வீடுகள்தோறும் இவ்விக்கிரக காலண்டரை விநியோகித்துள்ளனர். அந்த நிழற்படத்தில் மூன்று சிலுவைகள் இடப்பக்கம் இருப்பது போன்றும், அந்த உருவம் சிலுவையின் எதிர்புறமாக (வலது பக்கம்) தனது வலது கை காட்டுவதுபோலும் உள்ளது. அதன் கீழே இயேசு சொன்னார் : "வருத்தப்பட்டு பாரம் சுமக்கின்றவர்களே நீங்கள் எல்லாரும் என்னிடத்தில் வாருங்கள்; நான் உங்களுக்கு இளைப்பாறுதல்தருவேன்".(மத். 11:28) என்றும் எழுதப் பட்டுள்ளது. இந்த வசனம் கொட்டேஷன் போட்டு எழுதப் பட்டுள்ளது. இதில் இரண்டு எழுத்துப் பிழை காணப்படுகிறது. மேலும் நிழற்படத்தில் நிற்கும் ஆள் உருவமும் அருவருப்பான கடுகடுத்த முகத்தோற்றமுள்ளதும், சுமார் நாற்பத்தாறு வயதுள்ளவர் போலும் சித்தரிக்கப் பட்டுள்ளது. அவ்வுருவம் சிலுவையின் பக்கமல்ல, ஆண்டு முழுவதும் எதிர்புறம் நடவுங்கள் என்று திசைகாட்டுவது போலும் சித்தரிக்கப்பட்டுள்ளது. இக்காலண்டர்கள் தமிழ், ஆங்கிலம், கன்னடம், இந்தி போன்ற பாஷைகளில் 1,00,000 (ஒரு லட்சம்) பிரதிகள் அச்சடிக்கப்பட்டு பம்பாயிலுள்ள எல்லா வீடுகளுக்கும் விநியோகிக்கப்படுகிறது. தேவனுடைய பிள்ளைகளே விக்கிரக ஆராதனைக்கு எச்சரிக்கையாயிருங்கள். இந்த விக்கிரக ஆராதனைக்காரர்களை விட்டு வெளியே வாருங்கள்.

இதற்கு முன் "இயேசுவே வாரும்" என்ற தலைப்பில் இயேசு போன்ற ஒரு

படம் போட்டு இயேசு நாமக்காரர்கள் ஒரு பத்திரிக்கையை வெளியிட்டனர். இப் பத்திரிக்கையின் முக்கியஸ்தர்கள் காலேப் யோசுவா, தானியேல் கிறிஸ்டியன், A. அப்பாவு தேவதாஸ் என்பவர்களாகும். எப்சிபா யோசுவா என்ற பெண்ணின் பெயரால் படம் போட்டு ஊழியம் என்று பத்திரிக்கை வெளியிட்டனர். நாங்கள் கண்டித்ததின் மூலம் அப்படமும், பெண்ணின் பெயரில் ஊழியம் செய்து வந்ததும் கைவிடப் பட்டது. இப்பொழுதும் விக்கிரக வணக்கக்காரர்கள் தங்கள் மதிகேட்டைவிட்டு திரும்பும்படி எச்சரிக்கிறோம். இல்லை என்றால் தக்க நடவடிக்கைகள் எடுத்து இவ்வகை விக்கிரக விநியோகங்களுக்கு விரோதமாய் பிரச்சாரம் செய்யப்படும்.

தேவன் விக்கிரக ஆராதனையைக் குறித்து கண்டிப்பாய் எச்சரித்துள்ளார். கடவுள் என்று உருவத்தையாவது, படத்தையாவது உண்டாக்குவது பாவமாகும். அவிசுவாசத்திலிருந்து பிறக்கிற அழிவின் அபிவிருத்தியை ரோமர் 1 : 18 முதல் மிகவும் பயங்கரமாக வேதம் விவரித்துள்ளது. சத்தியத்தை அநியாயத்தினால் அடக்கி வைக்கிற மனுஷனுடைய அவபக்தி என்று வேதம் கூறவாரம்பித்து அழிவில்லாத தேவனுடைய மகிமையை அழிவுள்ள மனுஷர்கள், பறவைகள், மிருகங்கள், ஊரும் பிராணிகள் ஆகியவைகளின் ரூபங்களுக்கு ஒப்பாக மாற்றினார்கள்". (ரோம. 1 : 18-23) இதினிமித்தம் பயங்கர பாவங்கள் தோன்றும் காண் : ரோம. 1 : 18-32. மனிதன் கடவுளால், கடவுளுக்காகப் படைக்கப்பட்டபடியால் தனக்குப் புறம்பேயுள்ள ஒன்றின் மீது அவனது இருதயம் நாட்டங் கொள்ளுகிறது. அதனையே விசுவாசிக்கவும் சேவிக்கவும் விரும்புகிறது.

மனிதன் ஜீவனுள்ள தேவனிடத்திலிருந்து, அவன் தூரமாய் விலகிப் போனபடியால் படைக்கப்பட்டவற்றிலோ அல்லது மனிதன் தானே தன் கைகளால் உண்டு பண்ணப்பட்டவற்றிலோ, அவ்வாஞ்சையை நிறைவேற்ற நாடுகிறான். தான் நம்புவதில் உறுதி கொள்ளுமாறு கண்ணால் காண்கிற, கையால் தொடுகிற, மனத்தால் அறிகிற ஒரு பொருளை விரும்புகிறான். மர்மமான உலகின் தீமைகளுக்கும் மரணபயத்திற்கும் எதிராக தன்னைப் பாதுகாத்துக்கொள்ளும்படி மேலே விளக்கிய அவனது கவலை அவனைத் தூண்டுகிறது. மதம் என்று சொல்லப்படுவதில் பெரும் பகுதி இவ்வித பாதுகாப்பை அடையும்படி மனிதன் செய்கிற முயற்சியாகவே இருக்கிறது.

அவிசுவாசிகளின் இருதயத்தில் பொய் இருக்கிறது. மனிதன் ஏதாவது ஒரு உருவத்தை உண்டாக்கி அதைத் தேவன் என்று அல்லது தேவனைப்போன்றது என்று அல்லது தேவனை எனக்கு நினைவூட்டுகிற சிலை, படம் என்று சொல்லும்போதெல்லாம் அவன் கடவுளைப் பற்றி பொய் சொல்லி கடவுளின் மாட்சிமையை மாசுபடுத்தும் மந்தனுவான். "மேலே வானத்திலும் கீழே பூமியிலும் பூமியின் கீழ் தண்ணீரிலும் உண்டாயிருக்கிறவைகளுக்கு ஒப்பான ஒரு சொருபத்தையாகிலும் யாதொரு விக்கிரகத்தையாகிலும் நீ உனக்கு உண்டாக்க வேண்டாம்" என்று "என்னையன்றி உனக்கு வேறே தேவர்கள் உண்டாயிருக்க வேண்டாம்" என்றும் யாத். 20:4,3ல் கடவுளுக்கு ஒப்பான சிலைகளை உருவாக்கும் மதியீனம் கண்டிப்பாய் விலக்கப்பட்டுள்ளது. ஆகையால் உங்கள் ஆத்துமாக்களைக் கவனமாய் காத்துக் கொள்ளுங்கள். ஆண்டவர் ஒரேபிலே நெருப்பின் நடுவில் நின்று உங்களோடு பேசின நாளில் நீங்கள் ஒரு உருவத்தையும் காணவில்லை. ஆகையால் நீங்கள் அறிவு மயங்கி உங்களைக் கெடுத்துக் கொண்டு யாதொரு உருவத்தை உங்களுக்கு உண்டாக்கிக் கொள்ள வேண்டாம். (உபா. 4 : 15-19) கடவுளின்குரல் கேட்கப்பட்டதேயொழிய அவரது தோற்றம் சிறிதும் காணப்படவில்லை. கடவுளை உருவத்தைக் கொண்டாகிலும் படத்தைக்கொண்டாகிலும் காட்ட முயலுவது கடவுளின் கண்டிப்பான கட்டளைக்கு நேர்விரோதமான எதிர்ப்பாகும்.

புதிய ஏற்பாட்டிலும் அதே விலக்குச் சட்டம் கூறியுள்ளது "நாம் தேவனின் சந்ததியாராயிருக்க மனுஷருடைய சித்திர வேலையினாலும், யுக்தியினாலும் உருவாக்கின இவைகளுக்கு தெய்வம் ஒப்பாயிருக்கு

மென்று நாம் நினைக்கலாகாது" அப். 17 : 29 கடவுளைக் குறிக்கும்படி சிலையையாவது படத்தையாவது உண்டாக்குவது அவருடைய திருப்பெயரைப் பரிசுத்த குலைச்சலாக்குவதும் மாட்சிமை மிக்க அவருடைய தெய்வீகத்தை இழிவு படுத்துவதுமாகும்.

இந்தப் படத்திற்கு, இதுபோன்ற படங்கள், சிலைக்கு பூமாலையிட்டு மெழுகுவர்த்தி, ஊதுவத்திகொளுத்தி தீவர்த்தனையிட்டு, சாம்பிராணி புகைபோட்டு பூஜைகள் ஆரம்பிக்கப்பட்டுள்ளது. ஐயோ! மாய்மால கிறிஸ்தவனே, சிலைவணக்கக்காரர்களே, சிலைவணக்கத்திற்கு மக்களை வழி திருப்பிய மாபாதகர்களே, நீங்கள் வினியோகித்த எல்லா விக்கிரக படங்களை, காலண்டர்களை உன்னால் திருப்பி வாங்கமுடியுமா? முடியுமானால் செய். இவ்வித விக்கிரக படமுள்ளவர்கள் உங்கள் வீடுகளிலிருந்து அவைகளை அகற்றி விடுங்கள்.. விக்கிரக ஆராதனைக்கு விலகி ஓடுங்கள் "பிள்ளைகளே நீங்கள்விக்கிரகங்களுக்கு விலகி உங்களைக் காத்துக் கொள்வீர்களாக" —I கொரி. 10 : 14; I யோவா. 5 : 21. ஆமென். கர்த்தருடைய நாள் எல்லாசித்திர விநோதங்களின் மேலும் வரும். —ஏசா. 2 : 16.

"மனுஷன் தனக்கு தேவர்களை உண்டு பண்ணலாமா? —எரேமியா 16 : 20

# வேத பாடம்

ஆதி. 7 : 17-24 பூமியின் மேல் நாற்பது நாட்கள் பெருமழை பொழிந்து பெருவெள்ளம் உண்டாயிற்று, பேழை மிதந்தது. ஜலம் பூமியின்மேல் நூற்றைம்பது நாள் மிகவும் பிரவாகித்துக் கொண்டிருந்தது.

ஆதி. 8 : 1,2 தேவன் நோவாவையும் அவனோடுகூட பேழையிலுள்ள உயிர்களையும் நினைவுகூர்ந் தருளினார். தேவன் பூமியின் மேல் காற்றை வீசச் செய்தார். ஆழத்தின் ஊற்றுக்கண்களையும், வானத்தின் மதகுகளையும் அடைத்தார். மழை நின்று போயிற்று.

என்னே தேவனுடைய அன்பு! தேவன் தம்முடையவர்களை, அவர்களுடன் உள்ளவர்களை, உடனுள்ளவைகளை நினைவு கூறுகிறார். ஜலம் பூமியில் வற்ற ஆரம்பித்தது. நோவாவின் அறுநூறும் வயதில் ஜலப்பிரளயம் ஆரம்பமாகி, அவருக்கு அறுநூற்றொரு வயதாகும்போது ஜலம் வற்றி பூமி காய்ந்து போயிற்று. நோவா பேழைக்குள் இருந்த காலம் ஒரு வருஷம் பத்து நாட்கள்.

ஆதி. 8 : 15-17 தேவன் நோவாவை நோக்கி, நீயும் உன்னோடு இருக்கிறவர்களும் பேழையை விட்டு வெளியே வாருங்கள். ஜீவன்களையும் வெளியே வரவிடுங்கள் என்றார். மேலும் அவைகள் பூமியில் திரளாய் வர்த்தித்துப் பெருகக்கடவர்கள் என்றார்.

ஆதி. 8 : 18-22 நோவா கர்த்தர் சொன்னபடி செய்தார். நோவா கர்த்தருக்கு பலிபீடம் கட்டி சுத்தமான பறவைகள், பிராணிகளில் சிலவற்றைத் தெரிந்து கொண்டு, கர்த்தருக்கு தகனபலியிட்டார். கர்த்தர் அதை ஏற்றுக்கொண்டார். இனி மனிதனிமித்தம் பூமியையும் எல்லா ஜீவன்களையும் இப்பொழுது செய்தது போல் அழிப்பதில்லை மனிதனின் இருதயத்தின் நினைவுகள் அவன் சிறு வயது முதல் பொல்லாததா யிருக்கிறது. ஆதலால் பூமியுள்ளளவும் விதைப்பும், அறுப்பும் சீதளமும், உஷ்ணமும், கோடைகாலமும், மாரிகாலமும், பகலும், இரவும் ஒழிவதில்லை என்று தம்முடைய உள்ளத்திலே சொன்னார். தேவன் உள்ளத்தில் பேசிக்கொண்டதை பரிசுத்த ஆவியானவர் எதிரொலியாக (Echo) அவருடையவர்களின் உள்ளத்தில் தொனிக்கச் செய்கிறார். வேதத்தின் அனேக பாகங்கள் இவ்விதமாய் பதிவு செய்யப்பட்டிருக்கிறது. தேவனுடைய திருவுளத்தை அறிந்தவர்கள் பாக்கியவான்கள்.

ஆதி. 9 : 1–7 தேவன் நோவாவையும், நோவாவின் குடும்பத்தையும் ஆசீர்வதித்து, நீங்கள் பலுகிப் பெருகி பூமியை நிரப்புங்கள் என்றார். மாம்ச உணவையும் கட்டளையிடுகிறார். மாம்சத்தின் உயிராயிருக்கிற இரத்தத்தை மாத்திரம் புசிக்க வேண்டாம். மனுஷனுடைய உயிரை பறிக்கக் கூடாது. கொலைக்கு பழிவாங்குவேன் என்றார். மனித உயிரை எவ்வகையினும் கொலை செய்வது பாவமாகும். உன்னுடைய எதிரியாயினும் அவனும் உயிரோடிருக்கட்டும். உன்னுடைய எதிரி சாகணும் என்று நினைக்காதே. அல்லது கொன்று போடணும் என்று எண்ணாதே. இன்று நீ அவனைக் கொன்று போட்டால், வேறொரு எதிரி தோன்றுவான். அவனையும் கொன்று போட்டால் வேறொருவன் எழும்புவான். அப்படி உலகத்திலுள்ள உன்னுடைய எல்லா எதிரிகளையும் நீ தேடி கொன்று போட முடியுமா? உன் எதிரியும் உன்னைக் கொன்று போட எண்ண முடியுமல்லவா. இறைவனுடைய சாபமும், நியாயத்தீர்ப்பும், மனிதருடைய பகையும் பின்தொடர வாரம்பிக்கும். அதுவுமல்லாமல் காவல் நிலையத்தாரும், கோர்ட் கேஸ்களும் உண்டாகும். முடிவில் நீயும் மரித்து கொலை செய்யாதிருப்பாயாக (யாத். 20 : 13) என்று சொன்ன தேவனுடைய கட்டளையை நீ மீறினதினிமித்தம், நியாயத்தீர்ப்படைந்து இரண்டாம் மரணமாகிய அக்கினியும், கந்தகமும் எரிகிற கடலிலே பங்கடைவாய். —வெளி. 20 : 8 ஆதலால் கோபத்தை நெகிழ்ந்து உக்கிரகத்தை விட்டுவிடு. கொலை செய்கிறதற்கேதுவான எரிச்சல் உனக்கு வேண்டாம்—சங். 37 : 8; 4 : 4. பழிவாங்குவது எனக்குரியது நானே பதிற்செய்வேன் என்று தேவன் சொல்லுகிறார்— லேவி. 19 : 18. தேவனுடைய கற்பனைக்கு பயப்படுவோமாக. அடித்தாலும் கொலைசெய்கிறதற்கேதுவாக நம் ஆத்துமாவை எழும்ப விடக்கூடாது —நீதி. 19 : 18, 23 : 13, 14.

[தொடரும்]

"தேவனுடைய இரக்கங்களுக்கு முடிவில்லை" —புலம்பல் 3 : 22.

பாலர் பகுதி

# தேவன் அறிவார்

"...இவைகளெல்லாம் உங்களுக்கு வேண்டியவைகள் என்று உங்கள் பரமபிதா அறிந்திருக்கிறார்." [மத். 6 : 32]

மேரி தன்னுடைய சின்னதம்பி பாபுவை அழாதேபாபு! அழாதே!! என்று சொல்லிக் கொண்டு ஜெபம் பண்ணிக் கொண்டிருந்தாள். மேரிக்கும் பாபுக்கும் சாப்பிடுவதற்கு ஒன்றுமில்லை. நேற்று முழுவதும் ஒன்றும் சாப்பிடவில்லை. மேரிக்கு அம்மா இல்லை. அப்பா மட்டும் உண்டு. சிறுமியாகிய மேரிக்கு ஒரே அழுகையும் பசியினால் மயக்கமாகவும் இருந்தது.

மேரியின் அப்பா ஜோசப் பகல் முழுவதும் எங்கேயாவது கூலி வேலை கிடைக்கிறதா என்று தேடிப்பார்த்து ஒன்றும் கிடைக்காமல் தன் குடிசைக்குத் திரும்பி வந்தான். பசியால் வாடும் தன் பிள்ளைகளைப்பார்த்து அவனுக்கும் அழுகையாய் வந்தது. அழுகையை அடக்கிக்கொண்டான். தன் பிள்ளைகளை கூட்டிவைத்து ஆண்டவரை நோக்கி ஜெபம் பண்ணினான், ஸ்தோத்தரித்தான். வறுமையின் பிடியில் ஜோசப் தவித்தாலும் அவனுடைய விசுவாசம் பற்றி எரிந்தது. ஜெபம் பண்ணிய பின்பு ஜோசப் தன் மகள் மேரியிடம், அப்பாவுக்கு பகலில் வேலைகிடைக்கவில்லை. அதனால் உங்களுக்கு சாப்பாடு ஒன்றும் வாங்கவில்லை. நான் திரும்ப போகிறேன். நீங்க இரண்டு பேரும் ஜெபம் பண்ணிக் கொண்டே இருங்கள். நமது ஆண்டவர் நமக்கு எப்படியாவது வழி

திறப்பார் என்று சொல்லிவிட்டு வெளியே வேலை தேடி மீண்டும் ஜோசப் போனான்.

ஜோசப் ஒரு வைராக்கியமுள்ள தேவ பிள்ளை. ஞாயிற்றுக்கிழமை வேலை செய்ய மாட்டான். ஞாயிறு தவறாமல் ஆலயத்துக்குப் போய் வருவான். இதனால் அவனை நிரந்தரமாக வேலைக்கு வைக்க ஒருவரும் முன் வரவில்லை. தினசரி எங்கேயாவது வேலைக்குப் போய் மாலையில் கிடைக்கும் கூலியை வைத்துதான் ஏதாவது சமைத்து பிள்ளைகளுக்குக் கொடுப்பான். நேற்று ஞாயிற்றுக்கிழமை கோயிலுக்குப் போய்விட்டதால் பைசா ஒன்றும் அவனிடத்திலில்லை. இன்று மதியம்வரை வேலை ஒன்றும் கிடைக்கவில்லை. வேலை தேடிச்சென்று கொண்டிருந்தான். அவனுடைய உள்ளத்தில் மத். 6 : 33 வார்த்தை உணர்த்திக்கொண்டே இருந்தது. அவனுக்கு சந்தோசமாய் இருந்தது. தேவனைத் துதித்துக் கொண்டே சென்றான்.

தன் அப்பாவின் வார்த்தையைக்கேட்ட மேரியோ, தன் அப்பா போனவுடன், தன் தம்பி பாபுவுடன் சேர்ந்து ஆண்டவரே ஸ்தோத்திரம் எங்களுக்கு சாப்பாடு இல்லை சோறுதாரும், எங்கள் அப்பாவிற்கு இன்று வேலைகிடைக்கவில்லை அதனால் சாப்பாட்டுக்குப் பணம் இல்லை என்று ஜெபித்துக்கொண்டிருந்தாள். பாபுவும் ஆண்டவரே எனக்கு சாப்பாடு வேண்டும். ஸ்கூலில் சேர எனக்கும் எங்க அக்காவுக்கும் பீஸ்கட்டணும் அதற்கு பணம் வேணும் என்று ஜெபித்துக் கொண்டே இருந்தான்.

கொஞ்ச நேரத்தில் மேரி, மேரி என்ற சத்தம் கேட்டது. மேரி கண்விழித்துப் பார்த்தாள் அப்பா வந்திருப்பார் என்று. ஒருவரையும் காணவில்லை. மீண்டும் மேரி மேரி என்று சத்தம் கேட்டது. மேரி பயந்து போனாள். உடனே நான் உங்களுடைய ஆண்டவர் என்று சத்தம் கேட்டது. மேரிக்கும் பாபுவிற்கும் ஒரே சந்தோசம். ஆண்டவர் நம்மோடு பேசுவார்; நாம் கூப்பிட்டால் மறுஉத்தரவு சொல்லுவார் என்று ஓய்வுநாள் பள்ளியில் கேட்டதை நினைத்து மேரிக்கு ஒரே சந்தோசம். ஆண்டவரே எங்க அப்பாவிற்கு வேலை கிடைக்கவில்லை; இன்னைக்கு அதனால் பணம் இல்லை. எங்களுக்கு சாப்பாடு இல்லை என்றாள்.

உடனே மேரி நீ ஓடிப்போய் அதோ தெரிகிறதே மண்தரை அங்கே பார் என்று ஆண்டவர் பேசினார். மேரி உடனே என்ன ஆண்டவரே நாங்கள் பசிக்கிறது என்கிறோம் மண்ணை ப்பார்க்கச் சொல்லுகிறீரே என்றதும், நீ பார் முதலில் என்றார் தேவன். மேரி அங்கே பார்த்ததும் அங்கே தெரிகிறதே மண்கட்டி அதைப்பார் என்றதும், ஆண்டவரே நாங்கள் இதைசாப்பிடணுமா என்றாள். நீ முதலில் அதை எடு என்றார் ஆண்டவர். உடனே மேரி ஓடிப்போய் அதை எடுத்தாள். திருப்பிப் பார் என்றதும் மேரி திருப்பிப்பார்த்தாள். சாயங்காலத்தில் மறைந்து கொண்டிருந்த சூரிய ஒளிபட்டு ஒரு கட்டிப் பொன் பளிச்சென்று மினுமினுத்தது. அதை உன் அப்பா இப்போது வருவார் அவரிடம் கொடு என்று ஆண்டவர் சொன்னார். அதன் பின் அந்த சத்தம் கேட்கவில்லை.

மேரி வீட்டிற்கு ஓடி வந்தாள். அப்போது ஜோசப் வேலை கிடைக்காமல் அலுத்துப் போய் ஆனால் விசுவாசத்தோடு ஆண்டவர் வழி திறப்பார் என்று வந்தான்.

மேரி ஓடிவந்து அப்பா, அப்பா என்று கூப்பிட்டு ஆண்டவர் தந்தார் என்று தன் கையிலிருந்த மண்கட்டியோடு சேர்ந்திருந்த தங்கத்தை கொடுத்து நடந்ததை சொன்னாள். ஜோசப்பிற்கு ஒன்றும் ஓடவில்லை. காலையில் ஆண்டவர் தன்னோடு சொன்ன வசனத்தை நினைத்துப் பார்த்தான். ஆண்டவருக்கு துதி செலுத்திக் கொண்டே கடையில் போய் அதை விற்றான். இதோ அது அந்த மாதம் முழுவதும் அவனுக்கும், அவனுடைய பிள்ளைகளுக்கும் போதுமானதா யிருந்தது. சீக்கிரத்தில் கர்த்தர் அவருடைய சபையின் வழியாய் ஜோசப்பிற்கு நிரந்தர வேலையும் கொடுத்தார்.

மேரியும் பாபுவும் பள்ளியில் இப்போது படிக்கிறார்கள். பரிசுத்த நாள்தோறும் ஞாயிறு பள்ளிக்கும், அவர்களது தந்தையுடன் ஆராதனைக்கும் தவறாமல் போய் வருகிறார்கள். மேரியும், பாபுவும் தவறாமல்

அவர்களது தேவைகளை யெல்லாம் ஜெபத்தில் ஆண்டவரிடம் சொல்லி பெற்றுக்கொள்கிருர்கள்.

*சிறுவர்களே நீங்கள் எப்படி? நீங்கள் ஜெபிக்கிறீர்களா? உங்கள் படிப்புக்காக, வீட்டிற்காக ஜெபிக்கிறதுண்டா?* முதலில் தேவனுடைய காரியங்களை கவனியுங்கள், ஜெபியுங்கள், தேவன் உங்களுக்கு என்ன வேண்டும் என்று அறிவார், அதைத் தருவார்.

"திக்கற்ற பிள்ளைகளுக்கு சகாயர் தேவனே" —*சங்*. 10 : 14.

# தீனாள்

**மாதர் பகுதி**

லேயாள் யாக்கோபுக்கு பெற்ற குமாரத்தி *தீனாள்*. (நீதி)—*ஆதி*. 30 : 21. இந்த பெண் தன் சகோதரர்களுக்கு ஒரே சகோதரியாகும். மிகவும் அழகுள்ள இவள் மிகவும் அலங்காரக்காரியாயுமிருந்தாள். பெண்கள் தங்களை அதிக அலங்காரம் செய்வது மற்றவர்களைக் கவர்ச்சி பண்ணுவதற்கே; நியாயமாய் பென் அலங்கரிப்பது பாவமில்லை. புன்நகையை விட்டு பொன், வெள்ளி நகையினாலும், விலையேறப் பெற்ற வஸ்திரத்தினாலும் தங்களை அலங்கரிப்பது அவர்களுக்கே ஆபத்தாகும். பெண்கள் நகையினாலும், விலையேறப் பெற்ற வஸ்திரத்தினாலும் தங்களை அலங்கரியாமல், நாணத்தினாலும், கற்பினாலும், தெளிந்த புத்தியினாலும், தேவபக்தியினாலும், பொறுமையினாலும், கீழ்ப்படிதலினாலும், தகுதியான வஸ்திரத்தினாலும், சுத்தத்தினாலும், சுறுசுறுப்பினாலும், கறை, திரையற்ற அன்பினாலும் தங்களை அலங்கரிக்க வேண்டும் என்று வேதம் சொல்லுகிறது. I *தீமோ*. 2 : 9-15; I பேது. 3 : 1-6; எபேசி. 1 : 4.

*தீனாள்* தன்னை அலங்கரித்து ஊர் சுற்றிப் பார்க்கப்போனாள். ஆதி 34 : 1. அதனால் அவளுக்கு ஆபத்துண்டாயிற்று. அத்தேசத்து பிரபுவாகிய சீகேம் அவளை பலாத்காரமாய் கொண்டுபோய் கெடுத்துப் போட்டான். இக்காலத்துப் பெண்கள் நாணங்கெட்டுப்போய் பெண் தோழிகளோடு அல்லது ஆண் தோழர்களோடு சேர்ந்து சினிமா கொட்டகைகளுக்கும், நாடகச்சாலைகளுக்கும், திருவிழாக்களுக்கும் செல்லுகிருர்கள். மற்ற மதக்காரர்களுக்கு பரிசுத்தத்தைப் பற்றிய கட்டளைகள் இல்லை. ஆனுல் கிறிஸ்தவ பெண்களோ அப்படிச் செய்யக் கூடாது. பெண்ணின் உயிர் அவளுடைய கற்பாகும். கற்பை இழந்துவிட்டால் மனசாட்சி தீட்டுப்படும். அடுத்தடுத்து நிகழ்ந்தால் '*விபச்சாரம் செய்யாதிருப்பாயாக*' யாத். 20:14 என்ற தேவனுடைய கற்பனையை மீறியதினிமித்தம் நியாயந் தீர்க்கப்பட்டு நித்திய நரகமேகுவாள்—வெளி. 20 : 8. அவளுடைய சந்ததியும் அலேயும் குடும்ப சமாதானம் கெடும். *சில* பெற்ருேர்களே தங்கள் பெண் குழந்தைகளை *சினிமா* சாலைகளுக்கும், விருந்து சாலைகளுக்கும், கேளிக்கை இடங்களுக்கும் அழைத்துச்செல்கின்றனர். இப்படியாக அந்த பிஞ்சு உள்ளங்களில் தகாத உணர்ச்சிகளைத் தூண்டி விடுகின்றனர். தப்பான வழிகாட்டிகளாயிருக்கின்றனர், வழிகோலுகின்றனர். சோசியல் (Social movement) என்று நினைத்து சிலரோடு பழக அனுமதித்து விடுகின்றனர். இதெல்லாம் நமக்கு வேண்டாம். பெண்கள் அடக்கமுடையவர்களாயிருக்க வேண்டும். தங்கள் கற்பையும், வாழ்க்கையையும், தாங்களே காப்பாற்ற வேண்டும். தேவ பக்தியினாலும், நம் குடும்ப பேரைக் காப்பாற்ற வேண்டுமே என்றஎண்ணத்தினாலும் தங்கள் கற்பை காக்கமுடியும். தகுதியான வஸ்திரம் தரிக்க வேண்டும். சரீர உறுப்புக்களை எடுப்பாய் வெளிக்காட்டுவதாய் ஆடை அணியக் கூடாது. ஜெபம் பண்ணும் போதும், பரிசுத்தவான்களுடன் பேசும் போதும் முக்காடிட்டுக் கொள்வது நலம்.

இந்த *தீனாளினிமித்தம்* பெரிய மோசடிகளும், கொலைகளும், கொள்ளையிடுதலும்

# புதிய எருசலேம் சபை நடபடிகளில் சில

அன்றைய தினம் இரவில் எங்களைப் பார்க்க சகோதரர் கருணாகரன் வீட்டிற்கு மோரீசைசிலுள்ள கிறிஸ்தவ அசம்ப்ளியின் பாஸ்டர் பிளாக்பென், (BLACKBURN) என்பவர் வந்திருந்தார். சுகநலம் விசாரித்து விட்டு, இங்கே எவ்வளவு காலம் தங்கியிருப்பீர்கள்? என்று கேட்டார். அது உறுதியாக நாங்கள் கூறமுடியாது, கர்த்தர் அனுமதிக்கும் நாள் வரையிலும் நாங்கள் இங்கே இருப்போம் என்று கூறினோம்.

இந்தப் பாஸ்டர்தான் இந்த தீவிலுள்ள ஆவிக்குரிய மக்களுக்குத் தலைமைப் போதகர். இவர் ஆஸ்திரேலியாவைச் சேர்ந்தவர். நாங்கள் மொழிபெயர்ப்பாளரைக் கொண்டு இப்பொழுது பேசிக்கொண்டிருக்கிறோம். இவர் மறுபடியும் : இத்தீவிலுள்ள மக்கள் தீர்க்கதரிசனங்களைக் கேட்டு ஏமாற்றமடைந்துள்ளார்கள்; ஆகையால் நீங்கள் எங்கள் மத்தியில் வேதவசனங்களைப் பிரசங்கிக்கலாம் ஆனால் தீர்க்கதரிசனம், வெளிப்படுத்தல்கள் கூறவேண்டாம் என்று கூறினர். ஏற்கனவே நாங்கள் இந்தியாவிலிருந்து மோரீசைஸ் செல்வதற்கு முன்னால், அந்த தீவின் நிலவரங்களையும், எங்களை எதற்காக அனுப்புகிறார் என்பதையும் அங்கே எங்களைக் கொண்டு என்னென்ன செய்யப்போகிறார் என்பதையும் தேவன் எங்களுக்கு முன்பே அறிவித்திருந்தார். அதோடு இந்த பாஸ்டர், (BlackBurn) பிளாக்பென்னைப் பற்றியும் சில காரியங்கள் வெளிப்படுத்தியிருந்தார்.

இவர், ஊழியத்தில் ஏற்பட்டுள்ள நெருக்கத்தினிமித்தம் இந்த தீவை விட்டுவிட்டு சொந்த நாட்டுக்குப் போய்விட வேண்டும் என்று தீர்மானித்திருப்பதாகவும் இவன் அப்படிப் போகாமல் இங்கேயே இருந்து என்னுடைய ஊழியத்தைச் செய்ய வேண்டும்; நான் இவனை ஆசீர்வதிப்பேன் என்றும் இந்த பாஸ்டரைப்பற்றி தேவன் வெளிப்படுத்தியிருந்தார். தேவன் வெளிப்படுத்துகிறதை மக்களிடம் சொல்லக்கூடாது, மக்கள் நம்பமாட்டார்கள் என்றுகூறுகிறாரே, இவரைப்பற்றி தேவன் சொன்னதை நம்புகிறாரா பார்ப்போம் என எண்ணி, இவரைப் பற்றி தேவன் வெளிப்படுத்திய செய்தியை அவருக்கு வாசித்துக் காண்பித்தோம். அவர் உடனே கண்ணீர் விட்டார். நான் உங்களைத் தவறாக எண்ணிவிட்டேன். உண்மையிலேயே இது கர்த்தர் வெளிப்படுத்தின செய்திதான். நான்கு வருடங்களுக்கு முன்பு இதுபோலவே என்னுடைய ஊழியத்தில் ஏற்பட்ட நெருக்கத்தினால்; நான் ஆஸ்திரேலியாவில் போய் கர்த்தருடைய ஊழியத்தை செய்யலாமே என எண்ணி அங்கே போய்விட்டேன். அங்கேயும் கர்த்தர் ஒரு ஊழியக்காரரைக் கொண்டு பேசினார். "மகனே நீ யோனாவைப் போல வந்து விட்டாயே பழையபடியும் மோரீசைசுக்குப் போ நான் உன்னை உயர்த்துவேன்" என்று கூறினார். அதன்படியே நான் மீண்டும் இந்த மோரீசைஸ் வந்தேன். அதுபோலவே இந்நாட்களிலும் எனக்கு ரொம்ப வேதனையாகி இந்த மக்கள்

மத்தியில் இனி ஊழியம் செய்யக்கூடாது. இந்த ஆண்டு இறுதி வரையிலும் இருந்து விட்டு அடுத்த ஆண்டு ஆஸ்திரேலியா சென்று விட வேண்டும் என்ற முடிவில் இருக்கிறேன். இப்பொழுதும் கர்த்தருடைய ஆவியானவர் உங்களை அனுப்பி என்னுடைய பிரயாணத்தை தடை செய்து விட்டார். உங்களை எனக்காகவே தேவன் அனுப்பியிருக்கிறார். நான் இனி என்ன நேர்ந்தாலும் இந்த இடத்தைவிட்டுப் போக மாட்டேன் என்றும் கூறி நாளைக்கே நாம் சபைகளை சந்திக்கலாம். நான் வந்து என்னுடைய காரில் உங்களை அழைத்துப் போவேன் என்று கூறிச் சென்றார். இந்த மோரீசைசில் கர்த்தருடைய சித்தம் செய்ய தேவன் வாசலைத் திறந்தார் என எண்ணிக் கர்த்தரை மகிமைப் படுத்தினோம்.

மறுநாள் காலையில் ஒரு அதிகாரி ஒருவர் நாங்கள் தங்கியிருந்த சகோ. கருணாகரன் வீட்டிற்கு வந்தார். எங்களுடைய விலாசம் அவரிடம் இருக்கிறது. Pastor S. Sundarraj, Pastor S. Yesudason இருக்கிறார்களா? என்று கேட்டார். நாங்கள் ஒரு அறையில் ஜெபித்துக் கொண்டிருந்தோம். சகோதரி (Mrs. கருணாகரன்) வந்து உங்களை யாரோ பார்க்க வந்திருக்கிறார்கள் என்று கூறினார்கள். நாங்கள் இருவரும் எங்களுடைய வேஷ்டி ஜிப்பா உடையிலேயே அவரை சந்தித்தோம். அவர் எங்களுடைய உடையைக் கண்டதும் அவருடைய இருக்கையைவிட்டு எழுந்திருந்து, நீங்கள் சாதுக்களா என்றார். என்ன விஷயம் என்றோம். உங்கள் உடையைப் பார்த்தால் அப்படி தெரிகிறது என்றார். பின்னர் அவர் நான் அரசாங்க சுகாதார நிலையத்தின் ஓர் அதிகாரி, நீங்கள் விமானத்தில் வந்திருப்பதால் உங்களுக்கு சரீரத்தில் மயக்கம், வாந்தி வேறு பெலவீனங்கள் உருவாகியிருக்குமாயின் அதற்கு இலவச சிகிச்சை செய்வதற்காக வந்திருக்கிறேன். உங்களுக்கு அப்படி ஏதாவது பெலவீனங்கள் உண்டானால் கூறலாம் என்றார். எங்களுக்கு அப்படி யாதொரு பெலவீனங்களும் உருவாகவில்லை என்று கூறினோம். நீங்கள் மோரீசைக்கு முதல் தடவைதானே வந்திருக்கிறீர்கள் ஒரு பெலவீனமும் இல்லையென்று சொல்வதை எண்ணி நான் ரொம்ப ஆச்சரியப்படுகிறேன். சிரமம் தந்ததற்காக வருந்துகிறேன் என்று கூறிக் கடந்து போனார்.

(தொடரும்)

Pastor S. Sundarraj
Vallioor.

"...அவரே சரீரத்திற்கும் இரட்சகராயிருக்கிறார்". —எபேசி. 5 : 23

சாட்சி

# மரித்தேன் ஆனால் பிழைத்திருக்கிறேன்

நான் திருநெல்வேலி மாவட்டம், இராதாபுரம் தாலுகாவிலுள்ள மகிழ்ச்சிபுரம் கிராமத்தில் ஒரு C.S.I. பெற்றோரால் பிறப்பிக்கப்பட்டு வளர்ந்து வந்தேன். என்னுடைய பெற்றோர்கள் கிறிஸ்தவர்களாயிருந்தாலும் பக்தியில்லாதவர்கள். நானும் என்னுடைய சிறுவயதில் பக்தியில்லாதவனாகவே வளர்ந்து வந்தேன். இப்படியிருக்க என்னுடைய வாலிப பிராயத்தில் தேவனைத் தேட வேண்டும் என்ற உணர்வு எனக்கு ஏற்பட்டது. இந்நாட்களில் எனது ஊரில் "புதிய எருசலேம் சபை" உருவானது இவர்களுடைய பக்தியுள்ள ஆராதனைகளும், அங்கு செல்லும் மக்களுடைய பரிசுத்த ஜீவியமும் என் உள்ளத்தைக் கவர்ந்தது. நான் இவர்களோடு சேர்ந்து இறைவனை ஆராதித்து வந்தேன். இதைக் கண்ட என்னுடைய பக்தியற்ற பெற்றோர்கள் என்னை அங்கு செல்லக் கூடாதென்று வெகுவாய் கண்டித்தார்கள். அவர்களுடைய பயமுறுத்துதலையும் மீறி நான் இறைவனை ஆராதிக்கச் சென்று வந்தேன். என்னைத் தடை செய்ய முடியாது என அறிந்த என் பெற்றோர்கள் மேற்படி சபையின் ஊழியர்களை நிந்திக்கவும் தூஷிக்கவும் ஆரம்பித்தனர். என்னைக் கிறிஸ்து இயேசுவுக்குள் தேறினவனாக நிறுத்தவேண்டும் என்று வாஞ்சை கொண்ட கர்த்தருடைய ஊழியர்கள் என் பெற்றோர்களுடைய தூஷணங்களைக் கண்டு கலங்காமல், என்னுடைய பாவ மன்னிப்புக்கென்று எனக்கு

பிதா, குமாரன் பரிசுத்தாவியின் நாமத்தினால் ஞானஸ்நானம் கொடுத்தார்கள். கர்த்தராகிய ஆண்டவர் எனக்கு பரிசுத்த ஆவியின் அபிஷேகத்தையும் தந்தார். அவருக்கே மகிமையுண்டாவதாக.

நான் இப்பொழுது ஆண்டவருடைய பிள்ளையாகிவிட்டேன். நான் ஞானஸ்நானம் பெற்றுவிட்டேன் என்பதை அறிந்த என் பெற்றோர்கள் எனக்கு ரொம்ப தொல்லை கொடுத்து ஆராதனைகளில் கலந்து கொள்ளவிடாது தடை செய்தார்கள். ஆயினும் நான் தலைமறைவாகச் சென்று தேவனை ஆராதித்து வந்தேன். இந்நிலையில் என்னுடைய ஆவிக்குரிய ஓட்டத்தை தடைசெய்ய வேண்டும் என்று விரும்பிய என் பெற்றோர்கள் புதிதாக ஒரு திட்டம் தீட்டினார்கள். எப்படியென்றால், ஒரு வாயாடிப் பெண்ணை மணம் முடித்து வைத்தால், அவளை மீறி இவன் போக மாட்டான் என்று முடிவு செய்து, அப்படிப்பட்ட ஒரு பெண்ணை எனக்கு விவாகம் பண்ணி வைக்க ஏற்பாடுகள் செய்து C.S.I. ஆலயத்தில் அறிக்கைகளும் வாசிக்கப்பட்டது. திருமணத்திற்கு சில நிமிடத்துக்கு முன் அங்குள்ள குருவானவரிடம் என் பெற்றோர்கள் இவன் முழுகி ஞானஸ்நானம் எடுத்துவிட்டான் ஆகையால் நீங்கள் இன்னொரு தெளிப்பு ஞானஸ்நானம் கொடுத்து அவன் எடுத்த ஞானஸ்நானத்தைச் செல்லாமல் ஆக்க வேண்டும் என்று கூறி எனக்கு மீண்டும் ஒரு தெளிப்பு ஸ்நானம் கொடுத்தார். என் ஆத்துமா கூண்டில் அடைபட்ட கிளிபோல் தவித்தது. மனிதர்களால் நியமிக்கப்பட்ட இந்த குருக்கள், மனிதர்களுடைய கட்டளைகளையே கைக்கொண்டு வீணாய் ஆராதனை செய்கிறார்கள் என்று இயேசு சுவாமி சொன்ன வார்த்தைகளை நினைவு கூர்ந்தேன்.

(தொடரும்)

Bro. ஜெயபாண்டி
புதிய எருசலேம் சபை,
மகிழ்ச்சிபுரம்.

"...நான் விசுவாசித்திருக்கிறவர் இன்னார் என்று அறிவேன்" — II தீமோ. 1 : 12

# SIN AND SALVATION

The wages of sin is death.—Rom. 6 : 23. Sin is a very great thing which can not be removed. whether people accept or deny the existance of sin, sin does dwell in the world.

Sin is related with men, but not with birds, beasts, fishes and other creatures, for they don't possess soul nor have the knowledge of good and evil and hence there is no sin for them. Creatures which possess soul have the nature of good and evil.

We do not know how sin sprung up in the beginning and how it came into satan, but we understand an angel became as satan, having corrupted and fell. As a green leaf falls from its place into water and gets rotton, this angel stumbled from his state and inequity was found in him and he became a blackish satan, having lost his glorious light.

Getting fretful of because the beauty of men, whom GOD loves, satan breathed sin into the society of men in Eden (Gen). The whole of sin is contented in unbelief, disobedience and transgression. Man is an engrafted creature; but birds, beasts and other creatures are not so. GOD created man in His image, after His likeness. Image is understandable as king's image is engraved in the coin and as the image of the moon in its fullness is seen in still water. The later example is better than the privious one to explain the meaning of image. Image represents the inner nature When the cloud comes in between the moon and the water or if

the water is troubled, the image of the moon will be seemed as a broken one or in dimness and hence the image of full moon will not be reflected.

The image of GOD will be virtually seen in man, only when he lives as an obedient son, receiving life, energy, good-ness, protection, and the knowledge of understanding good and evil from GOD. Man was created to live as a loving child of GOD, the Father. He is not a seperate creature. Except man, none was created in the image of GOD. Man is dependent in nature. He was created that he may love his creator and obey and live in hope, depending upon Him. Satan instigated him to fall from this state. Let us see few wicked devices of satan.

1. Satan spoke to woman through a serpent: Has GOD said, you shall not eat every tree of the Garden? (Gen.3:1). By asking this, he showed himself as a friend who seeks her goodness. Even today people commune with satan beleiving that he will give pleasures which GOD doesn't give, more than GOD.

2 He told, "you will not die, if you eat of the forbidden tree" (Gen. 3:4).

He said, "Man will not die"; that means there is no death, no punishment, no hell, no harm even if you don't listen to what God says, and no danger. He uttered, "See, God is not good, for doesn't give you full freedom, even to eat the fruit of a tree", and added "God lies" that man may disobey Him. He lies that man will not die (Gen. 3 : 4)

3. Satan instigated a new desire, saying why should you depend upon God, you yourself can understand good and evil. Eve received these words rather the sin of the devil. She dis-believed God and believed satan and transgressed. She decided to live without God and entice her husband for her desire.

Hearing the words—"In the day you eat thereof, then your eyes shall be opened, and you shall be as GOD, knowing good and evil", the man who was created in the image of GOD, to live together with GOD depending on Him decided himself to become GOD. The man who is supposed to learn the good and evil by GOD, decided to know by him-self. Sin came to existance and man got corrupted. Alas, what man achieved? : First of all he saw his nakedness, next fear, then running away, hiding, putting the blame upon others or circumstances and lying.

Thus man got corrupted and being seperated, departed from the presence of GOD who was the support of his life. Henceforth there occured seperation, enmity, murdering, denying the duty, care about self protection and etc. The whole world is in sin. Sin is the one which is committed willingly. From the day Adam fell in sin, man is commiting sin which he hates, doing not the good which he likes. Sometimes evil is seemed as good and good as bad and hence, being filled with lust, man is ought to be satisfied in GOD, tries to satisfy him by worldliness. Repeatedly doing the same sin, man becomes drunkard, lusty, covetous, thief, lier, traitor, murderer and so on. Finally his soul and body are spoiled and he dies pathetically, being judged by GOD. He becomes wor-thy to enter into hell, the eternal dam-nation, because of the knowledge of understanding good and evil which he received willingly. There his worm dieth not and the fire is not quenched—Mark 9 : 44, 46, 48. Man cannot say that he is not responsible for sin. While Eve offered the fruit, Adam would have rejected it. If you say "I will do", then face the consequence. There is no way to escape from punishment. Man cannot escape from sin by education, or fellow ship of good people, or good exercise. Sin is like a giant who can be overcome, fire which cannot be quenched and a river of water in wilderness which cannot be crossed by swimming. It is possible with GOD alone, to deliver man from sin and make him perfect in the image of GOD, if man cooperates with Him. Nobody can be remove sin from him. Let us see further, how GOD delivers us from sin (contd...)

# புதிய எருசலேம் செய்தி

எக்காளசத்தம்-3 ※ மார்ச் 1984

"புதிய எருசலேம் சபை"

''...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ, நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள்.... விழித்திருங்கள்...உங்களுக்குச சொல்லுகிறதை எல்லோருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்...''

மாற்கு 13 : 35-37

**EDITOR: CHIEF PASTOR N. LAZAR**

BOMBAY, INDIA

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லோரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒருமனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும் படியாகவும் தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய்க் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும்; சபையானது வஞ்சக போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது.

(எபே. 4 : 11-16)

## இதழின் உள்ளே



"14-3-84 அன்று புதன் காலை 10 மணிக்கு தானா (பம்பாய்) புதிய எருசலேம் சபை ஆலயம் Chief Pastor N. Lazar அவர்களால் பிரதிஷ்டை பண்ணப் பட்டது. அநேக பரிசுத்தவான்களும், தேவனுடைய பிள்ளைகளும் கலந்து கொண்டு தேவனை துதித்து, தேவாசீர்வாதம் பெற்றுக் கொண்டார்கள்."

# ஆசிரியர் உரை

தேவன் வானத்திலும், பூமியிலும், சமுத்திரத்திலும் எல்லா ஆழங்களிலும் தமக்குச் சித்தமானதை யெல்லாம் செய்கிறார். அவர் திட்டமிட்டு உலகை உருவாக்கி திட்டப்படி நடத்துகிறார். அவரது மாறாத ஆலோசனைப்படியும் தீர்மானத்தின் படியுமே உலகின் காரியங்கள் முடிவடையும். அத்திட்டமோ தேவனுடைய பிள்ளைகளாகிய உன்னுடைய, என்னுடைய நன்மையையே நோக்கமாகக் கொண்டதாகும். ஆனபடியால் தேவனுடைய பிள்ளைகளே ! பூமி நிலை மாறினாலும், மலைகள் பெயர்ந்து சமுத்திரத்தில் விழுந்தாலும், அதின் ஜலங்கள் பொங்கினாலும், உன் வாழ்க்கையில் என்ன கஷ்ட நஷ்டங்கள், ஆபத்துக்கள், பயங்கள் தோன்றினாலும் பயப்படாதிருங்கள். தம்முடைய பிள்ளைகளுக்கு பிறர் செய்யும் தீமையையும், நன்மையாக மாற்றிப் போடும் இறைவன் அவரைப்பற்றிக் கொள்கிற உங்களுக்கும் நன்மை செய்வார், காப்பாற்றுவார், உதவி செய்வார், ஆசீர்வதிப்பார்.

இயேசுவின் நாமத்தில் ஆமென்

கிறிஸ்துவுக்குள்,

N. Lazar

Chief Pastor N. LAZAR

பிட
கருப

# அப்போஸ்தலர்கள்

ஆதி அப்போஸ்தலர்களில் அநேகர் யோவான் ஸ்நானனின் சீஷராயிருந்தவர்களாகும். நமது கர்த்தராகிய இயேசுவை சுட்டிக்காட்டி: இதோ உலகத்தின்பாவத்தை சுமந்து தீர்க்கிற தேவ ஆட்டுக்குட்டி என்று தீர்க்கதரிசியாகிய யோவான் சொன்னதும் அவரைப் பின்பற்றிச் சென்ற இரண்டு சீஷர்களில் ஒருவன் சீமோன் பேதுருவின் சகோதரன் அந்திரேயா. அவர் தம் தம்பியாகிய சீமோன் பேதுருவை கர்த்தரிடம் கூட்டிக் கொண்டுவந்தார்—யோவா 1 : 35-42. பின்பு மறுநாளிலே கர்த்தர் பிலிப்புவைக் கண்டு எனக்கு பின் சென்று வா என்றார்; பிலிப்பு பெத்சாயிதா ஊரைச் சேர்ந்தவர். பிலிப்பு நாத்தான்வேலைக் கண்டு நியாயப்பிரமாணத்தில் சொல்லி இருக்கிறவரைக் கண்டேன் என்று சொல்லி இயேசுவிடம் அழைத்துவந்தார். பின்பு இவர்கள் தங்கள் வீடுகளுக்கு திரும்பி போய் விட்டதாகத் தெரிகிறது. பின் கர்த்தர் கலிலேயாக் கடலருகே நடந்து போகையில் மீன்பிடிக்கிறவர்களாகிய இரண்டு சகோதரர்களான அந்திரேயாவையும் சீமோனையும் கண்டு என் பின்னே வாருங்கள் நான் உங்களை மனுஷரைப் பிடிக்கிறவர்களாக்குவேன் என்றார். அப்பொழுது அவர்கள் தங்கள் வலைகளை விட்டுவிட்டு அவருக்குப் பின்சென்றார்கள் என்று வாசிக்கிறோம் (மத். 4 : 18-20). சிறிது தூரம் போனதும் வேறு இரண்டு சகோதரர்களான யாக்கோபு, யோவான் என்பவர்களைக் கண்டு அவர்களையும் அழைத்தார். அவர்களும் தங்கள் படகையும், தகப்பனையும் விட்டு விட்டு இயேசுவுக்குப் பின் சென்றார்கள்(மத். 4 : 21-22). ஆயத்துறையில் ஆயம் (வரி) வசூலித்துக் கொண்டிருந்த மத்தேயுவை அழைத்தார் அவர் தன் ஆயத் தொழிலை விட்டு விட்டு கர்த்தருக்குப் பின்சென்றார் (லூக். 5 : 27,28). இவர்களெல்லாம் ஏற்கனவே கர்த்தரை அறிந்திருந்தார்கள். இப்பொழுதும் சிறிது காலம் இவர்களெல்லாம் கர்த்தரோடிருந்து விட்டு பின் தங்கள் இடங்களுக்கு திரும்பி வருகிறதும், போகிறதுமாயிருந்தார்கள். இப்படி சீஷர்களையெல்லாம் கர்த்தர் தம்முடைய ஊழியத்தை ஆரம்பித்த ஆறுமாதங்களில் கூட்டிச்சேர்த்தார்.

பின்பு ஒரு நாள் கர்த்தர் ஒரு மலையின் மேல் ஏறி இராமுழுவதும் ஜெபத்தில் தரித்திருந்து விட்டு கீழே இறங்கி வந்ததும் தம்முடைய சீஷர்களையெல்லாம் தம்மிடம் வரவழைத்து அவர்களில் தமக்கு சித்தமான பன்னிரண்டு பேரைத் தெரிந்து கொண்டு அவர்களுக்கு "அப்போஸ்தலர்" என்று பேரிட்டார். அவர்கள் தம்மோடிருக்கவும், தாம் அனுப்புகிற இடத்தில் போய் பிரசங்கம் பண்ணவும், வியாதிகளை நீக்கி, பிசாசுகளை துரத்த அதிகாரமுடையவர்களாகவும் இருக்கும்படி நியமித்தார். அவர்களுடைய நாமங்களாவன: முந்தினவன் சீமோன்பேதுரு, அவன் சகோதரன் அந்திரேயா, யாக்கோபு, யோவான், பிலிப்பு, பர்தொலொமேயு, தோமா, மத்தேயு, யாக்கோபு, ததேயு என்னும் லெபேயு, கானானியனாகிய சீமோன் அவரைக் காட்டிக் கொடுத்த யூதாஸ்காரியோத்து என்பவைகளே(லூக்.6 : 12-16;மத். 10 : 1-4) இவர்கள் இது முதற்கொண்டு மூன்று வருஷம் கர்த்தரோடிருந்து பயிற்சிப் பெற்றார்கள். அப்பொழுது தங்கள் வீட்டையும், தொழிலையும், தாய் தகப்பனையும் விட்டு இயேசுவோடே தங்கியிருந்தார்கள். வேளா வேளைகளில் கர்த்தரோடு தங்கள் வீடுகளுக்கும் போய் வந்தார்கள். (உ-ம்) பேதுரு தன் வீட்டிற்கு கர்த்தரை அழைத்துச் சென்றதும் ஜுரமாய்க் கிடந்த பேதுருவின் மாமியைக் கர்த்தர் சுகமாக்கினார் (மத். 8 : 14, 15)என்றும், இயேசு தம்முடைய பட்டணத்துக்கு வந்தார் (மத்.9 : 1); வீட்டிற்கு போனார் (மத். 13 : 36), வீட்டிலிருந்து புறப்பட்டுப் போனார் என்றெல்லாம் எழுதப்பட்ட வீடு கப்பர்நகூமிலுள்ளசீமோன்பேதுருவின்வீடாகும்—மாற். 2: 1; 3 : 20. ஆனபடியால் சிலர் நினைக்கிறபடி சீஷர்கள் அல்லது அப்போஸ்தலர்கள் என்றால் எல்லாவற்றையும் விசேஷமாக மனைவி, பிள்ளைகள் விட்டுவிடுவதும் அல்லது விவாகமில்லாதபடியிருப்பதுமே கர்த்தருடைய உபதேசம் என்று நினைப்பது தவறு. இப்பொழுது சீஷர்களைக் கர்

அனுப்பி ஊழியத்தில் பயிற்சி கொடுத்துக் கொண்டு வந்தாரேயொழிய அவர்களை அப்போஸ்தலர்களாக அனுப்பவில்லை. அப்போஸ்தலர்கள் எல்லாவற்றையும் விட்டு அவரிடம் போய் ஊழியம் செய்தார்கள் என்று சொல்லும்போது தங்கள் மனைவி, பிள்ளைகளை விட்டுவிட்டார்கள். தங்கள் கடமையை மறுதலித்தார்கள் என்று சொல்லக்கூடாது. அப்படி சொல்லுகிறதாயிருந்தால் கொர்பான் என்னும் காணிக்கையை தேவனுக்கு செலுத்திவிடுகிறேன் என்று சொன்னால் அவன்தன் தாய்க்கும், தகப்பனுக்கும் செய்ய வேண்டிய கடமையை செய்யவேண்டாம் என்று போதித்த பரிசேயர், வேதபாரகர் போதகத்துக்கும், ஊழியத்திற்குபோகிறேன் என்று சொல்லி தன் தகப்பனுக்கோ உயிருள்ள மட்டும் பிரமாணத்தால் பிணைக்கப்பட்டிருக்கிற(I கொரி. 7 : 39) மனைவி பிள்ளைகளுக்கோ தன் கடமையைச் செய்ய வேண்டாம் என்று (தடுக்கிறதற்கும்) மறுக்கிற உபதேசத்திற்கும் எவ்வித வேறுபாடும் கிடையாது. தேவன இணைத்த மனைவியை தள்ளிப் போடுகிற அல்லது விட்டுவிடுகிற (மத்.19 : 3-6) கள்ளபோதகத்திற்கு தேவஜனம் எச்சரிக்கையாயிருக்க வேண்டும்.

அவர்கள் (மனைவி) பிரிந்துபோனல் பிரிந்து போகட்டும் இந்த விசயத்தில் யாரும் கட்டுப்பட்டவர்களல்ல. ஆனல் அவர்கள் உன்னேடு சேர்ந்து விசுவாசத்தை பின்பற்றவும் உன்மனைவி, பிள்ளைகள் உன்னேடு சேர்ந்து தேவனுக்கு ஊழியம் செய்யவும் வாஞ்சிக்கும் போது அவர்களோடே நீ கர்த்தருக்கு ஊழியம் செய். அப்போஸ்தலர்களும், ஆதிசீஷர்களும் அப்படியே செய்தார்கள்.

(உ ம்) அப்போஸ்தலர்களில் அநேகரும், கர்த்தருடைய சகோதரர் யாக்கோபும், கேபாவும் (சீமோன் பேதுரு) மனைவியாகிய ஒருவிசுவாசியை தங்களுடன் கூட்டிச் சென்ருர்கள். அப்படியே ஆக்கில்லாவும் பிரிஸ்கில்லாளும்(ரோமர்16 : 3); பிலேமோன் அப்பியாள் (பிலமே 1 : 1,2); பிலிப்பு சுவிசேஷகரும் அவர் குடும்பமும் (அப் 21 : 8-10).

ஆம், கர்த்தர் தாம் உயிர்த்தெழுந்த பின்பே தாம் தம்முடைய பிதாவினிடம் பரலோகத்திற்கு போகப்போகிற போதே அப்போஸ்தலர்களை அப்போஸ்தலர்களாக தமக்குப் பதிலாக உலகத்துக்கு அனுப்புகிருர். "பிதா என்னை அனுப்பினது போல நானும் உங்களை அனுப்புகிறேன் என்று சொல்லி அவர்கள் மேல் ஊதி பரிசுத்த ஆவியைப் பெற்றுக் கொள்ளுங்கள். எவர்களுடைய பாவங்களை மன்னிக்கிறீர்களோ அவைகள் அவர்களுக்கு மன்னிக்கப்படும். எவர்களுடைய பாவங்களை மன்னியாதிருக்கிறீர்களோ அவைகள் அவர்களுக்கு மன்னிக்கப்படாதிருக்கும்" என்ருர்-யோ. 20 : 21-23.

பாவங்களை மன்னிக்கும் அதிகாரமுடையவனே அப்போஸ்தலனுகும். இவர்கள் தேவகட்டளையும், அதிகாரமும் பெற்று காத்திருந்து வாக்குத்தத்தத்தின் பரிசுத்த ஆவியைப்பெற்றுக் கொண்டார்கள்-அப்.1:12-14; 2:14. சபை எழும்பிற்று; தங்களுக்கு இயேசு கட்டளையிட்ட அப்போஸ்தல ஊழியத்தை ஆரம்பித்தார்கள். கர்த்தர் எப்படி எப்படி அழைத்தாரோ அப்படியே ஊழியம் செய்தார்கள். மனைவியுடையவர்கள் தங்கள் மனைவியோடும், விரத்தராய் ஊழியத்துக்கு அழைக்கப்பட்டவர்கள் விரத்தராயும் ஊழியம் செய்தார்கள்-I கொரி. 9 : 5.

அப்போஸ்தலர்கள் ஊழிய பயிற்சி காலத்தில் கர்த்தர் தங்களோடு பூமியில் இருக்கையில் (மாமிசத்தில்) எல்லாவற்றையும் விட்டு இயேசுவோடிருந்தார்களேயொழிய தங்கள் மனைவி பிள்ளைகளை விட்டுவிட வில்லை. அப்படி ஏகாந்தியாக அப்போஸ்தலர்கள் இருந்திருந்தால் கர்த்தர் கல்வாரியில் வைத்து தன்னுடைய தாயாரை அப்போஸ்தலன் யோவானிடம் ஒப்படைத்திருக்க மாட்டார் -யோவா. 19 : 26, 27. கர்த்தரே தன் மரண வேளையில் தன் தாயாருக்கு வேண்டிய ஏற்பாடு செய்தார் என்பதை நாம் பார்க்கிரேம். நம்முடைய தாய் தந்தையாரை பாதுகாக்க தகுதியான நபர் இருந்தால் அவர்களிடம் பொறுப்பு ஒப்படைத்துவிட்டு ஊழியத்தில் இறங்க வேண்டும். பெற்ரேரின் அனுமதி ஆசியுடன் ஊழியத்திற்கு இறங்குவது நலம். ஆனல்

அவர்கள் நமக்கு உண்டான அழைப்புக்கு முட்டுக்கட்டையாக தடையாக இருந்தால் நமது பரமதகப்பனுக்கே நாம் கீழ்ப்படிய வேண்டும். சபைமேய்ப்பன் விவாகஸ்தனாக இருக்கவேண்டும்- Iதீமோ.3:1-5 அவருக்குள் நிலைத்திருக்கிறேன் என்று சொல்லுகிறவன் அவர் நடந்தபடியே தானும் நடக்க வேண்டும்-Iயோ.2:6 அப்போஸ்தலர்களுடைய தகுதி.

(இன்னும் வரும்)

"நான் அப்போஸ்தலனல்லவா? நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவை நான் தரிசிக்கவில்லையா?" Iகொரி. 9:1

சுவிசேஷம்

# மனஸ்தாபம்

மனஸ்தாபம் : தங்கள் பாவங்களுக்காக தாங்கள் செய்த தவறுதலுக்காக, தாங்கள் செய்த பாவத்திற்காக மனம் வருந்தி அழுவதையே மனஸ்தாபம் என்று வேதம் சொல்லுகிறது. மெய் மனஸ்தாபமும் உண்டு; தப்பான மனஸ்தாபமும் உண்டு.

மனிதன் தீங்குக்கு மனஸ்தாபப்படுகிறவனாக, தீமைகளை, ஏழைகளை, கஷ்டப்படுகிறவர்களைக் கண்டு மனஸ்தாபப்படுகிறவனாக உண்டு பண்ணப்பட்டிருக்கிறான். இது தேவனுடைய சுபாவம் (யோனா 4 : 2) இங்கே மனஸ்தாபம் என்பது இரட்சிப்பைத் தேடுகிறவர்கள் அடைய வேண்டிய மனஸ்தாபத்தையே குறிப்பிடுகிறேன்.

தேவனுக்கு முன்பாக மனிதன் துக்கித்து மனஸ்தாபப்பட்டு அழுவதை தேவன் உற்றுப் பார்த்து இரங்குகிறார்(எஸ்றா 10 : 1;நெகே. 1 : 4). அவர் தண்டனையைக் கூறினாலும் தீங்குக்கு மனஸ்தாபப்படுகிற தேவனாயிருக்கிறார் (எரேமி 31:20). ஆதலால் வருங்காலத்தில் தேவஜனம் மனஸ்தாபத்தோடும், அழுகையோடும் வருவார்கள் என்று தேவன் சொன்னார் (எரேமியா 31 : 9). நான் அவர்கள் சத்தத்தைக் கேட்டேன் என்று தேவன் சொல்லியிருக்கிறார் (எரேமி 31 : 19).

நீ உன் பாவத்திற்காக மனஸ்தாபப்படுகிறாயா?-மத்.21 : 29. உன்னைப் பாவி என்று ஒத்துக்கொண்டாயா? உன்பாவம் அருவருக்கப்பட்டதென்றும் அது அன்புள்ள தேவனை வருத்திற்றே என்றும் எண்ணி மனங்கசந்து உன்னையே அருவருக்கிறாயா? இதுவே கிறிஸ்தவ ஜீவியத்தின் ஆரம்ப ஜீவியமும், தவறும்போதெல்லாம் காணப்படவேண்டிய தன்மையுமாயிருக்கிறது. அநேக விசுவாசிகள் தங்கள் ஆரம்ப விசுவாச ஜீவியத்தில் தங்கள் குற்றங்களை ஒத்துக்கொண்டு மனஸ்தாபப்பட்டது போல மனஸ்தாபப்படுவதில்லை. இப்பொழுது செய்வது சாதாரண தவறு போலும் அது ஒன்றுமில்லாதது போலும் எண்ணி வெறுமனே ஒரு ஜெபம் பண்ணுகிறவர்களும், பாவ அறிக்கை செய்கிறவர்களுமாயிருக்கிறார்கள்.

பாவத்திற்காக அழவேண்டும்-யோவே. 2 : 12. ஆனால் அழுகை லௌகிகமானதாயிருக்க கூடாது. தேவனை, கல்வாரியை நோக்கிப் பார்த்து மன்னிப்பு தேடுவதாயிருக்க வேண்டும். அதுவே மெய் மனஸ்தாபமாயிருக்கிறது. இவ்வித மனஸ்தாபப்படுகிறவர்கள் மறுபடியும் அத்தவற்றைச் செய்யார். நீ! உன் பாவத்திற்காக அழுதிருக்கிறாயா?. அழு! -புலம்பல் 3 : 40,41.

மனஸ்தாபப்படுவது தேவனுக்கேற்ற துக்கமாயிருக்கிறது. நீங்கள் மனஸ்தாபப்பட்டதற்காக, துக்கப்பட்டதற்காக தேவனை ஸ்தோத்திரிக்கிறேன் என்கிறார் அப். பவுல் (II கொரி.7 : 4,10).

ஒரு தகப்பனுக்கு ஒரு குமாரன் இருந்தான். அவன் அடிக்கடி தவறு செய்துவிட்டு தகப்பனிடம் மன்னிப்பு கேட்பது வழக்கமாயிருந்தது. ஒவ்வொரு தடவையும் தகப்பன் ஒரு ஆணியை கொடுத்து வீட்டுப் பக்கத்தில் நின்ற ஒரு மரத்தில் அந்த ஆணியை

அறைந்து விட்டு வரும்படியாய் சொல்வார். சில வருஷங்கள் இப்படியே நடந்தன. கடைசியில் ஒருநாள் அதேபோல் ஒரு தவறு செய்து விட்டு, அப்பா நான் தவறு செய்து விட்டேன் என்று சொல்லி மன்னிப்பு கேட்டான். தகப்பன் வழக்கப்படி ஆணியொன்றை கொடுத்து அறைந்து விட்டு வரச் சொன்னார். மகன் போய் பார்த்துவிட்டு மரத்தில் ஆணி அறைய கை எட்டும் தூரம் வரை இடம் இல்லை என்று கண்டு திரும்பி வந்து அப்பா ஆணி அறைய மரத்தில் இடமில்லை என்று சொன்னான்.

அப்பொழுது தகப்பன் மகனே! நீ உன்னுடைய ஒவ்வொரு பாவத்தினாலும் என்னுடைய இருதயத்தில் ஆணி அடித்து முடித்து விட்டாய் இப்பொழுது என் இருதயத்தில் ஆணி அடிக்க இடமில்லை என்று சொல்லி அவனை ஏறிட்டுப்பார்த்தார்.

அதைக்கேட்டதும் மகனது உள்ளம் குத்தப்பட்டு இத்தனை பாவம் நான் செய்திருக்கிறேனே என்று எண்ணி மிகவும் மனஸ்தாபப்பட்டு இனிஒரு போதும் பாவம் செய்து தகப்பனுடைய இருதயத்தில் ஆணி அடிக்க மாட்டேன் என்று முடிவுசெய்து தகப்பனிடத்தில் சொன்னான்: இனிமேல் நான் பாவம் செய்ய மாட்டேன் அப்பா என்று. அன்று முதற்கொண்டு அவன் பாவத்தை விட்டு மனந்திரும்பி ஒருநல்ல ஜீவியம் செய்தான்.

அப்படிப்போல நீயும் மெய் மனஸ்தாபப் படாவிட்டால் உன் பாவம் மன்னிக்கப்படாது. நீ துக்கப்பட்டாலும் சீர்திருந்துவதற்கேதுவாக உனக்காக ஆணி அடிக்கப்பட்ட இரட்சகரை நோக்கிப்பார். நீ தேவனுக்கேற்ற துக்கமடைந்தால் உன்னை மன்னிக்க தேவன் ஆயத்தமாயிருக்கிறார்.

நீ யூதாசைப் போல் உன் பாவத்திற்காக துக்கப்பட்டு நாண்டுகொண்டு சாகாதே. மத்.27 : 3

பாவத்திற்காக மனஸ்தாபப்பட்டு அழுது இயேசுவை நோக்கிப் பார்த்த பரி. பேதுருவைப் போலிரு -மத். 26 : 75 பிழைப்பாய்.

"தேவனுக்கேற்ற துக்கம்...இரட்சிப்புக்கேதுவான மனந்திரும்புதலை உண்டாக்குகிறது" II கொரி. 7 : 10

# சபைகளுக்குத் தேவனுடைய கட்டளை

நம்முடைய பிதாவாகிய தேவனுடைய சித்தத்தினாலே இயேசு கிறிஸ்துவின் அன்பைப் பெற்றவர்களாகிய நாம் நன்றியுடையவர்களாகயிருக்க வேண்டும்.

இயேசுவின் இரத்தத்திற்கு நன்றியுள்ளவர்களாகயிருக்க வேண்டும். நாம் பெற்ற இரட்சிப்பு நம்மில் பலிதப்பட வேண்டும். நாம் அதிலே வளர வேண்டும். சமாதானமும், நிறைவும், சந்தோஷமும் நம்முடைய ஜீவியத்தில் வல்லமையும் நிறைந்து வழிய வேண்டும். நம்முடைய ஜெபங்கள் கேட்கப்பட்டு நாம் சந்தோஷமும் மகிழ்ச்சியுமடைய வேண்டுமென்று தேவன் ஆசிக்கிறார்.

அதற்கு தடையென்ன? நான் ஒழுங்காய் கோவிலுக்குப் போகிறேன், ஜெபம் செய்கிறேன், ஊழியத்திற்கு உடன் போகிறேன், வேறு என்ன என்பது உங்களில் அநேகருடைய கேள்வி.

மனுஷன் தேவனை வஞ்சிக்கலாமா? —மல்கியா 3 : 8.

மனிதன் மனிதனையே வஞ்சிக்கக் கூடாதே. அப்படி இருக்க தேவனை வஞ்சிக்கலாமா? கூடாது. அப்படி நாம் செய்யக் கூடாது; ஆனாலும் அதைத் தான் செய்கிறோம். பிறகு ஏன் பின் மாற்றம் ஏற்படாது. தேவ ஆசீர்வாதம் எப்படிக் கிடைக்கும். பாவத்திலிருந்து விடுதலை எப்படி உண்டாகும். நாம் வஞ்சகர்களென்று அழைக்கப்படலாமா? "ஆசாரியனான சகரியாவும், அவன் மனைவி எலிசபெத்தும் கர்த்தரிட்ட

சகல கற்பனைகளின்படியேயும், நியமங்களின்படியேயும் குற்றமற்றவர்களாய் நடந்து தேவனுக்கு முன்பாக நீதிமான்களாய் காணப்பட்டார்களாம். [லூக் 1 : 6]. நம்முடைய காரியமெப்படி, சில கற்பனைகளை கடைப்பிடித்து சிலவற்றை நிர்விசாரம் செய்கிறோமல்லவா?

அதிலே விசேஷித்த பிரமாணமும் கற்பனையுமாகிய ஜீவிப்பிரமாணங்களில் ஒன்றாகிய தசம பாகத்தை [10%] நீங்கள் அலட்சியம் செய்து கொண்டிருக்கிறீர்களா? இதோ கட்டளை.

லேவி. 27 : 30, 32 தேசத்திலே நிலத்தின் வித்திலும், விருட்சங்களின் கனியிலும், தசம பாகம் எல்லாம் கர்த்தருக்கு உரியது. அது கர்த்தருக்கு பரிசுத்தமானது.

கோலின் கீழ்ப்பட்ட ஆடு, மாடுகளிலே பத்தில் ஒரு பங்காகிறதெல்லாம் கர்த்தருக்குப் பரிசுத்தமானது.

நெகே. 13 : 12 அப்பொழுது யூதர் எல்லாரும் தானியம், திராட்சரசம், எண்ணெய் என்பவைகளில் தசம பாகத்தை பொக்கிஷ அறைகளில் கொண்டு வந்தார்கள்.

எண்ணு. 18 : 24, 26 இஸ்ரவேல் புத்திரர் கர்த்தருக்கு ஏறெடுத்துப் படைக்கும் படைப்பாகிய தசமபாகத்தை லேவியருக்கு சுதந்தரமாகக் கொடுத்தேன் ...

எபி. 7 : 5-7 ஆபிரகாம் மெல்கிசேதேக்குக்கு தசமபாகம் கொடுத்து ஆசீர்வாதம் பெற்றார். தசமபாகம் கொடுக்காதவன் தேவனுடைய ஊழியத்தை சிதறடிக்கிறான். அவன் தேவனுக்கு ஆராதனை நடக்கக் கூடாது என்று எண்ணுகிறான்—

நெகே. 13 : 12.

உபதேசிக்கப் படுகிறவன் உபதேசிக்கிறவனுக்கு சகல நன்மைகளிலும் பகிர்ந்து கொடுக்க வேண்டும். (புதிய ஏற்பாடு) கலாத். 6 : 6.

இப்படி பரிசேயர்கள் கூடச் செய்தார்கள்—லூக். 18 : 11, 12. இயேசு கிறிஸ்துவும் சொல்லுகிறார் மத்தேயு 23 : 25ல் இவைகளை செய்ய வேண்டுமென்று நம்முடைய நீதி, பரிசேயனுடைய நீதியைப்பார்க்கிலும் அதிகமாயிரா விட்டால் நாம் தேவனுடைய இராஜ்யத்தில் பிரவேசிக்க [மாட்டோம்] முடியாதாம்— மத். 5 : 20.

நாம் ஒவ்வொருவரும் தேவனுடைய இராஜ்யத்தில் பங்கடைய வேண்டுமே.

கர்த்தர் சொல்கிறார் : தேவனுடைய பிள்ளைகள் பொருத்தனை பண்ணின என் வருவாய்களை நிறுத்தி வைத்திருக்கிறார்கள்.

ஆம், நீ கர்த்தருக்கு நேர்ந்து கொண்டதை செலுத்தி விட்டாயா? சபையின் நெருக்கத்திற்கு நீதான் காரணமென்று உனக்குத் தெரிகிறதா? நீ நேர்ந்து கொண்டதை உடனே செலுத்து—பிரசங்கி 5 : 4. நீ நேர்ந்துக் கொள்ளா விட்டால் பாவமில்லை—உபா. 23: 22; நேர்ந்து கொண்டதை உனக்கு உண்டாயிருக்கிறதிலிருந்து எடுத்து உடனே செலுத்து-II கொரி. 8 : 11.

தசமபாகமெல்லாம் கர்த்தருடையது—லேவி. 27 : 30. உன் சம்பாத்தியங்களிலெல்லாம் ஒரு பாகம் [1/10] கர்த்தருடையது—மத். 22 : 21. புதிய ஏற்பாட்டின் விசுவாசி கிரயத்திற்குக்கொள்ளப்பட்ட கர்த்தருடைய அடிமையாயிருக்கிற படியால் I கொரி. 6 : 20; அப். 20 : 28; I பேதுரு 1 : 18, 19) அவனுடையது எல்லாம் கர்த்தருடையது. ஆனாலும் கர்த்தர் 9 பாகத்தை நீ அனுபவித்துக் கொள் 1 பாகத்தை எனக்குக் கொடு; என் ஊழியரிடம் கொடு. என் வேலைக்காக கொடு என்கிறார். சந்தோஷமாய் கொடுங்கள். கர்த்தர் நீங்கள் விடுபட முடியாத படி தவிக்கும் பலவீனங்களிலிருந்தும், பாவத்திலிருந்தும், பிரச்சனைகளிலிருந்தும் விடுவிப்பார். தசமபாகம் கொடாதவர்களுக்கு பூரண விடுதலை கிடையாது. ஆனபடியால் உடனே செய்யுங்கள். இந்த மாதமே செய்யுங்கள், ஒழுங்காய் செய்யுங்கள். தவறாமல் தொடர்ந்து செய்யுங்கள் I கொரி. 16 : 2; உபா. 16 : 16. கர்த்தர் உங்களை ஆசீர்வதிப்பராக!

---

"கொடுங்கள், அப்பொழுது உங்களுக்கும் கொடுக்கப்படும்" லூக். 6 : 38

---

# போர்ச்சேவல்... கொக்கரக்கோ!

போர்ச்சேவல் ஒரு வெற்றிக்கு அறிகுறியான பறவை. மனிதர்களுக்குப் பிரயோஜனமானது. அதனிடமிருந்து அதைப்பார்த்து நாம் கற்றுக் கொள்வது என்ன?

1. எழுப்புதல் : அதிகாலையில் சேவல் கூவுகிறது. அயர்ந்த நித்திரையில் உள்ளவர்களை அவரவர்கள் தங்கள் பணியைச் செய்யும்படிக்கு இரவு சென்று போயிற்று பகல் சமீபமாயிற்று என்ற மறை பொருளோடு அதற்கு கொடுக்கப்பட்ட பணியை அது நிறைவேற்றும் படிக்கு; அதிகாலையில் அதற்கு கொடுக்கப்பட்ட குரலில் கூவி எழுப்புகிறது. இது இறைவனால் மனிதனுக்கு கொடுக்கப்பட்ட எழுப்புதல் ஒலியாகும். சத்தம் கேட்கிறதா?

இந்தவிதமாக கர்த்தருடைய பிள்ளைகள் யாவரும் காணப்படவேண்டும். நம்முடைய ஜீவியம் அநேக ஆத்துமாக்கள் மனந்திரும்புதலுக்கு ஏதுவாகவும், இருளில் இருக்கிற ஜனங்கள் ஆச்சரியமான ஒளியினிடத்திற்கு (இயேசுகிறிஸ்துவினிடம்) கடந்துவர அனுதினமும் நாம் கிறிஸ்துவுக்குள் பிரகாசிக்க வேண்டும். நம்முடைய சாட்சி, சபை மக்களிடத்தில் பக்திவிருத்தி யுண்டுபண்ணத்தக்கதாகவும், சபை மக்கள் விருப்பத்துடனும், ஆவலுடன் கேட்கத்தக்கதாகவும், ஆறுதல் அளிக்கத்தக்கதாகவும் இருக்க வேண்டும் நம்முடைய ஜீவியமும், சாட்சியும் சபை மக்கள் மத்தியிலும் நம் இனத்தாரிடத்திலும் புறஜாதியினர் முன்னிலையிலும் போர்ச் சேவலின் குரல் போன்று எழுப்புதல் ஒலியாக ஒலிக்க வேண்டும். அதற்கு நாம் ஆயத்தமாவோமாக.

2. எதிர்ப்புத்தன்மை : எதிர்ப்பு தன்மையுள்ளது சேவல். எப்பொழுதும் யுத்தம் செய்வதற்கு ஆயத்தமாக இருக்கும். தனக்கு மிஞ்சின பெலன் உடைய எதிரி (சேவல்) எதிர்ப்பட்டாலும் தயங்காமல் துணிந்து போர் செய்யும். இரத்தம் சிந்த தீவிரிக்கும் அதன் பெலன் முழுவதையும் இரத்தம் சிந்துதல் மூலம் வெளிப்படுத்தும்.

இது போல கர்த்தருடைய பிள்ளைகளாகிய நாம் எதிராளியாகிய பிசாசோடு எதிர்த்து நிற்க எதிர்ப்பு தன்மையுடையவர்களாய்க் காணப்படவேண்டும். எப்பொழுதும் யுத்தம் செய்வதற்கு விழித்திருக்க வேண்டும்.

தேவனுடைய சர்வாயுதவர்க்கத்தை தரித்திருந்து சத்துருவை ஜெயங்கொள்ள வேண்டும். தீங்கு நாளில் அவைகளை நீங்கள் எதிர்க்கவும், சகலத்தையும் செய்து முடித்தவர்களாய் நிற்கவும் திராணியுள்ளவர்களாகும் படிக்கு தேவனுடைய சர்வாயுதவர்க்கத்தை எடுத்துக்கொள்ளுங்கள் (எபேசி.6 : 13). நாம் முழுபலத்தோடு எதிர்க்கும் போது தேவன் நமக்குப் பெலன் அளிக்கிறார். சத்துவம் இல்லாத வேளையில் சத்துவத்தைக் கொடுத்துப் பெருகப் பண்ணுகிறார். தேவன் நமக்கு ஜெயத்தைக் கட்டளையிடுவார்.

3. கட்டுப்பாடு : மற்றச் சேவல்களை விட போர்ச்சேவல் விசேஷித்த தன்மையுள்ளது. அதை வளர்ப்பவர்கள் அதின் காலை கட்டிப் போட்டு வளர்ப்பார்கள். இரை பொறுக்க வெளியே அனுமதிப்பதில்லை. அதற்கு ஊட்டம் அளிக்கக் கூடிய ஆரோக்கியமான இரையைப் போடுவார்கள் (உதாரணமாக: பிண்ணாக்கு, இறைச்சி). போர்ச்சேவல் வெளியே இறை பொருக்கப் போவதில்லை. தன்னை வளர்ப்பவர்கள் கொடுப்பதை மட்டும் தின்னும். அதை வளர்ப்பவர்கள் அதை அடிக்கடி தண்ணீரால் குளிப்பாட்டி சுத்திகரிப்பார்கள் (குப்பை மேட்டு சேவல்கள் குளிப்பதில்லை. புளுதியில், சாம்பலில் புரளும்). போர்ச்சேவலை வளர்ப்பவர்கள் அதைப்பிரியத்தோடும், அன்போடும் வளர்ப்பார்கள். அது அதனை வளர்ப்பவர்களோடு உறவாடும்.

இதன் பிரகாரம் தேவனுடைய பிள்ளைகளாகிய நாம் நம்முடைய திருச்சபையின் ஆரோக்கியமான உபதேசத்தின்படி நடந்து தேவனுடைய கரத்திலுள்ள ஆத்மீக, சரீர நன்மைகளைப் பெற்றுக் கொள்வோமாக போர்ச் சேவலானது தன்னை வளர்ப்பவர்கள்

கொடுக்கின்ற ஆரோக்கியமான போஜ னத்தை உட்கொண்டு அவர்கள் கைக்குள் வளருவது போல நாமும் நம்மை நடத்து பவர்கள் கொடுக்கும் ஆரோக்கியமான ஆலோசனைக்கு உட்பட்டு அவர்கள் நம் முடைய ஆத்துமாவுக்காக உத்திரவாதம் பண்ணுகிறவர்களாய் விழித்திருக்கிறபடி யால் அவர்கள் பிரியத்தோடும், அன்போடும் நம்மை நடத்துவதற்கு அவர்களுக்கு உட் பட்டு கீழ்ப்படிந்திருப்போமாக (எபி 13: 17).

போர்ச்சேவலை வளர்ப்பவர்கள் அதைச் சுத்திகரிப்பது போல நாம் நம்மை சுத்திகரிக் கும்படிக்கு கர்த்தருக்கு முன்பாக அவர்களி டத்தில் (பரிசுத்தவான்களிடத்தில்) அறிக்கை செய்வோமாக. அவர்களுக்கு அடங்கியிருப் போமோக. அன்பாயிருப்போமாக.

4. பட்டயம் (கத்தி) கட்டுதல்: போர்ச் சேவல் யுத்தம் செய்யுமுன் அதின் காலில் பட்டயம் கட்டுவார்கள். அது எதிரியைச் சீக் கிரம் விழ்த்துவதற்கு ஜெயங்கொள்வதற்கு பட்டயம் [கத்தி] உதவி செய்கின்றது. போர்ச்சேவல் அதின் முழுபலத்தோடும் பட்டயத்தோடும் எதிரியை மடங்கடிக்கும். பின் வாங்காதிருக்க பட்டயம் அதற்கு உதவியாக மெய்க்காப்பாளனுக தோள் கொடுக்கும்.

கத்திகட்டிய போர்ச் சேவலைப் போன்று கர்த்தருடைய பிள்ளைகளாகிய நாம் நம் முடைய எதிராளியான பிசாசை முறியடிப் பதற்கு தேவ வசனமாகிய பட்டயத்தைத் தரித்தவர்களாகக் காணப்படவேண்டும். தேவ வசனமாகிய பட்டயத்திற்கு (எபி.4 : 12) நாம் உட்படும் போது அது நமக்கு ஜெயத்தை கொடுக்கும். நம் இரட்சகராகிய இயேசுகிறிஸ்தும் திருவசனத்தைக் கொண்டே சாத்தானை ஜெயித்தார். (மத்.4: 3-11) அது போல நாமும் கர்த்தருடைய அப்போஸ்தலர்களின் ஆரோக்கியமான ஆலோசனைகளையும், திருவசனமாகிய பட்ட யத்தையும் மனதின் அரையில் கட்டிக் கொண்டவர்களாய் சாத்தானை ஜெயங் கொள்வோமாக. தேவனுகிய கர்த்தர் நமக்கு உதவி செய்வார். தேவனுக்கே மகிமை!

கொக்கரக்...கோ! கோ!!

"...நமக்கு ஜெயங்கொடுக்கிற தேவனுக்கு ஸ்தோத்திரம்" Iகொரி. 15 : 57

# பாவமும் இரட்சிப்பும்

பிப்ரவரி மாத தொடர்ச்சி

பாவத்தை இருவகையாக பிரிக்கலாம். ஜென்ம பாவம் (Sin by Nature) கர்ம பாவம் (Sin by Deeds)மனிதன்பிறக்கும்போதே பாவ சுபாவம் சார்புள்ளவனுக பிறக்கிறன். பிறக் கும் குழந்தை கூட சமநிலையிலுள்ள தாயல்ல ஒரு சார்புடைய நிலையிலுள்ளதாகவே பிறக் கிறது. ஒரு பக்கம் இழுத்துக் கொண்டிருக் கும் தராசு போன்று அக்குழந்தை நன்மை யைக் காட்டிலும் தீமையை அதிகம் விரும் பும் சார்புடையதாகவே காணப்படுகிறது. இதுவே பாவ சுபாவம்; இதிலிருந்து கர்ம (கிரியை) பாவம் பிறக்கிறது. பாவ சுபாவம்- ஜென்ம பாவத்தை நாம் ஆதாம் வழியாக சுதந்தரித்துள்ளோம். இதனுல் சோதனை யுண்டாகிறது. சோதனைக்கு ஊக்கம் புறம்பே யிருந்து கிடைக்கிறது. நாம் பாக்கும் தீய படக் காட்சிகள், வாசிக்கும் தீய நூல்கள், தீய நண்பர்கள், உறவினர்கள், அக்கம் பக்கம் வசிக்கும் மக்களின் பழக்க வழக்கங் களிலிருந்து கிடைக்கிறது.

இதற்கு இந்த சோதனைக்கு கருவி நமது சுயாதீன சித்தம். இதற்கு தூண்டுதல் சாத் தான். மனிதனுடைய சித்தமே கறைபட் டிருப்பதினுல் மனிதன் தன்னைத் தானே இரட்சித்துக் கொள்ள முடியாது.

மதங்களின் உள் நோக்கம் சுயநயமும், சுய நீதியுமாகும். இதை மதத் தலைவர்களின் உரைகளிலும், பல பெரிய இயக்கங்களின் நோக்கங்களிலும் காணலாம். ஆனுல் அந்த மதத் தலைவர்கள் தங்கள் சுயநோக்கங்களை

மறைத்து ஜனங்களுக்கு நன்மை செய்வது போல் நடித்து, தூண்டி விட்டு பாவம் செய்ய வைக்கிறதைப் பார்க்கலாம்.

(உ-ம்) எபேசுவிலுள்ள விக்கிரகாராதனையைக் கண்டித்து பவுல் அப்போஸ்தலன் பிரசங்கம் பண்ணினர். தியானளின் கோயில் போன்ற சிறிய கோவில்களை வெள்ளியினல் உண்டாக்கி அதை விற்பதினல் மிகுந்த ஆதாயம் அடைந்து வந்த ஒரு கூட்டத்தையும் தெமேத்திரியுவையும் காண்கிறேம். பவுலின் பிரசங்கத்தினல் மக்கள் விக்கிரக ஆராதனையை விட்டு விடுகிறதினல தங்கள் ஆதாய தொழில் கெட்டுப் போகிறதைக் கண்டு தெமேத்திரியு விக்கிரக தொழிலாளிகளைக் கூட்டிக் கொண்டு ஒரு மதக் கலவரத்தை ஆரம்பித்தான். ஆனல் அவர்கள் சொன்னது (சத்தமிட்டது) என்ன தெரியுமா? எங்கள் தியானளே பெரியவள் என்று கூப்பாடு போட்டு ஜனங்களைத் தூண்டிவிட்டார்கள். பெரிய கலகமுண்டது (அப். 19 : 23-41) ஆனபடியால் மனிதனுடைய எந்த நல்ல முயற்சியிலும் பாவமுண்டு, சுயநலமுண்டு. எந்த பக்தி ஆச்சாரமும் சுய நீதிக்கு வழி நடத்தி மனிதனுடைய பெருமைக்குதூபமாய் அமைகிறதே யொழிய அவனை பாவத்தி லிருந்து, சாத்தானுடைய ஆளுகையிலிருந்து அவனை மீட்பதில்லை. ஆனபடியால் மனிதன் தன் சுய முயற்சியினல் பாவத்திலிருந்து விடுபட முயற்சிப்பதே பெரிய பாவமாகிறது. அவன் தேவனுடைய அன்பை மறுதலிக்கிருன். மனித சுபாவத்தில் பாவம் இருக்கிறபடியால் மனிதன தன்னைத்தானே இரட்சிக்க முடியாது.

நாம் முன்சொன்னபடி மனிதனை மெய்த் தேவன் தான் இரட்சிக்க முடியும். அதற்கு மனிதனும் ஒத்துழைக்க வேண்டும். பாவத்தைக் குறித்து சாக்குபோக்கு சொல்லக் கூடாது; பிறர்மேல், சூழ்நிலையின்மேல் சாக்கு போக்கு சொல்லக்கூடாது. தன்னுடைய பாவத்தை ஒத்துக்கொள்ளவேண்டும். அதை அறிக்கை செய்யவேண்டும். அதை சீ! என்று வெறுத்து விட்டுவிட வேண்டும். பாவத்தை பாவம் என்று ஒத்துக்கொள்ளாதவரை மனந் திரும்புதல் உண்டாகாது; அவன் பாவத்தை விட்டுவிட விரும்ப மாட்டான். பாவத்தை பாவம்என்றுஉணர்த்துவதுநியாயப்பிரமாணமாகும். நியாயப் பிரமாணம் இல்லாவிட்டால் பாவம் இன்னது என்று தெரியாது. நியாயப் பிரமாணத்தைக் கொடுப்பவர் மெய்த் தேவன். தேவனையன்றி நியாயப் பிரமாணத்தைக் கொடுக்க தகுதியுள்ளவர் ஒருவருமில்லை; மனித ஜீவிய சட்டங்களை கொடுக்ககூடிய ஒரே தகுதியுடையவர் தேவன் மாத்திரமே. தேவனுடைய நியாயப் பிரமாணத்தை சத்திய வேதப் புஸ்தகத்திலே காணலாம்.

தேவனுடைய நியாயப் பிரமாணத்தை மீறுகிறதே பாவம்—Iயோ. 3 : 4.—தொடரும்

> "தங்களைத் தாங்களே பரிசுத்தப்படுத்திக் கொள்கிறவர்கள்...... சங்கரிக்கப்படுவார்கள் என்று கர்த்தர் சொல்லுகிருர்"
> —ஏசா. 66 : 17

# வேத பாடம்

**ஆதி. 9 : 8-17 :**

நோவாவோடு தேவன் ஜலப்பிரளயத்தால் இனி பூமியை அழிப்பதில்லை என்ற உடன்படிக்கையை செய்கிருர். அதற்கு அடையாளமாக வானவில் தோன்றும் என்ருர். நோவாவோடு உடன்படிக்கை செய்த போது உயிருள்ள பிராணிகள் எல்லாவற்றேடும் தேவன் உடன் படிக்கை செய்தார். உடன்படிக்கைகளெல்லாம் தேவனுடைய கிருபையினல் தேவனே முன் வந்து செய்வதாகும். தேவனுடைய 'இரக்கம் ஒன்றே அதற்கு ஆதாரம்.

**ஆதி. 9 : 18-19 :**

நோவாவின் குமாரர்கள் சேம், காம், யாப்பேத் இவர்களால் பூமியில் மனுஷர்கள் பெருகத் தொடங்கினர்கள். பூமியெங்கும் ஜனங்கள் பரம்பினர்கள்.

ஆதி 9 : 20-23 :

நோவா விவசாயத்தில் ஈடுபட்டார். ஒருநாள் நோவா புளிப்புள்ள திராட்சரசம் குடித்து தன்னை மறந்து படுத்திருந்தார் அவருடைய வஸ்திரம் விலகியிருந்ததை காமும், கானானும் பார்த்தும் தன் தகப்பனுடைய நிர்வாணத்தை மறைக்காமல் போய் தன் சகோதரருக்கு அறிவித்தான். யாப்பேத்தும், சேமும் ஒரு வஸ்திரத்தை தங்கள் தோளின் மேல் போட்டுக் கொண்டு பின்னிட்டு வந்து தங்கள் தகப்பன் நிர்வாணத்தை மூடினார்கள்.

ஆதி. 9 : 24-27 :

வெறி தெளிந்து விழித்த நோவா தன் பிள்ளைகள் தனக்கு செய்ததை அறிந்து யாப்பேத்தையும், சேமையும் ஆசீர்வதித்து உயர்த்தினர். கானானை (காமின் குமாரனை) சபித்தார். அது அப்படியே ஆயிற்று; இந்த கானானியர்தான் இஸ்ரவேலர்களால் துரத்தப்பட்ட கானானின் குடிகள். "அன்பு திரளான பாவங்களை மூடும்" உன் தகப்பனுடைய பாவம் ஏதாவது உனக்கு தெரிய வந்தால் சகோதரருக்கும் தெரியாதே நீயே மூடிப்போடு. அதை அம்பலப்படுத்தி மகிழ்ச்சியடையலாம் என்று எண்ணுதே சாபம் வரும் கர்த்தர் அவர் பாவத்தை மூடுவார். (சங். 32 : 1; ரோம. 4 : 6-8). உன்னையும் உன் குடும்பத்தையுமே சாபம் தொடரும்.

ஆதி. 9 : 28, 29 :

நோவா தன்னுடைய தொள்ளாயிரத்து ஐம்பதாவது வயதில் மரித்தார்.

ஆதி. 10 : 1-10 :

காமுடைய பேரன் நிம்ரோத்தைப் பற்றி வாசிக்கிறோம். இவன் பலத்த பராக்கிரமசாலியாயிருந்தான என்று அறிகிறோம். இவன் பாபேல் என்னப்பட்ட பாபிலோனையும், அதைச்சேர்ந்த அநேக பட்டணங்களையும் கட்டி, அரசாட்சி செய்ததாக பார்க்கிறோம். விக்கிரக ஆராதனைக்கு பிறப்பிடமாக நிம்ரோதும் பாபேலும் இருந்ததாக தெரிகிறது.

ஆதி. 10 : 11, 12:

சேமுடைய குமாரன் ஆசூர் நினிவே, காலாகு, ரெகெபோத், ரேசேன் ஆகிய பட்டணங்களைக் கட்டினதாகப் பார்க்கிறோம்.

ஆதி. 11 : 1-9 :

பூமியெங்கும் ஒரே பாஷையும் ஒரே விதமான பேச்சும் இருந்தது. சிநேயார் தேசத்தில் கூடியிருந்தார்கள். ஆதலால் அவர்கள் ஒரே இடத்தில் தங்கவும், தங்களுக்கு பேர் உண்டாக வானத்தையளாவும் கோபுரம் ஒன்றை பெருமைக்காக கட்டவுமாரம்பித்தார்கள். மேலும் மனு மக்கள் தாங்கள் செய்ய நினைத்தது தடைபடாது; தங்களால் கூடாத காரியம் ஒன்றுமில்லை என்று நினைத்தார்கள். தேவன் ஒருவர் இருக்கிறார் என்பதை மறந்துவிட்ட ஜனங்கள் இவர்கள் இந்நாட்களிலும் சிலர் தாங்கள் திரளாயிருக்கிறதினால் தாங்கள் நினைத்ததை சாதித்து விடலாம் என்று நம்புகிறார்கள். நடந்தது என்ன? தேவன் அங்கே அவர்களுடைய பாஷையை தாறுமாறுக்கினார். குழப்பமுண்டாயிற்று. அந்தந்த பாஷை பேசுகிறவர்கள் ஒவ்வொரு கூட்டமாய் பிரிந்து பூமியெங்கும் ஜனங்கள் சிதறிப் போனார்கள். பாஷை கலாச்சாரத்தை உண்டாக்குகிறது. இந்த இடத்திற்கு பாபேல் (குழப்பம், தாறுமாறு) என்ற பெயர் உண்டாயிற்று. புதிய ஏற்பாட்டின் காலத்தில் தான் சிதறிப் போன மக்களின் பாஷையை தேவன் சுத்தமாக்குகிறார். இது

கிறிஸ்து இயேசுவின் நாமத்தில் பெந்தெகொஸ்து நாளில் நடந்தேற ஆரம்பித்துள்ளது—அப். 2 : 1—12. நீ கிறிஸ்து இயேசுவை விசுவாசித்து ஏற்றுக்கொண்டு, (ஞானஸ்நானம் பெற்று) பரிசுத்த ஆவியின் அபிஷேகம் பெற்று அந்நிய பாஷை பேசும் அநுபவத்திற்குள் வரும்போது தேவனோடும் மனிதனோடும் ஒப்புரவாகி உறவாடும் நிலை பெறுவாய்.

[தொடரும்]

" வேதமே வெளிச்சம். " நீதி. 6 : 23

# தேவன் அன்பாகவே இருக்கிறார்

(ஜனவரி '84 இதழின் தொடர்ச்சி)

இரண்டாவதாக ஒரு சகோதரனைப் போல் நம்மில் அன்பு கூருகிறார்.

"...இதினிமித்தம் அவர்களைச் சகோதரர் என்று சொல்ல அவர் வெட்கப்படவில்லை" எபி. 2 : 11 என்று வேதம் கூறுவதால் இவ்வுலகத்தில் பலர் தங்களுடைய சொந்த சகோதரர்களை, சகோதரர்கள் என்று அழைப்பதற்கு, வெளியரங்கமாய் கூறுவதற்கு வெட்கப்படுகிறார்கள் என்று பார்க்கிறோம். பணமும், பதவியும் அவர்களை அப்படி எண்ண வைக்கிறது.

நம்முடைய தேவனாகிய கர்த்தர் சர்வ உலகத்தையும் உண்டுபண்ணினவர், ஜோதிமயமானவர், மனிதனில் அன்பு கூர்ந்தபடியால் இந்த மனிதன் அவரை விரும்பாது போன போதிலும், அவர் அவனை விரும்பி பரலோகத்தின் அந்தஸ்தை விட்டுப் பூலோகத்திலுள்ள மனிதர்களோடு வாழ்ந்து, அவர்களுடைய துன்பங்களையும், இன்னல்களையும் போக்கி அவர்களுடைய கஷ்டங்களைத் தானே ஏற்றுக்கொண்டு, அவர்களைச் சமாதானமாய் வாழ வைக்க வேண்டும் என்பதற்காக அடிமையின் ரூபம் எடுத்து மனுஷ சாயல் ஆனார். (பிலி 2 : 6-8)

இந்த உலகத்தின் உடன் பிறப்புகள் பணமும், பதவியும் உயரும் போது தன்னுடைய உடன்பிறப்புகளைச் சொந்த சகோதரர்கள் என்று அழைக்க வெட்கப்படுகிறார்கள். ஆனால் நமது தேவன் நம்மைச் சகோதரர்களாக்கி கொள்வதற்காக தம்முடைய அந்தஸ்தை இழந்து நம்மைப் போல் ஏழையாகி, நம்மோடு கூட வாழவிரும்புகிறார். இந்த அன்பை நாம் உணராமற் போகிறோம். (ஏசா. 53 : 3,4).

சகோதரன் என்றால்— (சக+உதிரன்: ஒரே+இரத்தத்தை உடையவன்=சகோதரன்) ஒரே இரத்தத்தை உடையவன் என்பது பொருள். இவ்விதமாய் நாம் அவருக்குச் சகோதரர்களாக வேண்டும் என்பதற்காகவே, ஆவியாயிருந்த கர்த்தர் நமக்காக மாமிசமும், இரத்தமுமுடையவரானார். (எபி. 2 : 12-14) இவருடைய இரத்தத்தினால் தூரமாயிருந்த நாம் இவருக்கு உறவினர்களாக, இவரோடுள்ள சகல ஐசுவரியத்திற்கும் பங்காளிகளாகும்படி சமீபமாகிவிடுகிறோம். (எபே. 2:12, 13).

இறைவனுடைய அன்பைப்பாருங்கள். இவ்வுலகத்தின் சகோதரர்கள், தங்களுக்கு ஐசுவரியம் இருந்தாலும், தங்கள் சொந்த சகோதரர்களுடைய ஆஸ்திகளையும் அபகரிக்க நினைக்கும் பொழுது இறைவனாகிய ஆண்டவர் தம்முடைய அனைத்து சுதந்தரத்திலும் நாம் பங்கடைய வேண்டும் என்று விரும்பி, நம்மைத் தம்முடைய சகோதரர்கள் என்று நம்மை அழைக்கிறார். தேவனுடைய சுதந்தரரும், கிறிஸ்துவுக்கு உடன் சுதந்தரருமாமே, (ரோம.8 : 17) நாம் பிதாவாகிய தேவனுடைய பிள்ளைகளாகும் பொழுது இப்படியாகிறது. "நாம் தேவனுடைய பிள்ளைகளாயிருக்கிறோமென்று ஆவியானவர்தாமே

நம்முடைய ஆவியோடுகூட சாட்சி கொடுக்கிறார். (ரோம.8 : 16)

மூன்றாவதாக ஒரு மணவாளனைப்போல் நம்மில் அன்பு கூருகிறார்.

"என் சகோதரியே! என் மணவாளியே!! திராட்சரசத்தைப் பார்க்கிலும் உன் நேசம் எவ்வளவு மதுரமாயிருக்கிறது !!!..." உன் 4 : 10.

இந்த உலகத்திலுள்ள ஒரு மணவாளன் தன் மணவாட்டியினிடம் அன்பு கூருவது போல், தன் மணவாட்டியின் அன்பை வர்ணிப்பது போல் இறைவனாகிய ஆண்டவரும் நமது மீது அன்பு கூருகிறார் நாம் அவர்மேல் வைத்திருக்கும் அன்பில் களிகூருகிறார் என்று பார்க்கிறோம்.

ஆதியிலே வானத்தையும், பூமியையும் சர்வசிருஷ்டிகளையும் படைத்த ஆண்டவர், தம்முடைய சாயலில் மனிதனைப் படைத்தார் என்பதாக வேதத்தில் பார்க்கிறோம்.

இவ்விதமாக உலகிலுள்ளயாவும் மனிதனுக்காக இறைவன் படைத்திருந்த போதிலும் இவைகளெல்லாம் அந்த மனிதனுக்கு ஏற்ற துணையாக காணப்படவில்லை. ஆகையால் அவனுக்கு ஏற்ற துணையாக இருப்பதற்காக ஒரு துணைவியை (அல்லது ஒரு மணவாட்டியை) தேவன் உண்டு பண்ணினார் என்று பார்க்கிறோம். (ஆதி.2 : 18-23).

இப்படியே பிதாவாகிய தேவனும் தம்முடைய குமாரனாகிய இயேசு கிறிஸ்துவுக்கு இந்த பூவுலகில் ஒரு மணவாட்டியை உருவாக்கியுள்ளார் என்று வேதம் கூறுகிறது. ஆதாமுக்கு அயர்ந்த நித்திரையை வரச்செய்து ஆதாமின் விலாவிலிருந்து ஏவாளை உண்டு பண்ணினது போல், பிதாவாகிய தேவனும் தம்முடைய குமாரனாகிய இயேசு கிறிஸ்துவை சிலுவையில் தொங்கவைத்து அவருடைய விலாவைப்பிளந்து அங்கிருந்து ஒரு மண வாட்டியை ஆயத்தம் செய்துள்ளார். அதாவது அவருடைய விலாவிலிருந்து பாய்ந்த இரத்தத்தால் கழுவப்பட்ட திருச்சபையாக அதை குமாரனுக்கு முன் நிறுத்தியுள்ளார். -எபே 2 : 13 ; 5 : 26, 27.

ஆதாமின் விலாவிலிருந்து ஏவாள் தோன்றினபடியால் ஒரே மாமிசமாகி விடுகிறாள் (ஆதி. 2 : 24), அதுபோல இறைவனின் இரத்தத்தால் மீட்கப்பட்டவர்கள், இயேசு கிறிஸ்துவின் மாமிசத்திற்கும், எலும்புக்கும் உரியவர்களாகி இவ்விதமாய் நாமும் அவருடைய மணவாட்டிகளாகிறோம் எபே.5 : 30 இப்படியே புருஷர்களும் தங்கள் மனைவிகளைத் தங்களுடைய சொந்த சரீரங்களாகப் பாவித்து அவர்களில் அன்பு கூருவது போல் இறைவனும் தமது சபையில் அன்பு கூறுகிறார்.

இவ்விதமான இறை அன்புக்குள் சேர்க்கப்பட்டிருக்கும் மக்கள், தங்களுடைய ஆத்மமணவாளனுடைய] அழகையும், அந்தஸ்த்தையும் எண்ணி, எண்ணி அகமகிழ்வதோடு பிறரிடமும் அவருடைய அழகையும் அந்தஸ்த்தையும் வர்ணித்துச் சொல்லாமல் இருக்கமாட்டார்கள்.

ஆதாமுக்கு ஏற்ற துணையாக ஏவாளைப் படைத்த ஆண்டவர், நம்மையும் அவருக்கு மணவாட்டிகளாக ஏற்றுக்கொண்டு, நம்மில் அன்பு கூறுகிறார். அவருடைய அனைத்து செல்வத்தையும் நமக்காக கையளித்து நம்முடைய அன்பில் களிகூற அவர் விரும்புகிறார். உன் நேசருடைய அன்புக்கு பாத்திரமாய் நடந்து கொள். அவர் உன்னில் அன்பு கூறுகிறார் "தேவன் அன்பாகவேஇருக்கிறார். நீ நேசிக்கிறாயா? எபே 6 : 24.

---

"தேவன் அன்பாகவே இருக்கிறார்"
Iயோவா 4 : 8

---

பாலர் பகுதி

# மனம் திரும்பிய வில்லியம்

சமாதானபுரம் என்ற ஊரில் மத்தேயு என்பவருக்கு வில்லியம் என்ற ஒரு மகன் பிறந்தான். கிறிஸ்தவனாக பிறந்து, அவ்வூரில் தானே படித்து வந்தான். பள்ளி படிப்பிலும் விளையாட்டுத் துறையிலும், விசேஷமாக பாடல் துறையிலும் மாவட்டத்தில் முதல்வனாக திகழ்ந்து வந்தான். காரணம், அவனது ஊரில் நடந்து வந்த Sunday Class-ல் தவறாமல் கலந்து கொள்வதால் தான். அங்கு சொல்லிக் கொடுத்த சங்கீதங்களின் இனிமை தாவீது ராஜாவின் சங்கீதம் இவைகள் எல்லாம் வில்லியமை சங்கீத கலையில் முன்னேறத் தூண்டியது. தேவனாகிய கர்த்தரை நான் எப்பொழுதும் சங்கீதத்தினால் புகழுவேன் என்ற அறிவுரை அவனை அதிகமாக சங்கீத கலையில் தூண்டியது. அவனது பள்ளி வாழ்க்கையில் அவன் பாடிய எல்லாப் பாட்டுகளும் எல்லோரையும் மகிழச்செய்தது. அவன் பாடிய பாடல்களெல்லாம் இயேசு சுவாமியைப் பற்றியது வில்லியம் பாடல்கள் இல்லாமல் விஷேச கூட்டங்கள் நடப்பது இல்லை. எல்லா நிகழ்ச்சிகளிலும் வில்லியம் தேவனை புகழ்ந்து பாடி பரிசுகளை பெற்றுவந்தான் பள்ளிப்படிப்பு முடிந்து, பெரியவனாகி மேற்படிப்பும் முடிந்தது. பட்டணம் வந்தான் பாடும் திறமை இருந்தபடியால் தேவனை மறந்து, சினிமாத்துறையில் நுழைந்து பணம் சம்பாதிக்க ஆரம்பித்தான். சினிமா பாடல்களை பாடி அவற்றிலும் மேன்மையானான உலகம் அவனுக்குள்ளும், அவன் உலகத்திற்குள்ளும் புகுந்து ஒன்றாகி விட்டான். அவனது தயவில் கிராமத்தில் வாழ்ந்து வந்த பெற்றோர் ஒரிருதடவை கடிதம்மூலம் நினைப்பூட்டினார்கள். உனக்கு கிடைததுள்ள பாடல் வரம் தேவனைப்பாட; தேவன் கொடுத்த கிருபை வரத்தை நீ மறந்து உலகப் பாடல்களை பாடுவது நல்லது அல்லஎன்று. ஆனால் வில்லியம் இவற்றிற்கெல்லாம் அசைந்து கொடுக்கவில்லை, அவன் உலக சிற்றின்பத்திற்குள் புகுந்த படியால் பாவம் செய்து சாபத்தை வாங்கி கொண்டான். தொண்டையில் புற்றுநோய் உண்டாகி சாப்பாடுக்கூட சாப்பிடமுடியாத நிலை ஏற்பட்டு உணவுகள் எல்லாம் மூக்கின் வழியாக டியூப் மூலம் கொடுக்க நேர்ந்தது. அப்பொழுது அவன் செய்த பாவங்களும், தவறுகளும் அவன் முன்னே நின்றது.

தன் பெற்றோர் கெஞ்சி கடிதம் எழுதிய நல்வார்த்தைகள் அவனைக் குத்தியது. உடனே அவனது பெற்றோர்களை ஊரிலிருந்து வரவழைத்தான். பெற்றோர்களும் வந்தார்கள் முதலாவது பெற்றோர்களிடம் மன்னிப்பு கேட்டான். அவர்களது அறிவுரைகளை ஏற்கமறுத்ததால்அப்பாவிடம் நீங்கள் ஒரு உண்மையான தேவனுடைய ஊழியரை அழைத்து வாருங்கள் என துரிதபபடுத்தினான். தேவ ஊழியர் வந்ததும் ஐயா, நான் தேவனுக்கு விரோதமாக பாவம்செய்து விட்டேன். தேவன் எனக்கு கொடுத்த பாடல் வரத்தை இயேசு சுவாமியை புகழ்ந்து பாடுவதை விட்டு விட்டு, சாத்தானையும், உலகத்தையும் குறித்துப் பாடினேன். பாவம் செய்தேன். எனக்கு கொடுக்கப்பட்டிருக்கும் தண்டனை பெரிது. தயவு செய்து தேவன் என்னை மன்னிக்கும் படிக்கு எனக்காக தேவனிடம் ஜெபம் செய்யுங்கள் என்றான். தேவ ஊழியரும் ஜெபித்தார்கள். நாட்கள் சில சென்றன. வியாதிகள் குணமாக புற்று நோயும் ஆச்சரியப்படத்தக்கதாய் மறைந்து விட்டது. மீண்டும் வில்லியம் தன்னை பலப்படுத்திப்பாட ஆரம்பித்தான், தேவனைப் பாடினான். தேவன் ஒருவர் தவிர வேறு எவரையும் பாடமாட்டேன் என்றான். அதனால் வருமானம் குறைந்தது. ஆனாலும் தேவனைப்பற்றி மட்டும் பாடல்களை பாடினான். சிறிது காலத்திற்குப்பின் தேவன் அவனை உயர்த்தினார். கடைசியில் ''உலக பிரகதி பெற்ற கிறிஸ்துவ பாடகர்'' என்ற பெயரை வில்லியம் பெற்றான்.

பிள்ளைகளே, நாமும் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவையே புகழ்ந்து பாடுவோம். அவர் ஒருவருக்கே நம் துதிகளை ஏறெடுப்போம்.

---

"என் ஜீவனுள்ளமட்டும் நான் உம்மைத் துதித்து, உமது நாமத்தைச் சொல்லிக் கையெடுப்பேன்" **(சங் 63 : 4).**

---

மாதர் பகுதி

# லோத்தின் மனைவி

லோத்து விசுவாசிகளின் தகப்பனுகிய ஆபிரகாமின் சகோதரன் மகன். ஆபிரகாமுக்கு தன் தேசத்தையும், இனத்தையும், சொந்தஊரையும் விட்டு புறப்பட்டு போகும் படியான தேவ அழைப்பு வந்தபோது, ஆபிரகாம் புறப்பட்டு தேவன் தனக்கு காண்பிக்கும் தேசத்திற்கு பயணமானர். கூட லோத்தும் தன் குடும்பத்தோடு புறப்பட்டுச் சென்ருர். நல்ல காரியம்தான் தேவ அழைப்பு பெற்ற ஆபிரகாமோடு புறப்பட்டு தன் சொந்தம், பந்தங்களை விட்டு புறப்பட்ட லோத்து சுயநல நோக்கமுடையவராகவும், பொருளாசையுடையவராகவும் காணப்பட்டார். இதற்கு தூண்டுகோலாயிருந்தாள் லோத்தின் மனைவி. இவர்களுக்கு இரண்டு பெண் பிள்ளைகள் இருந்தனர். ஆபிரகாமோடு சேர்ந்து இவர்கள் எகிப்துக்கும் போய் திரும்பி வந்து பெத்தேலுக்கும் ஆயிக்கும் நடுவே முன் ஒரு சமயம் தங்கியிருந்த இடத்தில் வந்து கூடாரம் போட்டு தங்கினர்கள். ஆபிரகாமைப் போல் லோத்துக்கும் ஆடு, மாடு மந்தைகள் உண்டாயிருந்தது. அவர்கள் இருந்த இடம் நெருக்கமாயிருந்த படியினலும் ஆபிராகாமுடைய மந்தை மேய்ப்பர்களுக்கும், லோத்தின் மந்தை மேய்ப்பர்களுக்கும் ஆடு, மாடுகள் மேய்க்கும் விஷயத்தில் அடிக்கடி வாக்கு வாதங்கள் உண்டாயிற்று. அப்பொழுது ஆபிரகாம் லோத்தை அழைத்து நாம் குடியிருக்கிற இடம் போதவில்லை; நாம் சகோதரர் நமக்குள் வாக்கு வாதம் வேண்டாம். நீ பிரிந்து வேறு இடத்தில் போய் தங்கு. நீ வலப்புறம் போனல் நான் இடப்பக்கம் போகிறேன். நீ இடது பக்கம் போனல் நான் வலது பக்கம் போகிறேன் என்ருர். லோத்து ஆபிரகாமிடம் சொல்லிருக்கலாம் நீர் முதலாவது தெரிந்தெடுத்த பின் நான் மற்ற இடத்திற்கு போகிறேன் என்ரே அல்லது நீர் சொல்லும் இடத்திற்கு போகிறேன் என்ரே சொல்லியிருக்கலாம். ஆனல் பொருளாசைக்காரனகிய லோத்து சோதோம், கொமோரா பட்டணங்களின் பக்கம் செழிப்பிருக்கிறதைக் கண்டு சோதோம், கொமோராவின் புறம் போய் தங்க தீர்மானித்தார்.

சோதோம், கொமோரா பட்டணத்தின் மக்களோ கர்த்தருக்கு முன்பாக மகாபாவிகளாயிருந்தனர் (ஆதி. 13 : 8–13). லோத்து பிழைப்புக்கு வசதி தேட ஆரம்பித்து சோதோமுக்கு முன்பாக கூடாரம் போட்டார் (ஆதி. 13 : 12) — பின்பு பார்க்கிரேம் லோத்து சோதோமுக்குள் குடியேறினதாய்ப் பார்க்கிரேம்(ஆதி. 19 : 1–3).

சோதோமின் பெரிய மனிதர்களில் ஒருவராகி விட்டதாக அறிகிரேம். சோதோமின் ஒலிமுகவாசலில் அமர்ந்து வழக்கு வாதுகளைத் தீர்க்கும் ஒரு நபராய் ஆகிவிட்டதாக பார்க்கிரேம் (ஆதி. 19 : 1–3). தன் குடும்பத்தின் ஆத்தும நிலையைப் பற்றியோ, ஒழுக்கத்தைப் பற்றியோ, லோத்தோ, லோத்தின் மனைவியோ கவலைப்படவில்லை. தேவன் சோதோம் கொமோராவைக் அக்கினியினலும்,கந்தகத்தினலும் எரித்துஅழிக்க இறங்கி வந்தார். தேவ பக்தியுள்ள ஆபிரகாமினிமித்தம் கர்த்தர் லோத்தையும், லோத்தின் குடும்பத்தையும் கையைப் பிடித்து பட்டணத்தை விட்டு வெளியே அழைத்து ஜீவன் தப்ப ஓடிப்போ,இந்தசமபூமியிலெங்கும் நில்லாதே என கட்டளையிட்டும்,சுகபோகமாய் வாழ்ந்த லோத்தின் மனைவிக்கு ஆடு, மாடுகள், வீடு வாசல், சொத்து சுகங்களை [சுகபோகங்கள்] விட்டு விட்டுப் போகிரேமே என்று ஏங்கி திரும்பிப்பார்த்து உப்புத்தூண் ஆகி நிற்கிருள். ஆதி. 19 : 26. இந்தக் கடைசி காலத்தில் லோத்தின் மனைவியை நினைத்துக் கொள்ளுங்கள் என்று இயேசு நாதர் சொன்னதை நினைத்துக் கொள்ளுங்கள்— லூக்கா 17 : 32.

இருதயத்திலிருந்து உலக நேசமும், டாம்பீகமும், பெருமையும் நீங்காமல் இருக்குமானல் தேவன் உங்களுக்கு இரங்கி இரட்சிப்பு அருள முன்வந்தாலும் உங்கள் உலக நேசமும், சுகபோக வாழ்க்கையின் மேலுள்ளபற்றும் திரும்பி பார்க்கச் செய்து உங்

திருப்பாய் என்றெல்லாம் பலர் கூறினதும், என் துணைவியின் உள்ளத்தில் ஒரு பெரிய மாற்றத்தை தேவன் உருவாக்கினர். இனி என் துணைவரோடு நானும் அந்த சபைக்குச் சென்று அந்த மக்களோடு சேர்ந்து தேவனை ஆராதிக்க வேண்டும் என்று தீர்மானித்து, தன்னுடைய விருப்பத்தை என்னிடம் கூறினாள். எனக்கு இருந்த மகிழ்ச்சிக்கு அளவே கிடையாது. இப்பொழுது என் துணைவியும் மனந்திரும்பி, பாவமன்னிப்புக்கென்று ஞானஸ்நானம் பெற்று, பரிசுத்தாவியின் அபிஷேகமும் பெற்றுக் கொண்டாள். நாங்கள் இப்பொழுது அப்போஸ்தலருடைய உபதேசத்திலும், அந்நியோந்நியத்திலும், அப்பம் பிட்குதலிலும், ஜெபம் பண்ணுதலிலும் உறுதியாய் தரித்திருக்கிறோம்.

"பிழைத்திருக்கிறவர்கள் இனி தங்களுக்கென்று பிழைத்திராமல், தங்களுக்காகமரித்து எழுந்தவருக்கென்று பிழைத்திருக்க வேண்டும்" (IIகொரி. 5 : 15) என்ற வேதவாக்கியத்தின்படி இறைவனுக்காகவே வாழவேண்டும் என்று தீர்மானித்து, வாழ்ந்து வருகிறோம். தேவன் எங்களை முடிவு வரைக்கும் காத்துக் கொள்வாராக.

BRO. ஜெயபாண்டி
புதிய எருசலேம் சபை, மகிழ்ச்சிபுரம்.

---

"...நான் விசுவாசித்திருக்கிறவர் இன்னார் என்று அறிவேன்..."—IIதீமோ. 1 : 12

---

# SIN AND SALVATION

(Cont. of previous issue)

Sin can be divided under two categories such as sin by nature and sin by deeds. Man has instinct to sin from birth itself. A new born child has an inclination towards evil rather then good instead of being balanced. This is the sin by nature and from this develops sin by deeds. Sinful nature is inherited through Adam and by this temptations occur. The environment like movies, immoral books, evil friends and the attitude of neighbours instigate men to sin. Man's selfwill is the instrument for committing such sin and satan is the agent of it. Man cannot save himself because his nature itself is defiled.

The inner motive of religious lie in its selfishness and self righteousness. This is clear from the writtings of religious leaders and the purpose of many great movements. But these leaders hide their self motive act as if they do good to people tempting them to commit error.

For instance, Apostle Paul preached against idolatry in Ephesus. There was a man named Demetrius, a silversmith, who made silver shrines for Diana, brought much gain to the craftsman. When he saw his business failing since people forsook the idol worship, after hearing Paul's teaching, he started one religious uproar, gathering the workmen of like occupation. But you know what he did? He instigated the people to cry "Great is Diana of the Ephesians", and there was a big uproar (Acts 19 : 23-41). Hence we could understand there lies selfishness and sin in any so called good efforts of men. All religious activities lead the people to self righteousness causing them to be proud, not helping them to be redeemed neither from sin nor from the power of satan. Hence man making efforts to be delivered from sin itself is sin, because it denies the love of GOD. Since there is sin in man's nature itself, he cannot be redeemed by himself.

As we told earlier, only the true GOD can deliver man and he should also co-operate with Him. He must not make excuses for committing sin, nor putting blame on others or the circumstances. He most admit that he is a sinner and confess and for sake it. Until a man admit sin as sin, he can not have repentance heart and mind to leave it. Law gives us knowledge of sin. Without law we will not know what is sin. GOD alone gives the law and excepting Him, there is no body else is eligible to give the law. In the law of truth (Bible) we could see the law of GOD. Sin is the transgression of the law.

---

**They that sanctify themselves shall be consumed, saith the LORD.**

**— Isaiah 66 : 17.**

# புதிய எருசலேம் செய்தி

எக்காள சத்தம்-4 ● ஏப்ரல் 1984




''...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ, நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள்.... விழித்திருங்கள்...உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லோருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்...''

மாற்கு 13 : 35-37

**EDITOR: CHIEF PASTOR N. LAZAR**

BOMBAY, INDIA

# பரிசுத்த ஆவியின் அபிஷேகமும் நிரப்புதலும்

பரிசுத்த ஆவியானவரை ஒவ்வொருவரும் பெற்றுக்கொள்ள வேண்டும், ஏற்றுக்கொள்ள வேண்டும் இது இறை மக்களுக்கு தேவன் அருளும் மகா பெரிய சிலாக்கியமாகும். புதிய ஏற்பாட்டில் பரிசுத்த ஆவியைப் பெற்றுக்கொள்ளும் அநுபவத்திற்கு அபிஷேகம் என்று பெயர் கொடுக்கப்பட்டுள்ளது.
— II கொரி. 1 : 21, 22; I யோவா. 2 : 20, 27.

பழைய ஏற்பாட்டில் அபிஷேகம் பெற்றோர் என்றால் எண்ணெயால் (அபிஷேகத் தைலம்) அபிஷேகிக்கப் பட்டவர்களாகும். எண்ணெய் பரிசுத்தஆவிக்கு அடையாளமாயிருக்கிறது. தீர்க்கதரிசிகள், ராஜாக்கள், ஆசாரியர்கள் முதலியோர் எண்ணெயால் அபிஷேகிக்கப்பட்டார்கள் (உ-ம்) ஆரோன் (லேவி. 8 : 12), சவுல் (I சாமு. 9 : 27 ; 10 : 1), தாவீது (I சாமு. 16 : 12 , 13), எலிசா (I இரா. 19 : 16), சாலொமோன் (I இரா. 1 : 39) இவ்வித அபிஷேகம் பெற்றவர்கள் தேவனுடைய பரிசுத்தர்கள் என்றெண்ணப்பட்டார்கள். இவர்களைக் கொலை செய்வது மகா பாதகம் (மகா பாவம்) என்று கருதப்பட்டது.

தாவீது அரசன் சவுலைக்குறித்து சொன்னதைக் கவனிக்க : ''அவன் தன் மனுஷரைப் பார்த்து கர்த்தர் அபிஷேகம் பண்ணின என் ஆண்டவன்மேல் என்கையைப் போடும்படியான இப்படிப்பட்ட காரியத்தை நான் செய்யாதபடிக்கு, கர்த்தர் என்னைக் காப்பாராக; அவர் கர்த்தரால் அபிஷேகம் பண்ணப்பட்டவர் என்று சொல்லி, தன் மனுஷரைச் சவுலின் மேல் எழும்பவொட்டாமல் இவ் வார்த்தைகளினால் அவர்களைத்தடைபண்ணினான்'' (I சாமு. 24 : 6,7) இவ்விதமாய் பரிசுத்த ஆவியைப் பெற்றவர்களெல்லாரும் தேவனுடைய பரிசுத்தர்களாகும்.

பரிசுத்த ஆவியானவர் ஒருவர்மேல் இறங்குவதும் நிரப்புவதின் நோக்கம் என்ன? அவர்களுக்கு தேவன்கொடுத்த பொறுப்பை, பணியை நிறைவேற்றவே பரிசுத்த ஆவியானவர் அருளப்படுகிறார் அல்லது நிரப்புகிறார். மோசேக்கு உதவியாக 70 மூப்பர்களை தேவன் தெரிந்தெடுத்து கூடாரத்தின் முன் மோசேயோடு கூட நிறுத்தும்படி கட்டளையிட்டு அவர்களை ஆவியினால் நிரப்பினார். எதற்காக? மோசேயோடு கூட சேர்ந்து இஸ்ரவேல் ஜனங்களின் பாரங்களைச் சுமக்கும்படியாக மோசேக்கு உதவியாக ஊழியம் செய்யும்படியாகவே தேவன் ஆவியை அருளினார் (எண்ணா. 11 : 16-26). தலைமை வகிக்கும்படியாகவல்ல; மோசேக்கு உதவிக்காரராயிருக்கும்படிக்கே பரிசுத்த ஆவியானவர் அருளப்பட்டார். மோசேக்குப் பின் யோசுவாவை அதிகாரப்படுத்தினதும் ஆவியினால் நிரப்பினதும் மோசேக்குப் பின் தலைமை வகிக்கும்படி சபையை நடத்தும்படியாகும். (உபா. 34 : 9)

தாவீதுக்கு உதவி செய்யும்படி பென்யமீன் புத்திரரிலும், யூதா புத்திரரிலும் சிலர் அரணான இடத்திலிருக்கிற தாவீதினிடத்தில் வந்தார்கள். தாவீது எதிர்கொண்டு போய் சமாதானமாய் வருகிறீர்களா? என்னை என் சத்துருக்களுக்கு காட்டிக் கொடுக்க வந்தீர்களா? என்று கேட்டபோது ''அப்பொழுது அதிபதிகளுக்கு தலைவனான அமாசாயின் மேல் ஆவி இறங்கினதினால், அவன் : தாவீதே, நாங்கள் உம்முடையவர்கள்; ஈசாயின் குமாரனே, நாங்கள் உமது பட்சத்திலிருப்போம்; உமக்குச் சமாதானம், சமாதானம்; உமக்கு உதவி செய்கிறவர்களுக்குச் சமாதானம்; உம்முடைய தேவன் உமக்குத் துணை நிற்கிறார் என்றான்''—I நாளா. 12 : 16-18. இங்கே ஆவியானவர் இறங்கியது தேவனுடைய மனிதனாகிய தாவீதுக்கு உதவி செய்யும்படிக்கே, உதவிக்காரராயிருக்கும்படிக்கே, அப்படியே புதிய ஏற்பாட்டிலும் பரிசுத்த ஆவியானவர் ஒவ்வொருவரையும் ஆட்கொள்ளுவதும், நிரப்புவதும் அவரவர் பணியைத் திறம்பட செய்வதற்கே பரிசுத்த ஆவியானவர் ஒவ்வொருவரையும் நிரப்புகிறாரேயொழிய தலைக்குத் தலை அதிகாரம் பண்ணுவதற்கும், உபதேசம் பண்ணுவதற்குமல்ல. இதை அறியாமல் சிலர் ஆவி வந்துவிட்டது என்று சொல்லி அடங்கியிருக்க விரும்பாமல் பெருமைக்கு இடங்கொடுத்து கீழ்ப்படிய மனமில்லாமல், தங்களுடைய அழைப்பு இன்னதென்று

அறியாமல், தங்களுக்கு உண்டாகும் பேய் களுக்களை அல்லது நினைவுகளை ஆதாரமாகக் கொண்டு திருவசனத்துக்குக்கீழ்ப்படியாமல், வசனத்துக்கு மாருய் நடக்கவும், போதிக்க வும், ஊழியம் என்று எதை எதையோ செய் யவும், உபதேசிக்கவும், கூட்டங்கள் நடத் தவும் ஆரம்பித்துவிடுகின்றனர் திருவசனத் துக்குக் கீழ்ப்படியாதவைகளெல்லாம் அவை கள் தீர்க்கதரிசனம் சொன்னுலும், பிரசங் கம் பண்ணினுலும், அற்புத அடையாளங் கள் செய்தாலும் அசுத்த ஆவிகளே; பரிசுத்த ஆவியானவர் அல்ல (உ-ம்.) ஒரு கூட்டம் நடத்தும் ஸ்திரீ தீர்க்கதரிசனமென்று குறி சொல்லுகிருள். எப்படியென்ருல் "என் பிள்ளைகளே நான் உங்களை என் இரத்தத்தி னுல் ஸ்நானம்பண்ணியிருக்க, யார் உங்களை முழுகிஞானஸ்நானம் எடுக்கச் சொன்னது" என்று இப்படி அநேக உளறல்கள் திருவசனத்துக்கு மாருய் கிறிஸ்தவர்களுக் குள் பரம்பிவருகிறது. இன்னெரு பெண் சொல்லுகிருள் : பிள்ளைகளே, தாய்சபையை விட்டு விடாதிருங்கள் என்று. எது தாய் சபை? இன்னெரு மனிதன் பிரசங்கிக்கிருன் (உரைக்கிருன்) : அந்த ஊழியக்காரன் நம்ம ......ஜாதியல்ல. அங்கே போகாதே என்று இப்படி பல உதாரணங்களைக் கூற முடியும். ஆனுல் சத்திய வசனமோ நீங்கள் ஒவ்வொரு வரும் மனந்திரும்பி பாவமன்னிப்புக்கென்று இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் ஞானஸ்நா னம் பெற்றுக்கொள்ளுங்கள். (அப். 2 : 38) என்றும், ஞானஸ்நானம் என்பது முழுக்கே, தெளிப்பல்ல வென்பதை தெளிவாக "தாம் அதை திருவசனத்தைக் கொண்டு தண்ணீர் முழுக்கினுல் சுத்திகரித்து" (எபே. 5 : 26) என்றும், "அன்றியும் நீ பாலியத்துக்குரிய இச்சைகளுக்கு விலகி சுத்த இருதயத்தோடு தேவனைத் தொழுது கொள்ளுகிறவர்களு டனே நீதியையும், விசுவாசத்தையும், அன் பையும், சமாதானத்தையும், அடையும்படி நாடு" (II தீமோ 2 : 22). பிதாவானவர் தம் மைத் தொழுது கொள்ளுகிறவர்கள் ஆவி யோடும் (பரிசுத்த ஆவியோடு) உண்மை யோடும் (ஜீவியத்தில் உண்மை) தொழுது கொள்ள வேண்டும். தேவன் ஆவியாயிருக் கிருர் (யோவா 4 : 24) என்றும், திருவசனம் உரைக்கிறது. இதற்கு மாருய் கள்ள ஆவி கள் தீர்க்கதரிசனம், ஆலோசனை, பிரசங்கம் செய்கின்றன. இவைகள் அசுத்த ஆவிக ளாகும்.

ஒரு முறை பரிசுத்த ஆவியானவர் அப்போஸ்தலர்களை, பரிசுத்த சீஷர்களை ஆட்கொண்டு எழுதப்பட்ட வேதவாக்கியத் திற்கு மாருய் பின்னெருவரிலிருந்து பரிசுத்த ஆவியானவர் பேச மாட்டார். அப்படிப் பேசுவதெல்லாம் அசுத்த ஆவிகளின் கூட் டங்களாகும். தேவனுடைய திட்டம், தீர்மானம், நடபடிகளுக்கு மாருய் தேவன் ஒருபோதும் கிரியை செய்யமாட்டார்.

"உங்களுக்கு உண்டான அழைப் பினுலே நீங்கள் ஒரே நம்பிக்கைக்கு அழைக் கப்பட்டது போல, ஒரே சரீரமும், ஒரே ஆவியும் உண்டு; ஒரே கர்த்தரும், ஒரே விசுவாசமும், ஒரே ஞானஸ்நானமும்," (எபேசி. 4 : 4, 5) உண்டு.

யார் எந்தக் காட்சிக் கண்டாலும் சரி, சொப்பனம்கண்டாலும் சரி, பரவசமானுலும் சரி, தேவதூதனே வந்து சொன்னுலும் சரி, கிறிஸ்து இயேசு போன்ற உருவமைப்புள்ள உருவம் பேசினுலும் சரி, அசரீரி (சத்தம்) கேட்டாலும் சரி, திருவசனமாகிய (சத்திய வேதம்—Bible) சத்திய எழுத்தாகிய உரை கல்லினுல் உரசிப் பார்க்கவேண்டும். ஒத்து வராதவைகளையெல்லாம் தள்ளிப் போடு வோம் (தள்ளிப் போடலாம்). நீ ஆவி பெற் றிருக்கலாம் அல்லது பெற்றிருக்கிறதாக எண்ணிக் கொண்டிருக்கலாம், உன் ஆவி யைக் குறித்து எச்சரிக்கையாயிரு.

பரிசுத்த ஆவியான ஆவியானவர் விசு வாசியில் விசுவாசியாகவும்; மூப்பனில் மூப்ப னுகவும், சுவிசேஷகனில் சுவிசேஷகனுகவும், போதகனில் போதகனுகவும்; மேய்ப்பனில் மேய்ப்பனுகவும், தீர்க்கதரிசியில் தீர்க்கதரிசி யாகவும், அப்போஸ்தலனில் அப்போஸ்தல னுகவும் இருக்கிருர். நீ யார்? இதை அறியா மல் உன்னிலிருந்து ஆவி பேசுவதுதான் சரியென்று இருமாப்படைந்து பிசாசுவிழுந்த ஆக்கினையில் விழுந்துவிடாதே. எல்லாரும் அப்போஸ்தலர்களா? எல்லாரும் தீர்க்க தரிசிகளா? எல்லாரும் போதகர்களா? (I கொரி. 12 : 29) இல்லை. ஆதலால் தேவன் வானத்திலிருக்கிருர், நீ பூமியில் இருக்கிருய்; உன் வார்த்தைகளைக் குறித்து

எச்சரிக்கையாயிரு (பிரசங். 5 : 2). "நீ பேசும் ஒவ்வொரு வார்த்தையைக் குறித்தும் நியாயத் தீர்ப்பின் நாளிலே கணக்கொப்புவிக்க வேண்டும்..." (மத். 12 : 36) நீ தேவனுடைய பரிசுத்த ஆவியை உடையவனா? இல்லையென்றால் பரிசுத்த ஆவியின் அபிஷேகத்தைப் பெற்றுக்கொண்டு ஆவியில் வளர்ச்சியடைவாயாக.

"தீர்க்கதரிசிகளுடைய ஆவிகள் தீர்க்கதரிசிகளுக்கு அடங்கியிருக்கிறதே".
—I கொரி. 14 : 32.

**சுவிஷேசம்**

# பாவமும் இரட்சிப்பும்

(மார்ச் மாத தொடர்ச்சி)

நியாயப்பிரமாணம், கற்பனை நல்லது தான் என்று ஒத்துக்கொள்ளும் மனிதன்கூட அதைமீறுகிறன். ஆக மனிதன்தான் விரும்புகிற நன்மையைக்காட்டிலும் தான் விரும்பாத தீமையையே அதிகம் செய்கிறன்.

இதிலிருந்து மனிதனை விடுவிப்பது யார்? இவ்விதமாக மனிதன் தேவப் பிரமாணத்தை மீறினபடியால் தேவன் தன்னைப் பகைக்கிறர் நாம் தேவனண்டை போக முடியாது என்று எண்ணுகிறன். ஒன்று அவன் பாவத்தை வெறுத்து விட்டுவிடப் பிரயாசப்படுகிறன். அல்லது விரக்தியடைந்து சோர்ந்து தன்னை மாய்த்துக் கொள்கிறன். அல்லது பாவத்தைப் பாவம் என்று எண்ணமல் துணிகரம் கொண்டு துணிந்து பாவம் செய்து பாவத்திற்கு அடிமையாகி பாவத்தின் பலனகிய சாபத்தையும் ஆக்கினையையும் முடிவில் நித்திய நரகத்தையும் அடைந்து வாழ வேண்டுமென சிருஷ்டிக்கப்பட்ட மனிதன் அழிந்து போகிறன்.

தேவன் பரிசுத்தர் ஆதலால் பாவத்தை வெறுக்கிறர். அவர் பாவத்தைவெறுத்தாலும் பாவியை நேசிக்கிறர். பாவியாகிய மனிதன் தேவனை அணுக தேவன் பலிமுறையை நியமித்தார். இரத்தம் சிந்துதலினல் பாவமன்னிப்பு, தேவ ஐக்யம், தேவ ஆசீர்வாதம் கிடைக்கும் என்று பழைய ஏற்பாடு போதிக்கிறது. ஆனல் இவைகளினலும் மனிதன் பாவத்திலிருந்து விடுதலைபெற முடியவில்லை. பலி பாவமன்னிப்பை மட்டுமே கொடுக்க முடியுமேயொழிய அதிலிருந்து அவனை விடுவிக்கமுடியாது. ஆதலால் ஒரு தெய்வீக பலி தேவைப்பட்டது. மனித உயிருக்குச் சமமான பழுதற்ற ஒரு உயிர் பலியாக வேண்டும். அதற்கு தகுதியான ஆள் உலகில் ஒருவருமில்லை என்று தேவன் கண்டார். ஆகையால் மனிதன் நிறைவேற்ற முடியாத நியாயப்பிரமாணத்தைக்கற்பனையை நிறைவேற்றவும் மனிதனுடைய பாவத்திற்கு பலியாகவும் தேவன் தம்முடைய குமாரனை அனுப்பினர். அவரே பழுதற்றவராகிய, குற்றமற்றவராகிய பூரண தேவனும், பூரண மனிதனுமாகிய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து. அவர் மனுமக்கள் அனைவருக்காகவும் கல்வாரி சிலுவையிலே இரத்தம் சிந்தி மரித்தார், அடக்கம் பண்ணப்பட்டார், மூன்றும் நாள் உயிரோடெழுந்தார்.

மனிதனுக்காக பரத்திற்கு எழுந்தருளி அங்கிருந்து தம்மைவிசுவாசிப்பவர்கள் மேல் தமது பரிசுத்த ஆவியைப்பொழிகிறர். மனிதனுக்கு இரட்சிப்பு ஆயத்தப் படுத்தப்பட்டாகிவிட்டது.

இனி யாரும் தன் பாவத்தில் மரிக்க வேண்டியதில்லை. மனந்திரும்பி கிறிஸ்து இயேசுவை விசுவாசித்து கீழ்ப்படிந்து அவரை நம்பி பற்றிக்கொண்டு அவர் மேல் சார்ந்து கொள்வதே விசுவாசம். இந்த மெய் விசுவாசத்தினல் மாத்திரம் பாவத்திலிருந்து மனிதன் மீட்படைய முடியும் வேறெரு மார்க்கமில்லை.

இப்பொழுது கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் மேல் ஒரு மனிதன் வைக்கும் விசுவாசத்தினால் அவனுக்கு பாவத்திலிருந்து விடுதலை பெறமுடியும். பாவத்தின் வல்லமை சிலுவையில் முறியடிக்கப் பட்டது. கிறிஸ்துவின் அவதாரமில்லாமல் சிலுவையும் இருக்க முடியாது. இரட்சிப்புமிருக்க முடியாது. அவரது உபதேசங்களும் கிரியையுமில்லாமல் நமக்காக மரித்த அவர் யார் என்றறியவியாலாது. அவரது உயிர்த்தெழுதல் இல்லாமல் அவரது மரணம் ஒரு தோல்வியாகுமேயன்றி வெற்றியென்று நாமறிய முடியாது. அவரது பரமேறுதலும் பரிசுத்த ஆவியின் பொழிதலுமன்றி வேறு காலங்களில் வேறு இடங்களில் இருக்கும் நமக்கு கிறிஸ்துவில் பங்கிருக்க முடியாது.

உலக மீட்பிற்காய் கிறிஸ்துவால் செய்யப் பட்ட ஒரே முழுக் கிரியையில் இவை யாவும் பல உட்பிரிவுகளேயாம். கிறிஸ்துவின் மரணத்தை விசுவாசித்து என் மேல் ஏற்றுக் கொள்ளுகிற நான் பாவத்திற்கு மரிக்கிறேன். அவருடைய உயிர்த்தெழுதலை விசுவாசிக்கிற என்னில் அவருடைய உயிர்த்தெழுந்த ஜீவன் கிரியை செய்கிறது. அவருடைய பரமேறுதலை விசுவாசிக்கிற நான் அவரோடு கூட சிங்காசனத்தில் (அதிகாரம்) அமர்ந்திருக்கிறேன் என்பதை உணர்கிறேன் (அநுபவமாகிறது) இவைகளை என்னில் நடப்பிக்கிறவர் பரிசுத்தஆவியானவர் நான் கிறிஸ்துவில் பங்கு பெறுகிறேன் என்று கூறுவதே ஒவ்வொரு விசுவாசியின் வாக்காயிருக்க வேண்டும். இதுவே கிறிஸ்துவின் மரணத்தையும் உயிர்த்தெழுதலையும் பண்டிகையாகக் கொண்டாடுகிற கிறிஸ்தவர்களாகிய நம்முடைய மேன்மையாகும்.

(முற்றும்)

"பாவத்தின் சம்பளம் மரணம், இயேசு கிறிஸ்துவினால் உண்டாகும் நித்திய ஜீவன்". —ரோம. 6 : 23

# பரிசுத்தம்

தேவன் நம்மை அசுத்தத்திற்கல்ல பரிசுத்தத்திற்கே அழைத்திருக்கிறார்-1 தெச. 4 : 7. மீட்கப்பட்ட தேவமக்கள் பரிசுத்தமாக்கப்பட வேண்டுமென்பது தேவசித்தமாயிருக்கிறது–Iதெச. 4 : 3. ஆகையால் மீட்கப் பட்ட தேவமக்கள் எவை எவைகளிலெல்லாம் பரிசுத்தமாக வேண்டும் என்றும், எப்படி அவ்வித பரிசுத்தத்தை அடைந்து கொள்ள வேண்டுமென்றும், அறிந்து கொள்வதும், அதன்படியே பரிசுத்தமடைந்து பரிசுத்தமாயிருக்கவும் வேண்டும். ஏனெனில், பரிசுத்தமில்லாமல் ஒருவனும் கர்த்தரைத் தரிசிப்பதில்லை. (எபி. 12 : 14) என்றும்; இருதயத்தில் சுத்தமுள்ளவர்கள் பாக்கியவான்கள் அவர்கள் தேவனை தரிசிப்பார்கள் (மத். 5 : 8) என்றும் வேதம் கூறுகிறது.

மீட்கப்பட்ட தேவ மக்கள் மகா பரிசுத்தமான விசுவாசத்தின் மேல் தங்களை உறுதிப்படுத்திக் கொள்ள வேண்டுமென்றும் (யூதா. 20), நடக்கைகள் எல்லாவற்றிலும் பரிசுத்தராயிருக்க வேண்டுமென்றும் (I பேது. 1 : 15), அன்பில் பரிசுத்தமுள்ளவர்களாயிருக்க வேண்டுமென்றும் வாசிக்கிறோம். (எபே. 1:4). எனவே இவைகளிலெல்லாம் எவ்விதம் தேவன் நம்மை பரிசுத்தப்படுத்தும்படி அழைத்திருக்கிறார் என்று அறிந்து பரிசுத்தமாவோமாக.

## 1. மகா பரிசுத்தமான விசுவாசம்

வானத்தையும், பூமியையும் படைத்த தேவன் ஒருவர் உண்டு என்ற நம்பிக்கையை பொதுவாக மனிதனுக்குள் தேவன் வைத்திருக்கிறார். அந்த தேவன் (இயேசு கிறிஸ்து) யார் என்பதை வேத வசனத்தைக் கேட்டு, அல்லது வாசித்து இருதயத்தில் ஏற்றுக்கொள்வதினால் அறிந்திருக்கிறோம். கர்த்தராகிய இயேசு கிறிஸ்து, தேவன் என்கிற விசுவாசம் கேள்வியினாலேவரும், கேள்வி

தேவனுடைய வசனத்தினாலே வரும்—ரோம 10:17. தேவ வசனக் கேள்வியினால் வரும் விசுவாசத்தில் அசுத்த முண்டோ? இல்லையே,பின் ஏன் மகா பரிசுத்தமான விசுவாசம் என எழுதப்பட்டிருக்கிறது என்பதை அறிய வேண்டும்.

பாவியாகிய ஒருவன் தன்பாவத்தின் பாரத்திலிருந்தும் பாவத்தின் தண்டனையிலு மிருந்து விடுதலை பெற, கிறிஸ்துவின் பாடு, மரணம், உயிர்த்தெழுதல் மூலம் உண்டாகும் விடுதலையை விசுவாசித்து ஏற்றுக் கொண்டபின் அவன் பாவத்தை வெறுத்து, பரிசுத்தத்தை விரும்பி பாவமக்களின் ஐக்கியத்தை வெறுத்து, மீட்கப்பட்ட தேவ மக்களின் ஐக்கியத்தை விரும்பி, அவர்களோடு தேவனை ஆராதித்து சாட்சித்து பரிசுத்தப் படவேண்டும். விசுவாசம் ஆரம்பமானதிலிருந்து அது வளர்ந்து கொண்டே போக வேண்டும் பாவத்தையும், உலக வழிபாடுகளையும், தங்கள் பழைய பாரம் பரியங்களையும் விட்டு விலகாமல் பற்றிக்கொள்ளுகிறவர்களின் விசுவாசம், ஆரோக்கியமில்லாத விசுவாசம் என்று (தீத்து 1:14)ல் காண்கிறோம். ஏனெனில் அவர்கள் ஓயாப் பொய்யர், பெருவயிற்று சோம்பேறிகள் என்றும் கட்டுகதைகளுக்கும் மனுஷருடைய கற்பனைகளுக்கும் செவி கொடுக்கிறவர்கள் என்றும் சொல்லியிருப்பதால், மனித கற்பனைக்கு செவிகொடுத்து சத்தியத்திற்கு செவியை விலக்கி கட்டு கதைகளுக்கு (சினிமா, நாடகம்) சாய்ந்து செல்வோரின் விசுவாசம் ஆரோக்கியம் இல்லாத விசுவாசமே. எந்த ஒரு மரமானாலும், செடியானாலும், மிருகமோ, பறவையோ எதுவானாலும், ஆரோக்கியமில்லை என்றால் அது வளராது, பெலன் உடையதாயிராது. அது விரைவில் பட்டுபோகும் அல்லது செத்துப் போகும். அப்படியே, மீட்கப்பட்டோர் அநேகர் பரிசுத்தவான்களின் ஐக்கியத்தை நாடாமல் பாவிகளோடு ஒட்டிக் கொண்டபடியால் விசுவாசத்தை இழந்து மறுபடியும் பாவத்தில் மரித்து அமிழ்ந்து போனார்கள். ஆகையால் துன்மார்க்கருடைய ஆலோசனையில் நடவாமலும், பாவிகளுடைய வழியில் நில்லாமலும், பரியாசக்காரர் உட்காரும் இடத்தில் உட்காராமலும் கர்த்தருடைய வேதத்தில் பிரியமாயிருந்து இரவும், பகலும் அவருடைய வேதத்தில் தியானமாயிருக்கிற மனுஷன் பாக்கியவான் (சங். 1:1, 2) என்றும், சுத்த இருதயத்தோடே கர்த்தரை தொழுது கொள்ளுகிறவர்களுடனே நீதியையும், விசுவாசத்தையும், அன்பையும், சமாதானத்தையும் அடையும்படி நாடு (II தீமோ. 2:22) என்றும் கூறப் பட்டிருக்கிறது.

எனவே மாறுபாடுள்ள சந்ததியை விட்டு விலகி (அப். 2:40) பரிசுத்த ஐக்கியத்தில் பங்கு பெற்று ஆராதிக்கும் போது விசுவாசம் ஆரோக்கியமானதாகி வளர்ச்சியடையும். வளரும் விசுவாசமே வர்த்தித்து பெலனடைந்து உறுதிப்படும். நீங்கள் போதிக்கப்பட்டபடியே விசுவாசத்தில் உறுதிப் பட்டு ஸ்தோத்திரத்தோடே அதிலே பெருகுவீர்களாக (கொலோ 2:7). தேவமக்களின் விசுவாசம் உறுதி அடையும் போது தேவனுக்கும், பரிசுத்த ஊழியர்கட்க்கும் சந்தோசமாயிருக்கிறது. (கொலோ. 2:5). விசுவாசத்தில் உறுதியடைந்து வருகிறவர்கள்தான் கஷ்டங்கள், நெருக்கங்கள், துன்பங்கள், இன்னல்கள், இக்கட்டுகள், நிந்தனைகள், அவமானங்கள், பொய்யான குற்றச்சாட்டுகள், மனிதராலும், சாத்தானாலும் உண்டாகும் சகல போராட்டங்களிலும் பின்வாங்காமல், சோர்ந்து போகாமல், போர் செய்து, மேற்கொண்டு முன்னேறி செல்வார்கள். விசுவாசத்தினாலே நீதிமான் பிழைப்பான், பின் வாங்கிப்போவானானால் அவன் மேல் என் ஆத்துமா பிரியமாயிராது என்கிறார் கர்த்தர்(எபி. 10:38). பக்தனாகிய தாவீதும், நானோ ஜீவனுள்ளோர் தேசத்திலே கர்த்தருடைய நன்மையை காண்பேன் என்று விசுவாசியாதிருந்தால் கெட்டுப் போயிருப்பேன் என்கிறார். ஆம், விசுவாசத்தில் உறுதி அடையாதோரும், ஆரோக்கியமடையாதோரும், கெட்டுப்போவர்கள், கெட்டுப் போனார்கள். நாமோ கெட்டுப்போக பின் வாங்குகிறவர்களாயிராமல் ஆத்துமா ஈடேற விசுவாசிக்கிறவர்களாயிருக்கிறோம்– எபி. 10:39.

விசுவாசம் உறுதி அடைந்து வரும் போது சோதிக்கப்படுகிறது. விசுவாசிகளின் தகப்பனாகிய ஆபிரகாமின் விசு

வாசத்தை கர்த்தர் சோதித்தார். கர்த்தர் ஆபிரகாமை நோக்கி, உன் புத்திரனும், உன் ஏக சுதனும், உன்நேசக்குமாரனுமாகிய ஈசாக்கை இப்பொழுது அழைத்துக்கொண்டு..............தகனபலியாக பலியிடு என்ருர் (ஆதி. 22:2). ஆபிரகாம் தேவனுடைய சொல்லுக்குக்கீழ்ப்படிந்து, தனக்குள், தன் சந்ததிக்குள் பூமி முழுவதும் ஆசீர்வதிக்கப்படும் என்ற வாக்குத்தத்தத்தைப் பெற்ருர்-ஆதி.22:18. உறுதியுள்ள விசுவாசம் சோதனையை ஜெயிக்கும்போது அது விலையேறப்பெற்ற விசுவாசமாகிறது.

பரிசுத்த பேதுரு அப்போஸ்தலனும், அழிந்து போகிற பொன் அக்கினியினல் பரிசோதிக்கப்படும். அதைப்பார்க்கிலும் அதிக விலையேறப்பெற்றதாயிருக்கிற உங்கள் விசுவாசம் சோதிக்கப்பட்டு, இயேசு கிறிஸ்து வெளிப்படும்போது உங்களுக்குப் புகழ்ச்சியும், கனமும் மகிமையுமுண்டாகக் காணப்படும் என்கிருர். -I பேது 1:7, விலையேறப்பெற்ற விசுவாசம், அருமையானது-II பேது. 1:1, (பிரயோஜனமுள்ளது IபேதுI. 1:9). அருமையானவிலையேறப்பெற்ற விசுவாசத்தைப் பெற்றவர்கள் யூதாசைப் போல்காட்டிக் கொடுக்காமல், தேமாவைப் போல் இப்பிரபஞ்சஆசையால் பரிசுத்தவான்களைவிட்டுபிரிந்துஓடாமல், அனனியா, சப்பீராள் போல் (அப். 5:3) ஒருமனப்பட்டு பொய் சொல்லாமல், கர்த்தருக்காக பிழைக்கவும், உழைக்கவும், மரிக்கவும் ஆயத்தமாகி ஜீவ வசனத்தைப்பிடித்துக் கொண்டு உலகத்திலே சுடர்களைப்போலப்பிரகாசித்து, (பிலி. 2:14) உலகில் கோணலும் மாறுபாடுமான சந்ததியின் நடுவிலே குற்றமற்றவர்களும், கபடற்றவர்களும், தேவனுடைய மாசற்றப் பிள்ளைகளுமாகி-(பிலி. 2:15) மகா பரிசுத்தமான விசுவாசத்தின் மேல் தங்களை உறுதிப்படுத்திக் கொள்வார்கள் (யூதா 20)

"...பரிசுத்தமில்லாமல் ஒருவனும் கர்த்தரைத் தரிசிப்பதில்லையே" எபி. 12:14

(தொடரும்

# மோட்ச வழி

## குரு - சிஷ்ய உரையாடல்

(பிப்ரவரி மாத தொடர்ச்சி)

**சிஷ்யன் :** குருவே! கிறிஸ்தவர்கள் என்று சொல்லிக் கொள்ளுகிறவர்கள் வஞ்சிக்கப்பட்டு ஏமாந்து போகிறவர்கள் என்று சொன்னீர்களே அது எப்படி?

**குரு :** மனுஷருடைய தந்தும் வஞ்கிக்கிறதற்கேதுவான தந்திரமுள்ள போதகங்களுக்கு (போதகர்களுக்கு) செவிகொடுப்பதினல் வஞ்சிக்கப்படுகின்றனர்' வஞ்சிக்கப்பட்டு போவார்கள்—எபே. 4:14, 15.

**சிஷ்யன் :** இந்த வஞ்சனைகளுக்கு தப்ப நான் என்ன செய்யவேண்டும்?

**குரு :** தேவனுடைய நியமமாகிய மெய்யான திருச்சபைக்கு உட்பட வேண்டும் அப்படியென்றல் வஞ்சனைக்குத் தப்பலாம்.

**சிஷ்யன் :** மெய்யான திருச்சபை எது?

**குரு :** கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவை அஸ்திபாரமாகவும், மூலைக்கல்லாகவும் வைத்து அப்போஸ்தலர், தீர்க்கர் என்பவர்களால் அஸ்திபாரமிடப்பட்டு (அப்போஸ்தலனல் ஆரம்பிக்கப்பட்டு) பரிசுத்த ஆவியால் கட்டப்பட்டதும்; அப்போஸ்தலர்கள், தீர்க்கதரிசிகள், மேய்ப்பர்கள், போதகர்கள், சுவிசேஷர்களாகிய ஆவிக்குரிய தேவ ஊழியர்கள் உள்ளதும்; கிறிஸ்துவுக்

குள்ளான எல்லா உபதேசமும், எல்லா அறிவும், மற்ற எல்லாவற்றிலும். தேவகிருபையிலும் சம்பூரணமுள்ளதும், பரிசுத்தாவியின் எல்லா வரங்களும், கனிகளும் நிரம்பியதுமாய் காணப்படுகிற திருச்சபையே மெய்யான சபை. தேவனுடைய ஏழு அஸ்திபாரமாகிய ஏழுதூண்களும் சித்திரம் தீர்க்கப்பட்டு பூரணமாய் அத்திருச்சபையிலேதான் காணப்படும். அது பூலோகத்திலும் பரலோகத்திலும் இருக்கும், இருக்கிறது. —எபே. 2:20-22; I கொரி. 3:10; எபேசி. 4:11-15; I கொரி. 1:5-7; மத். 28:18-20; கலா. 5:22, 23; நீதி. 9:1-6; மத். 16:18, 19; எபி. 12: 22-24.

சிஷ்யன் : குருவே ! அப்போஸ்தலனென்றால் யார்?

குரு : தேவனால் அழைக்கப்பட்டு, ஆயத்தமாக்கப்பட்டு, அபிஷேகித்து, அதிகாரப்படுத்தி அனுப்பப்பட்டவர்களே அப்போஸ்தலர்களாகும்.

சிஷ்யன் : சிலர் விவாக முடிக்காதவர்கள்தான் அப்போஸ்தலர்களென்றும், சிலர் பல சபைகளுக்கு தலைவர்களாயிருப்பதினால் தாங்கள் அப்போஸ்தலரென்றும், இன்னும் சிலர் தங்கள் அப்போஸ்தலனென்று தேவன் சொன்னதாகவும், பிறர் மூலம் கர்த்தர் வெளிப்படுத்தினார் ஆதலால் தாங்கள் அப்போஸ்தலனென்றும் சொல்லுகிறார்களே அது எப்படி?

குரு : இதெல்லாம் தவறே. தீர்க்கதரிசன வரமில்லாதவன் எப்படி தீர்க்கதரிசியில்லையோ அப்படியே அப்போஸ்தலவரமில்லதாவன் அப்போஸ்தலனில்லை. விவாகத்திற்கும் இதற்கும் சம்பந்தமில்லை. கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினிடமிருந்து அதிகாரமும், கட்டளையும் பெற்று நான் உங்களுக்கு ஒப்புவித்ததை கர்த்தரிடம் பெற்றுக் கொண்டேன் என்று சொல்லத்தக்க காரியங்கள் உள்ளவனே அப்போஸ்தலன். அப்போஸ்தலனோடு கூடஇருந்து தேவன் கிரியை நடப்பிப்பார். அது வசனத்துக்கு ஒத்த கிரியையாயிருக்கும்.

சிஷ்யன் : அப்படியென்றால் இக்காலத்தில் தங்களை அப்போஸ்தலரென்று சொல்லிக் கொள்ளுகிற அநேகர் அப்போஸ்தலரல்லவென்று தெரிகிறது.

குரு : ஆம், தேவனுடைய அப்போஸ்தலருடைய வேஷத்தைப் போட்டுக் கொண்டு திரியும் சாத்தானின் அப்போஸ்தலர்களும், தங்களைத் தாங்களே அப்போஸ்தலரென்று சொல்லித்திரியும் கள்ள அப்போஸ்தலர்களும் அநேகருண்டு—II கொரி. 11:13, 14, 15; வெளி. 2:2.

சிஷ்யன் : அப்போ, அப்போஸ்தலனால் எழுதப்பப்படாதவைகளெல்லாம் சபைகளல்ல அப்படித்தானே!

குரு : ஆம். சபை ஒன்றே. அது அப்போஸ்தலனால் எழுப்பப்பட்டிருக்கும் அங்கு எல்லாம் வசனத்தின்படி இருக்கும்—உன்ன. 5:9.

சிஷ்யன் : இரட்சிக்கப்பட்ட எல்லாரும் சபையின் அங்கம்தான். எந்த சபைப் பிரிவில் அவன் இருந்தாலும் அவன் திருச்சபையின் (இயேசுவின் சரீரமான சபையின்) அங்கம்தான் என்று சொல்லுகிறார்களே.

குரு : அது தவறு. நாமெல்லாரும் ஒரே நம்பிக்கைக்கு அழைக்கப்பட்டிருக்கிறது போல ஒரே சரீரமும் (திருச்சபை) ஒரே ஆவியும், ஒரே கர்த்தரும், ஒரே விசுவாசமும், ஒரே ஞானஸ்நானமும், ஒரே கர்த்தரும், தேவனும் பிதாவும் உண்டு. இங்கே பற்பல விசுவாசமுடையவர்களாய் பிரிந்து ஒன்றாய் இருக்க விரும்பாதவர்கள் பரலோகத்தில் போய் எங்கே ஒன்றாய் இருக்க முடியும். வேதத்தில் வெவ்வேறு விசுவாசமுள்ள பிரிவுகளையும், பெயர்களையும் நாம் பார்க்கிறதில்லை—எபேசி. 4:4-6; யோவா. 17:20—23;

"பிள்ளைகளே இது கடைசிக்காலமாயிருக்கிறது..........அவர்கள் நம்மை விட்டுப் பிரிந்து போனார்கள், ஆகிலும் அவர்கள் நம்முடையவர்களாயிருக்க வில்லை; நம்முடையவர்களாயிருந்தார்களானால் நம்முடனே நிலைத்திருப்பார்களே; எல்லாரும் நம்முடையவர்களல்லவென்று வெளியாகும்படிக்கே பிரிந்துபோனார்கள்" I யோ. 2:18,19. ஆவி பலவாயிருந்தால் உபதேசமும் பலவாயிருக்கும். பரிசுத்த ஆவியானவர் ஒருவரே—I யோ. 4:1; எபே. 4:4. எது சரி என்று கனிகளினால் அறியலாம்—மத். 7:15—20.

[தொடரும்]

"நாங்கள் கண்டவைகளையும்...பேசாமலிருக்கக் கூடாதே..."அப். 4:20

# வேத பாடம்

**ஆதி. 11:10-26** ஆபிரகாமின் வம்ச அட்டவணை சேமுடைய வம்சவரலாறு கொடுக்கப்பட்டுள்ளது. தேராகு என்பவருக்கு ஆபிராம் பிறக்கிறார். இவருக்கு நகோர், ஆரான் என்று இரண்டு சகோதரர் உண்டு.

**ஆதி. 11:27-12:5** ஆபிராமுடைய மனைவியின் பெயர் சாராய். ஆரான் லோத்தைப் பெற்றான். ஆபிராம் மெசொப்பொத்தாமியா நாட்டிலே ஊர் என்னும் தன் சொந்த பட்டணத்திலே இருக்கையில் ஆபிராமுக்கு தேவ அழைப்பு உண்டாயிற்று. இதுதான் வேதாகமத்தில் காணப்படுகிற பிரசித்திப் பெற்ற தேவ அழைப்பு. ஆண்டவர் ஆபிராமை நோக்கி:நீ உன் நாட்டையும், உன் இனத்தையும், உன் தந்தையின் வீட்டையும் விட்டு புறப்பட்டு நான் உனக்கு காட்டவிருக்கும் தேசத்திற்குப்போ என்றார் (12:1). விக்கிரக ஆராதனைக்காரர்கள் மத்தியிலிருந்து தேவன் ஆபிராமை வேறுபடும்படி அழைக்கிறார். தாம் காண்பிக்கும் தேசத்துக்குப் போகும்படி தேவன் கட்டளையிடுகிறார். ஆபிராமின் தகப்பன் தேராகு, ஆபிராம், சாராய், தேராகின் பேரன் லோத்து ஆகியோர் புறப்பட்டு கல்தேயர் பட்டணமாகிய ஊரை விட்டு போகப் புறப்பட்டு ஆரான் மட்டும் வந்து அங்கே தங்கிவிட்டார்கள். தேராகு ஆரானிலே மரித்து விட்டார் (ஆதி. 11:31,32.)

ஆபிராமுக்கு உண்டான தேவ அழைப்புக்கு ஒத்ததே, நம் ஒவ்வொருவருக்கும் உண்டாகும் தேவ அழைப்பு. ஒவ்வொரு மனிதனுக்கும் வெவ்வேறு விதமாய் இந்த தேவ அழைப்பு உண்டாகிறது. ஆபிராமுக்கு முன்மாதிரியில்லை. அவர்கையில் வேதம் இல்லை. ஆனாலும் ஆபிராம் தேவ அழைப்புக்குக் கீழ்ப்படிந்து தன் இனத்தையும், ஜனத்தையும், வீட்டையும், நாகரீகமுள்ள தன் நாட்டையும் விட்டு புறப்பட்டது அந்நாட்களில் மகாவிசேஷித்த காரியமாகும். உன் காரியம் என்ன?

ஆபிராமுடைய இருதயம் தேவனுக்கு முன்பாக உண்மையுள்ளதாக இருந்தது—நெகே.9:7-9. ஆபிராம் தேவன்மேல் கொண்ட விசுவாசம் மகா பெரியது.

அழைப்போடு கூட தேவன் ஆசீர்வாதத்தையும் வாக்கருளினார்.

1. ஒரு தேசத்தைத் தருவேன்.
2. உன்னை ஆசீர்வதிப்பேன்.
3. பெரிய ஜாதியாக்குவேன்.

4. உன்பேரைப் பெருமைப் படுத்துவேன்.

5. நீ ஆசீர்வாதமாயிருப்பாய்.

6. உன்னை ஆசீர்வதிக்கிறவர்களை ஆசீர்வதிப்பேன் உன்னை சபிக்கிறவர்களை சபிப்பேன்.

7. பூமியிலுள்ள வம்சங்களெல்லாம் உனக்குள் ஆசீர்வதிக்கப்படும். அப்பொழுது ஆபிராமுக்கு வயது 75. எல்லோரும் கானான் போய் சேர்ந்தார்கள்.

ஆதி 12:6-9. இந்த தேசத்தை உன் சந்ததிக்குத் தருவேன் என்று கர்த்தர் வாக்கருளினர், தனக்கு தரிசனமான கர்த்தருக்கு ஆபிராம் ஒரு பலிபீடத்தைக் கட்டினன். பின்னும் அந்த தேசத்தில் சுற்றித் திரிந்து பெத்தேலுக்கு கிழக்கே ஆயிக்கு மேற்கே கர்த்தருக்கு ஒரு பலிபீடத்தை உண்டாக்கி கர்த்தருடைய நாமத்தை தொழுது கொண்டார்.

நாமும் போகிற போகிற இடங்களில் மெய்த்தேவனைத் தொழுது கொள்ள பலிபீடம் (சபை ஆலயம்) கட்டுகிறோமா? சத்தியத்திலும் ஆவியிலும் தேவனைத் தொழுது கொள்ள ஒழுங்கு செய்கிறோமோ? அப்படிச்செய்வோம்.

(தொடரும்)

''கர்த்தரைத் தெய்வமாகக் கொண்ட ஜாதி பாக்கியமுள்ளது'' சங். 33:12

பாலர் பகுதி

# தேவனின் அன்பு

அடர்ந்த காடுகள். மலைப்பிரதேசம். அவைகளின் மத்தியில் அமைந்திருந்தது ஒரு சிறிய கிராமம். அந்த கிராமவாசிகளின் தொழில் வேட்டையாடுவது. அக்கிராமத்தில் உள்ளவர்களுக்கு மிஷனரிகள் மூலம் கர்த்தராகிய இயேசுகிறிஸ்து அறிவிக்கப்பட்டிருந்தார். கிறிஸ்துவிடத்தில் அன்பு கூர்ந்த குடும்பங்களில் தாமஸின் குடும்பமும் ஒன்று. தாமஸிற்கு ஒரே ஒரு புத்திரன். அவனது பெயர் விக்டர். தாமஸ் எவ்வளவு அதிகமாக கர்த்தரை நேசித்தாரோ, அதற்கு எதிர்மாருக விக்டர் நடந்து வந்தான். தாமசும் கடந்த 20 ஆண்டு காலமாக தனது மகனுக்கு எவ்வளவோ போதித்தும் விக்டர் செவி சாய்த்தானில்லை. தாமசும், தாமஸின்மனைவியும் அதிக பாரத்துடன் 'விக்டருக்காக கண்ணீரோடு ஜெபம் பண்ணி' வந்தனர். தனது மகனுக்கு எப்படி தேவனின் அன்பை உணரவைப்பது என்று மிகவும் சிந்தித்தார்கள். அதோடுமாத்திரமல்ல தேவனிடத்திலும் சொல்லி வந்தார்கள்.

தாமஸ் வழக்கம் போல வேட்டையாட புறப்பட்டார். மகனும் உடன் சென்றான். அதற்கு முன்புதானே தாமஸ்தேவனிடத்தில் தன்னை ஒப்படைத்து விட்டு கடந்து சென்றனர். காட்டிற்குள் வெகுதூரம் சென்ற பின்னும், வேட்டை ஒன்றும் அகப்படவில்லை. அப்பொழுது தாமஸ் தனது மகனிடம்: மகனே, நீ இந்த மரத்தின் அடியில் நின்று கொள். நான் மரத்தின் மேல் ஏறி தூரத்திலாவது ஏதேனும் மிருகங்கள் வேட்டைக்கு கிடைக்குமா என்றுபார்க்கிறேன் எனக் கூறிவிட்டு மரத்தின் மீது ஏறி சிறிது உயரம் சென்றுவிட்டார். விக்டர் மாத்திரம் தனியாக நின்ற அந்த நேரத்தில் அருகாமையிலிருந்த புதரிலிருந்து வெளிப்பட்ட புலியானது விக்டரை நோக்கிப் பாய்ந்துவந்தது. புலி வந்த வேகத்தில் விக்டரைத் தாக்கியது. விக்டர் தனது தகப்பனரை உதவிக்காக அழைத்தான். தகப்பனர் மரத்திலிருந்து கீழே இறங்கி வந்து தன்னுடைய மகனை தாக்கும் புலியினின்று விடுவிக்க புலியுடன் போராடினர். நீண்ட நேர போராட்டத்திற்குப்பின் தாமஸ் புலியை ஜெயித்தார். புலி மாண்டது. புலியுடன் போராடியதால் உடலில் அனேக இடங்களில் புலியின்நகக்கீரல்கள் ஏற்பட்டு, இரத்தம்வடிந்தன. விக்டர் இவைகள் எல்லா

வற்றையும் அருகில் நின்றுகொண்டு கவனமாக பார்த்துக் கொண்டிருந்தான்.

பின்னர் தனது தகப்பனுரிடம் அப்பா! நீங்கள் என் மீது அதிக அன்பாக இருக்கிறீர்கள் என்பதைநான் உணர்ந்துகொண்டேன்; இந்த அன்பிற்கு கைம்மாருக நான் என்ன செய்வேன் என்று கூறி அழுதுவிட்டான். அப்பொழுது தாமஸ் தனது மகனைப்பார்த்து: மகனே! இது ஒன்றும் பெரிய காரியமல்ல. நான் உன்னைபெற்று வளர்த்ததற்காகத்தான் இதைச் செய்தேன். ஆனல் நமது தேவன் நம்மை சிங்கம், புலி போன்ற சாத்தானின் கரத்தினின்று நம்மை விடுவிக்கும்படியாக நமக்காக இந்த பூலோகத்திற்கு வந்து நமக்காக மரித்தார். சாத்தானின் கரத்தினின்று நம்மை விடுவித்து வருகிருர். நிச்சயமாக நம்மை எல்லாவற்றினின்றும்விடுவிக்க வல்லவராக இருக்கின்ருர் என்று தேவனின் அன்பைப்பற்றி விளக்கினுர். விக்டரும் அவைகளை ஏற்றுக் கொண்டு தகப்பனிடம் தேவனில் நிச்சயமாக அன்புகூறுவேன் என வாக்களித்தான்.

விக்டர் தாமே தனது தகப்பனுரிடம் அப்பா இதுநாள் வரை நான் உங்களது வார்த்தைகளுக்குச் செவி கொடுக்காமல் இருந்ததற்காக என்னை மன்னியுங்கள் என்று மன்னிப்புக் கேட்டுக் கொண்டான். தாமஸ் உடலில் காயம் ஏற்பட்டு வலி எடுத்தாலும் அவைகளைப் பொருட்படுத்தாமல், மிகவும் சந்தோசத்துடன் வீடு திரும்பினுர். அன்று முதல் விக்டர் தேவனிடம் அன்பு கூர்ந்து, அவரது கட்டளை, கற்பனைகளின்படி நடந்து அவரைச் சேவித்தான்.

பிள்ளைகளே! நாமும் தேவனிடத்தில் தமது ஜீவனை கொடுத்த கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினிடத்தில் அன்பு கூறுவோமாக. அவர் நம்மை தப்புவிக்க தம்முயிரைக் கொடுத்தார் கல்வாரிசிலுவையில். மூன்ருவது நாள் உயிர்த்தெழுந்து நமக்கு இன்றும்ரட்சகராயிருக்கிருர்.

---

"அவர் தம்முடையஜீவனை நமக்காகக் கொடுத்ததினுலே அன்பு இன்னதென்று அறிந்திருக்கிறேம்..." I யோ. 3 : 16

---

மாதர் பகுதி

## ரெபெக்காள்

பெத்துவேலின் குமாரத்தியும், லாபானின் சகோதரியுமாகிய ரெபெக்காள் ஒரு சிறந்த தேவ பக்தியுள்ள பெண். ஆபிரகாம் தன் குமாரனுகிய ஈசாக்குக்கு பெண் கொள்ளும்படி தன் வேலைக்காரனை மெசொப்பொத்தாமியா நாட்டிற்கு அனுப்புகிருர். அங்கேயிருந்து பெண் இங்கே வர சம்மதிக்காவிடில், உமது குமாரனை அங்கே அழைத்து போகவா என்று அந்த ஊழியக்காரன் கேட்டபோது, கூடாது என்று சொன்னதுமன்றி; வானத்தின் தேவனுகிய என் தேவன் அவ்விடத்து பெண் உன்னேடு கூட இங்குவர தம்முடைய தூதனை அனுப்பி ஆயத்தம் செய்வார் என்று சொன்னதாகப் பார்க்கிறேம். (ஆதி. 24: 1-9)

அப்படியே அந்த வேலைக்காரன் புறப்பட்டு கல்தேயர் பட்டணத்திலுள்ள நாகோரின் ஊருக்குப் போய் ஊருக்கு வெளியிலே உள்ள துரவண்டையில் இறங்கி தன் ஒட்டகங்களோடும், ஆட்களோடும் இறங்கினுன். அப்பொழுது அந்த ஊழியக்காரன் இப்படி ஜெபம் பண்ணினுதாகப் பார்க்கிறேம். என் எஜமானுகிய ஆபிரகாமின் தேவனுகிய கர்த்தாவே! நான் இந்த தண்ணீர் துரவண்டையில் நிற்கிறேன். இந்த ஊராரின் பெண்களில் தண்ணீர் மொள்ள வரும் ஒரு பெண்ணிடம் எனக்கு குடிக்க கொஞ்சம் தண்ணீர் கொடு என்று கேட்கும் போது, எந்த பெண் குடியும், உமது ஒட்டகங்களுக்கும் மொண்டு வார்ப்பேன் என்று சொல்லும் பெண்ணே என் எஜமானுடைய குமாரனுக்கு நீர் தெரிந்து கொள்ளும் பெண் என்று நான் அறிந்து கொள்ளும்படி செய்யும் என்று சொல்லி முடித்ததும், வந்த பெண் இந்த ரெபெக்காளாயி

ருந்தாள். மிகவும் சௌந்தரிய முள்ளவளும் புருஷனை அறியாத கன்னிகையுமாயிருந்த ரெபெக்காளைக் கண்ட அந்த ஊழியக்காரன் அவள் தண்ணீர் மொண்டு கொண்டு திரும்பி வந்தபோது அவள் முன்னால் சென்று எனக்கு கொஞ்சம் குடிக்க தண்ணீர் தரவேண்டும் என்றான். அப்போது ரெபெக்காள் குடத்தை கையில் இறக்கிக் கொண்டு குடியும் என்று குடிக்கக் கொடுத்ததுமல்லாமல் உமது ஒட்டகங்களுக்கும் மொண்டு வார்ப்பேன் என்று சொல்லி மொண்டு வார்க்க ஆரம்பித்தாள். இதைக் கண்ட ஆபிரகாமின் ஊழியக்காரன் அவளைக் குறித்து ஆச்சரியப்பட்டான். (ஆதி. 24 : 10—21).

தன் காரியம் வாய்த்ததோ அல்லவோ என்று அறிய அவளுடன் சம்பாஷித்தான். அவள் வீட்டிலே போய் சொல்லி லாபான் ஓடிவந்து ஆபிரகாமுடைய வேலைக்காரனை வீட்டிற்கு அழைத்துப்போகிறார்கள். வேலைக்காரன் தன் எஜமானைப் புகழ்ந்து பேசி, தான் வந்த காரியத்தை அறிவித்தான். ஆபிரகாமின் உறவினர்களாகிய அவர்கள் இது கர்த்தரால் வந்த காரியம் நீர் ரெபெக்காளை உமது எஜமானுடைய குமாரனுக்கு மனைவியாகும்படி அழைத்துபோம் என்றார்கள். ரெபெக்காளின் வாய்ப்பிறப்பை அறியும்படி நீ இந்த மனிதனோடு அங்கு போகிறாயா என்று கேட்டபோது அவள் போகிறேன் என்றாள். (ஆதி. 24:58). என்ன ஆச்சரியமான ஸ்திரீ. மெய்த் தேவ பக்தியும், பரிசுத்தமும் இருந்தபடியினாலே தேவனால் ஆயத்தமாக்கப்பட்டவளாயிருந்தாள் என்று அறிகிறோம். தேவன் அவளை வாக்குத்தத்தம் பெற்ற சந்ததியோடே சேர்த்தார். ரெபெக்காள் சாந்த குணமுள்ள ஈசாக்குக்கு மனைவியானாள். அவளுக்கு கர்ப்பத்தில் இரண்டு குழந்தைகள் மோதிக் கொண்டிருந்தன. இதைக் குறித்து அவள் தேவனிடத்தில் கேட்டபோது மூத்தவன் இளைய வனை சேவிப்பான் என்று சொல்லப்பட்டது. (ஆதி. 25: 22,23).

அப்படியே ஏசாவும், யாக்கோபும் பிறந்தார்கள். வாக்குத் தத்தத்தின் சந்ததி யாக்கோபு என்றறிந்து ரெபெக்காள் யாக்கோபை சிநேகித்தாள். ஈசாக்கு ஏசாவை சிநேகித்தார். இதனால் சகோதர பகைமை உண்டாயிற்று. தன் பிரிய புத்திரன் தன் தகப்பனை ஏமாற்றி ஆசீர்வாதம் பெற ரெபெக்காள் ஆலோசனைக் கூறினாள். இதனால் யாக்கோபு ஏசாவுக்குப் பயந்து தாய் மாமன் வீட்டிற்கு ஓட வேண்டியதாயிற்று. தன் மதியீனத்தினால் பின்பு மகனைக் கண்டதேயில்லை. ஏனென்றால் யாக்கோபு 20 (இருபது) வருஷம் கழித்து திரும்பி வருமுன் ரெபெக்காள் மரணமடைந்து போனாள்.

ரெபெக்காளிடமிருந்து நாம் கற்றுக் கொள்வதென்ன? சொற்ப மதியீனம் பெரு நஷ்டத்தையுண்டாக்கும் என்றும், தேவ பக்தியும், இரக்க சிந்தையும், வாழ்க்கையை உயர்த்தும் என்றும் பார்க்கிறோம். ஆதலால் ரெபெக்காளிடமுள்ள நற்குணங்களைப் பற்றிக்கொண்டு, தீய குணங்களை விட்டுவிடுவோமாக காணாத கணவனைப் பற்றி கேள்விப்பட்டு நம்பி விசுவாசத்துடன் ரெபெக்காள் ஆபிரகாமின் ஊழியக்காரனுடன் கானான் தேசம் சென்றது போல், நாமும் இயேசுவை காணாதிருந்தாலும் கேள்விப் பட்டதை நம்பி விசுவாசித்து அவரைச் சந்திக்க மோட்ச பிரயாணம் செய்வோமாக I பேது. 1:8.

---

"தண்ணீரைக் கேட்டான்,
பாலைக் கொடுத்தாள்..."
—நியா. 5 : 25

---

# இந்த வருடமும் இருக்கட்டும்

கிறிஸ்துவுக்குள் பிரியமானவர்களே, நம்முடைய தேவனாகிய கர்த்தர் நம்மீதுஇரக்கம் வைத்து மீண்டும் ஒரு வருடத்தை நமக்கு கூட்டிக் கொடுத்திருக்கிறார். அவருக்கே மகிமையுண்டாவதாக!

இந்த வருடம் எதற்காக நமக்கு கூட்டிக் கொடுக்கப்பட்டிருக்கிறது என்பதை நாம்

அறிந்து கொள்வது மிகவும் அவசியம். "அப்பொழுது (இயேசு) அவர் ஒரு உவமையையும் சொன்னார்:ஒருவன் தன் திராட்சத்தோட்டத்தில் ஒரு அத்திமரத்தை நட்டிருந்தான். அவன் வந்து அதிலே கனியைத் தேடின போது ஒன்றுங்காணவில்லை. அப்பொழுது அவன் தோட்டக்காரனை நோக்கி: இதோ, மூன்று வருஷமாய் இந்த அத்திமரத்திலே கனியை தேடிவருகிறேன், ஒன்றையுங்காணவில்லை, இதை வெட்டிப்போடு, இது நிலத்தையும் ஏன் கெடுக்கிறது என்றான். அதற்கு அவன்: ஐயா, இது இந்த வருஷமும் இருக்கட்டும், நான் இதைச்சுற்றிலும் கொத்தி, எருப்போடுவேன், கனிக்கொடுத்தால் சரி, கொடாவிட்டால், இனிமேல் இதைவெட்டிப் போடலாம் என்று சொன்னான் என்றார்" -லூக்கா 13 : 6-9.

"சேனைகளின் கர்த்தருடையதிராட்சைத் தோட்டம் இஸ்ரவேலின் வம்சமே; அவருடைய மன மகிழ்ச்சியின் நாற்று யூதாவின் மனுஷரே" (ஏசா. 5 : 7) என்று ஏசாயா தீர்க்கன் கூறுகிறார்.

ஆம், இரட்சிக்கப்பட்ட தேவனுடைய பிள்ளையே, யூதா கோத்திரத்தின் சிங்கமாகிய இயேசு கிறிஸ்துவின் உடன் சுதந்திரவாளியே உன்னைப்பார்த்துதான் மேற்கண்ட உவமையை இறைவன் இயேசு கூறுகிறார். உன்னைப்பலருக்கு நிழல்கொடுக்கும் மரமாக அல்ல, தமக்கு நீ கனி கொடுக்கும் மரமாகவே தம்முடைய தோட்டத்தில் உன்னை நட்டுவைத்தார். "நான் உன்னை முற்றிலும் நற்கனிதரும் உயர்குலத் திராட்சச்செடியாக நாட்டினேன்" (எரே 2 : 21) என்று சேனைகளின் கர்த்தர் உரைக்கிறார்.

தேவனுடைய பிள்ளையே, உன்னுடைய இனிமையான பாடல்களும், உன்னுடைய அனுபவ சாட்சியாலும் உன்பிரசங்கத்தினாலும் தேவனுடைய பிள்ளைகள் மத்தியில் முன்மாதிரியாய் நீ காணப்பட்டிருக்கலாம். உனது திறமையினாலும், செல்வத்தினாலும் உலக மக்கள் பலருக்கும் நீ பிரயோஜனப்பட்டிருக்கலாம். ஆனால் கர்த்தர் உன்னிடத்தில் ஆவியின் கனியைத்தேடுகிறார். ஆவியின் கனியோ அன்பு, சந்தோஷம், சமாதானம், தயவு, நீடிய பொறுமை, நற்குணம், விசுவாசம், சாந்தம், இச்சையடக்கம்" (கலா 5 : 22, 23) என்பவைகளே!

தேவனுடைய ஆவியைப் பெற்ற தேவனுடைய பிள்ளையே மேற்கண்ட குணாதிசயங்கள் உன்னிடத்தில் உண்டா? என்று ஆராய்ந்துப்பார். இனிமேலும் காலம் தாழ்த்தாதே. "கர்த்தருக்குப் பிரியமானது இன்னதென்று நீங்கள் சோதித்துப்பாருங்கள். கனியற்ற அந்தகாரக்கிரியைகளுக்கு உடன் படாமல் அவைகளைக் கடிந்து கொள்ளுங்கள்"—எபே. 5 : 11, 12.

ஒரு மரமானது கனிகொடுப்பதற்கான காலம் வந்ததும், அதிலிருந்து பூக்கள் தோன்றுகிறது. இந்த பூக்களில் பிஞ்சுகள் அல்லது காய்கள் உருவாகதபடி சில புழுக்களும், பூச்சிகளும் அந்த பூவை அரித்து விடுகிறது. இது போலவே, ஆவியைப் பெற்ற மக்களும் ஆவிக்குரிய கனிகொடுக்க முடியாதபடி அந்தகாரக்கிரியைகளால் தாக்கப்பட்டு கனியற்றவர்களாகவே காணப்படுகிறார்கள்.

ஆகையால் தேவனுடைய பிள்ளையே! நீ தேவனுக்குப் பிரியமான கனியுள்ள வாழ்க்கை வாழ்வதற்கு என்ன செய்ய வேண்டும் என்பதற்குப் பரிசுத்த ஆவியானவர் கூறும் ஆலோசனைகளைக் கவனி உன் ஆத்துமாவில் தோன்றும் ஆவியின் சிந்தனைகளை உன்மாமிசத்தில் தோன்றும் தீய சிந்தைகள் கெடுத்துவிடுகிறது. ஆகையால் நீங்கள் தேவனுடைய ஆவியில் நிறைந்து "ஆவியினாலே சரீரத்தின் செய்கைகளை அழித்தால் பிழைப்பீர்கள்." (ரோம 8 : 13) என்றும் "ஆவிக்கேற்றப்படி நடந்து கொள்ளுங்கள் அப்பொழுது மாமிச இச்சையை நிறைவேற்றாதிருப்பீர்கள்" (கலா. 5 : 16) என்றும் வேதம் கூறுகிறது.

அதோடு, உனக்குப் போதனை தருபவர்கள் எப்படிப்பட்டவர்கள்; நீ வைத்திருக்கும் ஐக்கியம் எப்படிபட்டது என்பதையும் வேத வெளிச்சத்தின் மூலம் பரிசோதனை செய்துப் பார் அதுவும் உன்னை கனி கொடாத படி தடை செய்யும்.

துன்மார்க்கருடைய ஆலோசனையில் நடவாமலும், பாவிகளுடைய வழியில்

நில்லாமலும், பரியாசக்காரர் உட்காரும் இடத்தில் உட்காராமலும் கர்த்தருடைய வேதத்தில் பிரியமாயிருந்து, இரவும் பகலும் அவருடைய வேதத்தில் தியானமாயிருக்கிற மனுஷன் பாக்கியவான் அவன் நீர்க்கால்களின் ஓரமாய் நடப்பட்டு, தன் காலத்தில் தன் கனியைத் தந்து, இலையுதிராதிருக்கிற மரத்தைப் போலிருப்பான்'' (சங். 1 : 1 – 3) என்று கர்த்தருடைய ஆவியானவர் கூறுகிறார்.

சிலர் இக்காலத்தில் ஆவியைப் பெற்று விட்டாலே போதும் என்று திருப்தியடைந்து விட்டார்கள். சிலர் அவ்வாறே போதிக்கிறார்கள் "நல்ல கனி கொடாத மரமெல்லாம் வெட்டுண்டு அக்கினியிலே போடப்படும்'' (மத். 7 : 19) என்றும், "என்னில் கனிகொடாதிருக்கிற கொடி எதுவோ அதை அவர் அறுத்துப் போடுகிறார்'' (யோவான் 15 : 2) என்றும் இறைவன் இயேசு கூறுகிறார். அது மட்டுமல்ல இந்த வருஷமும் இருக்கட்டும் கனி கொடுத்தால் சரி, கொடாவிட்டால், இனிமேல் இதை வெட்டிப்போடலாம்'' (லூக். 13 : 8, 9) என்றும் சேனைகளின் கர்த்தர் கூறுகிறார்.

"எல்லாவற்றிற்கும் முடிவு சமீபமாயிற்று'' —I பேதுரு. 4 : 7

---

"கனி கொடுத்தால் சரி, கொடாவிட்டால், இனிமேல் இதை வெட்டிப்போடலாம்...'' லூக் 13 : 9

---

# புதிய எருசலேம் சபை நடபடிகளில் சில

(சென்ற இதழ் தொடர்ச்சி)

என்னைப் பிசாசின் கரத்திலிருந்து விடுதலையாக்கி எனக்கு சமாதானத்தை அளித்த என் தேவனுக்கும், தங்களுக்கும் நான் வேறெவ்விதமாக என் நன்றியைக் கூறிக் கொள்வது? என்று கூறி தன்னுடைய வாழ்க்கை சரித்திரத்தை சுருக்கமாய் கூற ஆரம்பித்தது. "நான் ஒரு இந்து குடும்பத்தைச் சேர்ந்தவள். எனக்கு திருமணம் ஆகி 15 ஆண்டுகள் ஆகிறது. நாங்கள் வழிபட்டு வந்த காளி தெய்வம் எங்கள் குடும்பத்தை அடியோடு அடித்து விட்டது. முதலில் என்னுடைய அப்பா, அம்மா மரித்துப் போனார்கள். பிறகு என் மாமா, மாமியும் திடீரென்று மரித்துப் போனார்கள். எனக்கு பன்னிரண்டு குழந்தைகள் கருத்தரித்து சில மாதங்களில் அழிக்கப்பட்டு விட்டது. இப்பொழுது எனக்கு குழந்தைகள் இல்லை. இறுதியாக என் கணவரையும் அந்த சக்தி கொன்று விட்டது. இப்பொழுது நான் மட்டுமே தனிமையாய் இருக்கிறேன். என்னையும் அழித்து விட அந்த ஆவி பல தடவைகளில் போராடினது. இப்படியிருக்கவே நாம் இனி கிருஸ்தவ மதத்தில் சேர்ந்து விட்டால் இயேசு நாதர் என்னைக் காப்பாற்றுவார் என நம்பி நான் இந்த மார்க்கத்தில் சேர்ந்தேன். என்னுடைய பரிதாப நிலையைக் கண்ட ஆண்டவர் இந்தியாவில் இருந்து உங்களை அனுப்பி என்னை பொல்லாதப் பிசாசின் பிடியில் இருந்து விடுதலையாக்கி விட்டார். எனக்காகவே நீங்கள் இத்தீவுக்கு வந்து இருக்கிறீர்கள் என நினைக்கிறேன். இனி என் வாழ் நாள் எல்லாம் ஆண்டவருடைய பிள்ளையாகவே ஜீவிப்பேன்'' என்று சாட்சி கூறினது. சிறுமையானவர்கள், விதவைகள் யாவருடைய கண்ணீரையும் துடைக்கிற ஆண்டவருடைய அன்புக்காக என் ஆண்டவரை ஸ்துதிக்கிறேன்.

அங்குள்ள எல்லா மக்களும் தங்களுடைய இல்லங்களுக்கு எங்களை அழைத்து வரவேண்டும் என்று அங்குள்ள பாஸ்டரைக் கேட்டுக் கொண்டார்கள். கர்த்தர் அனுப்பும் இடங்களுக்கு மட்டுமே அவர்கள் போய் வருகிறார்கள் நீங்கள் அதற்காக ஜெபியுங்கள் என்று கூறி மக்களை அனுப்பி விட்டார்கள்.

மறுநாள் கர்த்தருடைய உத்தரவுப்படி நாங்கள் ஒரு குடும்பத்தை சந்திக்கப் புறப்பட்டோம். சகோதரர் கருணாகரன் எங்களை அழைத்து போக முன்னுக்கு வந்தார். அந்த குடும்பத்தின் தலைவர் இன்னமும் இரட்சிக்கப் படாதவர். பயங்கரக் குடிகாரர்

மனைவி, பிள்ளைகள் மட்டுமே கர்த்தரை ஏற்று இருக்கிறார்கள். கிறிஸ்தவர்கள் யாரும் அவருடைய வீட்டிற்கு செல்லக் கூடாது. ஒரு நாள் இந்த சகோதரர் கருணாகரன் இவர்கள் வீட்டிற்குச் சென்றிருந்த போது அரிவாளை எடுத்து இங்கே வரக் கூடாது என்று மிரட்டி இருக்கிறார். இந்த விவரங்களைக் கருணாகரன் கூறினார். சரி, கர்த்தர் நம்மை அனுப்புகிறபடியால் அந்த பெரியவரைத் தேவன் இன்றைக்கு சந்திப்பார் என்று நாங்கள் சகோதரரிடம் பதில் கூறிக் கொண்டு அந்த வீட்டிறகு கடந்து போனோம்.

எங்களைக் கண்டதும் வீட்டில் அனைவருக்கும் பெரிய மகிழ்ச்சி. ஆனால் பெரியவர் ஏதாவது கலாட்டா செய்து விடக் கூடாதே என்கிற கலக்கமும் ஒரு பக்கம் இருந்தது. நாங்கள் சென்றிருந்த போது அவர் வெளியே போயிருந்தார். சில நிமிட நேரத்தில் வந்தார். வீட்டு பெரியம்மா, "இவர்கள் இந்தியாவில் இருந்து வந்திருக்கிறார்கள்" என்று அவரிடம் எங்களை அறிமுகப் படுத்தினார்கள். சரி, சந்தோஷம்! நான் பைபிள் எடுத்துக் கொண்டு வருகிறேன் என்று கூறிக் கொண்டு வீட்டினுள் போய் பிரெஞ்சு பைபிள் ஒன்று எடுத்துக் கொண்டு வந்து எங்கள் முன் ஆசனத்தில் அமர்ந்தார். வீட்டில் உள்ள யாவருக்கும் கலக்கமாகி விட்டது. பைபிளிலிருந்து ஏதாவது இவர்களிடம் தர்க்கம் செய்ய போகிறாரோ? இவர் ஒரு நாளும் பைபிளை கையில் எடுத்ததே கிடையாதே? என்று எல்லோரும் எண்ணிக் கொண்டு இவர் அடுத்து என்ன செய்யப் போகிறார் என்று இவரையே உற்றுப்பார்த்துக் கொண்டிருந்தனர். சில வினாடிக்குப் பிறகு அவர் பேசினார்: "நேற்று இரவு எனக்கு ஒரு தரிசனம் கிடைத்தது. நீங்கள் இரண்டு பேரும் எங்கள் வீட்டிற்கு வந்திருக்கிறீர்கள் நான் கையில் வேதப் புத்தகத்துடன் உங்கள் முன்னிலையில் அமர்ந்து ஆலோசனை கேட்பதாகக் கண்டேன். ஆகையினால் தான் உங்களைக் கண்டதும் நான் வீட்டினுள் போய் முதலாவது பைபிளை எடுத்துக் கொண்டு வந்து உங்கள் முன் அமர்ந்தேன். இவர்களுக்கெல்லாம் இப்பொழுது ஆச்சரியமாக இருக்கும். நீங்கள் எனக்குப் போதனை கொடுங்கள் நான் அப்படியே இனி நடப்பேன்" என்று கூறினார். இந்த வார்த்தைகளை அவர் கூறினதும், அந்த வீட்டார் அனைவரும் ஆச்சரியப் பட்டு இறைவனை மகிமைப் படுத்தினார்கள்.

(தொடரும்)

Pastor S. Sundarraj
Vallioor.

"காசாபட்டணத்துக்குப் போகிற வனாந்தரமார்க்கமாய்ப் போ என்றான்" அப். 8:26

# BAPTISM AND FILLING OF THE HOLY SPIRIT

Holy Spirit is a greatest gift of GOD to His children and every one must obtain and receive it. In new Testament receiving the Holy Spirit is mentioned as Baptism (II cor. 1 : 21, 22; I Jn. 2: 20, 27). In old Testament time, people were ordained with anionting oil and they were known as anointed. Oil signifies the Holy Spirit. Prophets, kings and priests were anointed with oil. (Eg.) Aaron (Lev. 8 : 12), Saul (I Sam. 9 : 27; 10 : 1); David (I Sam. 16 : (12, 13), Elisha (I kings 19 : 16); Solomon (I kings 1 : 39). Those who had received this kind of anointment were called saints of God. Killing them was counted as an act of great sin. Regarding Saul, David said unto his men, "The LORD forbid that I should do this thing unto my master, the LORD'S anointed, to stretch forth mine hand against him, seeing he is the anointed

of the LORD." So David stayed his servants with these words, and suffered them not to rise against Saul (I Sam. 24 : 6, 7). Likewise those who received the Holy Spirit are the saints of GOD.

What for the Holy Spirit decends and fills a person? The Holy Spirit is given or fills in a person to execute the responsibility and work which are given to him.

GOD chose 70 elders to assist Moses and caused them to stand before the tabernacle with Moses and filled them with Holy spirit. Why? To bear the burden of Israelites with Moses and to assist him in the ministry (Num. 11 : 16—26). Holy Spirit was given unto them to be helpers to Moses, but not to become head. Josuah was authorised and anointed to be a head and lead the Israelites after Moses (Duc. 34 : 9). Children of Benjamin and Juda come to David and volunteered themselves to help him. David went to meet them and enquired, "Do you come peacefully to me? Or have you come here to betray me to mine enemies? At this moment the spirit came upon Amasai, the chief of the captains, and said, "We are thine, thou son of Jesse; we are on your side, peace, peace be unto you, and peace be unto your helpers, for GOD helps you" (I Chro. 12 : 16-18). Here the Holy Spirit decended upon them to help David the man of GOD and to be helpers.

Likewise in New Testament, the Holy Spirit takes dominion over men, filling in them to execute His appointed work efficiently not to usrup over men and to teach. Being unaware of this, men proclaim that spirit has come on them, unwilling to be in subjection, giving place to pride and having not the mind to obey and knowing not their calling start to do ministry and teach and walk contrary to the word of GOD, based upon their own thoughts or devilish dreams. Those who disobey the word of GOD, even if they prophecy, preach and work wonders and miracles, it is evil spirit working in them not Holy Spirit. For example, a woman, who conducts a service prophecy saying, "My children, while I have baptised you with my blood who have asked you to take water baptism. Thus people are taught contrary to the word of GOD. Another woman says, "Child, leave not your mother Church." Which is mother Church? Another man preaches saying, "That servant of GOD is not our community, so don't go there." Thus we can mention many such examples.

But Scripture says, "Repent and be baptized every one of you in the name of Jesus Christ for the remission of sins-Acts. 2 : 38. Baptism means baptism by immersion, not sprinkling. Cleanse it with the washing of water by the word—Eph. 5 : 26. Flee also youthful lusts, but follow righteousness, faith, love, peace with them that call on the Lord out of a pure heart-2 Tim. 2 : 22. ' GOD is a spirit; and they that worship him must worship him in spirit (Holy Spirit) and in truth (Truth in Life)—Jn. 4 : 24." False spirits are prophecying, giving counsel and preaching.

Holy Spirit will never speak through anybody contradict to the word of GOD written by the apostles and saints who were moved by the Holy Spirit. Those who speak like this are the congregation of the evil spirits. GOD will never work against His plan, decree and acts. There is one body and one spirit, even as we are called in one hope of your calling; one LORD, one faith, one baptism—Eph. 4 : 4, 5.

If one sees any vision or dreams a dream, or rejoices in spirit or even if an angel comes and tells or hears from an image in the likeness of Jesus Christ. All things should be based on the word of GOD and that which doesn't coincides with word of GOD must be thrown away. You might have received the Spirit or you may imagine yourself that you have received. Beware of your spirit.

Holy Spirit works in believer as believer, in elder as elder, in evangelist as evangelist, in teacher as teacher, in pastor as pastor, in prophet as prophet and in apostle as apostle. Who are you? Being not aware of it, don't fall in the judgement in which the satan fell saying the spirit which speaks in you is only correct. Are all apostles? are all prophets? are all are teachers? (I Cor. 12 : 29). NO. For GOD is in Heaven and you are upon earth therefore beware of your words (Preach 5 : 2). Every idle word that men shall speak, they shall give account there of in the day of judgement—Mt. 12 : 36 Do you have the Spirit of GOD. If not receive the Holy Spirit and grow in Spirit.

## புதிய எருசலேம் சபை ஊழியர் மாநாடு

நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் புதிய எருசலேம் சபை ஊழியர் மாநாடு 1984 மே 22 (செவ்வாய்) முதல் 31 (வியாழன்) முடிய சென்னை (சைதாப்பேட்டை), நந்தனத்திலுள்ள Y. M. C. A. கல்லூரி காம்பௌண்டிற்குள் நடைபெற கர்த்தருக்குள் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

இதில் புதிய எருசலேம் சபை ஊழியர்கள் மாத்திரம் அனுமதிக்கப்படுவார்கள்.

தேவ ஊழியர் மாநாட்டிற்காய் தேவமக்கள் யாவரும் ஊக்கமாய் ஜெபிக்கவும், உதவி செய்யவும் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் கேட்டுக் கொள்கிறோம்.

## **Form IV** (See rule 8)

| | | |
|---|---|---|
| 1. Place of Publication | | Bombay |
| 2 Periodicity of Publication | | Monthly |
| 3. Printer's Name | | Thamizhosai Atchagam<br>84, Habibullah Road, T. Nagar,<br>Madras-600 017. |
| 4. Publisher's Name | | Chief Pastor N. Lazar |
| (a) Nationality | | Indian |
| (b) Address | — | 7, Triloksingh chawl,<br>Jerimeri, Kurla, Bombay 400072 |
| 5. Editor's Name | — | Chief Pastor N. Lazar |
| (a) Nationality | — | Indian |
| (b) Address | — | 7, Triloksingh chawl,<br>Jerimeri, Kurla, Bombay—400072. |
| 6. Names and Addresses of Individuals who own the news paper and partners of share holders Holding more than 1% of the total capital. | — | New Jerusalem Church,<br>7, Triloksingh chawl,<br>Jerimeri, Kurla,<br>Bombay—400072. |

I Chief Pastor N. Lazar, hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

Dated : APRIL 1984.

Chief Pastor N. Lazar
(Signature of Publisher)
Pudhiya Yerusalem Cheithi.

# புதிய எருசலேம் செய்தி

எக்காள சத்தம்-5 • மே 1984

"புதிய எருசலேம் சபை"

"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ, நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள்.... விழித்திருங்கள்...உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லோருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்..."

மாற்கு 13 : 35-37

**EDITOR: CHIEF PASTOR N. LAZAR**

BOMBAY, INDIA

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லோரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒருமனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும் படியாகவும் தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய்க் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும்; சபையானது வஞ்சக போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது.

(எபே. 4:11-16)

## இதழின் உள்ளே



"பம்பாயில் நடந்த ஞானஸ்நான கூட்டத்தில் 9-3-1984-ல் 13 பேர்களும், ராஜஸ்தான் மாநிலம் கோட்டாவில் நடந்த ஞானஸ்நான கூட்டத்தில் 26-3-1984-ல் 6பேர்களும் அடுத்து குஜராத் மாநிலம் செவாலியாவில் நடந்த ஞானஸ்நான கூட்டத்தில் 31-3-1984-ல் 4 பேர்களும் ஞானஸ்நானம் பெற்று கிறிஸ்துவுக்குள்ளானார்கள். இவர்கள் கிறிஸ்துவுக்குள் பலப்பட்டு தொடர்ந்து நிலைநிற்க எல்லாரும் இவர்களுக்காய் ஜெபிக்கும்படி கேட்டுக் கொள்கிறோம்."

# ஆசிரியர் உரை

கிறிஸ்துவுக்குள் அன்பான சகோதர, சகோதரிகளுக்கு கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் வாழ்த்துக்கள் பல. கர்த்தருடைய ஜனங்களை திசைதிருப்ப திருவசனத்துக்கு மாருன திருப்தியில், மயக்க நிலையில் அற்புத அடையாளங்களின் மோகத்தில், ஊழியம் செய்கிறேம் என்று நினைத்து அந்நிய அக்கினியைக் கொளுத்தும் வேலையில் சாத்தான் ஏவி இயக்கும் கொடிய காலத்தில் இருக்கிறேம். திருவசனத்தின் மாதிரியின்படி இல்லாதவைகள் திருவசனத்துக்கு கீழ்ப்படியாதவைகளெல்லாம் அசுத்த ஆவிகளே. இரட்சிக்கப்படத்தக்கதாய் சத்தியத்தின் மேலுள்ள அன்பைப் பற்றிக் கொள்ளாத யாவரும் கெட்டுப் போகும்படி அவர்கள் பொய்யை விசுவாசிக்கத்தக்கதாக கொடிய வஞ்சகத்தை தேவன் திருவனத்துக்கு கீழ்ப்படியாத மக்களுக்குள் அனுப்பியுள்ளார். இதற்கு இவர்களை நடத்துகிறவர்கள் கையாடும் முறை : சபையாரெல்லாரும் பரிசுத்தமானவர்கள், கர்த்தர் அவர்கள் நடுவில் இருக்கிருர் இப்படியிருக்க மோசேயும் ஆரோனுமாகிய நீங்கள் மிஞ்சிப் போகிறீர்கள் என்று அன்று கோராகு கூட்டத்தார் பேசியது போல் (எண். அதி. 16) தேவனுடைய திட்டத்தை உணர்ந்து மக்களைக் கட்டுப்பாட்டுக்குள் நடத்தும் தேவ ஊழியர்களைப் பற்றி துர்ச்செய்தி பரப்பி பாமர மக்களைப் புகழ்ந்து பேசுவதேயாம். இதனல் தேவஜனங்களில் பெரும் பாலோர் இந்த கோராகு கூட்டத்தாருக்கு செவி கொடுத்துக் கொண்டு வருகின்றனர். இவைகளுக்கு நீங்கள் தப்பி தேவதிட்டத்துக்கும், தேவனல் நியமிக்கப்பட்ட அதிகாரத்துக்கும் கீழ்ப்படிந்து பொறுமையோடு இந்த விசுவாச ஓட்டத்தில் ஓடி முடிக்க இயேசுவின் நாமத்தில் கேட்டுக்கொள்கிறேன்.

இதோ கர்த்தர் வருகிருர்.

கிறிஸ்துவுக்குள்,

Chief Pastor N. LAZAR

# அப்போஸ்தலர்கள்

ஆதி அப்போஸ்தலர்கள் பன்னிரண்டு பேர். அவர்களுடைய பெயர்களாவன: அப் : பேதுரு, அந்திரேயா, யாக்கோபு, யோவான், பிலிப்பு, பற்தொலொமேயு, தோமா, மத்தேயு, யாக்கோபு, ததேயு (லெபேயு), கானானியனாகிய சீமோன், யூதாஸ்காரியோத்துக்குப் பதில் மத்தியா என்பவைகளே. இவர்கள் இயேசு கிறிஸ்துவின் உயிர்த்தெழுதலைக் குறித்து சாட்சி கொடுக்கும்படி ஏற்படுத்தப்பட்டவர்களாகும். நாம் எல்லோருமே (கிறிஸ்தவர்கள்) சாட்சிகள்தான். என்றாலும் ஆதி அப்போஸ்தலர்கள் விசேஷித்த விதமாய் யோவான் ஞானஸ்நானம் கொடுத்த நாள் முதற்கொண்டு நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவானவர் இவ்வுலகத்தில் செய்த ஊழியம், அவருடைய பாடு, மரணம் ஆகியவைகளையும் விசேஷமாய் அவருடைய உயிர்த்தெழுதலையும், பரமேறுதலையும் கண்ணாரக் கண்ட சாட்சிகளாய் இருந்தனர். அவருடைய சாட்சிகளே நாம் விசுவாசிக்கிற வேதமாகும்—

அப். *1* : **21, 22;** *2* : **22—24, 31, 32;** *3* : **14, 15;** *4* : **10 — 12 ;** *4* : **18—20, 33;** *5* : **29 — 32;** *10* : **39—43;** I யோ. *1* : *1—3*. இவர்கள் வரிசையிலே அப் பவுலும், பர்னபாவும், கர்த்தருடைய சகோதரர்களான யாக்கோபும், யூதாவும், அன்றோனீக்கும், யூனியாவும் இடம் பெறுகின்றனர். இவர்களெல்லாரும் அப்போஸ்தலர்களே.

இவர்கள் எல்லாரும் உயிர்தெழுந்த கிறிஸ்துவைக் கண்டார்கள்—1 கொரி. 15: 1 8. இவர்களுடைய வார்த்தைகளும் (பேசப்பட்டவைகள்) எழுதப்பட்டவைகளும் வேதமாகும் (புதிய ஏற்பாடு). அப்போஸ்தலர்களுக்கென்று தேவன் விசேஷித்த வாக்குத்தத்தங்களை அருளினர். அவர்கள் கூடி வரும்போது இயேசுதாமே அவர்கள் நடுவிலிருப்பதாகவும் (மத். 18: 20), அவர்களைப் பரிசுத்த ஆவியானவர் சகல சத்தியத்துக்குள்ளும் நடத்துவார் என்றும், (யோ. *16* : *13*), சகல சத்தியமும் அவர்களுக்கு ஞாபகப்படுத்தப்படும் என்றும், போதிக்கப்படும் என்றும் (யோ. *14* : *26*), வரப்போகிற காரியங்கள் அவர்களுக்கு வெளிப்படுத்தப்படும் என்றும் (யோ. *16* : *13*), உலகத்தின் முடிவுவரை இயேசுதாமே அவர்களுடனேகூட இருப்பதாகவும் வாக்கருளினர் (மத். *28* : *20*). இந்த வாக்குத்தத்தங்கள் எல்லாம் விசேஷித்த விதமாய் அப்போஸ்தலர்களுக்கே பொருந்தும். அப்போஸ்தலரல்லாத மற்றவர்கள் ஒருவரும் தாங்களுக்கு சகல சத்தியத்திற்குள்ளும் நடத்தப்படுவதாகவோ சகலசத்தியமும் தங்களுக்கு தெரியுமென்றோ வரப்போகிற காரியங்கள் தங்களுக்கு தெரியும் என்றோ சொல்லக்கூடாது, சொல்ல முடியாது.

ஆம், தேவன் புதிய ஏற்பாட்டை எழுதிய அப்போஸ்தலர்களை, பரிசுத்தவான்களை, சகல சத்தியத்திற்குள்ளும் நடத்தினர். சகல சத்தியத்தையும் படிப்படியாய் அவர்களுக்குப் போதித்தார். வரப்போகிற காரியங்களை அறிவித்தார், இப்படியாக அப். போஸ்தலனாகிய யோவான் உயிரோடிருக்கும்வரை (இவர்தான் கடைசியில் மரித்த அப்போஸ்தலனாகும்) கி. பி. 110 வரை வேதம் வெளிப்பட்டுக் கொண்டிருந்தது. புதிய ஏற்பாடு (வேதம்) கி. பி. 110 க்குள் எழுதப்பட்டு முடிந்தது. வேதத்தை எழுத அப்போஸ்தலர்களோடு சேர்ந்து பெரும் பங்கு ஏற்றவர் அப். பவுலாகும். பரிசுத்த லூக்காவும், மாற்கும் முறையே, அப். பவுலினிடமிருந்தும் அப். பேதுருவினிடதும் கேட்டு, கற்று தங்கள் நூல்களை எழுதினர்கள். பரிசுத்த ஆவியானவர் மேற்கண்டவைகளைத் தூண்டி புதிய ஏற்பாட்டை (வேதம்) எழுதச் செய்தார்.

காரணம் இவர்கள் காலத்திலே சிலர் தங்களை அப்போஸ்தலர்கள் என்று சொல்லிக் கொண்டு, எழும்பி மாறுபாடானவைகளைப் போதித்தனர். மேலும் தங்களுக்குப் பின் கள்ள அப்போஸ்தலர்கள் பலர்

எழும்புவார்கள் என்றும், பலர் சபைக்குள் இருந்தும் எழும்புவார்கள் என்றும், வெளியே இருந்தும் கொடிதான ஓநாய்கள் உள்ளே வந்து சீஷர்களை தங்களிடத்தில் இழுத்துக் கொள்ளும்படி மாறுபாடானவை களைப் போதிப்பார்கள் என்றும் அப்போஸ் தலர்கள் முன்னறிந்தனர். அதுவுமல்லாமல் அப்போஸ்தலர்களால் கட்டளைப்பெறாத (அதிகாரம் பெறாத) சிலர் புறப்பட்டு வேறு சுவிசேஷத்தை பிரசங்கித்து ஆத்துமாக்களை கலக்கி புரட்ட ஆரம்பித்தபடியினாலும்; பரிசுத்தாவியானவர் தூண்டுதலினால் அப்-போஸ்தலர்கள் புதிய ஏற்பாட்டை (வேதம்) எழுதி முடித்தார்கள். கள்ள அப்போஸ் தலர்களை, ஊழியர்களைப் (II கொரி. 11 : 3, 4, 13—16; பிலி. 3 : 17—19; II தெச. 3 : 6—15; அப். 20 : 28—30; 15 : 24; I யோ. 2 : 18, 19; 4 : 1—6; IIயோ. 7—11) பற்றி சபையை எச்சரிக்கவும், உண்மையான தெய்வீக உபதேசங்களை நிலை நாட்டவும், தங்கள் காலத்திலேயே நடந்த உண்மை சம்பவங் களையும், சத்தியங்களையும், ஆதி அப்போஸ் தலர்களும், பரிசுத்தவான்களும், பரிசுத்த ஆவியின் தூண்டுதலினால் எழுதி வைத் தனர். இதை முன்னிட்டு உறுதியாய் எழுதி, உறுதிப்படுத்தி, வேறொரு சுவிசேஷம் இல்லையே! என்று எழுதி வைத்தார்கள். (கலா. 1 : 6—10).

ஆதி அப்போஸ்தலர்கள் பன்னிரண்டு பேருக்குப்பின் அப்போஸ்தலர்கள் இல்லை என்று சிலர் சொல்லுகிறார்கள். அது தவறு. அல்லது புதிய ஏற்பாடு எழுதப்பட்ட பின்பு அப்போஸ்தலர்கள் கிடையாது என்று சிலர் சொல்லுகிறார்கள். இதுவும் தவறு. திருச் சபைக்கு தேவன் அப்போஸ்தலர்களை தலைமையானவர்களாக கொடுக்கிறார் I கொரி. 12 : 28; எபே. 4 : 11—16. மேலும் இதோ உலகத்தின் முடிவு பரியந்தம் (இந்த யுகம் முடியும் மட்டும்) சகல நாட் களிலும் நான் உங்களுடனே கூட இருக் கிறேன் என்று திருச்சபையின் தலைவராகிய கர்த்தராகிய இயேசுகிறிஸ்து சொன்னபடி யால் (மத். 28: 18 - 20). இந்த யுக முடி விலும் திருச்சபை இருக்கும் என்றும், அப்-போஸ்தலர்களும் இருப்பார்கள் என்றும் கர்த்தர் வாக்கருளியுள்ளார் (மத். 28 : 18-20.) வேதத்தை எழுதுவதற்கல்ல, எழுதப்பட்ட வேதத்தை நடைமுறைக்குக் கொண்டுவர அப்போஸ்தலர்கள் தேவை.

ஆதி அப்போஸ்தலர்கள் பன்னிரண்டு பேரும் (யூதாஸ் போக பதினோர் பேர் + மத் தியா) கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவோடு கூட இருந்தவர்கள். நம்முடைய கர்த்தரா கிய இயேசு கிறிஸ்து பாடுபட்டு மரித்து, அடக்கம் பண்ணப்பட்டு, உயிர்த்தெழுந்து அப்போஸ்தலர்களுக்கு தரிசனமாகி அவர் களுக்கு கட்டளையிட்டு உலகத்திற்குள் அனுப்பினார்-அப். 1 : 1; யோவா. 20 : 21-23; இவர்களுக்குப் பின் கர்த்தர் யாரையாவது அப்போஸ்தலனாக எழுப்புகிறார் என்றால் அவர்களுக்கு இருக்க வேண்டிய தகுதி கள்:

I அவர்கள் உயிர்த்தெழுந்த கர்த்தரை தரிசித்திருக்க வேண்டும்— I கொரி. 9 : 1; 15 : 2 - 10 ; அப். 10 : 40—42.

II அவர்கள் கர்த்தரால் அப்போஸ்தலர் களாக அழைக்கப்பட்டு கர்த்தரிடத்தில் ஊழியம் பெற்றிருக்கவேண்டும்-கலா. 1 : 1; ரோம 1 : 1; I கொரி. 1 : 1; II கொரி. 1 : 1; I தீமோ. 1 : 12; II கொரி. 13 : 10

III கர்த்தராகிய இயேசுகிறிஸ்து அஸ்திபார உபதேசங்களை மறுபடியும் அவர்களுக்கு நேரடியாக வெளிப்படுத்தி ஒப்புக்கொடுத் திருக்க வேண்டும்.

(உ-ம்) அப். பவுலை அப்போஸ்தலனாக கர்த்தர் அழைத்த போது மூல சத்தியங் களை ஏற்கனவே இருந்த அப்போஸ்தலர் களாகிய பேதுருவினிடத்திலோ, யாக்கோபி னிடத்திலோ, யோவானிடத்திலோ போய் கற்றுக்கொள்ளும்படி விட்டுவிடவில்லை. நேரடியாகவே போதித்தார், கற்றுக் கொடுத் தார். அப். பவுல் அப்போஸ்தலன் என்ப தற்கு இது முக்கிய ஆதாரமாகும் (கலா. 1 : 11, 12, 18, 19; 15—17; 2 : 2, 6). ஆனபடி யினால் நான் உங்களுக்கு ஒப்புவித்ததை கர்த்தரிடத்தில் பெற்றுக் கொண்டேன், அதென்னவெனில் என்று சொல்லுகிறார்

(I கொரி. 11 : 23—26; 15 : 2—11; எபே. 3 : 1—11) இவர் உபதேசித்த, பிரசங்கித்த வைகள், இவருக்கு முன்னிருந்த ஆதி அப்போஸ்தலர்களாலும், சபையாராலும் மற்ற அப்போஸ்தலர்களாலும் ஒப்புக்கொள்ளப் பட்டதும், ஏற்றுக்கொள்ளப்பட்டதுமாயிருந்தது (கலா. 2 : 1, 2; அப். 15 : 1– 29, 40, 41;16 : 1-5).

IV அப்போஸ்தல வரம் அவர்களிலே இருக்க வேண்டும். வரங்களிலே பிரதான வரம் அப்போஸ்தலவரமாகும். பற்பல வரங்களையும், வல்லமைகளையும், அற்புதங்களையும், அடையாளங்களையும் நடப்பிக்கிற பரிசுத்தாவியானவர் இவைகளை நடப்பிக்கிறவர்களை அப்போஸ்தலருக்கு கீழ்ப்படுத்தினார். பற்பல வரங்களையும், வல்லமைகளையும் அற்புதங்களையும், அடையாளங்களையும், தீர்க்கதரிசன வரங்களையும், குணமாக்கும் வரங்களையும் நடப்பிக்கிறவர்கள் அப்போஸ்தலருக்கு கீழ்ப்பட்டிருந்தார்கள்– I கொரி. 12 : 28; எபே. 4 : 11-13 ; அப் 6 : 1-7. இந்த அப்போஸ்தலவரம் இல்லாதவன் அப்போஸ்தலனல்ல. அப்போஸ்தல வரமில்லாதவர்களுக்கு கீழுள்ள ஊழியர்களும் சபையாரும் கீழ்ப்படிந்து கட்டுப்பட்டு இருக்கமாட்டார்கள் (ரோமர் 1: 6 , 7)

V அப்போஸ்தலர் சுயாதீனர். அவர்களை மனிதர்கள் நியாந்தீர்க்கக் கூடாது —Iகொரி. 9 : 1; 4 : 4 ; அப்போஸ்தலர்கள் தேவனால் அனுப்பப்பட்டவர்களானபடியினால் அவர்கள் சுயாதீனர். அவர்கள் விவாகம் முடிக்கலாம்; முடியாமலும் இருக்கலாம். கைத்தொழில் செய்யலாம், செய்யாமலும் இருக்கலாம் அவர்கள் சுயாதீனர். ஆனால் சபைக்கு முன்மாதிரியாக இருப்பார்கள் (Iகொரி. 9 : 1 - 6; பிலி. 4 : 9 ; I தெச. 2 : 9, 10 ; II கொரி 8 : 20, 21).

சிலர் விவாகம் முடிக்காதவர்களே அப்போஸ்தலர்கள் என்று சொல்லி லூக். 14 :25 — 27 ; மத். 10 : 36—39யும் மத். 19 : 3 - 12 யையும் சுட்டி காட்டுகிறார்கள். இங்கே சொல்லப்பட்ட வசனங்கள் ஒவ்வொரு கிறிஸ்தவனையும் (சீஷன்) பார்த்து இயேசு கிறிஸ்துசொல்லுகிறாரே யொழிய அப்போஸ்தலனைப்பற்றியல்ல. இவ்வசனங்கள் அப்போஸ்தலனைப்பற்றி சொல்லப்பட்டதாக திரித்து கூறுவது தவறு காண்க—மத். 19: 10. பேதுரு ஒரு முறை இயேசுவை நோக்கி இதோ நாங்கள் எல்லாவற்றையும் விட்டு உம்மைப் பின் பற்றினோமே என்று சொல்லத் தொடங்கிய போது கர்த்தர் கொடுத்த மாறுத்தரமாவது என்னிமித்தமாவது, சுவிஷேசத்தினிமித்தமாவது, வீட்டையாவது, சகோதரனையாவது, சகோதரிகளையாவது, தகப்பனையாவது, தாயையாவது, மனைவியையாவது, பிள்ளைகளையாவது, நிலங்களையாவது விட்டவன் எவனும் இம்மையில் பதில் நன்மை பெறுவானென்றும், மறுமையில் நித்திய ஜீவனையும் அடைவான் (மாற். 10 : 28 - 31) என்றும் சொல்லி, ஆயினும் முந்தினோர் அநேகர் பிந்தினோராயும், பிந்தினோர் அநேகர் முந்தினோராயும் இருப்பார்கள் என்றார். இது அப்போஸ்தலர்களை பற்றி மாத்திரம் கூறப்பட்டதல்ல. இந்த வசனங்களை ஆதாரமாக வைத்து சிலர் விவாகம் முடிக்கக் கூடாதுஎன்றும், விவாகம் முடித்திருந்தாலும் மனைவியை விட்டுவிட வேண்டும், இப்படி விவாகம் முடிக்காதவனே அப்போஸ்தலன் என்றும் சொல்லுகிறதாக தெரிகிறது. இவர்கள் கள்ள அப்போஸ்தலர்கள், கபடமுள்ள வேலையாட்கள், அப்போஸ்தலருடைய வேஷத்தை தரித்திருக்கிறவர்கள். இந்த உபதேசம் (விவாகம் முடிக்கக்கூடாது என்று உபதேசிப்பது) பிசாசின் உபதேசம். இது கடைசிகாலத்தில் தோன்றும் என்று அப்போஸ்தலர்கள் ஏற்கனவே எச்சரித்திருக்கிறார்கள்—Iதீமோ 4 : 1 - 5. கண்காணியானவன் ஒரே மனைவியையுடைய புருஷனாயிருக்க வேண்டும். ஒருவன் தன் சொந்த குடும்பத்தை நன்றாய் நடத்த அறியாதிருந்தால் தேவனுடைய சபையை எப்படி விசாரிப்பான்—Iதீமோ 3 : 1 -5 ; I கொரி. 9 : 5. அப். பவுல் விவாகம் முடிக்க வில்லை என்பது சிலருடைய அபிப்பிராயம். அதுவும் தவறு. அவர் யூத சனதரிம் சங்கத்தில் ஒரு அங்கத்தினராக இருந்தார். ஸ்தேவான் கொலை செய்யப்படுவதற்கு இவர் சம்மதித்

தார் (அப்.22:20;) 7:58 யூத சனதரிம் சங்கம் 70 (எழுபது) பேர்களை கொண்டதாகும். இதிலே அங்கமாய் இருக்கிறவர்கள் விவாகஸ்தலர்களாக இருக்க வேண்டும். இவர் அப்போஸ்தலனாக ஊழியம் செய்கிற காலத்தில் இவருடைய மனைவி இறந்து விட்டார் என்று தெரிகிறது. அவர் விவாகமே முடியாதவர் என்று சொல்வது தவறு அவனவனுக்கு கர்த்தரால் அருளப்பட்ட வரமுண்டு. அது ஒருவனுக்கு ஒருவிதமாயும் இன்னொருவனுக்கு இன்னொரு விதமாயும் இருக்கிறது. ஆனபடியால் நீ மனைவியோடே கட்டப்பட்டிருந்தால் அவிழ்க்கப்பட வகை தேடாதே. நீ மனைவி இல்லாதிருந்தால் மனைவியைத் தேடாதே என்றும் மனைவியைத் தள்ளி விடக்கூடாதென்றும், விரத்தராயிருக்க கூடாதென்றால் வேகிறதைக் காட்டிலும் விவாகம் பண்ணுகிறது நல்லதென்றும் எழுதுகிறார் (Iகொரி. 7 : 27, 9—13). ஒரு சில அப்போஸ்தலர்களைத் தவிர மற்ற அப்போஸ்தலர்கள் எல்லாரும் மனைவியோடே கர்த்தரை சேவித்தார்கள் (I கொரி. 9 : 5). சபை மேய்ப்பன் விவாகஸ்தனாக இருக்க வேண்டும். இதுகர்த்தருடைய ஆலோசனையாகும்.

VI அப்போஸ்தலனுடைய அதிகாரங்களில் ஒன்றுகட்டவும், கட்டவிழ்த்தலுமாகும். பாவங்களை மன்னிக்கவும், மன்னியாதிருக்கவும் அப்போஸ்தலருக்கு அதிகாரம் உண்டு—மத். 16 : 16— 19; யோ. 20: 21—23. அவர்கள் மன்னிக்கிறது பரலோகத்தில் மன்னிக்கப்படுகிறது. அவர்கள் மன்னிக்காதது பரலோகத்திலும் மன்னிக்கப்படுவதில்லை (மத். 16 : 19; IIகொரி. 2 : 10; Iகொரி 5: 3 — 4 ; அப். 5 : 1 — 10) பாவங்களை மன்னிக்கும் அதிகாரம் அப்போஸ்தலனுக்கு உண்டு. அது இல்லாதவர்கள் அப்போஸ்தலனாக அனுப்பப்படவில்லை என்பது உறுதி (யோ. 20 : 21 - 23).

VII அப்போஸ்தலனே சபைக்கு அஸ்திபாரம். அவர்களாலே சபை எழுப்பப்பட வேண்டும். அப்போஸ்தலனால் எழுப்பப்படாதவைகள் வெற்றியடையாது. அவைகள் திருச்சபைகளும் அல்ல. வெறும் சங்கங்களும், சொஸைடிகளும் (Society), மிஷனரிஸ்தாபனங்களும், ஜெபக்குழுக்களுமே ஆகும். (மத் 16 : 18, 19; I கொரி 3 : 10, 11) அப்போஸ்தலர்களுடைய ஆளுகையில் உள்ள சபைகளில் இவர்களுடைய (அப்போஸ்தலனுடைய) ஆவி பிரசன்னமாயிருக்கும்— Iகொரி. 5 : 3 — 5, 13. இவர்களில் அப்போஸ்தல அடையாளங்களும், அற்புதங்களும், வல்லமைகளும், தெய்வீக குணதிசயங்களும் காணப்படும்—ரோம 15 : 15 — 21; IIகொரி 12 : 12. இவர்களிலிருந்து கிறிஸ்துவானவர் கிரியை செய்வார். இப்படிப்பட்ட அப்போஸ்தலனை ஏற்றுக் கொள்வதும், அவர்களோடு ஐக்கியமாய் இருப்பதுமே கர்த்தரோடு கூட இருப்பதாகும்— யோ. 13 : 20; லூக். 10 : 16; மத். 12 : 30; அப். 2 : 42 ; I யோ 1 : 1 — 3. தேவன் மெய்யான சபைக்கே அப்போஸ்தலர்களைக் கொடுக்கிறார். அப்போஸ்தலன் இல்லாதது சபையல்ல. ஆதி அப்போஸ்தலர்களுக்கு தேவன் உயிர்த்தெழுந்தபின் தரிசனமாகி கட்டளையிட்டது போல் யாருக்கு கர்த்தர் கட்டளையிடுகிறாரோ அவனே பிரதான அப்போஸ்தலன். அது வேதத்துக்கு ஒத்ததாய் இருக்கும். இவருடைய ஐக்யத்திற்குள் அப்போஸ்தலர்கள் தோன்றுவார்கள்.

இவர்களே அப்போஸ்தலர்கள் ஆகும்.

ஆமென்!

"...சீலோவாம் என்பதற்கு அனுப்பப்பட்டவன் என்று அர்த்தமாம்." (யோவா 9 : 7).

## சுவிசேஷம்

எதையாவது (ஒன்றையோ, பலவற்றையோ, சார்ந்திருக்கும்படியே மனிதன் சிருஷ்டிக்கப்பட்டிருக்கிறான். நான் தன்னிச்சையாய், சுயாதீனமாய் ஒன்றையும் சாராது இவ்வுலகத்தில் வாழ்ந்து காட்டுவேன் என்று ஒருவன் சொன்னால் அவன் இன்னும் ஆரம்ப அறிவையே எட்டவில்லை என்றுதான் அர்த்தம். பிறந்த குழந்தை தாயைச்

அதுதான் உண்மை.

சார்ந்து வாழ்கிறது. வளர்ச்சியடைந்த மனிதன் தன் தேவைகளைச் சந்திக்கும் சமுதாயத்தைச் சார்ந்து வாழ்கிறான். ஒன்றையும் சாராமல் தனித்து வாழ ஒருவன் முயற்சி செய்தாலும் அவன் இயற்கையையாவது சார்ந்தே வாழ்ந்தாக வேண்டும். ஆக ஒவ்வொரு மனிதனும் பிரிதொன்றைச் சார்ந்தே வாழ்கிறான், வாழ வேண்டியவனாய் இருக்கிறான். இன்ன பிற ஜீவராசிகளும் ஒன்றையொன்று சார்ந்தே வாழ்கிறது. சூரிய சந்திர மண்டலங்களும், வானத்தில் ஓடி விளையாடும் ஏனைய கோள்களும் கூட ஒன்றையொன்று சார்ந்தே இயங்குகிறது. உலகத்தினுள் உள்ள எல்லா இயக்கங்களும் சார்பு இயல் தத்துவத்தில் அடங்கும் என்பது அறிஞர்களின் தெளிவு. ஆக, சார்ந்து இயங்க வேண்டியவைகள் அப்படி இயங்க மறுத்தால் கோள்கள் ஒன்றோடொன்று மோதி சேதமுண்டாகும். மனிதனை மனிதன் சாராது வாழ விரும்பும்போது மனஸ்தாபங்கள், கலக்கங்கள், போராட்டங்கள் இன்ன பல தீமைகள் உருவாகிறது. இயற்கையுடன் சார்ந்து வாழ்வதில் தவறும் போது நோய்களும், முறையற்ற மன வளர்ச்சிகளும், பஞ்சங்களும், பட்டினிகளும் உருவாகிறது. எப்படியோ சார்ந்து வாழ வேண்டியவைகள், இயங்க வேண்டியவைகள் தவறும் போது — மறுக்கும் போது — அனேக தீமைகள் உருவாகிறது.

நீயும் ஏதாவது ஒன்றையோ பலவற்றையோ சார்ந்து வாழும்படியே நியமிக்கப்பட்டிருக்கிறாய். அதைக் குறித்து நீ அறிந்திருக்கிறாயா? சிந்தித்ததுண்டா? இல்லையென்றால் சிந்திக்கும்படி உனக்கு இப்போது சமயம் கொடுக்கப்படுகிறது. மனிதனின் உண்மையான சிந்தனைகளே செயல் வடிவம் பெற்று அனேக ஆக்க சக்திகள் ஆகின்றன.

ஆக, சார்ந்து வாழும்படி உண்டாக்கப்பட்ட மனிதன் அதை பூரணமாய் அனுபவிக்க முடியாமல், அவன் தேவைகள் நிறைந்தவனாய்—ஏமாற்றமுள்ளவனாய் அங்கும் இங்கும் அலைந்து திரிந்து கொண்டிருக்கிறான். அதன் அடிப்படைக் காரணம் தான் என்ன? அது அவன் இறைவனைச் சார்ந்து வாழ வேண்டியதின் இரகசியமே. ஆம் மனிதன் இறைவனைச் சார்ந்து வாழ வேண்டியவனே என்பதை உனக்கு அறிவிக்கிறேன். நீ இறைவனைச் சார்ந்து வாழும் போதுதான் மற்றவைகள் உனக்குச் சார்பாக இயங்கும். "முதலாவது தேவனுடைய ராஜ்யத்தையும் அவருடைய நீதியையும் தேடுங்கள், அப்பொழுது இவைகளெல்லாம் உங்களுக்குக் கூட கொடுக்கப்படும்" என்று இறைவன் சொல்லுகின்றார். ஆம் சகோதரனே! உன் தேவைகள் சந்திக்கப்படாமலிருப்பதும், உன்னைச் சுற்றியிருப்பவைகள் எல்லாம் உனக்குச் சார்பாக இயங்க மறுப்பதின் காரணம் நீ இறைவனைச் சேர்ந்து வாழவேண்டியவன் என்பதை மறந்ததே! நீ செய்கிறவைகள் வாய்க்காது ஏமாற்றமுள்ளவனாய் வாழ்வதின் காரணம் அதுவே! நான் ஏமாறவில்லை என்று வெளியரங்கமாய் நீ சொன்னாலும் தனிமையாய் நீ உட்கார்ந்து உன்னை ஆராய்ந்தால் நீ எவ்வளவு ஏமாளியாய் உலகத்தில் வாழ்ந்து கொண்டிருக்கிறாய் என்பது புரியும். அனேக வேளைகளில் நீயே உன்னை ஏமாளியாக்கிக் கொண்டிருப்பதும் உனக்குப் புலனாகும். இறைவனைச் சார்ந்து வாழ்பவனைப் பற்றி கிறிஸ்தவர்களின் திருமறை "அவன் நீர்க்கால்களின் ஓரமாய் நடப்பட்டு, தன் காலத்தில் தன கனியைத் தந்து இலையுதிராதிருக்கிற மரத்தைப் போலிருப்பான் அவன் செய்வதெல்லாம் வாய்க்கும்," என்று கூறுகிறது. ஆம் சகோதரனே நீ உன்னை உண்டாக்கின உன் இறைவனை நீ சார்ந்து வாழ்ந்தால் நீ செய்வதெல்லாம் வாய்க்கும்.

இறைவனைச் சார்ந்து வாழ வேண்டிய நீ அதை மறுத்தால், எதிர்த்தால் உன் வாழ்க்கை ஏமாற்றமுள்ளதும் சமாதானமில்லாததுமாகவே முடியும். நீ பிரயாசப்பட்டாலும் ஒன்றும் உனக்கு வாய்க்காது. உலகத்தில் நீ சார்ந்து வாழ்ந்துகொண்டிருப்பவைகளும் நிரந்தரமானவைகள் அல்ல. எப்போதும் உனக்குக் கைக் கொடுக்கிறது-

கொஞ்சம் யோசித்து பாருங்கள் - மனிதர்களே.

மில்லை. மனிதனை மனிதன் ஏமாற்றுகிற தில்லையா? சமுதாயத்தில் ஏமாந்தவர்கள் இல்லையா? இயற்கைக் கூட உன்னை ஏமாற்றுகிறதை நீ உணர்ந்ததில்லையா? நீ பிரயாசப்பட்டு விதைத்தாலும் மழை பெய்து பூமி தன் பலனை கொடுக்கவில்லையென்றால்... அது உனக்குச் சார்பாக இயங்க மறுத்தால்... ஆம் சகோதரனே! அனேக வேளைகளில் உன் நண்பர்களும் உன் குடும்பத்தாரும் கூட உனக்குக் குழி வெட்டுகிறார்கள் என்பதை யோசித்ததுண்டா?

மனிதன் நம்பியிருக்கிறவைகளும் சார்ந்திருக்கிறவைகளும் மாறிக்கொண்டிருக்க, மாறாத அவன் அவசியம் சார்ந்து வாழவேண்டிய இறைவன் ஒருவர் உண்டு. நீ சுகமாய் வாழும்படி ஒரு போதும் உன்னைக் கைவிடாத ஒருவர் உண்டு. அவர் உனக்காய்த் தன்னை தியாகம் செய்தவர். உன் நல்வாழ்க்கையாய், நீ ஜீவகாலமெல்லாம் திருப்தியாய் வாழ்வதற்காய் தன்னையே பலியாகச் செலுத்தியவர். அவர் தான் இயேசுகிறிஸ்து என்பவர். உலகம் முழுவதும் சமாதானமாய் வாழும்படி தன்னையே அர்ப்பணித்தவர். நாம் செய்த பாவங்களுக்காய் தன் கைகளிலும் கால்களிலும் தலையிலும் ஆணிகளால் அடிக்கப்பட்டவர். "நம்முடைய மீறுதல்களினிமித்தம் அவர் காயப்பட்டு, நம்முடைய அக்கிரமங்களினிமித்தம் அவர் நொறுக்கப்பட்டார். நமக்குச் சமாதானத்தை உண்டு பண்ணும் ஆக்கினை அவர் மேல் வந்தது. அவருடைய தழும்புகளால் குணமாகிறோம்" (ஏசா. 53 : 5).

நீ இறைவனைச் சார்ந்து வாழும்படி இறைவனின் பிள்ளையாய் ஜீவிக்கும்படி உன்னைத் தன்னோடு ஐக்கியப் படுத்தும்படி தன்னையே உனக்காக ஒப்புக்கொடுத்த உன் இரட்சகர் அவர், உன்னைத் தேடுகிற தேவன் அவர் ஆம் நாள்தோறும் அவர் உன்னைத் தேடுகிறார்.

மனந்திரும்பி இயேசுகிறிஸ்துவை ஏற்றுக்கொள்ளுங்கள். அப்போது உங்கள் ஆயுசு நாட்கள் அருமையானதாயிருக்கும். மாறாத உன் நேசர் இயேசுவை நீ அறியாமலிருந்தால், அறிந்திருந்தும் மனந்திரும்பாமல் காலம் தாமதிப்பாயேயானால் இதோ! தேவ அழைப்பு மறுபடியும் உனக்கு கடந்து வருகிறது. அவரை அல்லாமல் உனக்கு வேறு இரட்சகர் இல்லை. அவரை ஏற்றுக்கொள், அப்போது அவர் உன்னை மேன்மைப் படுத்துவார்.

ஆமென்!

---

"பொய்யான மாயையைப் பற்றிக் கொள்ளுகிறவர்கள் தங்களுக்கு வரும் கிருபையைப் போக்கடிக்கிறார்கள்" (யோனா 2 : 8).

---

## வேத பாடம்

ஆதி. 12:10-20 ஆபிரகாம் எகிப்துக்குப் போகுதல். தேசத்தில் பஞ்சம் உண்டானதால் எகிப்திலே போய் பஞ்சம் பிழைக்கும்படி எல்லோரும் போனார்கள், அப்படியே ஆபிராமும் போனார். அது தவறல்ல என்று நாம் நினைக்கலாம். ஆனால் தேவனால் அழைக்கப்பட்ட விசுவாசியாகிய ஆபிராம் தேவ ஆலோசனையில்லாமல் எகிப்துக்குப் போயிருக்கக் கூடாது.

2 16· ஆபிராம் சௌந்தர்யவதியாகிய தன் மனைவியினிமித்தம் தன்னை தேவ பயமற்ற துன்மார்க்கர் கொன்று போடுவார்கள் என்று பயந்து அவளை சகோதரி என்று பிறரிடம் பொய் சொல்லப்போய் சாராயை எகிப்தின் ராஜா தன் அரண்மனைக்கு கொண்டு போய் விட்டான்,

17: தேவன் தம்முடைய தாசனின் சொத்தை பாதுகாக்க கடமைபட்டுள்ளார். தேவன் பார்வோனையும், பார்வோனின் குடும்பத்தாரையும் மகா வாதைகளினல் வாதித்தார். காரணமறிந்து பார்வோன் பயந்தான்.

18 -20 : ஆபிராமை அழைத்து தன் மனைவியை சகோதரி என்று பொய் சொன்னதற்காக கடிந்து கொண்டு சாராயை அழைத்து போகும்படி சொல்லி அவர்களுக்கு தீங்கு செய்யாதபடி அவர்களை அனுப்பிவிடும்படி தன் மனுஷருக்கு கட்டளையிட்டான். பார்வோன் ஆபிராமுக்கு நிறைய சன்மானங்களையும் கொடுத்தான்.

13 : 1—4 பெத்தேலுக்கும் ஆயிக்கும் நடுவாக தான் முன்பு கூடாரம் போட்ட இடத்திற்கு வந்து தங்கினன். அங்கு ஒரு பலிபீடம் கட்டி கர்த்தருடைய நாமத்தை ஆபிராம் தொழுது கொண்டார். எகிப்திலிருக்கும் வரை ஆபிராம் கர்த்தரைத் தொழுது கொண்டதாகத் தெரியவில்லை.

13 : 5—13 ஆபிராமுடன் வந்திருந்த லோத்துவுக்கு ஆடுமாடுகள் இருந்தன. ஆபிரகாமுக்கும் ஆடு, மாட்டு மந்தைகள் இருந்தன. லோத்தின் மந்தை மேய்ப்பருக்கும், ஆபிரகாமின் மந்தை மேய்ப்பருக்கும் அடிக்கடி மேய்ச்சல் நிலங்களைப்பற்றிவாக்கு வாதங்கள் உண்டானபடியால் ஆபிராம் லோத்தை நாம் சகோதரர் நாம் சண்டை போடக்கூடாது நீ வசதியான இடத்திற்கு என்னைவிட்டுப் பிரிந்து போ, நீ தெற்கே போனல் நான் வடக்கே போகிறேன் என்ருர். அப்பொழுது லோத்து ஏதேனைப்போல் செழிப்பாய்க்காணபபட்ட சோதோம் கொமாராவைத் தெரிந்து கொண்டு அந்தப்பக்கமாக பிரிந்துபோனர். சோதோமின் ஜனங்கள் கர்த்தருக்கு முன்பாக மகாபாவிகளாயிருந்தனர். ஆபிராமோ கானனில் குடியிருந்தார்.

13 : 14—17 லோத்து ஆபிராமை விட்டுப் பிரிந்தபின் மறுபடியும் கர்த்தர் ஆபிராமோடு பேசி வாக்குத்தத்தங்கள் கொடுத்து ஆசீர்வதிக்கிருர். தேசத்தின் நீளம், அகலம் எம்மட்டோ, அம்மட்டும் நட, இத்தேச மெல்லாவற்றையும் உனக்கு தருவேன். உன் சந்ததி எண்ணமுடியாததாயிருக்கும். உனக்கும், உன் சந்ததிக்கும் என்றென்றைக்கும் இந்த தேசத்தைக் கொடுப்பேன் என்ருர். ஆம் மாம்சபிரகாரமான உன் உறவினர் தேவ அழைப்பில்லாத லோத்துவைவிட்டு நீ பிரியாதவரை தேவன் உன்னை ஆசீர்வதிக்கமுடியாது நீ விசுவாசத்தில் மேற்கும், கிழக்கும், தெற்கும், வடக்கும் நடக்க முடியாது.

13 : 18 அப்பொழுது ஆபிராம் குடி பெயர்ந்து போய் மம்ரேயின் சமபூமியில் குடியிருந்து கர்த்தருக்கு ஒரு பலிபீடத்தைக் கட்டினர். ஆபிராம் தேவனைத் தொழுது கொள்ளுகிருர்.

> "...அவிசுவாசியுடனே விசுவாசிக்கு பங்கேது" (II கொரி. 6 : 15.)

# மோட்ச வழி

## குரு – சிஷ்ய உரையாடல்

(ஏப்ரல் மாத தொடர்ச்சி)

**சிஷ்யன்:** அப்போ இரட்சிக்கப்பட்ட எல்லாரும் சபையின் அங்கமில்லையா?

குரு: முதலாவது அவர்கள் இரட்சிக்கப்பட்டவர்கள்தானா? என்று அறிய வேண்டும் பூரணமான சபையின்றேல் பூரணமான இரட்சிப்பும் கிடையாது. "ராஜஸ்திரீகள் 60 பேரும் மறுமனையாட்டிகள் 80 பேருமுண்டு. கன்னியருக்கோ தொகையில்லை. என் புறாவோ, என் உத்தமியோ ஒருத்தியே. அவள் தன் தாய்க்கு ஒரே பிள்ளை. அவள் தன்னைப் பெற்றவளுக்கு அருமையானவள், குமாரத்திகள் அவளைக்கண்டு வாழ்த்தினார்கள், ராஜஸ்திரீகளும், மறுமனையாட்டிகளும் அவளைப் போற்றினார்கள்" (உன். 6 : 8, 9) என்ற படி சபைகள் அநேகமாய்க் காணப்பட்டாலும் இயேசுகிறிஸ்துவின் சரீரமான சபை ஒன்று உண்டு. அதுவே மணவாட்டி, கிறிஸ்துவின் சரீரமான சபையாகும் —வெளி. 21 : 2, 10 ; எபேசி. 5 : 26 — 32. அந்த சபையை இயேசு கிறிஸ்து போஷித்து காப்பாற்றுகிறார் (எபேசி 5 : 29).

சிஷ்யன்: ஞானஸ்நானமும் வேண்டாம், திரு விருந்தும் வேண்டாம், அதைக்குறித்து சபைகளில் வாக்குவாதங்களும், பேதங்களும் உண்டு; ஆனபடியால் கனியுள்ள ஜீவியமே முக்கியம் என்று சொல்லி ஒரு கொடியின் கீழ்கடந்து செல்லும்படி செய்கிற சபை பூரணமான சபையா?

குரு: தேவ ஞானமானது மனிதன் இரட்சிக்கப்படுவதற்கு ஏற்படுத்திய ஏற்பாட்டை மாற்றிப் போட்டு தங்களுக்கு கேடுண்டாக்கிக் கொள்ளுகிற கூட்டத்தார்கள் இவர்கள். இவர்கள் கிறிஸ்தவர்களே அல்ல. கிறிஸ்துவுக்குள்ளாக ஞானஸ்நானம் பெறாத இவர்கள் ஞானஸ்நானம் பெற்று (தண்ணீர் ஸ்நானமும், ஆவியின் ஸ்நானமும்) பெற்று முதலாவது கிறிஸ்தவர்களாக வேண்டும்— லூக். 7 : 29, 30, 35; கலா. 3 : 27. இவர்கள் சமூக சேவை சமுதாய சீர்திருத்தம் செய்கிற கூட்டமேயொழிய இரட்சிப்பின் சுவிசேஷம் இவர்களிடம் கிடையாது. இவ்வித கூட்டங்கள் பல உண்டு.

சிஷ்யன்: நாங்கள் தான் தாய்சபை, ஆதிசபை, பரிசுத்தசபை, நாங்கள் உலகமெங்கும் இருக்கிறோம், எங்கள் தலைவர்தான் பேதுருவின் பரம்பரை என்று சொல்லுகிற சபை பூரணமானதா?

குரு: சொள்ளக் கண்ணனுக்கு நல்லகண் என்றும், சுத்தக்கருப்பனுக்கு வெள்ளையப்பன் என்றும் பெயர் வைத்திருக்கிறது போல் கத்தோலிக்கு சபை (பரிசுத்தசபை) என்று பெயர் வைத்துக் கொள்வதினால் பரிசுத்த சபையாகுமா? சகலவிதமான அசுத்தமும் அருவருப்பும், தென் புலத்தார் வேள்வியும் (மரித்தோர் வணக்கம்) விக்கிரக ஆராதனையும் அநேக ஆண்டவன்மார்களையும் உடையது பூரணமான சபையாகுமா? (வெளி. 18 : 2, 3 ; ஏசா. 26 : 13) எருசலேமே தாய் சபை— கலா. 4 : 26. அதுவே மணவாட்டி, பரிசுத்த சபை—வெளி. 21 : 2, 10 ; வெளி. 3 : 12 பிள்ளைகளே விக்கிரக ஆராதனைக்கு விலகி ஓடுங்கள் —I கொரி. 10 : 14 ; I யோவா 5 : 21 ; II கொரி 6 : 14 — 7 : 1. விக்கிரக ஆராதனைக்காரர்கள் தேவனுடைய இராஜ்யத்தில் பிரவேசிக்க மாட்டார்கள்— எபேசி. 5 : 5 ; கலா. 5 : 19 — 21 ; ரோம. 1 : 18 — 32; வெளி. 21 : 8. பேதுருவும் ஆதி அப்போஸ்தலர்களும் விக்கிரக ஆராதனைக்கு விலகி இருக்க வேண்டும் என்றே போதித்தார்கள் (அப். 15 : 20, 28 ). ஆதிச்சபை எருசலேமில் தோன்றிற்று (அப். 1 : 12 — 14 ; 2 : 1 — 4) ரோமபுரியிலல்ல.

சிஷ்யன்: சிலர் தங்களை சீர் திருத்த சபை என்று சொல்லி பரிசுத்தமாக வேண்டும் என்று சொல்லுகிறார்களே. அது உண்மையான சபையா?

குரு: பரிசுத்தமாகுதல் என்றால் என்னவென்றே தெரியாதவர்கள் தங்களை பரிசுத்த சபையென்பர். இவர்கள் முதலில் வேறுபடவேண்டும்-II கொரி. 6 : 14—7 : 1; அப். 2 : 38 — 42. பரிசுத்தமாகுதல் என்றால் (1) ஒரு ஆத்துமா கர்த்தருக்கென்று தன்னை பூரணமாய் (பிரதிஷ்டை) ஒப்புக்கொடுக்கும் போது பரிசுத்தமாகிறா(ள்)ன், (2) தன்னுடைய நடத்தைகளிலெல்லாம் பரிசுத்தமாய் ஜீவிக்கும் போது (வார்த்தை, சிந்தனை, கிரியை) பரிசுத்தமாகுதலை அடைகிறான். Iபேது. 1 : 15, 16; Iதெச. 4 : 3 — 5 ; எபி. 12 : 14. (3) விசுவாசம் பரிசுத்தமாயிருக்க வேண்டும்—யூதா 3, 20. இவ்விதமாக பரிசுத்தமாகுதலைப் பெற்றுக்கொள்ள வேண்டும்.

சிஷ்யன்: சடங்காச்சாரங்களையும் கைக்கொள்ள வேண்டும், அது பாரம்பரியம். பாரம்பரியமும் பரிசுத்தமானதுதான் என்கிறார்களே!

குரு: ஒப்புக்கொள்ளப்பட்ட பாரம்பரியங்கள் வேதாகமத்தில் உண்டு. அதற்கு மாறாய் தேவனுடைய வார்த்தையை மாற்றி அல்லது தள்ளிப்போட்டு, பாரம்பரிய சடங்காச்சாரங்களை மனுஷ யுக்தியின் படி நியமித்துக் கொண்டு கைக்கொள்வது வேஷபக்தி என்று கர்த்தரே கடிந்துரைத்துள்ளார் (மத். 15 : 3 — 9. ஏசா. 1 : 10 — 20). இவைகளுக்கு நாம் தப்புவோமாக.

(தொடரும்)

''சத்தியத்தையும், அறிவீர்கள், சத்தியம் உங்களை விடுதலையாக்கும்'' (யோவா. 8 : 32).

மாதர் பகுதி

# அநியாயம் செய்தாள்

அந்தப்படி மனைவிகளே உங்கள் சொந்த புருஷர்களுக்குக் கீழ்ப்படியுங்கள். அப்பொழுது அவர்களில் யாராவது திருவசனத்திற்கு கீழ்ப்படியாதவர்களாயிருந்தால் பயபக்தியோடு கூடிய உங்கள் கற்புள்ள நடக்கையை அவர்கள் பார்த்து போதனையின்றி மனைவிகளின் நடக்கையினாலேயே ஆதாயப்படுத்திக் கொள்ளப்படுவார்கள்.

மனைவிகள் புருஷருக்குக் கீழ்ப்படிய வேண்டு மென்பதே தேவ வாக்காகும். ஆனால் இன்றைய அநேக பெண்கள் கீழ்ப்படியாதவர்களாய், அடங்காதவர்களாய் அவர்களோடு (புருஷரோடு) எதிர்த்துப் பேசுகிறவர்களாகவும், அதிகாரம் செலுத்துகிறவர்களாகவும், குடும்பத்தை நடத்துகிறவர்களாகவும், தன் சுய இச்சைப்படி எல்லாக்காரியங்களும் செய்கிறவர்களாய் காணப்படுகிறார்கள். சில குடும்பங்களில் மனைவி புருஷர்களை குரங்காக்கி விடுவார்கள். ஆனால் இவைகளெல்லாம் தேவ வாக்கியத்திற்கு மாறானவைகளாகும். கர்த்தருடைய வேதம் என்ன சொல்லுகிறதென்றால்: மனைவிகளே கர்த்தருக்கு கீழ்ப்படிகிறதுபோல உங்கள் சொந்த புருஷர்களுக்கு கீழ்ப்படியுங்கள். கிறிஸ்துசபைக்குத் தலையாயிருக்கிறது போல புருஷனும் மனைவிக்குத் தலையாயிருக்கிறான். அவரே சரீரத்திற்கும் இரட்சகராயிருக்கிறார். ஆகையால் சபையானது கிறிஸ்துவுக்குள் கீழ்ப்படிகிறது போல மனைவிகளும் தங்கள் சொந்த புருஷர்களுக்கு எந்த காரியத்திலேயும் கீழ்ப்படிந்திருக்க வேண்டும் (எபே. 5 : 22 —24) என்று சத்தியம் சொல்லுகிறது.

ஒழுங்காக ஆலயத்திற்கு போவார்கள், வேதம் வாசிப்பதில் நான் முந்தி, நீ முந்தி என்று போட்டி போட்டு வேதம் வாசிப்பார்கள். அழகாக ஜெபம் பண்ணுவார்கள். ஆஹா! பெரிய பரிசுத்தவாட்டி என்று பிறர் மெச்சிக் கொள்ளும் அளவுக்கு நடந்து கொள்வார்கள். ஆனால் வீட்டிற்கு வந்தாலோ அவர்களுடைய புருஷர்களை மதியார்கள், அவர்களுடைய வார்த்தைகளுக்கு கீழ்ப்படியார்கள், எதிர்த்துப் பேசுவார்கள். இப்படி கீழ்ப்படியாத ஒரு பெண் தன் ராஜ மேன்மையை இழந்துபோனதாக வேதம் சொல்லுகிறது.

ராஜாவாகிய அகாஸ்வேரு தன் ராஜ்யபாரத்தின் மூன்றும் வருஷத்திலே தன்னுடைய பிரபுக்களுக்கும், ஊழியக்காரர்களுக்கும் விருந்து பண்ணினான். இன்னும் அநேக நாடுகளின் அதிபதிகளும், பிரபுக்களும் அவன் சமுகத்தில் வந்தார்கள். ராஜா தன் ராஜ்யத்தின் மேன்மையைக் குறித்து 180நாட்கள் விளங்கச்செய்து கடைசியாக எல்லாருக்கும் 7 நாள் விருந்து செய்தான். எல்லாருக்கும் அழைப்புக் கொடுக்கப்பட்டபடி வந்து விருந்தில் பங்கு பெற்றுக் கொண்டார்கள். ஒருவனும் பலவந்தம் பண்ணவில்லை. 7ம் நாளில் மகா ரூபவதியாயிருந்த ராஜஸ்திரீயாகிய வஸ்தியின் சௌந்தர்யத்தை ஜனங்களுக்கும், பிரபுக்களுக்கும் காண்பிக்கும்படி ராஜகிரீடம் தரிக்கப்பட்டவளாய் அவளை ராஜா அழைத்துவர கட்டளையிட்டான். ஆனால் பிரதானிகள் மூலமாய் ராஜா சொல்லி அனுப்பிய கட்டளைக்கு ராஜஸ்திரீயாகிய வஸ்தி வரமாட்டேன் என்றாள், அப்பொழுது ராஜா கோபமடைந்து தனக்குள்ளே மூர்க்கவெறி கொண்டு, அவளுடைய ராஜமேன்மையிலிருந்து அவளைத் தள்ளிப்போட்டான்.

ஆம் கர்த்தருக்குள் அருமையானவர்களே, ராஜாவுக்கு கீழ்படியாமல் போனதால் தன் ராஜ மேன்மையை வஸ்தி இழந்தாள். இதனால் விளையும் தீமை என்னவென்றால் இவள் ராஜாவிற்கு மாத்திரமல்ல நாட்டிலுள்ள சகல பிரபுக்களுக்கும், சகல ஜனங்களுக்கும் அநியாயம் செய்தாள் (எஸ். 1:16) இதைப்பார்த்து தேசத்திலுள்ள மற்ற ஸ்திரீகளும் தங்கள் புருஷரை அற்பமாய் எண்ணுவார்கள். ஒரு ராஜஸ்திரீயே அப்படியென்றால் நாம் அப்படி இருப்பதால் என்ன தவறு என்று நினைத்து பெருமிதம் கொண்டு கிடைக்கும் ராஜ மேன்மையை இழந்து போகிறார்கள்.

ஆகையால் ஸ்திரீகள் அப்படி அல்லாமல் வேதவசனம் தூஷிக்கப்படாதபடிக்கு பாலிய ஸ்திரீகள் தங்கள் புருஷரிடத்திலும் தங்கள் பிள்ளைகளிடத்திலும் அன்புள்ளவர்களும், தெளிந்த புத்தியுள்ளவர்களும், கற்புள்ளவர்களும், வீட்டில் தரித்திருக்கிறவர்களும், நல்லவர்களும், தங்கள் புருஷருக்கு கீழ்ப்படிகிறவர்களுமாயிருக்க வேண்டும். இப்படி ஒருஸ்திரியானவள் காணப்பட்டால் கர்த்தருக்குப் பிரியமும் தன்மேன்மையை காத்துக் கொள்ளுகிறவளுமாய் காணப்படுவாள்.

அந்தப்படியே சாராள் ஆபிரகாமை ஆண்டவன் என்று சொல்லி கீழ்ப்படிந்திருந்தாள் (1 பேது 3 : 6). நீங்களும் அவ்விதமே கீழ்ப்படிந்திருங்கள். இறைவன் உங்களை ஆசீர்வதிப்பாராக.

---

"எந்தப்புருஷனும் தன் வீட்டிற்குத் தானே அதிகாரியாயிருக்க வேண்டும்" (எஸ்தர் 1 : 22). திருவள்ளுவர்

# காலங்கள் கர்த்தருடைய கரத்தில்

...சமயமும் தேவ செயலும் நேரிட வேண்டும் —பிரசங். 9 : 11.

நம்முடைய தேவனாகிய கர்த்தர் நல்லவர், நன்மையானதைத் தருகிறவர், நமக்காக யுத்தம் பண்ணுகிற சர்வ வல்லவர், இராப் பகல் உறங்காமல் நம்மைக் காத்து, தாங்கி, சுமந்து தப்புவிக்கிறவர் என்று அறிந்திருக்கிறோம். இப்படியிருக்க நாம் தெய்வத்தை

நோக்கி ஜெபம் பண்ணி நம்பிக்கையோடு காத்திருக்கிறோம். நாம் நீண்ட நாட்களாய் எதிர்பார்த்திருக்கிற ஆசீர்வாதம் வர தாமதிப்பதாலும், நம்மை நெருக்கி துக்கப்படுத்துகிற சத்துருக்களினின்று விடுவிக்கப்படாமல் காலங்கள் கடந்து போவதாலும், நாம் நன்மையைப் பெற்றுக் கொள்ள விடாமல் நம்மை தடுக்கிற வல்லமையை மேற்கொள்ள முடியாமல் வெற்றி தாமதிப்பதாலும், நம்முடைய ஆத்துமா இளைத்துப் போக இடங்கொடுக்கிறவர்களாகிறோம். கர்த்தரோ எல்லாவற்றிற்கும் காலங்களை நியமித்திருக்கிறார். அவர் தம்முடைய ஆதீனத்தில் வைத்திருக்கிற காலங்களையும், வேளைகளையும் அறிவது நமக்கு அடுத்ததல்ல.. அப். 1 : 7.

கர்த்தராகிய இயேசு கிறிஸ்து இன்னக் காலத்தில் வெளிப்பட்டு, குறித்த காலத்தில் மரிக்க வேண்டுமென்றும், இவருக்கு முன்பாக கடந்து இவரின் பாதைகளை செவ்வை படுத்த யோவான் ஸ்நானகன் அனுப்பபடவும் வெளிப்படவும் காலத்தை தேவன் வைத்திருந்தார். இந்த காலத்தை அறியாத ஆசாரியனாகிய சகரியா, தனக்கு குழந்தை வேண்டுமென்று கேட்டுவிட்டு வயது செல்லச் செல்ல நம்பிக்கை இழந்து விட்டார் (லூக்கா 1 : 13, 18).

இந்த சகரியாவும், அவர் மனைவி எலிசபெத்தும் கர்த்தரிட்ட சகல கற்பனைகளையும், நியமங்களையும் கொண்டு தேவனுக்கு முன்பாய் நீதியுள்ளவர்களாய் காணப்பட்டார்கள் (லூக். 1 : 6). இவர்களுக்கு பிள்ளையில்லாமை ஒரு பெரும் குறையாய் இருந்தது. கர்த்தர் இவர்களுடைய குறைவை தம்முடைய காலத்தில் நீக்கினார். கர்த்தர் வெகு காலங்கழித்து ஒரு குழந்தையைக் கொடுத்தார். இவர்கள் விரும்பிய காலத்திலல்ல, தாம் திட்டமிட்ட காலத்தில் கொடுத்தார். ஆம், மிகவும் மேன்மையானதைக் கொடுத்தார். ஸ்திரிகளிடத்தில் பிறந்தவர்களிடத்தில் யோவான் ஸ்நானகனைக் காட்டிலும் பெரியவன் அதற்குமுன் எழும்பினதில்லையே (மத். 11 : 11).

இந்த சகரியா தேவனிடம் கேட்டுவிட்டு, காலதாமதமானதால் அவிசுவாசம் கொண்டு, குழந்தை பிறந்து பெயரிடும் வரை தன்னுடைய அவிசுவாசத்தின் தண்டனையாக ஊமையாயிருந்தார். நன்மையை நாடி தேவனிடம் கேட்டுக் கொண்டிருக்கிற தேவஜனமே, சோர்ந்து போகாதே, அவிசுவாசம் கொள்ளாதே, நீதி தவறாதே, தேவன் தம்முடைய காலத்தில் தருவார். அது மேன்மையாய், மகிமையாய் தேவனுக்கு பிரயோஜனமாயிருக்கும். ஆகையால் காத்திரு.

கர்த்தராகிய இயேசுகிறிஸ்து பிறந்த உடனே, யூதர்களின் ராஜா பிறந்து விட்டார் என ஏரோது ராஜா கேள்விப்பட்டு அவரைக் கொல்ல வகை தேடினான். பிள்ளை தம்முடைய குமாரனாயிருந்தும், அவரைக் கொல்ல நினைத்த சத்துருவை உடனே அழிக்கவில்லை. மாறாக யோசேப்பிடம் தாயுடன் குழந்தையை அழைத்துக் கொண்டு எகிப்துக்கு ஓடிப்போகும்படி சொல்லிவிட்டார் தேவன். (மத். 2:13). காலங்கள் கடந்தது. மறுபடியும் கர்த்தருடைய தூதன் யோசேப்பிடம் எழுந்து, பிள்ளையையும் அதன் தாயையும் கூட்டிக் கொண்டு இஸ்ரவேல் தேசத்துக்குபோ, பிள்ளையின் பிராணனை தேடினவர்கள் இறந்து போனார்கள் (மத். 2 : 20) என்றான்.

நம்மை எதிர்த்து போராடுகிற மனிதர்கள், அசுத்த ஆவிகளின் நெருக்கங்களினின்று விடுவிக்க கர்த்தர் காலத்தை பயன்படுத்துகிறார். இப்படிப்பட்ட பொல்லாதவர்களின் மேல் நாம் எரிச்சல் கொள்ள வேண்டாம். இன்னுங் கொஞ்ச நேரந்தான், அப்போது துன்மார்க்கன் இரான், அவன் ஸ்தானத்தை உற்று விசாரித்தாயானால் அவன் இல்லை (சங். 37 : 10).

ஆகையால் பிரியமானவர்களே, பொறுமையாயிருங்கள். பொல்லாதவர்களுக்கு விரோதமாய் போர் தொடுக்க நீங்களே முற்படவேண்டாம். ஒதுங்கி இருங்கள், அவர்கள் இல்லாமல் போய்விடுவார்கள். நமக்கு விரோதமாய் எழும்பும் எந்த ஆயுதமும் வாய்க்காதே போகும் என்று வேதம் சொல்லுகிறதே. அமர்ந்திருங்கள்; இரட்சிக்கப்படுவீர்கள்.

நாம் தேவனுடைய பலத்தால் எத்தனை யோ காரியங்களை சாதித்துவிட்டோம். சில காரியங்களை பெற்றுக் கொள்ள வாஞ்சித்து பிரயத்தனபடும் போது முடியாமல் போகிற தால் கர்த்தருடைய வல்லமையை சந்தே கிக்க ஏதுவாகிறது. பாருங்கள் யூதாவோடு கூட கர்த்தர் இருந்ததினால் மலைதேசத்தாரை துரத்தி விட்டார்கள், பள்ளத்தாக்கின் குடிகளுக்கு இருப்புரதங்கள் இருந்தபடி யால் அவர்களைத் துரத்தக் கூடாமல் போயிற்று (நியா. 1 : 19). கர்த்தர் சர்வவல்ல வராயிருந்து யூதாவுக்காய் யுததம் பணணு வாரானால் எப்பேர்பட்ட எதிரியையும் மேற் கொள்ள முடியுமே? இருப்பு ரதங்கள் வைத் திருந்தவர்களை யூதா ஜெயிக்க முடிய வில்லையே, கர்த்தர் யூதாவோடேகூட இருக் கிறாரு, இல்லையா என்று எண்ணத்தோன்று கிறதோ. இருப்பு ரதங்களால் மேன்மை பாராட்டுகிற, இவர்களை கர்த்தர் ஒரு வேளையை நியமித்து அதிலே அவர்களை சங்காரம் பண்ணுகிறார்.

சிசரா என்பவன் தொளாயிரம் இருப்பு ரதங்களுடன் இஸ்ரவேலருக்கு விரோதமாய் பாளையமிறங்கினான். தெபொராள் தீர்க்கதரி சனமாய் பாராக்கை நோக்கி: கர்த்தர் சிசராவை உன் கையில் ஒப்புக்கொடுக்கும் நாள் இதுவே; கர்த்தர் உனக்கு முன்பாய் புறப்படவில்லையா என்றாள். பாராக் யுத்தம் கலந்தார். சிசரா ரதத்தை விட்டிறங்கி கால் நடையாய் ஓடிப்போனான். (நியா. 4 : 13-16). கர்த்தர் நியமித்த நாளிலே எதிரி வீழ்ந் தான். ஜெய முண்டாயிற்று.

கர்த்தர் நியமித்த நாள் இதுவே, என்று ஒரு குறிப்பிட்ட நாளை சொல்ல வேண்டி யது என்ன? இந்த நாளில் எதிரி முறிந்தோ டக் காரண ம என்ன? இந்த நாளிலே கீசோன் நதி கரை புரண்டு ஓடியது. பூமி எல்லாம் ஈரமாகி நீருற்று ஏற்பட்டு சகதியாய் போயிற்று. இந்த தரையில் சிசரா குதிரை களில் இரதங்களை ஓட்டி வருகிறான். குதிரை களின் பாய்ச்சலினால் குதிரைகளும், இரதங் களும் சகதியில் சிக்கி முன்னேற முடியாமல் செயலற்று போய்விட்டது. சிசரா இரதத்தை விட்டிறங்கி உயிர் தப்ப ஓடிப்போனான் (நியா. 5 : 21, 22). கடைசியில் ஒரு ஸ்திரீயி னால் கொல்லப்பட்டான் (நியா. 4 : 21, 22).

பிரியமான தேவனுடைய ஊழியரே, தேவனுடைய பிள்ளைகளே கர்த்தர் நம்மோ டிருந்து, நம்முடைய பிரயாசத்தை வாய்க்கச் செய்து, ஊழியத்தை; குடும்பத்தை ஆசீர் வதிப்பார். பிசாசின் போராட்டம் அதிகமா யிருக்கையில் கர்த்தர் நம்மோடு இல்லையோ என சிந்திக்க வேண்டாம். பாராக் கர்த்தரின் ஆலோசனைக்கு கீழ்ப்படிந்து குறித்த நேரத் தில் எதிரியின் மீது விழுந்து மேற் கொண் டது போல் நாமும் அவருடைய ஆலோ சனையின்படியே செயல்படுவோம். குறித்த சமயம் சூழ் நிலைகள் சாதகமாய் மாறும், சாத் தானின் வல்லமை முறியடிக்கப்படும், வெற்றியுண்டாகும். ஆசீர்வாதம் பெருகும் ஆமென்! அல்லேலூயா.

கர்த்தரின் காலத்துக்காய் காத்திருங்கள்.

"காலம் நிறைவேறின போது தேவன் தம்முடைய குமாரனை அனுப்பினார்" (கலா. 4 : 5).

# புதிய எருசலேம் சபை நடபடிகள் சில

(தொடர்ச்சி)

அவருக்கு மனம் திரும்பி, கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசிக்க வேண் டும். பாவத்தினால் கிடைக்கும் நித்திய வேதனைகளும், இ ர ட் சி க் கப்படுவதினால் கிடைக்கும் நி த் தி ய சந்தோஷத்தையும் குறித்து வேத வசனங்களைக் கொண்டுபேசி, னோம். ஒரு குழந்தையைப் போல் தேம்பி, தேம்பி அழுது "என் வாழ்நாளை இதுவரை யிலும் வீணய்கழித்து விட்டேன், இனிநான் நேர்மையாக வாழ விரும்புகிறேன்" என்று கூறினார். நாங்கள் பேசிக்கொண்டிருந்த ஹாலின் எதிர்புறமான ஓர் அறையில் சுமார் இரண்டு வண்டிகளில் ஏற்றக்கூடிய அளவுக்குப் பெரிய பெரிய பாட்டில்கள்

இருந்தது. சகோதரர் கருணாகரனிடம் பெரியவர் பாட்டில் வியாபாரம் செய்கிறாரா? என்று கேட்டேன். யாரும் பதில் கூற வில்லை. நாளைக்கு நீங்கள் தங்கி இருக்கிற இடத்துக்கு நான் வருவேன், உங்களிடம் நீண்ட நேரம் பேசவேண்டும். இப்போது நாம் எல்லோரும் சாப்பிடுவோம் என்று பெரியவர் கேட்டுக் கொண்டார். அப் படியே நாங்கள் உணவருந்திவிட்டு அந்த வீட்டாருக்காக ஜெபித்து விட்டு கடந்து வந்தோம். அந்த வீட்டாருக்கு இருந்த மகிழ்ச்சிக்கு அளவே கிடையாது.

மறுநாள் அதிகாலமே நாங்கள் தங்கி இருந்த சகோதரர் கருணாகரன் வீட்டுக்கு இவர் வந்து விட்டார். நீண்ட நேரமாக அவருடைய காரியங்களைச் சொன்னார். நேற்று நீங்கள் எங்கள் வீட்டிலுள்ள பாட்டில்களைப் பார்த்து இவர் பாட்டில் வியாபாரம் செய்கிறாரா? என்று கேட்டீர் கள். அது எனக்கு ரொம்ப வெட்கத்தை உண்டாக்கிவிட்டது. அந்தப்பாட்டில்கள் நான் குடிக்கும் மதுப்பாட்டில்கள். மாதம் ஒருமுறை இவ்வளவு பாட்டில்கள் சேரும். இதனால் என் வீட்டுக்கு என் சம்பாத்தியத் தில் ஒரு பைசாவும் கொடுப்பதில்லை. எனவே என் வீட்டாரும் என்னை மதிப்ப தில்லை. நான் குடிக்கும் காரணம், என் முதுகெலும்புக்குள் ஒருவிதமான அரிப்பு உண்டாகி எனக்கு ரொம்ப வேதனையைக் கொடுக்கும் டாக்டர்களால் அதை குண மாக்க முடியவில்லை, ஆகையால் அந்த வேதனை நீக்குவதற்காகவே நான் குடிக் கிறேன் இந்தக் குடிப்பழக்கம் என்னை விட்டு மாறவேண்டும். நீங்கள் எனக்காக ஜெபிக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். பாவங்களை அறிக்கை செய்ய ஆலோசனைக் கொடுத்தோம். தன் பாவங் களினால் ஏற்பட்ட விளைவுகளை எண்ணி மனங்கசந்து அழுது பாவ அறிக்கை செய் தார், இவருடைய உள்ளம் நொறுங்கினது. நொறுங்குண்டு பணிபுசிந்தவர்களின் உள்-ளங்களில் வாசஞ் செய்யும் பரிசுத்தமுள்ள ஆண்டவர் இந்த பெரியவருடைய உள்ளத் திலும் வாசஞ் செய்யக்கடந்து வந்தார். கர்த்தருடைய ஆவியானவர் இவர் உள்ளத் தில் இறங்கினதும் இவர் அடைந்த மகிழ்ச் சிக்கு அளவே இல்லை. நான் சீக்கிரமாய் வீட்டிற்குப்போய் இந்த மகிழ்ச்சியை என் குடும்பத்தில் அறிவிக்க வேண்டும். மறுபடி யும் உங்களை நாளைக்கு வந்துப்பார்க் கிறேன் என்றுக் கூறி கடந்துப் போனார்.

ஒருநாளைக்கு 10-பாட்டில் வரைக் குடிப்பவர். அன்றைக்கு மதுவே குடிக்கா மல் இருந்ததையும், உள்ளத்தில் ஏற்பட்ட சந்தோஷத்தையும் வீட்டாரிடம் கூறி இருக்கிறார். அவர்களும் அந்தச் செய் தியைக் கேட்டு அவரோடு சந்தோஷப் பட்டிருக்கிறார்கள். "மனந்திரும்புகின்ற ஒரே பாவியிமினித்தம் பரலோகத்தில் மிகுந்த சந்தோஷம் உண்டாயிருக்கும்" (லூக்கா. 15:7) என்று நமது கர்த்தராகிய இயேசு கிறிஸ்து சொன்ன வார்த்தையின் படி அன்றுபரலோகமே சந்தோஷப்பட்ட தற்காக என் தேவனை நன்றியோடு ஸ்துதிக்கிறேன்.

மறுநாள் காலையில் கொஞ்சம் பிஸ்கட், கேக், பழங்கள் ஆகியவைகள் அடங்கிய ஒரு பார்சலைக்கொண்டுவந்தார். இவைகள் எல்லாம் எதற்குங்க. சும்மா வந்தால் என்ன? என்றுக் கேட்டோம். நான் அடைநத மகிழ்ச்சியை நான் எவ்விதமாக கூறுவதன்றே தெரியவில்லை. என்னுடைய மாற்றத்தைக்கண்ட என் வீட்டார் ரொம்ப சந்தோஷப் படுகிறார்கள். அதுமட்டுமல்ல நீண்ட நாட்களாக நான் குடிப்பதற்கு காரணமாயிருந்த என் வியாதி இருக்கிறதே அதுவும் நேற்று நீங்கள் என்னை ஜெபித் ததும் என்னை விட்டுப் போய் விட்டது, இயேசு சுவாமிக்கு எவ்விதமாய் நன்றி கூறுவதென்றே தெரியவில்லை. எனக்கு பன்னிரண்டு பெண் குழந்தைகள் உண்டு, அதில் பதினொறு பிள்ளைகளை விவாகம்

செய்து கொடுத்து இருக்கிறேன். அவர்கள் அத்தனைபேரும் விக்கிரக ஆராதனை செய்கிறார்கள். நீங்கள் இன்னொரு நாள் எங்கள் வீட்டிற்கு வரவேண்டும். அவர்கள் எல்லோரையும் அழைத்து வருவேன். அவர்களையும் இயேசு சுவாமியின் பிள்ளைகளாக மாற்ற வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். கர்த்தர் அனுப்பும் பொழுது வருகிறோம் என்று பதில் கூறினோம்.

Pastor S. Sundarraj
Vallioor.

---

"...காசாபட்டணத்துக்குப் போகிற வனாந்தரமார்க்கமாய்ப் போ என்றான்" (அப். 8 : 26)

---

# APOSTLES

In the beginning there were twelve apostles. Their names: are these Peter, Andrew, James, John, Philip, Batholomew, Thomas, Mathiew, James, Thaddeaus (Lebbeaus), Simon the Canaanite, Matthias instead of Judas Iscariot. These ordained to bear witness of the resurrection of Christ and to testify of it. We (Christians) are all also witnesses of Christ. But the apostles who were in the beginning were made special to bear witness for they have seen with their own eyes the ministry of our Lord Jesus Christ in the earth from the day John the Baptist gave baptism, His suffering, His death especially His resurrection and His accension to heaven. Their testimonies are the scriptures which we believe (Acts. 1 : 21, 22; 2 : 22 - 24, 31, 32; 3 : 14, 15; 4 ; 10 - 12; 4 : 18 - 20, 33; 5 : 29 - 32; 10 : 39 - 43; 1 Jn. 1 : 1 - 3). In their order Apostle Paul, Barnabas, James and Juda our Lord's brothers, Antony and Juniah are taking place. These are all apostles and they saw the resurrected Christ (1 cor. 15 : 1 - 8). Their speech (spoken word) and writtings are known as Scriptures (New Testament). GOD gave promises to the apostles in a special manner. God promised that Jesus will be in the midst of them, when they come together (Mt. 18 : 20), and the Holy Spirit will lead them to all truth (Jn. 16 : 13), and all truth will be brought to their rememberance and taught to them (Jn. 16 : 13), and the things to come will be shown to them, and Jesus will be with them even till the end of the world (Mt. 28 : 20). All these promises are applicable to the apostles in a special way. Excepting the apostles none should say rather can say that they are lead into all truth or all truth and the things to come are known to them.

Yea! GOD lead the apostles and saints who wrote New Testament into all truth, and taught all truth step by step, and declared the things to come. In likewise upto A. D. 110, the scripture was being revealed, till Apostle John was alive (He was the last apostle who died). New Testament Scriptures were written and ended up within 110 A. D. Apostle Paul took greater prat in writting the scripture along with the apostles. Having heard and learnt from Apostles Peter and Paul, Sts. Mark and Luke respectively wrote their books. Holy spirit moved them to write the New Testament (scripture).

The reason is that; in their days few started proclaiming themselves as apostles and taught perverse things. (Moreover the apostles foretold, that many false apostles will arise from the church itself and greivious wolves will enter inside from without the church and teach perverse things that they may draw the disciples to them, after their (apostles) death.

Since some who didn't receive commandment from the apostles (un authorised) preached another gospel, where by they troubled the souls, and also the Holy spirit stirred the apostles, and they wrote the New Testament (II cor. 11 : 3, 4, 13 - 16; Phil. 3 : 17 - 19; I The. 3 : 6 - 15; Acts 20 : 28 - 30; 15 : 24; I Jn. 2 : 18, 19; 4 : 1 - 6; II Jn. 7 - 11). Being inspired by the Holy Spirit, the apostles and saints wrote to caution the church about this kind of false apostles (servants of GOD) and to establish the true doctrine of GOD, and they wrote the true incidents occured in their days, and as well as the truth. Hence, due to this, they wrote strictly, confirming the truth that there is no other Gospel than this (Gal. 1 : 6 - 10).

Some say there is no apostles other than the earlier twelve apostles. It is incorrect. Some are in the view, after New Testament was written, there is no apostle. This is also wrong. GOD gives the apostles as heads of the church (I cor. 12 : 28, Eph. 4 : 11 - 16). Since Lord Jesus Christ, the head of the church, promised, "Lo, I am with you till the end of the world" (Mt. 28 : 18 - 20), the Church and apostes will remain till the end. There is a need of apostle to brings into practice what was written in the scripture, but not to write the scripture.

The earlier twelve apostles (the eleven + Matthias instead of Judas) were with Lord Jesus Christ Our Lord Jesus Christ, being suffered and dead, and resurrected, and appeared unto apostles and gave commandments and sent them into the world (Acts 1 : 1; Jn. 20 : 21 - 23).

After them, if God raises any as apostle, they must posses the following:

1. They must have seen the resurrected Christ I Cor. 9 : 1, 15 : 2-10Acts 10 : 40 - 42.

2. Being called as apostle by God, they must have received ministry from God— I cor 1 : 1; Rom. 1 : 1; Gal. 1 : 1; II Cor. 1 : 1 I; Tim. 1 : 12; II cor. 13 : 10

3. Lord Jesus christ must have given the Foundational doctrine, being revealed personally to them. For example, when God called Paul as an apostle, He didn't lead him to either Peter, or James or John who were earlier to him, to learn the fundamental truth, but He himself taught him directly. This is an important evidance for Paul to be claimed as an apostle (Gal. 1 : 11 - 19). Therefore he could say "I have received of the Lord that which also I delivered unto you..." (I cor. 11 : 23 - 26; 15 : 2 - 11; Eph. 3 : 1 - 11). What soever preached of him were accepted and received by the earlier apostles the members of the church and other apostles (Gal. 2 : 1, 2; Acts. 15 : 1 - 29, 40, 41; 16: 1 - 5).

4. They must posses the gift of the apostle. Among the various gifts, the chiefest gift is the apostlic gift. The Holy Spirit, who does signs and wonders subject them that work these to the apostles. Those who had various gifts, powers, and the gifts of performing wonders, and signs, prophecy, healing were under subjection to the apostles (I cor. 12 : 28; Eph. 4 : 11 - 13; Acts 6 : 1 - 7) He who doesn't have this apostlic, gift is not an apostle and the members of the church and the co-workers will not be under the subjection of him (Rom. 1 : 6, 7).

5. Apostles are independent and men should not judge them (I cor. 9 : 1; 4 : 4). They are Independent because they are sent by God They may marry or remain unmarried, and they may work or may not work for they are independent. But they will be a set example to the church (I cor. 9 : 1 - 6; Phil. 4 : 9; I The. 2 : 9, 10; II cor. 8 : 20, 21). some quote the word of Lk. 14 : 25 - 27; Mt. 10: 36 - 39; Mt. 19: 3-12 and claim that unmarried only can be apostles. The words which are mentioned above, told by our Lord is applicable to every christian

(disciple). It is wrong to persume that the above quoted words are meant for apostles alone. For example once when Peter uttered that he has forsaken all and followed Him, Jesus answered and said unto him, "There is no man that hath left house or brethren, or sisters, or father, or mother, or wife or children, or lands for my sake, and the gospels, but he shall receive goodness in this time and in the world to come eternal life, but many first shall be last; and the last first (Mk. 10:28- 30)." This was not mentioned only about the apostles. Keeping this words in view, few stretch that apostle should not marry, even if they are already married, they must forsake the wife. It is known fact that they continue in telling that they continue in telling that, like this unmarried men are only apostles. Such are false apostles, decitful workers, transforming themselves into the apostles of christ. This doctrine (teaching not to marry) is of the devil. Apostles has already warned that this will come in the latter times (I Tim. 4 : 1 - 5). A bishop must be the husband of one wife. If a man know not how to rule his own house, how shall he take care of the church of God? (I Tim. 3 : 1 - 5; I Cor. 9 : 5). Some are in the opinion that Apostle Paul is unmarried. This is incorrect. He was one of the members of the members of the sanoedrin council of Jesus, which contained 70 members. He was consenting unto the death of Stephen. A married man only can have membership in' this council (Acts 22 : 20; 7 : 58). It is understood that his wife had passed away, while he was doing the ministry as apostle. Uttering that he is not at all married is incorrect. For each individual, gifts are differed. One is gifted in one way and another is gifted in another way. Therefore Apostle Paul wrote, Art thou bound unto a wife seek not to be loosed. Art thou loosed from a wife? seek not a wife, but and the husband should not put away his wife and if they cannot contain let them marry than to burn (I cor. 7 : 27, 9 - 13). Excepting few apostles other apostles served the Lord with their wives (I Cor. 9 : 5). The shepherd of the church must be a married man. This is God's counsel.

6. One among the powers of the apostles is to bind and loose. They have power to forgive and unforgive the sins (Mt. 16 : 16 - 19; Jn. 20 : 21 - 23). Whatsoever they forgive, it is forgiven in heaven, and what soever sin they retain is retained in heaven (Mt. 16 : 19; II cor. 2 : 10; I cor. 5 : 3, 4; Acts 5 : 1 - 10) Apostle has power to forgive sin, and it is certain if one does not posses such authority, they are not sent by God as an apostle (Jn. 20 : 21 - 23).

7. Apostle is the foundation of the church. Through them the church is to be established. The church which is not established by an apostle can not be sustained and will not be counted as church. (Mt. 16 : 18, 19; 1 Cor. 3 : 10, 11). They are nothing but prayer group, missions or societies. The spirit of apostle will be present in the church which is ruled by him (I Cor. 5 : 3 - 5, 13). In them signs of apostle, wonders, powers and Godly qualities will to be manifested (Rom. 15 : 15 - 21 ;II Cor. 12 : 12). Christ will work through them. Accepting this kind of apostles and having fellowship with them is having fellowship with GOD. (Jn. 13 : 20; Lk. 10 : 16; Mt. 12 : 30; Acts 2 : 42; I Jn. 1 : 1 - 3). God gives apostle to the true church. The church without apostle is not the church. To whom Lord commands as He appeared after resurrection commanded to the earlier apostles, he is the chief apostle. That will coincided with the scripture. In their fellowship apostles will spring up and these are apostles, Amen.

# புதிய எருசலேம் செய்தி

எக்காள சத்தம்-6 ● ஜூன் 1984

"புதிய எருசலேம் சபை"

''...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ, நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள்.... விழித்திருங்கள்...உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லோருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்...''

மாற்கு 13 : 35-37

**EDITOR: CHIEF PASTOR N. LAZAR**

BOMBAY. INDIA

# பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லோரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒருமனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும் படியாகவும் தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய்க் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும்; சபையானது வஞ்சக போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது.

(எபே. 4:11-16)

# இதழின் உள்ளே

# ஆசிரியர் உரை

கிறிஸ்துவுக்குள் அன்பான தேவனுடைய பிள்ளைகளே, நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் இரண்டாம் வருகையின் அடையாளங்கள் மிக வேகமாக நிறைவேறி வருகின்றன. எங்கு பார்த்தாலும் அக்கிரமங்கள், அநியாயங்கள், ஜாதிக்கு விரோதமாய் ஜாதி, ஜனத்துக்கு விரோதமாய் ஜனம், நாட்டுக்கு விரோதமாய் நாடுகள் யுத்தம் கலக்கின்றன. வெள்ளச் சேதங்களும், பஞ்சமும், பசியும், கொள்ளையும், கொலைகளும் நடைபெறுகின்றன. மனிதனுடைய உயிருக்கும் உடமைக்கும் பாதுகாப்பில்லை. இதன் மத்தியில் தேவஜனம் பரிசுத்த ஆவியானவரால் தேற்றப்படுகிறார்கள். திருச்சபையின் கடைசி வேலை ஆரம்பமாகியிருக்கிறது. சாத்தான் தீவிரமாய் மனுமக்களைத் தாக்க ஆரம்பித்துள்ள இக்காலத்தில் நாம் பரிசுத்த ஆவியால் நிரம்பி தீவிரமாய் சாட்சி கொடுக்கவும், விசுவாசத்துடன் ஜெபிக்கவும், நம்பிக்கையுடன் தேவனை ஆராதித்து தேவனுடைய வல்லமையையும் ஆசீர்வாதத்தையும் பெற்று தேவ சித்தம் செய்து கர்த்தருடைய வருகைக்கு ஆயத்தப்படவும், ஆயத்தப்படுத்தவும் கடமைப்பட்டுள்ளோம். உங்களை கர்த்தருடைய வருகைக்கு ஆயத்தப்படுத்த புதிய எருசலேம் செய்தி நல்ல உறுதுணையாயிருக்கும். நீங்களும் புதிய எருசலேம் செய்திக்காக ஜெபிப்பதினாலும், உதவி செய்து செய்தியை வளர்ப்பதினாலும் அநேகம் ஆயிரங்களுக்கு செய்தி கிடைக்க செய்து அநேக ஆயிரங்கள் கர்த்தருடைய வருகைக்கு ஆயத்தப்பட உதவ முடியுமே! அப்படிச் செய்வீர்களாக!

கிறிஸ்துவுக்குள்,

N. Lazar

Chief Pastor. N. LAZAR

# இயேசுவைப் பற்றிய அறிக்கை

"நீதியுண்டாக இருதயத்திலே விசுவாசிக்கப்படும். இரட்சிப்புண்டாக வாயினாலே அறிக்கை பண்ணப்படும்"
— ரோமர் 10:10

ஒரு மனிதன் இரட்சிக்கப்பட அவன் மனந்திரும்பி கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவை விசுவாசிப்பது மட்டுமல்ல, அவன் வாயினாலே மனிதர்கள் முன் அறிக்கையும் செய்ய வேண்டும்—மத். 10:32, 33. அவ்விதமாய் அவன் அறிக்கை செய்து முழுகி ஞானஸ்நானம் பெற்றுக் கொள்ளும் போதே இரட்சிக்கப்படுகிறான்; அவன் செய்த பாவமும் அவனுக்கு மன்னிக்கப்படுகிறது (அப் 2:38; 22:16). அந்த அறிக்கை சபையின் மத்தியிலோ, ஒரு தேவ ஊழியர் முன்போ செய்யப்பட வேண்டும். நீதியுண்டாக இருதயத்தில் விசுவாசிக்கப்படும். இரட்சிப்புண்டாக வாயினால் அறிக்கை பண்ண வேண்டும்.

இந்நாட்களில் கள்ள பிரசங்கிகள் பிரசங்கத்தைப் பார்த்தால் நீங்கள் கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவை விசுவாசியுங்கள் (விசுவாசம் என்றால் என்ன என்று விளக்கம் கொடுக்கப்படுவதில்லை), எங்கிருந்தாலும் இயேசுவை நோக்கி பாவ அறிக்கை செய்து ஜெபம் பண்ணுங்கள், இரட்சிக்கப்படுவீர்கள், உங்கள் பாவங்கள் மன்னிக்கப்படும் என்று பிரசங்கிக்கிறார்கள். இவர்களெல்லாரும் அனுப்பப்படாதவர்களாகும் (அப். 15:24) இரட்சிப்பின் திட்டம் இவர்களுக்குத் தெரியாது. மேலும் தாங்கள் இரட்சிக்கப்பட்டவர்களுக்கே ஞானஸ்நானம் கொடுக்கிறோம் என்று சொல்லுகிறார்கள். வேதம் சொல்லுகிறது: "விசுவாசமுள்ளவனாகி ஞானஸ்நானம் பெற்றவன்தான் இரட்சிக்கப்படுவான்" (மாற். 16:16) என்று, இவர்களோ இரட்சிக்கப்பட்டவர்களுக்கு ஞானஸ்நானம் கொடுக்கிறோம் என்கிறார்கள். இரட்சிக்கப்பட்டவர்களுக்கல்ல ஞானஸ்நானம், இரட்சிக்கப்படுகிறதற்கே ஞானஸ்நானம் (I பேது. 3:21). ஞானஸ்நானம் பெற அந்த ஆத்துமா சபையினிடம் வர வேண்டும். அப்பொழுது அவன் இரண்டு விதமான அறிக்கை செய்ய வேண்டும். ஒன்று இயேசுவைப் பற்றிய அறிக்கை (அப். 8:37); மற்றொன்று பாவ அறிக்கை (அப். 19:18; மத். 3: 5, 6; மாற் 1:4,5). கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவைப் பற்றி அறிக்கை. இயேசுகிறிஸ்துவைப் பற்றி மனிதர்கள் மனப்பூர்வமாய் தங்கள் வாயினால் செய்த அறிக்கை அவர்கள் இரட்சிக்கப்படுவதற்கு அவசியமாயிற்று. அது அநேக சாட்சிகள் முன்னால் அறிக்கை செய்யப்பட்டது, (I தீமோ. 6:12).

இதோ உலகத்தின் பாவத்தை சுமக்கிற தேவாட்டுக்குட்டி என்று ஸ்நானக யோவான் கூறியதும், அவருக்குப் பின் சென்ற இரண்டு சீஷர்களில் ஒருவர் சீமோன் பேதுருவின் சகோதரனாகிய அந்திரேயா, அவர் இயேசுவைக் கண்டு அவரோடு இரண்டு நாள் தங்கிவிட்டு திரும்பி வந்து தன் தம்பி சீமோனைக் கண்டு மேசியாவைக் கண்டோம் என்று சொல்லி தன் தம்பியை இயேசுவிடம் அழைத்துச் சென்றார் (யோ. 1:41). பிலிப்புவைக் கர்த்தர் அழைத்தார். அவர் நாத்தான் வேலைக்கண்டு மோசேயும், தீர்க்கதரிசிகளும் எழுதியிருக்கிறவரைக் கண்டோம். அவர் யோசேப்பின் குமாரனும் நாசரேத்தூரானுமாகிய இயேசுவே என்றார் (யோ. 1:45). நாத்தான்வேல் இயேசுவண்டை வந்து இயேசுவால் தொடப்பட்டு ரபீ, நீர் இஸ்ரவேலின் ராஜா என்று உள்ளம் கிளர்ச்சியுற்று அறிக்கை செய்தார் (யோ. 1:50). இவைகளெல்லாம் இயேசுவைச் சந்தித்த ஆதி பக்தர்கள் உள்ளத்திலிருந்து இந்த அறிக்கை புறப்பட்டது. இவை வெறும் விசுவாசப் பிரமாணமோ நிசேயா பிரமாணத்தைப் போல் உதட்டளவில் உச்சரித்த பிரமாணமுமல்ல. தெய்வீக உந்துதலினால் உளப் பூர்வமாய் உண்டானவைகளே. ஆனபடியால் இவைகளுக்கு நல்ல அறிக்கை என்று பெயர் (I தீமோ 6:12).

இந்த அறிக்கையின் மேல் தேவன் ஒரு ஆசீர்வாதம் அருளுகிறார். நீ பாக்கியவான் என்பதே (மத். 16:16, 17). அது எங்கே செய்ய வேண்டும்? மனிதர் முன் (மத். 10:32). அநேக சாட்சிகளுக்கு முன் (I தீமோ 6:12). இவ்வித அறிக்கையை அடிக்கடி செய்ய வேண்டும் (அப். 8:37; 22:16). தீமோத்தேயும் இப்படிப்பட்ட அறிக்கை செய்து ஞானஸ்நானம் பெற்றிருந்தார். இருபது வருஷங்களுக்குப் பின் பவுல் தீமோத்தேயுவுக்கு அதை ஞாபகமூட்டுகிறார் (I தீமோ 6:12). பேதுருவும் அப்படியே அடிக்கடி அறிக்கை செய்தார். ஆண்டவரே, யாரிடத்தில் போவோம், நித்திய ஜீவ வசனங்கள் உம்மிடத்தில் உண்டே, நீர் ஜீவனுள்ள தேவனுடைய குமாரனாகிய கிறிஸ்து என்று நாங்கள் விசுவாசித்தும், அறிந்தும் இருக்கிறோம் என்றார் (யோ 6:68, 69). மார்த்தாள் மரியாளுடைய அறிக்கையைப் பாருங்கள். ஆம், ஆண்டவரே நீர் உலகத்தில் வருகிறவரான தேவ குமாரனாகிய கிறிஸ்து என்று நான் விசுவாசிக்கிறேன் என்றாள் (யோ. 11:27). இயேசுவானவர் தாமே தம்மைக் குறித்து பற்பல விதமாய் வெளிப்படுத்தியிருக்கிறார். தாம் எல்லாவற்றிற்காகவும் அபிஷேகம் பண்ணப்பட்டவர் என்கிறார் (லூக். 4:18, 19). அப்போஸ்தலனாகிய பவுலும் நூற்றுக்கு மேற்பட்ட முறையில் ஒரு அறிக்கை செய்கிறார். அது கிறிஸ்து என்பதாம் (பிலி. 1:21). பிரசங்கமே அதுதான் (II கொரி. 4:5) அதுவே நாங்கள் பிரசங்கிக்கிற விசுவாச வார்த்தை என்கிறார் (ரோம 10:8). கிறிஸ்து கர்த்தர் (பிலி 2:9-11) இயேசுவும் தம்மை பற்றி நல்ல அறிக்கை செய்தார். (யோவா 18:36, 37). அது என்னவென்றால் நான் ராஜாவென்கிறார். மாம்சத்தில் வந்த இயேசு கிறிஸ்துவை அறிக்கை பண்ணாத அநேக அந்திகிறிஸ்துகளும், வஞ்சகர்களும் இருக்கிறார்கள் என்று சாடுகிறார் பரி. அப்போஸ்தலனாகிய யோவான் (II யோவா : 7) அப்போஸ்தலனாகிய பவுல் அறிக்கை செய்யும் போது நான் விசுவாசிக்கிறவர் இன்னாரென்று அறிவேன் என்கிறார் (II தீமோ. 1:12). உன்னுடைய அறிக்கை என்ன? பரி. அப். தோமா அறிக்கை செய்கிறார்: "என் ஆண்டவரே! என் தேவனே!" என்று (யோ 20:28). உன்னுடைய அறிக்கை என்ன? முடிவான அறிக்கை இவரே சர்வத்திற்கும் மேலான தேவன் (ரோம 9:5; I யோவா 5:20). உன் அறிக்கைக்குத் தக்கபடி உனக்கு ஆசீர்வாதமுண்டாகும். வெளிப்படையாய் தைரியமாய் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை அறிக்கை செய்.

---

"நீங்கள் என்னை யார் என்று சொல்லுகிறீர்கள்"— மத் 16 : 15

---

# ஐசுவரியவான் யார்?

அமெரிக்கா தேசத்தில் கிரின்வே என்ற ஒரு விவசாய கிராமம் உள்ளது. அதில் எட்வர்டு என்ற ஒரு பணக்காரன் வாழ்ந்து வந்தான். ஒரு நாள் நள்ளிரவில் இவனுக்கு தூக்கம் வராததால் எழுந்து மாடி வீட்டின் வராந்தாவில் உலாவிக் கொண்டிருந்தான். வானத்தின் நட்சத்திரங்கள் பிரகாசித்துக் கொண்டிருந்தன, சந்திரன் தான் மறையப் போகிறேன் என்று ஓடிக் கொண்டிருந்தது. இப்படியிருக்க திடீரென்று அசரீரியான ஒரு சப்தம் ஆகாயத்தில் கேட்டது. "இம்மாதம் 22 ம் தேதி இந்த ஊரிலுள்ள பெரிய ஐசுவரியவான் மரித்து விடுவான்" என்பதே அந்த சப்தம்.

யார் பேசினது? எங்கிருந்து பேசினார்கள்? என்பதை அறிய முடியாவிட்டாலும் இந்த வார்த்தை தனக்காகவே கூறப்பட்டது என்பதை இவன் உணர்ந்தான். இந்த வார்த்தையால் இவனுடைய உள்ளம் கலங்கினது. முகமெல்லாம் சோகமடைந்து விட்டது. காரணம் இந்த ஊரில் இவன் தான் பெரிய பணக்காரன். உடனே மின் விளக்கை ஏற்றி வீட்டிலே நித்திரை செய்து

கொண்டிருந்த யாவரையும் எழுப்பினன். நான் 22-ம் தேதி மரித்துப் போவேன் இவ் விதமாய் ஒரு சப்தம் கேட்டது. 22-ம் தேதிக்கு மேல் நான் உயிரோடே இருக்க மாட்டேன் என்று புலம்ப ஆரம்பித்தான். இன்னமும் ஐந்து நாட்கள் மட்டுமே இருந் தது. உறவினர்கள் எல்லோரும் வந்து ஆறு தல் படுத்திப் பார்த்தார்கள். இவனுடைய உள்ளம் ஆறுதல் அடையவில்லை. காரணம் அன்று இரவிலே கேட்ட சப்தம் மறுபடி யும் இவனுடைய உள்ளத்தில் ஒலித்துக் கொண்டே இருந்தது. குடும்ப டாக்டர் அழைத்து வரப் பட்டார். இவருக்கு வியாதி ஒன்றுமில்லை. ஆனாலும் இவருக்கு ஓய்வு கொடுங்கள் என்று கூறி கடந்து போனார்.

22-ம் தேதியும் வந்தது. காலை முதலே உறவினர்கள் வீட்டை நிரப்பிவிட்டார்கள். பகல் முழுவதும் ஒன்றும் நடக்கவில்லை இரவிலேயும் யாவரும் விழித்திருந்தார்கள். ஒவ்வொரு மணித்துளிகளும் அவர்களுக்கு மிகவும் வேதனையாகவே கடந்தது. இரவும் சென்று விட்டது. இவன் மரிக்கவில்லை. உறவினர்கள் ஏதோ தப்பிக் கொண்டார் இனி சீக்கிரம் சாகமாட்டார் என்று கூறி கடந்து போய் விட்டார்கள்.

ஆனால் இந்த தனவந்தரின் உள்ளத்தில் அமைதியில்லை. மீண்டும் ஒரு கேள்வி இவ ருடைய உள்ளத்தில் எழும்பினது. ஒரு வேளை இந்த ஊரில் நம்மை விட ஒரு பெ ரிய ஐசுவரியவான் இருந்திருக்க வேண்டும். அவர் அப்படியானல் நேற்று மரித்திருக்க வேண்டும். இதுவரையில் நான்தான் இந்த ஊரில் பெரிய ஐசுவரியவான் என்று எண்ணி யிருந்தேன் என்பதாக சிந்தித்துக் கொண்டு, அந்த ஊரிலுள்ள சில முக்கியஸ்தர்களை வரவழைத்து, நமது ஊரில் 22-ம் தேதி யாராவது மரித்தார்களா அதை அறிந்து வந்து என்னிடம் கூற வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். இவருடைய வேண்டு தலின்படி அவர்கள் நன்கு விசாரித்து அந்த நாளில் மரித்துப் போன ஜோசப் என்ற ஏழை விவசாயி ஒருவரைப் பற்றி இந்த பணக்காரரிடம் கூறினார்கள்.

இந்த பணக்காரர் இந்த ஏழை ஜோசப் பைப் பற்றி கொஞ்சம் விரிவாக விசாரித் தார். இந்த ஜோசப் என்பவர் ஒரு தேவ னுடைய மனிதர். நல்ல பக்தியுள்ளவர். இறைவனோடு வாழ்ந்தவர். பரிசுத்தவான் என அறிந்து கொண்டார். இந்த தனவந்த ரின் உள்ளத்தில் ஒரு கேள்வி எழும்பினது. அன்று தனது காதில் கேட்ட சப்தம் தேவ னுடைய சப்தமேயாகும். அப்படியானல் இந்த ஏழை மனிதன் தேவனிடத்தில் ஐசுவரியவானய் இருந்திருக்கிறார். நானும் அந்த ஐசுவரியத்தை அடைந்து கொள்ள வேண்டுமே என்று ஏங்கினார்.

கர்த்தருடைய ஊழியர்களை அனுகி னார். அதற்கான ஆலோசனைகளைப் பெற்று இவரும் அந்த ஐசுவரியத்தை அடைந்து கொண்டார்.

"நாங்கள் தரித்திரர் என்னப் பட்டா லும் அநேகரை ஐசுவரியவான்களாக்குகிற வர்களாயிருக்கிறோம்" (II கொரி 6 : 10) என்று அப்போஸ்தலனாகிய பவுல் கூறுகிறார்.

ஆம், "கர்த்தருடைய ஆசீர்வாதமே ஐசுவரியத்தை தரும் அதனோடே அவர் வேதனையைக் கூட்ட மாட்டார் (நீதி. 10 : 22)

பிரியமான சகோதரனே, சகோதரியே நீ தேவனிடத்தில் ஐசுவரியவானய் இருக்கி றாயா? இந்த உலகமும் அதன் இச்சையும் ஒழிந்து போகுமே!

---

தேவனிடத்தில் ஐசுவரியவான்களாயி- ருங்கள்.

---

# மோட்ச வழி

## குரு–சிஷ்ய உரையாடல்

(தொடர்ச்சி)

சிஷ்யன் : சிலர் இரண்டு மூன்று பேர்கள் கூடிவந்தாலும் அது சபைதான் என்கிறார் களே!

குரு : இதெல்லாம் மனுேப்பிரமைதான். பாருங்கள் சபை என்ருல் அப்போஸ்தலர். தீர்க்கதரிசிகளோடு ஆரம்பமாகி இருக்கும் (எபே. 2:20-22) மேலும் சபைக்கு தேவன் அப்போஸ்தலர், தீர்க்கதரிசிகள், மேய்ப்பர்கள், போதகர்கள், சுவிசேஷகர்களைக் கொடுக்கிருர் (எபே 4:11-13). இரண்டு, மூன்று பேர் கூடி வருவதில் இதெல்லாவற்றையும் காண்பதில்லை. மேலும் இவர்களும் காலா காலங்களில் பிரிந்து போய் விடுவார்கள்.

சிஷ்யன் : குருவே! நீங்கள் சொல்வது சரியே. அப்போஸ்தலனுல் எழுப்பப்படாததும் தேவனுடைய எல்லா உபதேசங்களும் இல்லாததும் மெய்யான திருச்சபை யில்லை என்பதை ஒத்துக் கொள்கிறேன். மெய்யான சபை எங்கே இருக் கிறது?

குரு : அதைத் தேட வேண்டும் வேத வாக்கியங்களைக் கொண்டு. அடுத்த படி உண்மையாய் ஜெபம் பண்ண வேண்டும். அப்படி ஜெபம் பண்ணி வந்தால் தேவ பக்தியுள்ள கொர்நெலியுவை பேதுரு அப்போஸ்தலனிடமும், அப் போஸ்தலனை கொர்நெலியுவினிடமும் வழி நடத்தின கர்த்தர் உன்னையும் வழி நடத்துவார் (அப். 10அதி).

சிஷ்யன் : தேவன் யார்? அவருக்கும் நமக்கும் சம்பந்தம் என்ன?

குரு : தேவன் நமது சிருஷ்டிகர். அவர் நம்மெல்லாருடைய பிதா. நாம் அவருடைய பிள்ளைகள்.

சிஷ்யன் : தேவனை பிதா என்று எப்படிச் சொல்லமுடியும்? நமக்குத் தாய்தகப்பன் உண்டே.

குரு : நமது தாய் தகப்பன்மார் நமது சரீரத்தை உற்பத்தி செய்கிறதற்கு ஒரு காரணரேயொழிய நமது உயிருக்குத் தகப்பன் நமது பிதாவாகிய தேவனே. ஆனபடியால் அவருக்கு ஆவிகளின் பிதா என்றொரு பெயருண்டு (எபி.12:9).

சிஷ்யன் : தேவன் ஒருவரா அல்லது மூவரா?

குரு : தேவன் ஒருவரே. அவரில் மூன்று ஆள் தத்துவங்கள் உண்டு. ஒருவரில் மூவராகவும், மூவரில் ஒருவராகவும் தேவன் இருக்கிருர்.

சிஷ்யன் : தேவனை நான் அறிய வேண்டும்.

குரு : வேதத்தில் (Bible) தேவனைக் காணலாம்.

சிஷ்யன் : நீங்கள் விளக்கித்தரவேண்டும்.

குரு : தேவனை உமக்குப் போதிப்போம். தேவன் ஒருவரே. அவர் பிதா, குமாரன் பரிசுத்த ஆவியே.

அவரே சரீரத்திற்கும் இரட்சகராயிருக் கிருர்"— எபே. 5 : 23

# வேத பாடம்

ஆதி. 14 அதி. 1-12 கெதர்லா கோமேர், அம்ராப்பேல், அரியோகு, திதியால் ஆகிய இராஜாக்களுடன் சோதோம், கொமோரா, அத்மா, செப்பாயீம், சோவார் ஆகிய பட்டணங்களின் இராஜாக்கள் யுத்தம் செய்து தோற்கடிக்கப்பட்டார்கள். ஆனபடியால் ஏலாமின் இராஜாவாகிய கெதெர்லா கோமேரும், அவனைச் சேர்ந்த இராஜாக்களும் சோதோம் கொமாரா பட்டணங்களையும், அதைச்சேர்ந்த பட்டணங்களையும் கொள்ளையடித்துக் கொண்டு போய் விட்டார்கள். அதோடு கூட லோத்து சோதோமில் குடியிருந்த படியால் லோத்தையும் அவனுக்குண்டானவைகளெல்லாவற்றையும் கூட கொண்டு போய் விட்டார்கள்.

14:13-16 இச் செய்தி ஆபிரகாமுக்கு கிடைத்த போது தன் வீட்டில் பிறந்த கைபடிந்தவர்களாகிய (யுத்தப் பயிற்சி பெற்றவர்கள்) 318 பேரையும் ஆயுதந்தரிப்பித்து உடன் அழைத்துப் போய் அந்த நாலு இராஜாக்களும் புசித்து குடித்து அசந்திருக்கும் போது இராக்காலங்களில் பவுஞ்சுகளாய்ப் பிரிந்து, அவர்கள் மேல் விழுந்து அவர்களை முறியடித்து துரத்தி விட்டு சகல பொருட்களையும் திருப்பிக் கொண்டு வந்தான். லோத்தையும் அவனுக்குரியவைகளையும் திருப்பிக் கொண்டு வந்தான்.

14 : 17 தோல்வியடைந்த சோதோம், கொமோரா இராஜாக்கள் ஆபிரகாமுக்கு எதிர் கொண்டு வந்தார்கள்.

14:18-20 சலேமின் இராஜாவாகிய மெல்கிசேதேக்கைப் பற்றி முதலாவது வாசிக்கிறோம். இவர் உன்னதமான தேவனுடைய ஆசாரியன் என்று அழைக்கப்படுகிறார். இவர் ஆபிராமுக்கு எதிர் கொண்டு வந்து ஆபிராமை ஆசீர்வதித்து அவருக்கு அப்பமும், திராட்சை ரசமும் கொடுத்தாகப் பார்க்கிறோம். இவர் இயேசுகிறிஸ்துவுமல்ல, பரிசுத்த ஆவியானவருமல்ல, பரலோகத்திலுள்ள ஓர் ஆள், பூலோகத்தில் இருந்தார். இவர் ஆபிராமை ஆசீர்வதித்ததினால் ஆபிரகாமிலும் பெரியவர். வேதாகமத்தில் விதி விலக்கானவர்களாய்க் காணப்படும் ஆட்களில் இவரும் ஒருவர். இவரைப் பற்றி சங் 110 : 4 ; எபி5; 6,7 அதிகாரங்களிலும்; சகரி. 6:13லும் எழுதப்பட்டுள்ளது. இந்த மெல்கிசேதேக்குக்கு ஆபிரகாம் எல்லாவற்றிலும் தசம பாகம் கொடுத்தான் (ஆதி 14:21,23). சோதோமின் இராஜா ஆபிரகாமைப் பார்த்து பொருட்களை நீர் எடுத்துக் கொள்ளும், என் ஜனங்களை எனக்குத்தாரும் என்றான். நான் ஆபிராமை ஐசுவரியவானாக்கினேன் என்று நீர் சொல்லாதபடிக்கு உமது பொருட்களில் ஒன்றையும் எடுத்துக் கொள்ளேன் என்று தேவனுக்கு நேராய் கையெடுக்கிறேன் என்றார். ஆபிரகாமின் நேர்மை போற்றுதற்குரியது. குறுக்கு வழியில் வருகிற ஆதாயத்தை வேண்டாம் என்று உதறிவிட்டார். வருகிற ஆசீர்வாதம் தேவனாலே வருமட்டும் காத்திருந்தார்.

"இவன் எவ்வளவு பெரியவனாயிருக்கிறான்" — எபி. 7 : 4

பாலர் பகுதி

# தீயோருடைய ஆலோசனையில் நடவாதே

கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் மேல் அன்பு கொண்ட பக்தியுள்ள பெற்றோர்களுக்கு ஜான் என்னும் ஒரு பையன் இருந்தான். ஜான் மிக அழகாக இருந்தான். குடும்பமே மகிழ்ந்தது. அவனைக் காணுவோர் அவனால் மன மகிழ்ந்தனர். நாளொரு மேனியும், பொழுதொரு வண்ணமாய் ஜான் வளர்ந்தான். பக்தியுள்ள பெற்றோர்கள் அவனை நல்ல பழக்க வழக்கங்களின் வழியாக வளர்த்தார்கள். பெற்றோர்களின் ஆலோசனைப்படி காலை எழுந்ததும் ஜெபிப்பான், பின்பு வேதம் வாசிப்பான். பள்ளிக்கு செல்லும் போது ஜெபிப்பான். பாட சாலையிலிருந்து வந்ததும் ஜெபிப்பான். படிப்பில் முதல் மாணவனாக இருந்தான். எப்போதும் உற்சாகமாயிருப்பான். நன்றாக விளையாடுவான். வளர்ந்து வரும் தங்கள் மகன் மேன் மேலும் இறை பக்தியில் பெருக வேண்டுமே யென்பதற்காக அவனது அன்புத் தாயார் ஞான உபதேசங்களைக் கொடுத்து வந்தார்கள். அதில் முக்கியமானது, தீய நண்பர்களுடைய தோழமை கூடாது நல்ல நண்பர்களுடன் பழக வேண்டும். "தீயவர்களுடைய ஆலோசனையில் நடக்கக் கூடாது" என்பதாகும். இந்த படியே ஜான் நல்ல நண்பர்களிடம் பழகி நல்லவனாக வளர்ந்து வந்தான். குடும்பமே மகிழ்ச்சியில் திளைத்தது. மன மகிழ்ச்சி நிலவி வந்த குடும்பத்தில் திடீரென வேதனை உருவானது. ஜானை எப்படியேனும் தனது கெட்ட வழிக்கு கொண்டு வந்து விட வேண்டுமென்றும்; செல்வச் செழிப்புடன் இருக்கும் அவனது பணத்தை சூறையாட வேண்டுமென்றும் அவனது பள்ளி நண்பன் ரவி நீண்ட நாட்களாக முயற்சி செய்து கொண்டிருந்தான். புகை பிடிக்கவும், சினிமா பார்க்கவும், பணத்தைத் திருடவும் எப்படியேனும் ஜானை பழக்கி விட வேண்டுமென்று வெகுவாய் விரும்பிக் கொண்டிருந்தான். பள்ளியில் ஜானுக்கு அருகிலேயே ரவி இருப்பான். ரவியின் கெட்ட நோக்கங்களை ஜான் எளிதில் புரிந்து கொண்டான். ஆயினும் துர்போதனைகளைக் கேட்பதில் ஆர்வம் காட்டி வந்தான். இவைகளைக் கேட்பதில் தவறொன்றுமில்லையே. இவைகளின் படி செய்யத் தானே கூடாது என்று தன்னை தேற்றிக் கொண்டான். ஆனால் அம்மாவின் போதனைகள் அவன் மனதை உணர்த்திக் கொண்டிருந்தது. ஜானோ இதைப் பொருட் படுத்தவில்லை. தான் விரும்பிக் கேட்ட துர்ப்போதனைகள் தனக்குள் பதிந்து கிரியை செய்வதை ஜான் உணர்ந்தான். இரகசியமாய் புகை பிடிக்கவும், சினிமா பார்க்கவும் ஆரம்பித்தான். ஜானின் வாழ்க்கையை உற்றுக் கவனித்து வந்த ரவிக்கு இது மிகவும் சந்தோஷமாகியது. மேன் மேலும் தீய ஆலோசனைகளை ஜானுக்கு கொடுத்தான். வாலிப பருவத்தை அடைந்த ஜான் சினிமா பார்க்க செல்வோமா, புகை பிடிப்போமா என்று ரவியிடம் கேட்க ஆரம்பித்து விட்டான். ரவிக்கு மகா சந்தோஷம். ஜானுடைய வீட்டுக்கு விரைவில் காரியம் தெரிய வந்தது. ஜானை திருத்த தங்களாலான மட்டும் முயற்சி செய்தனர். ஜானோ வாழ்க்கையில் திருந்தவில்லை. குடும்பம் கண்ணீருக்குள்ளும், கவலைக்குள்ளும் மூழ்கியது. ஜான் தனது வீட்டில் பணமும் திருட ஆரம்பித்து விட்டான். தனது நண்பன் ரவியை பிரியப்படுத்துவதையே முக்கியமாகக் கருதினான். பணத்தை பாதுகாக்க விரும்பிய பெற்றோர்கள் தங்கள் பணப் பெட்டியை "கிரீன்வில்லா" என்ற தங்களது சிநேகித வீட்டில் கொண்டு வைத்தார்கள். இவ்வீட்டாருக்கு ஜான் யாரென்று அடையாளம் தெரியாது. ஊரிலேயும் ஜானும் ரவியும் கூட்டாகச் சேர்ந்து கொண்டு பிற வீடுகளில் திருடி பணத்தை ஊதாரித்தனமாகச் செலவு செய்தார்கள். ஜானுடைய பெற்றோர்கள் இறைவனை நோக்கி இரவும் பகலும் ஜெபித்தார்கள். மகனுடைய மன மாற்றத்திற்காக.

ஒரு நாள் நள்ளிரவு நேரம். அன்று தெரு விளக்குகளும் எரியவில்லை, நகரம் இருளில் மூழ்கியது. திட்டமிட்டபடி ரவியும், ஜானும் ஒரு வீட்டுக்குத் திருட சென்

றார்கள். வீட்டில் காவலாளி தூங்கி விட்டான். இவர்களுக்கோமகாசந்தோஷம். இந்த வீடு பணக்கார வீடு என்பதை அறிந்திருந்தார்கள். வீட்டுக்குள் புகுந்தார்கள். பீரோவினுள் திறந்து பார்த்த போது ஒரு பெரிய பணப் பெட்டியைக் கண்டு சந்தோஷத்துடன் எடுத்துக் கொண்டார்கள். காலதாமதமின்றி வெளியேற எண்ணி முதலில் ரவி சுவரின் மேல் ஏறினான். அந்தோ பரிதாபம்! அவனது கால் வழுகியது உயர்ந்த சுவரிலிருந்து கீழே விழுந்தான். விழுந்ததோ ஒரு பெரிய கண்ணாடி பெட்டியில் டமார் என்னும் ஒலி கேட்டது. வீட்டுக் காவலாளியும் வீட்டாரும் ஓடி வந்தனர். மின் விளக்குகள் எரிந்தது. உடைந்து நொறுங்கிய கண்ணாடி துண்டுகளினூடே ரவி ரத்த வெள்ளத்தில் கிடந்து துடி துடித்தான். சில நிமிடங்களில் மரித்து விட்டான். ஜான் நடுங்கிய நிலையில் பணப் பெட்டியுடன் அறைக்குள் நின்றான். வீட்டுக் காவலாளி உக்கிர கோபத்தோடு ஜானை நையப் புடைத்து உதைத்தான். ஜான் குற்றுயிரானான். இந்த நிலையில் ஜானை தரையில் போட்டு தரதரவென்று இழுத்து சாலையோரத்தில் கிடத்தினார்கள். எழுந்து சென்று விடாமலிருக்க காலில் சங்கிலி மாட்டி கட்டிப் போட்டார்கள். இந்த செய்தி காட்டுத் தீயைப் போல் பரவியது. ஜானுடைய பெற்றோர்களும் கேள்விப் பட்டார்கள். திருடன் தங்கள் மைந்தன் என்று அறியாதிருந்தார்கள். விரைவில் "கிரீன்வில்லா" வீட்டுக்கு வந்தார்கள்.

சாலையோரததில் வேதனையில் கிடந்த ஜான் தனது அன்பு பெற்றோர்களின் ஞான உபதேசங்களை எண்ணி கண்ணீர் சிந்தினான். அவனது இருதயம் அவனை வதைத்தது. தனது மிகுந்த குற்றங்களை உணர்ந்தான். இனிமேல் வாழ்வுண்டா? இறைவன் எனக்கு இரக்கம் செய்ய மாட்டாரா? என்று எண்ணி சோகமே உருவாய்த் தரையில் கிடந்தான். சாலையில் செல்லும் எல்லோருடைய கண்களும் ஜானை நோக்கின. எல்லோரும் அவனை பரிகாசித்தனர். இந்நிலையில் மீண்டும் வீட்டுக் காவலாளி அவனை நையபுடைத்து உதைத்தான்.

அகோரமாய் அடிபட்டதினால் மீண்டும் மயக்கமடைந்து விட்டான். ஜானுடைய பெற்றோர்கள் வந்து சேர்ந்தனர். கிரீன் வில்லா வீட்டாரிடம் தங்கள் நன்றியைத் தெரிவித்தனர். பணப் பெட்டியைத் திருடின திருடனை கையுங்களவுமாய் பிடித்து விட்டீர்களே என்று பேசி அளாவளாவினர். திடீரென்று ஓ வென்று ஜானுடைய அம்மா அலறினார்கள். சாலை ஓரத்தில் சாக்கடையின் அருகே சங்கிலியால் கட்டப்பட்டுக் கிடப்பது ஜான் என்பதை அறிந்து கொண்டார்கள். தகப்பனார் செய்வதறியாது திகைத்தார். சோகமே உருவாய் மகனின் அருகில் நின்றனர். இந்நேரத்தில் ஜான் மயக்கம் தெளிந்து கண்களை விழித்துப் பார்த்தான். தனது அன்பு பெற்றோர்களின் நிலை கண்டு அழுது கதறினான். செல்வச் செழிப்பில் சீமானாய் திகழ்ந்த தான் சாக்கடையின் ஓரத்தில் உதைக்கப்பட்ட நிலையில் தாயும் தந்தையும் தன்னைப் பார்க்கும் அவல நிலையுண்டாயிற்றே என்று கதறினான். தன்னையுமறியாமல் பெற்றோர்களின் பாதத்தில் விழுந்து அழுதான். அப்பா அம்மா என்னை மன்னியுங்கள் என்று கெஞ்சினான். இறைவன் என்னை மன்னிப்பாரா? இனிமேல் எனக்கு வாழ்வுண்டா என்று கேட்டான். அன்பான பெற்றோர்கள் தங்கள் மைந்தனைக் கட்டியணைத்துக் கொண்டனர். மகனே இறைவன் தம்மை நோக்கிக் கூப்பிடுகிறவர்களுக்கு நல்லவர். அவர்களுடைய பாவங்களை மன்னிக்கிறவர். "தீயோருடைய ஆலோசனையில் நடவாதே" என்று சொன்ன புத்திமதியைக் கேட்டிருந்தாயானால் இந்த அவல நிலை உண்டாகியிருக்காதே. இனிமேல் நல்ல வழியில் நட இறைவன் உன்னை ஏற்றுக் கொள்வார் என்று கூறினார்கள். இனிமேல் நான் உங்கள் பிள்ளையாக ஜீவிப்பேன். இறைவனை எப்பொழுதும் தேடுவேன் இறைவன் விரும்பாத எதையும் செய்ய மாட்டேன். தீயோருடைய ஆலோசனையில் இனி நடக்க மாட்டேன் என்றான். பெற்றோர்கள் அவனை மருத்துவமனையில் சேர்த்தனர். விரைவில் ஜான் சுகம் பெற்றான். தாய் தந்தையின் சொல்லை மீறாமல் நடந்தான். இறைவன் இயேசுகிறிஸ்துவின் சாட்சியாய் மாறினான். வேதனையில் துடித்த அவனது

குடும்பம் மீண்டும் மகிழ்ச்சியால் நிரம்பியது. இன்றைக்கும் அவன் கடவுளின் சாட்சியாய் விளங்குகிறன்.

அன்பு தம்பி தங்கையரே! உங்கள் காரியங்கள் எப்படியிருக்கிறது. உங்கள் பெற்றோர்களையும் உங்கள் ஆண்டவரையும் வேதனைப்படுத்தாதிருங்கள். மனம் மாறிய ஜானைப் போல நீங்களும் இறைவன் இயேசுவுக்கு சாட்சியாய் ஜீவியுங்கள். இறைவன் உங்களை ஆசீர்வதிப்பார்.

''மனந்திரும்புகிற ஒரே பாவியினிமித்தம் பரலோகத்தில் மிகுந்த சந்தோஷமுண்டாகும்'' —லூக். 15 : 7

மாதர் பகுதி

# தெபோராள் (தேனீ)

லபிதோத்தின் மனைவியாகிய தெபொராள் என்னும் தீர்க்கதரிசியைப் பற்றி பழைய ஏற்பாட்டில் நியாயதிபதிகளின் புஸ்தகம் அதி 4, 5 களில் வாசிக்கிறோம். இந்த ஸ்திரீ இஸ்ரவேலை நியாயம் விசாரித்து வந்தாள் நியா 4 : 4, 5 அவள் அபினோகாமின் குமாரன் பாராக்கை வர வழைத்து எதிரிகளான கானனியருக்கு விரோதமாய்ப் போர் செய்யப் போகும் படி தீர்க்கத்தரிசனம் உரைத்தாள். நியா 4 : 6, 7 பாராக்கோ தீர்க்கத்தரிசியானவளும் கூட வந்தால் போவேன் இல்லை என்றல் போக மாட்டேன் என்கிறர் நியா 4 : 8. அதற்கு தெபொராள் நான் வருகிறேன். ஆனாலும் ஜெயத்தின் மேன்மை ஒரு ஸ்திரிக்கு கிடைக்கும் என்றாள்- நியா 4 : 9. யுத்தம் உண்டாயிற்று கானனியரின் சேனாதிபதியாகிய சிசெராவை யாகேல் கொன்றாள். நியா 4 : 21 இஸ்ரவேலர் ஜெயம் பெற்றார்கள். தெபொராளுடைய ஆவியின் நிறைவு, தைரியம், ஊக்கம், ஊழியத்தில் ஊழியக்காரனை உற்சாகப் படுத்துதல், தைரிய மூட்டல், உடன் செல்லுதல் பெண்களுக்கு ஒரு மாதிரியாக இருக்கிறது.

இக்காலப் பெண்கள் ஊழியம் செய்யாதது மட்டுமல்ல (பெண்கள் தங்களுக்குரிய ஊழியம் செய்ய வேண்டும்) அநேக விசுவாசிகளுடைய மனைவிகளும், ஊழியர்களுடைய மனைவிகளும் தங்கள் கணவர்களை ஊழியத்திற்கு வெளியே செல்லாதபடி தடுக்கிறவர்களும் ஊழியத்தினிமித்தம் நேரம் தவறி வந்தால் கேள்வி கணைகளை (அம்புகள்) தொடுக்கிறவர்களும் கதவடைக் கிறவர்களுமாயிருக்கிறதாக அறிகிறோம். இது என்ன சாபம்? கர்த்தருடைய ஊழியக்காரன் வெளியே சென்று வெற்றியோடு வீடு வர தேவ சித்தம் நிறைவேற ஜெபத்தில் தாங்கி கணவன் வீடு வரும் போது புன்முறுவலுடன் வரவேற்று வாழ்த்தி இறைவனுக்கு நன்றி கூறுவதை விட்டு இடையூறு செய்யலாமா? ஆராதனை கூட்டத்திற்கு, தெய்வீக காரியத்திற்கு, ஆத்தும ஆதாயத்திற்கு சென்று வரும் புருஷரை மனமடியச் செய்யும் சகோதரியே, தாய்மார்களே லபிதோத்தின் மனைவியாகிய தெபொராளைப் பாருங்கள். அவர் போராடை அணிந்து பட்டயமேந்தி போர்களம் சென்றாள். ஸ்துதி பாட்டு பாடினாள் நியா5 அதி. நீங்களும் ஊழியத்தில் பங்கு பெறுங்கள். சிறப்பான ஆசீர்வாதம் பெறுவீர்கள். தெபொராள் ''இஸ்ரவேலின் தாய்'' என்று பெயர் பெற்றாள். நீங்களும் ஏன் அப்படி பேர் பெறக் கூடாது. எழும்புங்கள். தேனீயைப் போல் தேவ ஜனங்கள் மத்தியில் தாயாக எழும்புங்கள். இனி மேலாவது ஊழியத்திற்கு இடையூறாயிராதேயுங்கள். இறைவன் இயேசு உங்களை ஆசீர்வதிப்பாராக!

# புதிய எருசேலம் சபை நடபடிகள் சில...

(சென்ற இதழ் தொடர்ச்சி)

இவ்விதமாய் கர்த்தர் மோரீசைசில் அற்புதங்களை நடத்திக் கொண்டிருக்கும் பொழுது அன்றிரவிலே நாளை மறுநாள் நீங்கள் இந்தியாவுக்குச் செல்ல வேண்டும். மீண்டும் என்னுடைய காலத்தில் உங்களை இங்கே அனுப்புவேன். தமிழ் நாட்டில் வேலையைத் தீவிரப்படுத்த வேண்டும் என்று கர்த்தருடைய ஆவியானவர் பேசினார். இந்தச் செய்தியை சகோதரர் கருணாகரனிடமும் பாஸ்டர் பிளாக் பன்னிடமும் கூறினோம். பாஸ்டர் மிகவும் வருந்தினார். உங்களைக் கொண்டு இந்தத் தீவின் பல இடங்களிலும் எழுப்புதல் கூட்டங்கள் நடத்த வேண்டும் என்று எண்ணியிருந்தேன். ஒரு வாரத்திற்குள் திரும்புகிறீர்களே என்று வருந்தினார் அந்த தீவிலுள்ள பிரதம காவல் துறை அதிகாரி ஆச்சி முத்து என்பவர் இங்குள்ள விமான நிலையப் பெரிய அதிகாரியே நம்ம பையன்தான். உங்களுக்கு எத்தனை மாதங்கள் வேண்டுமானாலும் இந்த தீவில் தங்கிப் போக நாங்கள் விசா வாங்கித் தரமுடியும் என்று கூறினார். நாங்கள் எங்களுடைய சுயமாய் இந்த தீவுக்கு வரவில்லை. கர்த்தரே எங்களைக் கொண்டு வந்தார். இப்பொழுதும் கர்த்தருடைய ஆவியானவரே எங்களை இந்தியாவுக்கு அனுப்புகிறார், எனவே நாங்கள் தேவனுடைய அனுமதியின்றி ஒரு நிமிடங் கூட இங்கே தங்க மாட்டோம் என்று கூறினோம். அவர்களால் வேறொன்றும் மறுத்துச் சொல்லவில்லை. எங்களுடைய பிரயாண விவரத்தை அறிந்து கொண்ட அந்த தீவின் அமைச்சரவையில் அன்று பொருளாதார மந்திரியாயிருந்தவருடைய அண்ணன் கோவிந்தசாமி ரிங்காடு என்பவர் இன்றிரவு எங்கள் வீட்டிற்கு நீங்கள் வரவேண்டும் என்று கூறி சகோதரர் கருணாகரனையும் எங்களையும் கார் கொண்டு அழைத்துப் போனார்கள். இவருடைய துணைவிபெயர்ரெங்கநாயகி என்பதாகும். இவர்கள் பயங்கரமான ஒரு வியாதியின் மூலம் இயேசு கிறிஸ்துவை ஏற்றுக் கொண்டு ஞானஸ் நானம் பெற்று பரிசுத்தாவியைப் பெற்றிருக்கிறார்கள் இவர்கள் வீட்டிற்குச் சென்றதும் நீங்கள் நாளை இந்தியா போகவிருக்கிறீர்கள். நான் இன்னும் கைக் கொள்ள வேண்டிய சத்தியங்கள் உண்டானால் எனக்குப் போதியுங்கள். நான் அதன்படி செய்கிறேன் என்று கேட்டுக் கொண்டார்கள்.

சிறிது நேரம் தேவனிடம் ஜெபித்தேன். "இவளுடைய புறம்பான அலங்கரிப்பை மாற்றுவதற்கு ஆலோசனை கொடுக்க வேண்டும்" என்று கர்த்தருடைய ஆவியானவர் பேசினார். எஸ்தரின் புத்தகத்திலிருந்து சில காரியங்களை இந்த அம்மாவுடன் பேச தேவன் உதவி செய்தார். ராஜாவாகிய ஆகாஸ்வேருக்கு ஒரே ஒரு மணவாட்டிதான் தேவை. அதற்காக இந்து தேச முதல் எத்தியோப்பியா தேசம் வரையிலுமுள்ள 127 நாடுகளிலுள்ள ரூபவதிகளாயிருக்கிற கன்னிப் பெண்களையெல்லாம் வரவழைத்து சூசான் அரமனையிலுள்ள கன்னிமாடத்திலே ஸ்திரீகளைக் காவல் பண்ணும் யேகாயின் வசத்தில் ஒப்படைக்க வேண்டும். இவர்களுடைய சுத்திகரிப்புக்கு வேண்டியவைகள் கொடுக்கப்பட வேண்டும். அப்பொழுது ராஜாவின் கண்களுக்கு பிரியமான கன்னிகை பட்டத்து ஸ்திரீயாக வேண்டும் என்று வேதத்தில் கூறியிருக்கிறது. இப்படி ஏராளமான கன்னிகைகளின் மத்தியில் எஸ்தர் மாத்திரம் ராஜாவுக்குப் பிரியமான

தின் இரகசியம் என்னவென்ருல் தன்னைக் காவல் பண்ணுகிற, தன்னை ஆதரிக்கிற இராஜாவின் பிரதானியாகிய யேகாய் என்ன சொன்ஞரோ அதன்படி நடந்து அவர் சொன்னபடியே தன்னை அலங்கரித்த படியால் அந்த அழகு இராஜாவுக்குப் பிரியமாயிருந்த படியால் எஸ்தர் மாத்திரம் பட்டத்து ஸ்திரியாஞள்.

அது போலவே பிதாவாகிய தேவன் தம்முடைய குமாரஞகிய கிறிஸ்துவுக்கு ஒரு மணவாட்டியை ஆயத்தம் செய்யும்படி இரட்சிக்கப் பட்டவர்களை (கன்னிகைகள்) யெல்லாம் பரிசுத்தாவியான வரிடம் ஒப்படைத்துள்ளார். இவர்களில் யார் யார் பரிசுத்த ஆவியானவரின் விருப்பத்தின் படி ஆலோசனையின் படி தங்களை அலங்கரித்துக் கொள்கிருர்களோ அவர்களே குமாரஞகிய கிறிஸ்துவுக்கு மணவாட்டியாவார்கள் என்று கூறி ஸ்திரிகள் எவ்விதமாய் தங்களை அலங்கரிக்க வேண்டும் என்று பரிசுத்தாவியானவர் கூறியுள்ளாரோ (ரோமர் 12 : 2 ; 1 தீமோ 3 : 9, 10; I பேது 3 : 3-6) அப்படியே அலங்கரிக்க வேண்டும் என்று கூறி மேற்கண்ட வசனங்களைக் கூறினதும் அவர்களுடைய ஜெர்மன் பைபிளில் இந்த வார்த்தைகள் இருக்கிறதா என்று பார்த்தார்கள். வசனங்களை வாசித்து உணர்ந்து கொண்டதும் இன்றைக்கு என் நேசருடைய வருகை இருக்குமாயின் நான் அவருடைய மணவாட்டியாக அவரோடு செல்ல வேண்டுமே என்றுகூறிக் கொண்டே தன்னுடைய ஆபரணங்களை யெல்லாம் கழற்றிஞர்கள். உங்கள் கணவரிடமும் அனுமதி பெற்றுக் கொள்ளுங்கள் என்று கூறினேன். உடனே அருகிலிருந்த கணவரிடம் தேவனுடைய வசனத்தில் பெண்கள் நகை அணியக் கூடாது என்று எழுதியிருக்கிறது. ஆகையால் நான் என்னுடைய நகைகளை கழற்றி விடுவதில் உங்களுக்கு கவலையில்லையா என்று மிகவும் தாழ்மையாக தன்னுடைய கணவனிடம் கேட்டார்கள். வேத வசனத்தில் அவ்வாறு எழுதப்பட்டிருந்தால் அப்படியே செய்ய வேண்டும் என்று கணவஞரும் கூறிஞர் அந்த அம்மா மிகவும் மகிழ்ச்சியோடு தன்னுடை எல்லா நகைகளையும் கழற்றி தன்னுடைய கணவனிடம் கொடுத்து விட்டார்கள்.

கர்த்தருடைய வசனம் இத்தனை வல்லமையாய் இந் நாட்களில் கிரியை செய்ததற்காக என் தேவனை ஸ்துதித்தேன். அங்குள்ள வாலிபர்கள் தங்களுடைய பெற்ரோர்களுக்குத் தமிழில் சுவிசேஷம் சொன்ஞல் மனந் திரும்புவார்கள் ஆகையால் நீங்கள் எங்கள் தீவிலேயே தங்க வேண்டும். நாங்கள் அதற்கான சகல ஏற்பாடுகளையும் செய்து தருவோம் என்று கூறிஞர்கள். அநேக வயது முதிர்ந்த தமிழ் பேசும் பெரியவர்களுக்கு தமிழ் மொழியில் தேவனுடைய அன்பைக் குறித்து சாட்சி சொன்ன போது மிகவும் ஆச்சரியமாய் கேட்டார்கள், அநேகர் மனந்திரும்பி இயேசு கிறிஸ்துவை சொந்த இரட்சகராக ஏற்றுக் கொண்டார்கள். கர்த்தருக்கே மகிமையுண்டாவதாக!

— (தொடரும்)

PASTOR S. SUNDAR RAJ
VALLIOOR.

---

"அவர் சமீபமாயிருக்கையில் அவரை நோக்கிக் கூப்பிடுங்கள்"— ஏசா 55 : 6

---

# நான் ஏன் புதிய எருசலேமாய் மாறினேன்

எனது சொந்த ஊர் நான்குநேரி அருகில் உள்ள பெரும்பத்து. நான் கிறிஸ்தவ C. S. I பெற்றோர்களுக்கு பிறந்து வளர்ப்பிக்கப்பட்டு வந்தேன். நான் கிறிஸ்தவனாயிருந்தாலும், ஒழுங்காய் ஆலயத்திற்குச் சென்று வந்தாலும் கிறிஸ்துவை அறியாதவனும் பல விதமான பாவங்களுக்கு அடிமைப்பட்டவனும் வாழ்ந்து வந்தேன்.

இந்நாட்களில் கர்த்தர் என்னைச் சந்திக்க சித்தம் கொண்டார். என்னுடைய பதினாறுவது வயதில் நான் பள்ளி இறுதி வகுப்பு (XI Std) படித்துக் கொண்டிருக்கும் போது எனது இடது காலில் எலும்புருக்கி நோய் ஏற்பட்டது. வியாதியின் ஆரம்ப நாட்களில் சுமார் 41 நாட்கள் சுய நினைவு இல்லாது ஜன்னி கண்டு பெரிதும் அவதிப்பட்டேன்.

பின்பு இந்த வியாதி தொடர்ந்து 10 ஆண்டுகளாக என்னை அதிகமாக கஷ்டப்படுத்திற்று. என்னுடைய ரணங்களில் இருந்து எலும்புகள் பொடிப்பொடியாக நொறுங்கி வர ஆரம்பித்தது. எப்போதும் வடிந்து கொண்டே இருக்கும். இந்த வியாதியின் விடுதலைக்காக எத்தனையோ மருத்துவ மனைகளுக்குச் சென்றேன். சுமார் முன்னூறுக்கும் அதிகமான ஊசிகள் போட்டு பார்த்தேன். மூன்று முறை குலோரோபாம் கொடுத்து எனக்கு ஆப்ரேசன் செய்யப்பட்டு சில எலும்புகள் அகற்றப்பட்டன. ஒரு முறை ஆப்ரேசன் செய்யப்பட்ட போது சுமார் 3 அங்குல நீளமுள்ள துணி, மருந்து கலந்து உள்ளே வைக்கப்பட்டது. தையல் எடுக்கப்படும் போது எடுக்கப்பட வேண்டியது. டாக்டர்களின் மறதியால் எடுக்கப்படாது உள்ளேயே இருந்து விட்டது. இந் நாட்களில் என்னுடைய கால் எலும்பு வளர்ச்சியடைய வேண்டும் என்ற நோக்கத்தோடு டாக்டர்கள், விரலில் இருந்து தொடை வரையிலும் மாவு (Plaster) போட்டு அனுப்பி விட்டார்கள். வீட்டிற்கு வந்த இரு வாரங்களில் எனது கால் அதிகமாக வேதனை எடுக்க ஆரம்பித்தது.

மீண்டும் எனது பெற்றோர்கள் அழுகையும் கண்ணீருமாக என்னை கன்னியாகுமரி ஜில்லா அரசு தலைமை மருத்துவமனைக்கு அனுப்பி வைத்தார்கள். எனது கால் அழுகக் கூடிய சூழ்நிலையில் இருந்தபடியால் இந்த முறை எப்படியும் காலை எடுக்க வேண்டும் என்று டாக்டர்கள் சொல்லுவார்கள் என்று சொல்லி என்னை தனியாகவே அனுப்பி வைத்து விட்டார்கள். மருத்துவ மனைக்கு வந்து ஒரு வாரத்திற்கு பின்பு ரணத்தை சுத்தம் செய்யும் போது ஒரு சிறிய நூல் ரணத்தில் தெரிந்தது. அதை கம்பவுண்டர் பிடித்து வெளியே இழுக்கும் போது அத்தோடு சேர்ந்து ஆப்ரேசனில் வைக்கப்பட்ட அந்த துணி வெளியே வந்தது. அதைக் கண்டு டாக்டர்கள் தங்கள் மறதிக்காய் வருந்தினார்கள். எப்படியும் உள்ளே இருந்து கால் அழுகிப் போகாதபடி மூன்று வாரங்களுக்குப் பின்பாகிலும் துணி வெளியே எடுக்கப்பட்டதே என்று துன்பத்தின் மத்தியிலும் நான் சந்தோஷப்பட்டுக் கொண்டேன்.

மருத்துவ மனைகளில் எனக்கு சுகம் கிடைக்காத படியால், நாட்டு வைத்தியர்

களைத் தேடிச் சென்று அவர்களிடம் மாதக் கணக்காக பத்தியத்தில் மருந்து சாப்பிட்டேன். அதில் ஒரு வைத்தியர் (திருவிதாங்கூர் மல்க் முகம்மது) 2 ஆண்டுகள் என்னுடைய வீட்டில் தங்கியிருந்து எனக்கு சிகிச்சை செய்தார்.

நாட்டு வைத்தியத்தில் சுகம் கிடைக்காத படியால் அநேக ரோமன் கத்தோலிக்க ஆலயங்களுக்கு (மாதா கோவில், மிக்கேல், அந்தோனியார்) சென்று 41 நாள், 21 நாள் என்று அந்த ஆலயங்களில் தங்கியிருந்து அந்த ஆலயத்தைச் சுற்றி வருவதும், அங்குள்ள புதுமைகளை என்னுடைய ரணங்களில் பூசுகிறவனுயும் இருந்து வந்தேன். அங்கும் விடுதலை இல்லாதபடியால் அநேக ஜெப வீடுகளுக்கும், ஜெப அலயங்களுக்கும் (பெந்தேகோஸ்து) சென்றேன். எனக்காய் ஜெபிக்கும்படி ஒரல் ராபர்ட், ஆஸ்போர்ன் போன்ற பரிசுத்தவான்களுக்கு தபால் எழுதினேன், இந்த பிரயாசங்களினுலும் எனக்கு சுகம் கிடைக்கவில்லை. இந்நாட்களில் எனக்கு வியாதி அதிகப்பட்டு விட்டபடியால் நான் இரண்டு ஆண்டுகளாக படுக்கையிலாகி எலும்பும் தோலுமாக காட்சியளித்தேன். இரவு நேரங்களில் எனது ரணங்களில் அதிகமான நோவு ஏற்படுவதால் எனது படுக்கையில் நான் சப்தமிட்டு கதற வேண்டிய நிலை ஏற்பட்டது. இதனுல் எனது தகப்பனுரும் சகோதரனும் எங்களை தூங்க விடாது உபத்திரவப் படுத்துகிருயே என என்னைத் திட்டினுர்கள். எனவேஎனக்கு சப்தமிட்டு கதறும்படியான நோவு ஏற்படும் சமயங்கள் வரும் போது நான் எனது வாய்க்குள்ளாய் சப்தம் வெளி வராதபடி துணிகளை திணித்துக் கொள்வேன். இந்நாட்களில் என்னுடைய (C. S. I) சபை போதகர் ஒரு முறை கூட என்னை சந்தித்து எனக்காய் ஆறுதல் சொன்னதோ, ஜெபித்ததோ கிடையாது.

இந்த இக்கட்டான நாட்களில் (1970) தமிழ்நாடு புதிய எருசலேம் சபை பாஸ்டர் S. சுந்தர் ராஜ் ஐயா அவர்கள் கர்த்தரால் அனுப்பப்பட்டு என்னை வந்து சந்தித்தார்கள். நான் என்னைக் கர்த்தருக்காக ஒப்புக் கொடுத்த போது, எனக்காக ஜெபம் செய்தார்கள். பல ஆயிரம் பணங்கள் செலவு செய்தும் தீராத எலும்புருக்கி நோயிலிருந்து கர்த்தர் அற்புதமாய் சுகம் தந்தார். நான் என்னுடைய பாவங்களை அறிக்கையிட்டேன். கர்த்தர் என்னுடைய பாவங்களை மன்னித்தார். பாவ மன்னிப்புக் கென்று முழுகி ஞானஸ்நானம் எடுத்து பரிசுத்த ஆவியின் அபிஷேகத்தை பெற்று இந்நாட்களில் கர்த்தருக்கு ஒரு சிறிய ஊழியம் செய்ய கர்த்தர் எனக்கு பெலனும், கிருபையும் அருட் செய்திருக்கிருர். நான் நான்குநேரி புதிய எருசலேம் சபையில் தற்போது ஊழியக்காரனுய் இருந்து அவரைச்சேவித்து வருகிறேன். அவருடைய பரிசுத்த நாமத்துக்கு மகிமை உண்டாவதாக! எனக்காக ஜெபியுங்கள்.

Eld. Bro. L. Jebamani
New Jerusalem Church
Nanguneri.

---

"ஒருவன் எனக்கு ஊழியம் செய்கிறவனுனல் என்னைப் பின்பற்றக் கடவன்..."
—யோ. 12 : 26

---

# பாவிக்கு கிடைத்த பரம பாக்கியம்

வானத்தையும் பூமியையும் சமுத்திரத்தையும் அவைகளிலுள்ள சகல சிருஷ்டிகளையும் வார்த்தையினலே படைத்த சர்வ வல்லமையுமுள்ள தேவன், மனிதனை தமது சாயலின்படியும்ரூபத்தின் யுபடியேம் பூமியின் மண்ணினலே உண்டாக்கி தமது ஜீவ சுவாசத்தை அவன் நாசியிலே ஊதினர், மனிதன் ஜீவாத்துமாவானன். அவனுக்கு ஆதாம் என்று பெயரிட்டார். அவன் தனிமையாய் இருப்பது நல்லதல்ல வென்று ஏற்ற துணையை உண்டாக்கி (ஏவாளை) ஆதாமிடம் (அவனிடம்) கொண்டுவிட்டு விட்டார். அவர்கள் ஏதேனிலே தேவனேடு உரையாடி, உறவாடி சந்தோஷமாக வாழ்ந்து வந்தார்கள். தேவனும் அவர்களோடு மகிழ்ந்து கொண்டிருந்தார். (நீதி. 8 : 31).

சாத்தான் தனது தந்திரத்தால் ஏவாளை வஞ்சித்தான். பின் ஆதாமும் தேவ ஆலோசனையை மீறி பாவம் செய்து இருவரும் தேவ மகிமையை இழந்தார்கள். தேவனுக்கும், மனிதனுக்கும் இடையே பிளவு உண்டாயிற்று. ஆக்கினை தீர்ப்பு உண்டாயிற்று. மனிதன் ஏதேனை விட்டு துரத்தப் பட்டு தேவ சமுகத்தை விட்டு தூரம் போனன். பாவம் உள்ள சந்ததி உலகில் பலுகிப் பெருகிற்று.

இரக்கத்தில் ஐசுவரியமுள்ள தேவன் பாவத்தில் அமிழ்ந்து அழிந்து கொண்டிருந்த மனு மக்களை பாவத்தின் சம்பளமாகிய மரணத்தினின்று மீட்டு இரட்சிக்க அநாதி காலமாய் தம்மோடிருந்த தமது சொந்த குமாரனை, பாவ மாம்சத்தின் சாயலாகவும், பாவத்தை போக்கும் பலியாகவும் அனுப்பி மாம்சத்திலே பாவத்தை ஆக்கினைக்குள்ளாகத் தீர்த்தார்—ரோம. 8 : 3. மெய்யாகவே அவர் நம்முடைய பாடுகளை ஏற்றுக் கொண்டு நம்முடைய துக்கங்களை சுமந்தார். —ஏசா. 53 : 4. நம்முடைய மீறுதலினிமித்தம் அவர் காயப்பட்டு நம்முடைய அக்கிரமங்களினிமித்தம் நொறுக்கப்பட்டார்; நமக்குச் சமாதானத்தை உண்டு பண்ணும் ஆக்கினை அவர் மேல் வந்தது. அவருடைய தழும்புகளால் குணமாகிரேம்-- ஏசா. 53 : 5.

தேவன் தம்முடைய ஒரே பேரான குமாரனை விசுவாசிக்கிறவன் எவனே அவன் கெட்டுப் போகாமல் நித்திய ஜீவனை அடையும் படிக்கு அவரைத் தந்தருளி இவ்வளவாய் உலகத்தில் அன்பு கூர்ந்தார். யோவா. 3 : 16. ஆம்! மனுக்குலம் கெட்டு போகாமல் நித்திய ஜீவன் பெற்று நித்திய தேவனேடு வாழ தேவன் தமது சொந்தக் குமாரனையே தந்த தேவனின் அன்பு, பாவிக்கு கிடைத்த பரம பாக்கியமே. நாம் பாவிகளாக இருக்கையில் கிறிஸ்து நமக்காக மரித்ததினலே தேவன் நம் மேல் வைத்த தமது அன்பை விளங்கப் பண்ணுகிருர்- ரோம 5 : 8. மகிமை இழந்த தூதர்களும் தேவனுடைய சிருஷ்டிகளே; என்ருலும் தேவன் தமது சாயலாய் உண்டாக்கிய மனிதனில் அன்பு கூர்ந்தார். ஆதலால் அவர் தேவ தூதருக்கு உதவியாகக் கை கொடாமல் ஆபிரகாமின் சந்ததிக்கு உதவியாகக் கைக் கொடுத்தார்—எபி. 2 : 16. இப்பெரிதான கிருபை பாவிக்கு கிடைத்த பரம பாக்கியமே சங். 32 : 1. அவருடைய நாமத்தின் மேல் விசுவாசமுள்ளவர்களாய் அவரை ஏற்றுக் கொண்டவர்கள் எத்தனை பேர்களோ அத்தனை பேர்களும் தேவனுடைய பிள்ளைகளாகும்படி அவர்களுக்கு அதிகாரம் கொடுத்தார்- யோவா. 1 : 12.

மீட்கப்பட்ட தமது பிள்ளைகளில் தேவன் அன்பு கூர்ந்து அவர்களை நேசித்து பாதுகாத்து வளர்த்து பலவான்களாக புத்திரர்களாக்க அவர்களோடு கூடவே இருக்க வாஞ்சிக்கிருர். பிள்ளைகள் பிதாவின் சகல ஐசுவரியங்களுக்கும் சுதந்தரவாளிகள்—கலா. 3 : 29. தமது பிள்ளைகள் தமது ஐசுவரியங்களை அனுபவித்து ஆள, தகுதியும், பெலமும், ஞானமும், அறிவும் உள்ளவர்களாகவும், அதற்கு அவர்களை ஆயத்தமாக்கவும், அவர்களோடு வாசம் பண்ணுவேன் என்று வாக்கு கொடுக்கிருர்.

நான் உங்களை திக்கற்றவர்களாக விடேன். உங்களிடத்தில் வருவேன்... உலகம் என்னைக் காணது. நீங்களோ என்னைக் காண்பீர்கள், நான் பிழைக்கிறபடி

யினால் நீங்களும் பிழைப்பீர்கள் நான் என் பிதாவிலும் நீங்கள் என்னிலும் நான் உங்களிலும் இருக்கிறதை அந்நாளிலே நீங்கள் அறிவீர்கள் (யோவா. 14 : 18, 19, 20) என்றார்.

ஆம், தேவன் மனிதனோடு வாசம் பண்ணும் மகிமையிலும் மேலான மேன்மை உலகில் மனிதருக்குண்டோ?

நீங்கள் மனந்திரும்பி, ஒவ்வொருவரும் பாவ மன்னிப்புக்கென்று இயேசுக் கிறிஸ்துவின் நாமத்தினாலே ஞானஸ்நானம் பெற்றுக் கொள்ளுங்கள் அப்பொழுது பரிசுத்தாவியின் வரத்தை பெறுவீர்கள்—அப். 2 : 38. மேலும் நமக்கு அருளப்பட்ட பரிசுத்த ஆவியினாலே தேவ அன்பு நம்முடைய இருதயங்களில் ஊற்றப் பட்டிருக்கிற படியால் அந்த நம்பிக்கை நம்மை வெட்கப்படுத்தாது—ரோம. 5 : 5. பரிசுத்த ஆவியினாலே இருதயத்தில் ஊற்றப்படும் தேவ அன்பு (பாவிக்கு) பிள்ளைகட்கு கிடைத்த பரம பாக்கியமே. பரிசுத்தாவிப் பெற்று ஆவியில் நிறைந்திருக்கும் தேவப்பிள்ளையின் உள்ளம் புதிய ஏதேனாக இருக்கிறது. பாவம் செய்த ஆதாமும் ஏவாளும் விருட்சங்களுக்குள்ளே ஒளித்துக் கொண்டார்கள், தேவனுடைய சத்தம் கேட்டு பயந்ததால். பாவமன்னிப்பைப் பெற்று பரிசுத்தாவியால் நிறைந்திருக்கும் பிள்ளைகளோ தேவ சத்தம் கேட்க தேவ சமூகத்தில் ஆவலாக காத்திருக்கிறார்கள். தன் ஆத்மநேசரோடு உரையாட, உறவாட, மகிழ்ந்து களிகூர ஆவலோடு காத்திருக்கிறார்கள்.

இங்கே காத்திருக்கிறவர்களின் பெயர் நேசம். ஆம், காத்து இருக்கும் நேசம் அன்பின் நேசரின் குரல் கேட்கிறாள். ஆ, இது என் நேசரின் சத்தம் மலைகளின் மேல் குதித்தும் மேடுகள் மேல் துள்ளியும் வருகிறார். -(உன். 2 : 8 ) என்று பார்த்து கேட்டுக் கொண்டே இருக்கிறாள். இதோ நேசர் வந்து விட்டார். (ஆவிக்குள்ளாதல்) நேசம் தனது அறை வீட்டை பூட்டினாள் (ஜெபநிலை). நேசர் இனிமை நிறைந்த மெல்லிய குரலில் பேசினார்: "கன் மலையின் வெடிப்புகளிலும் சிகரங்களின் மறைவிடங்களிலும் தங்கும் என் புறாவே உன் முகரூபத்தை எனக்கு காண்பி உன் சத்தத்தை நான் கேட்கட்டும்" உன். 2:14

(தொடரும்)

---

"அன்பு திரளான பாவங்களை மூடும்"
I பேது. 4 : 8

---

# CONFESSION ABOUT JESUS

With heart man believeth unto righteousness and with the mouth confession is made unto salvation -- Rom. 10 : 10.

Believing Lord Jesus Christ being repented, is not sufficient for a man to be saved, but also he must confess with the mouth before men (Mt. 10 : 32, 33). He obtains salvation only when he professes like this and takes baptism, and his sins are also forgiven (Acts 2 : 38; 22 : 16). The confession must be done either in the midst of the congregation or in the presence of a servant of God With heart man believes unto salvation and with the mouth confession is made unto salvation (Romans 10 : 10).

But in these days false teachers preach, "Believe Lord Jesus Christ, (the actual meaning of belief was not given) where ever you may be, pray to Lord Jesus, confessing your sins, you will be saved and yours sins will be forgiven".

These are not sent of God (Acts 15 : 26). The plan of salvation is not known to them. More over they say that they give baptism to those who are already saved. But the Scripture says. "He that believeth and is baptized shall be saved" (Mark 16 : 16). Baptism is not for the saved ones but baptism is given to be saved (I Pet 3 : 21). To be saved that soul must come to the church. Then he must perform two kinds of confession. One is the confession about Jesus (Acts 8 : 37) another is the confession of sins (Acts 19 : 18; Mt. 3 : 5, 6; Mk. 1 : 4, 5). Confession about Jesus: Confession which the men did about Jesus, with their whole heart has become essential to be saved. That confession must be done before many witnesses (1 Tim. 6 : 12).

When John the Baptist proclaimed, **"Behold the lamb of God, which takes away the sin of the world,"** two disciples followed after him, and one among them is Andrew, who is the brother of Simon Peter. He went and abode with Jesus and returned. Then he found his younger brother Simon and brought him to Jesus, telling him that he saw **the Messiah** (Jn. 1 : 41). Then Lord called Philip. Philip found Nathanael and said unto him, "We have found **him, of whom Moses in the Law and the prophets,** did write, Jesus of Nazareth, the son of Joseph (Jn. 1 : 45)". When Nathanael came near unto Jesus and was touched by him. Being filled with joy he declared. Rabbi, thou art the **King of** Israel (Jn 1 : 49).

These are the declarations which proceeded from the hearts of the saints who met Lord Jesus, not from their lips. The words came out whole heartedly by the pressure of God and therefore these are called as good profession (I Tim. 6 : 12)

God bestows one blessing for this type of confession. That is, "Ye are the blessed", (Mt. 16 : 16, 17). Where it must be done? In the presence of men (Mt. 10 : 32). In the presence of many witnesses (I Tim. 6 : 12). This type of confession must be done often (Acts 8 : 37; 22 : 16). Timothy too had professed this type of confession and taken baptism. After twenty years Paul reminded Timothy about this (I Tim. 6 : 12). St. Peter too professed this type of confession often. He said unto Jesus. **"Lord to whom shall we go? Thou hast the words of enternal life, and we belive and are sure that thou art that christ, the son of the living God"** (Jn. 6 : 68, 69). Look at the confession of Martha. She said. **"Yea Lord; I believe that thou art the Christ the Son of God, who should come into the world"** (Jn. 11 : 27). Jesus himself revealed about him in many ways. He said that **he had been anointed for all things** (Lk. 4 : 18, 19). More than hundred times Apostle Paul confessed one type of confession.

That is **Christ** (Phil. 1 : 21). That was his only preaching (II Cor. 4 : 5). He says, "That is the word we preach" (Rom. 10 : 8). He confessed that Jesus Christ is **Lord** (Phil 2 : 11) Jesus also made a good confession about him. That is "**I am King**" (Jn. 18 : 36, 37) St. John proclaims. "Who confess not that Jesus Christ is come in fless. That is a deceiver and an anti Christ (II Jn. 7).

While Paul confessed, he said. "I know whom I have believed" (II Tim. 1 : 12) How about your confession? St. Thomas confessed. "**My Lord and my God**" (Jn 20: 28). What is your final confession? He is over all (Rom. 9 : 5). According to the form of your confession you will receive the blessing. Confess LORD JESUS CHRIST openly with courage.

> ...Who say ye that I am?
> -Mt. 16 : 15.

# ஸ்தோத்திரம்

புதிய எருசலேம் சபையின் ஊழியர் மாநாடு மே 22 முதல் 30வரைY.M.C.A College, CampingCentre, Nandanam Madras-35ல் Chief Pastor N. LAZAR அவர்களின் தலைமையில் கூடியது. அநேக தேவ இரகசியங்களும் செய்திகளும் வெளிப்பட்டது / வெளியிடப்பட்டன. ஆலோசனை சங்கம் கூடி அநேக சிக்கலான பிரச்சனைகளுக்கு முடிவு எடுக்கப்பட்டது. மிகுந்த தேவவல்லமையும் மகிமையும் வெளிப்பட்டது. 15 புதிய ஊழியர்கள் ஊழியத்திற்கென்று எடுக்கப்பட்டு ஊழியர் குழுவில் சேர்க்கப்பட்டனர். சில ஊழியர்களுக்கு அதிகாரங்கள் பகிர்ந்தளிக்கப்பட்டது. சிலருக்கு பொறுப்புகள் வழங்கப்பட்டது. சிலருக்கு இடமாற்றம் (Transfer) அளிக்கப்பட்டது. மாநாட்டின் முடிவு மிகுந்த ஆசீர்வாதமாய் தேவபெலன் அளிப்பதாய் இருந்தது.

மாநாட்டை தொடர்ந்து ஜூன் 1, 2, 3 ஆகிய நாட்களில் Y.M.C A. கல்லூரி காம்பௌண்டில் புதிய எருசலேம் சபையின் மாபெரும் கன்வென்ஷன் நடைபெற்றது. முதல் நாள் "மனந்திரும்புதலும் பாவமன்னிப்பும்" என்ற பொருள் பற்றியும் இரண்டாம்நாள் "என் சபையைக் கட்டுவேன்" என்ற செய்தி பற்றியும் 3ம் நாளில் "புதிய எருசலேம் சபை" என்ற தலைப்பிலும் Cheif Pastor N. Lazar அவர்கள் தெய்வீக அருள் உரை அளித்தார்கள். தினமும் நூற்றுக் கணக்கான பேர் வந்து கேட்டு இறை அருள் பெற்றனர்கள். கன்வென்ஷன் தெய்வீக வெளிப்படுத்துதலோடும், வல்லமையோடும் ஆசீர்வாதமாய் நடைபெற்று முடிந்தது.

ஜூன் 4ந் தேதி காலையில் 31 பேர் கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவை ஏற்றுக் கொண்டு ஞானஸ்நானம் எடுத்து கொண்டார்கள். புதிய எருசலேமாய் திருச்சபையின் அங்கமாய சேர்க்கப்பட்டார்கள். அல்லேலூயா!

இந்த ஊழியங்களுக்காக ஜெபித்த, கொடுத்த, உதவி செய்த எல்லா தேவனுடைய பிள்ளைகளுக்கும் கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் இனிய நாமத்தில் எங்களுடைய வாழ்த்துக்கள்.

தேவ ஆசீர்வாதம் உண்டாவதாக!

# புதிய எருசலேம் செய்தி

எக்காள சத்தம்–7, 8 ● ஜூலை/ஆகஸ்ட் '84



"புதிய எருசலேம் சபை"

"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ, நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள்.... விழித்திருங்கள்...உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லோருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்..."

மாற்கு 13 : 35-37

**EDITOR: CHIEF PASTOR N. LAZAR**

BOMBAY. INDIA

## பத்திரிகையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லோரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒருமனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும் படியாகவும் தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய்க் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும்; சபையானது வஞ்சக போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது.

(எபே. 4:11-16)

ஜூலை / ஆகஸ்ட்'84

## இதழின் உள்ளே



Chief Pastor அவர்கள் ஊழியர் மாநாடு, கன்வென்ஷன் காரியமாய் சென்னை சென்றிருந்ததாலும், இன்னும் சில காரணங்களினாலும் ஜூலை-ஆகஸ்ட் இரண்டு மாதங்களுக்கும் சேர்த்து இந்த இதழ் வெளியிடப்படுகிறது.

# ஆசிரியர் உரை

அன்பான தேவனுடைய பிள்ளைகளே ! எல்லாவற்றிற்கும் முடிவு சமீபித்துக் கொண்டிருக்கிறது. கடைசிகாலத்தின் கடைசிநாளின் கடைசிமணி நேரத்தில் நாம் இருக்கிறோம். நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் வருகை நெருங்குகிற இந்த நாட்களில் உலகத் தோற்ற முதல் தேவன் தம்முடைய பரிசுத்த தீர்க்கதரிசிகள் எல்லார் மூலமும் சொன்ன எல்லாம் (இயேசு கிறிஸ்துவின் வருகைக்குமுன் நடைபெறும் என்று சொன்னதெல்லாம்) நிறைவேறித் தீரும் காலமாயிருக்கிறது. அதில் முக்கியமானது தடைசெய்கிறவனாகிய சாத்தான் (வலுசர்ப்பம்) வானத்திலிருந்து பூமியில் விழத்தள்ளப்படவேண்டும். அப்பொழுதுதான் கேட்டின் மகனாகிய பாவமனுஷன் அந்திக்கிறிஸ்து வெளிப்படுவான். அவன் வெளிப்பட்ட பின்பே கிறிஸ்துவினுடைய வருகையும் நாம் அவரிடமாய் சேர்க்கப்படுவதும் நிகழும் (IIதெச. 2 : 1–9). ஆனபடியால் பிரதான தூதனாகிய மிகாவேல் தோன்றி வானத்திலே வலுசர்ப்பத்தோடும் அவனைச்சேர்ந்த தூதர்களோடும் யுத்தம் நடப்பித்து சாத்தானை கீழே விழத் தட்டும்படி ஜெபம் பண்ணுவோமாக (வெளி. 12 : 1–10). தடைசெய்கிறவன் வலுசர்ப்பம் (சாத்தான்) வானத்திலிருந்து அகற்றப்படும்படியாக ஜெபம் பண்ணுவோம். தேவனுடைய தீர்மானங்கள் திட்டங்கள் நிறைவேற நம்முடைய ஊக்கமான ஜெபம் தேவை. தேவன் வாக்குத்தத்தம் செய்தாலும் நாம் ஜெபம் பண்ணினால்தான் நிறைவேற்றுவோம் என்கிறார். ஜெபிப்போம் தடை அகற்றப்பட, அப்பொழுது நம்முடைய கர்த்தர் வருவார்.

கிறிஸ்துவுக்குள்,

N. Lazar

Chief Pastor N. LAZAR

# நம்பிக்கை —I கொரி. 13:13

இந்தவார்த்தைகள் தேவன் மேல் நம்பிக்கை, வாழ்க்கையில் நம்பிக்கை, வருங்காலத்தைப் பற்றிய சந்தோஷமான நம்பிக்கையை உண்டாக்க வேண்டும்.

அநேகர் நம்பிக்கையில்லாமல் சந்தேகத்திலே உலறுகின்றனர் (கலங்குகின்றனர்) சிலர் வீண் நம்பிக்கை வீணனவைகளின் மேல் நம்பிக்கையுடையவர்களாயிருக்கின்றனர். அநேகர் பிறரை நம்பாதது மட்டுமல்ல தாங்களும் பிறர் நம்பமுடியாத எத்தர்களாயிருக்கின்றனர் (நம்பிக்கைமோசம்).

வேதம் என்ன சொல்கிறது—நம்பிக்கையுடையவர்களாயிருங்கள்.

விசுவாசத்திற்கு அடுத்தபடி நம்பிக்கை விசுவாத்தைத் தொடர்ந்து நம்பிக்கையும் நம்பிக்கைக்குப் பின் அதிக விசுவாசமும் மாறி, மாறி வருகிறது. நம்பிக்கை என்பது தேவனல் முடியும் என்று நம்புவதாகும்.

நாம் தேவனிடத்தில் நம்பிக்கையாயிருக்க வேண்டும். தேவன் ஒருவர் உண்டென்றும் அவர் தம்மைத் தேடுகிறவர்களுக்கு நன்மை செய்கிறரென்றும் (எபி.11:6), அவர் தாம் சொன்னபடிசெய்ய வல்லவரென்றும் (ரோமர் 4: 20, 21), அவர் நம்பிக்கைக்குப் பாத்திரமுள்ள தேவன் என்றும் (சங் 22: 5), அவர் தம்மை நம்புகிறவர்களைக் கைவிடார் என்றும் (சங் 26: 5; II சாமு. 22: 35), அவருடைய வார்த்தையின் படி நடந்தால் அவர் நிச்சயம் அவர்வாக்குப்படி நன்மை செய்வார் என்றும் அவர் ஒரு போதும் தீமைசெய்யார் என்றும் (சங்.119:68) நம்பவேண்டும். இந்த நம்பிக்கை மரணத்திலும் உண்டாயிருக்கவேண்டும் (சங் 23: 4)

வாழ்க்கையில் நம்பிக்கை தேவனை நம்பிடனயிருக்க வேண்டும் (சங். 37: 3,5). பிறநடைய காரியத்தில் நம்பிக்கையுடைவர்களாய் நடக்கவேண்டும். (லூக் 16: 11, 12). ஆபத்துக் காலத்தில் சோர்ந்து போகக்கூடாது (சங் 50: 15, 18) தேவன் எல்லாவற்றையும் நன்மையாக முடிப்பார் என்று நம்ப வேண்டும் (ரோ 8: 28), கிரியைகளுக்குப்பலனுண்டு என்று நற்கிரியை செய்ய வேண்டும் (எரே. 31: 16; பிர 9: 10). நீ நம்புகிறபடி உனக்கு ஆகும் (சங் 34: 5.).

வருங்காலத்தைப்பற்றி மறுபடியும் மரித்தோரின் உயிர்த் தெழுதலும் உண்டு (எபி. 9: 27), இயேசு கிறிஸ்து இரண்டாம்முறை வரப்போகிறர் அழைக்க (I தெச 4: 13-16). நாம் பரிசுத்தமாய் ஜீவித்தால் தேவனைத் தரிசிப்போம் (மத் 5: 8; I யோ 3:2). பிற்காலத்தில் நன்மை செய்ய தேவன் இவ்விதம் நடத்துகிறர் (ஆதி 50:20), தேவன் என்னை தீங்கினின்று இரட்சித்து தம்முடைய இராஜ்ஜியத்தில் சேர்த்துக் கொள்வார் (II தீமா 4: 18), தேவனை நம்பியிருக்கிறேன் பதறேன் (சங் 56: 4, 11), என்கிற நம்பிக்கையினல் தைரியமும், சந்தோஷமும் எதிர்பார்ப்பும் உண்டாகும். நீங்கள் தேவன் மேல் நம்பிக்கையுடையவர்களாய், நம்பப்படத்தக்கவர்களாய், தேவனுடைய வாக்குத்தங்களும் தீர்மானங்களும், திட்டங்களும் நிறைவேறும் என்னும் நம்பிக்கையுடையவர்களாயிருங்கள். எங்கள் பிதாக்கள் உம்மை நம்பினர்கள். நம்பின அவர்களை நீர் விடுவித்தீர் (சங் 22: 4).

."நம்பிக்கையிலே சந்தோஷமாயிருங்கள்"- ரோமர் 12: 12.

# ஆத்துமா ஆதாயம்

கிறிஸ்துவினுடைய மகிமையான சுவிசேஷத்தை விசுவாசித்து, அவரை ஏற்றுக்கொண்டவர்கள் எத்தனை பேர்களோ அத்தனைபேர்களும் அவருடைய இரத்தத்தினல் உண்டாகும் பாவமன்னிப்பாகிய மீட்பைக் குறித்து அறிவித்து மற்றவர்களை ஒளியினிடத்திற்கு நடத்துவதே தேவனுக்கு முன்பாகப் பிரியமும், நன்மையான காரியமாக இருக்கிறது. ஆனபடியால் இந்த கனமான ஊழியத்தைச் செய்வதற்கு வேண்டிய

தகுதிகளைப் பற்றியும், எப்படி செய்வது என்பதைப்பற்றியும் ஆராய்வோமாக.

நம்முடைய கண்களில் இருக்கிற உத்திரத்தை நாம் உணராது மற்றவர்களின் கண்களிலிருக்கிற துரும்பை எடுத்துப்போடட்டும் என்று நாம் சொல்வதெப்படி? (மத். 7: 4) முதலாவது நாம் குணப்பட வேண்டும் (லூக். 22: 32). குணப்படாதவர்களை கர்த்தர் எடுத்து பிரயோஜனப்படுத்த முடியாதே. கர்த்தராகிய இயேசுகிறிஸ்து பரிசுத்தர்என்று அறிவிக்க விரும்புகிற நாம் நம்முடைய இருதயத்தில் அவரை பரிசுத்தப்படுத்தி (I பேதுரு 3: 15), அவர் பரிசுத்தராய் இருக்கிறது போல் நாமும் நம்முடைய நடக்கை எல்லாவற்றிலேயும் பரிசுத்தராயிருக்க வேண்டாமோ? (Iபேதுரு 1: 15).

"வானவருடைய சாயலையும் அணிந்து கொள்வோம்." (I கொரி. 15: 49). ஆத்துமா ஆதாயம் செய்ய விரும்புகிறவர்களில் பிரதானமாக காணப்பட வேண்டியது பரிசுத்தமே. பரிசுத்தமே நமது இருதயத்தின் அலங்காரமாக இருக்கக் கடவது.

"ஆத்துமாக்களை ஆதாயப்படுத்திக் கொள்கிறவன் ஞானமுள்ளவன்" (நீதி11: 30) என்று தேவவாக்கு விளம்புகிறபடியால் குணப்பட்டு, பரிசுத்தமாககாணப்படுகிறவர்களுக்கு அடுத்து தேவையானது ஞானம் என்பதை அறிகிறோம். ஞானத்தில் குறையுள்ளவர்கள் யாவருக்கும் சம்பூரணமாய்க் கொடுக்கிறவரும் ஒருவரையும் கடிந்து கொள்ளாதவருமாகிய தேவனிடத்தில் கேட்டு (யாக். 1: 5) பெற்றுக்கொள்ள வேண்டும். அவர் மெய்ஞ்ஞானத்தை வைத்திருக்கிறார்" (நீதி 2: 7), ஞானவான்கள்தான் தங்களிடத்தில் விசாரித்துக் கேட்கிற யாவருக்கும் சாந்தத்தோடும், வணக்கத்தோடும் உத்தரவு சொல்ல எப்பொழுதும் ஆயத்தமாயிருக்க (I பேதுரு 3: 15) முடியும். ஞானவான்கள்தான் தேவனை நிந்திக்கிறவர்களுக்கு மறு உத்தரவு அருளிச்செய்து அவருடைய இருதயத்தை சந்தோஷப்படுத்த முடியும். "ஞானமேமுக்கியம், ஞானத்தைச் சம்பாதி என்னத்தைச் சம்பாதித்தாலும் புத்தியைச் சம்பாதித்துக்கொள்?" நீதி. 4:7.)

ஞானத்தையும், புத்தியையும் தேவனிடத்திலிருந்து பெற்றவர்கள் கர்த்தருடைய சமாதானத்தைக்கூறி நற்காரியங்களைச் சுவிசேஷமாய் மற்றவர்களுக்கு அறிவிக்க வேண்டியது நம்மேல் விழுந்த பிரதான கடமையாக எண்ணவேண்டும். "பிரசங்கிக்கிறவன் இல்லாவிட்டால் எப்படிக் கேள்விப் படுவார்கள்? அவரைக்குறித்து கேள்விப் படாதவர்கள் எப்படி விசுவாசிப்பார்கள்?" (ரோமர் 10: 14). சமயம் வாய்த்தாலும் வாய்க்காவிட்டாலும் ஜாக்கிரதையாய்த் திருவசனத்தைப்பிரசங்கம் பண்ண (IIதீமோ. 4: 2) வேண்டும் என்பதே பரிசுத்தவானின் ஆலோசனை.

சிலர் போதகத்தைக் கேட்டு மனந் திரும்பலாம்; சிலர் போதனையின்றி (Iபேதுரு 3: 2) நம்முடைய நற்கிரியைகளைக் கண்டு பரலோகத்திலிருக்கிற தேவனை மகிமைப் படுத்த இருளிலிருந்து ஆச்சரியமான ஒளியினிடத்திற்கு வர நம்முடைய வெளிச்சம் அவர்களுக்கு முன்பாக பிரகாசிக்க வேண்டும். ஏனெனில் நற்கிரியைகளைச் செய்கிறதற்கு நாம் கிறிஸ்து இயேசுவுக்குள் சிருஷ்டிக்கப்பட்டிருக்கிறோம்" (எபே. 2: 10). நம்மை நிந்திக்கிறவர்களுக்கு நன்மைசெய்து தீமை செய்கிறவர்களுக்கு ஆபத்தில் உதவி செய்து, குறைச்சல் உள்ளவர்களுக்கு இயன்ற அளவு கொடுத்து, நாம் கிறிஸ்துவின் பிள்ளைகளாய் இருக்கிறோம் என்பதை வெளிப்படுத்த வேண்டும். நம்முடைய கிரியைகளைக் காண்பவர்களும், கேட்பவர்களும் நம்மில் இறைவனைக் கண்டு மனந் திரும்புவார்கள்.

நமது மூலம் தேவன் ஆத்துமாக்களை சந்திக்கவேண்டுமானால் நாம் இடைவிடாமல் ஜெபம்பண்ணி, ஸ்தோத்திரத்துடன் ஜெபத்தில் விழித்திருக்க வேண்டும் (கொலோ. 4: 2). பரிசுத்த ஆவியினால் நிறைந்து (எபே. 5: 18) பரிசுத்த ஆவிக்குள் ஜெபம்பண்ணி யூதா : 20) கர்த்தரிலும் அவர் வல்லமையினாலும் நிறைந்தவர்களாக (அப். 6: 8) காணப்படவேண்டும். ஏனென்றால் நம்முடை தகுதி, தேவனால் உண்டாயிருக்கிறது (II கொரி. 3: 5). ஜெபம் செய்யாதவர்களை சாத்தான் மேற்கொண்டு

விடுவதால் மற்றவர்களுக்கு சுவிசேஷம் அறிவிப்பதால் யாதொரு பிரயோஜனமும் இல்லை. சுவிசேஷத்தைக் கேட்கிறவர்களும் உணர்வடையமாட்டார்கள். ஆகையால் ஜெபமே ஜெயத்தைத்தரும். அவருடைய செவிகள் நீதிமான்களுடைய வேண்டுதலுக்குக் கவனமாயிருக்கிறபடியால் (1 பேது.3 12) நாம் வேண்டிக் கொள்கிறதெதுவோ அதை அவராலே பெற்றுக் கொள்கிறோம் (Iயோ. 3: 12). ஆனபடியால் நாம் யாருக்காக திறப்பின் வாசலில் நின்று வேண்டுகிறோமோ அவர்களை தேவனாகிய கர்த்தர் இரட்சிப்பார்.

சுவிசேஷத்தில் நாம் உடன் பங்காளியாகும்படிக்கு (1கொரி. 9: 23) நம்மைத் தாமே எல்லோருக்கும் அடிமையாக்கி, பலவீனரை ஆதாயப்படுத்திக் கொள்ளும்படிக்குப் பலவீனருக்குப் பலவீனர்களைபோலாகி எப்படியாகிலும் சிலரை இரட்சிக்கும் படிக்கு நாம் எல்லோருக்கும் எல்லாமாக (Iகொரி. 9: 22) காணப்படுவது மிகவும் அவசியம்.

# நீ விசுவாசிக்காவிட்டால்...

தேவனாகிய கர்த்தர் சிருஷ்டித்திருக்கிறவைகள் யாவையுமே, எண்ணிப்பார்ப்போமானால் அதிசயமாகவும் அற்புதமாகவுமே இருக்கிறது. எண்ணிப்பார்க்காத மாந்தர்களுக்கு அது சாதாரணமான காரியமாகவே இருக்கிறது. கர்த்தர் தமது ஜனத்தின் மத்தியில் அவ்வப்போது அசாதாரணமான காரியங்களை நடப்பிக்கிறார். அவைகள் அநுதினமும் நடவாமல், எண்ணப்படக்கூடிய அளவில் நடக்கிறபடியால் அதிசயமாகவும், அற்புதமாகவும், ஆச்சரியமாகவும் இருக்கிறது. கர்த்தரை அறிந்த அவருடைய மக்களுக்கு அவர் செய்யப் போகும் ஆச்சரியமான காரியங்களை தாம் நேரடியாகவோ, தம்முடைய தூதன் மூலமாகவோ, தாம் தெரிந்து கொண்ட மனிதன்மூலமாகவோ முன்னறிவிக்கிறார். இப்படிப்பட்ட செய்திகளை தமது ஜனம் விசுவாசிக்க வேண்டும் என விரும்புகிறார். அப்படி அவர்கள் விசுவாசியாமல் போகும்போது தேவன் கோபங்கொண்டு தண்டிக்கிறார்.

இப்போதும் மூன்றுவிதமாகசெய்திபெற்று விசுவாசியாமல் தேவ தண்டனைக்குள்ளான மனிதர்களைப்பற்றி அறிந்து, இவர்களை நமக்கு திருஷ்டாந்தங்களாக்கிக்கொள்ள இறைவன் அநுக்கிரகஞ் செய்வாராக.

தேவனுடைய வீட்டில் எங்கும் உண்மையுள்ளளவன் என்று தேவனாலேயே சாட்சி பெற்ற அவருடைய தாசனாகிய மோசேயோடே முகமுகமாக பேசினார். அவருடைய கரத்தினால் பிரமிக்கத்தக்க அநேககாரியங்களை கர்த்தர் செய்தார். இஸ்ரவேலருக்கு வனாந்தரத்தில் தண்ணீர் இல்லாமல் போனதினால் தலைவனாகிய மோசேக்கு விரோதமாய் முறுமுறுத்து, அவனோடே வாதாடினார்கள். மோசே கர்த்தரிடம் முறையிட்டார். கர்த்தர் சொன்னார்: உன் கோலை எடுத்து, ஒரேப்கன்மலையை அடி அப்போது ஜனங்கள் குடிக்க தண்ணீர் புறப்படும் என்றார். மோசே தேவனுடைய வார்த்தையை விசுவாசித்தார் அதன்படி செய்தார். அது அப்படியே ஆயிற்று. இது ஓர் அற்புதமே. கன்மலையை கோலினால் அடிக்க தண்ணீர் புறப்படுமென்றால் ஆச்சரியமான காரியமே, மோசே இதை விசுவாசித்தார். தேவன் இன்னொருபடி மேலே கிரியை நடப்பிக்க சித்தங்கொண்டார் இதே தண்ணீர் பிரச்சனை இன்னொருமுறை உண்டாயிற்று, இந்தமுறை மோசேயிடம் கர்த்தர் கன்மலையைப்பார்த்து பேசச் சொன்னார். பேசினால் தண்ணீர் புறப்படுமென்றார் (எண் 20: 8) இந்தக்காரியம் பரிசுத்த மோசேக்கு, விசுவாசிக்க கடினமாய் போயிற்று போலும். கன்மலையைப்பார்த்து பேசாமல் விசுவாச குறைவால், தான்முன்செய்தபடியே கோலினால் அடித்து விட்டார், ஆனாலும் தண்ணீர் ஏராளமாய் வந்தது. மோசேயுடைய இந்த அவிசுவாசம் அவர் ஜனங்களை கானான் தேசத்திற்கு நடத்திச் செல்ல அவரைத் தகுதியற்றதாகிவிட்டது (எண். 20: 11,12).

கானான் தேசத்திற்குள் பிரவேசிக்கமாட்டாய் என்ற தண்டனையைக் கர்த்தர் கடைசி வரை மாற்றவே இல்லை. தேவஜனமே கர்த்தர் எதைச்செய்யச் சொன்னாலும், இது எப்படியாகும் என்று அவிசுவாசம் கொள்ளமல் விசுவாசித்து செயல்படுவோம். நம்முடைய அழைப்பைக்காத்துக் கொள்வோம். கர்த்தர் மிகவும் கணக்காய் நீதியாய் தீர்ப்பு செய்கிறவர் பயத்துடனே அவரை சேவிப்போம்.

ஆசாரியனாகிய சகரியா தேவனுடைய சந்நிதியில் ஆசாரிய ஊழியம் செய்து வந்த காலத்தில், தூபபீடத்தின் வலது பக்கத்தில் தேவதூதனாகிய காபிரியேல் நின்று அவனுக்கு தரிசனமாகி: உன் மனைவி ஒரு குமாரனை பெறுவாள், அவனுக்கு யோவான் என்று பேரிடுவாயாக. அவன் இன்னின்ன விதமாய் இருப்பான் என்றார். இந்த சகரியா தேவனிட்ட கற்பனைகளின்படியேயும், நீதியின்படியும் நடந்து, தேவனுக்கு முன்பாய் நீதியுள்ளவராய் இருந்தார். தன்னுடைய முற்பிதாவாகிய ஆபிரகாமுக்கும் சாராளுக்கும் கர்ப்பம் செத்தபின்பும் ஈசாக்கை தேவன் பிறப்பிக்க செய்த வரலாறுகளையும் அறிவார் தேவதூதன் கடந்து வந்து சம்பவிக்கப் போகிற மனுஷவழக்கத்தின் முடியாத ஒரு காரியத்தை சொல்கிறார், சொல்கிறவர் தேவதூதர், ஆனாலும் பாருங்கள் இந்த தேவனுடைய மனுஷனால் இதை விசுவாசிக்க முடியவில்லை. அவர் உலக நீதியின்படியே தேவனுடைய வல்லமையை நோக்கினார். செய்தி யாருடையது என்பதையோ, சொல்கிறவர் யார் என்பதையோ பார்க்காமல் இது எப்படிக்கூடும் என்று சந்தேகப்பட்டு விட்டார் (லூக் 1: 6 – 18). இது மனிதனால் கூடாததானாலும், தேவனால் கூடாத தொன்றுண்டோ? தேவனால் எல்லாம் கூடும். இவர் விசுவாசியாமற் போனாலும் தேவதூதன் சொன்ன காரியம் நடந்தது. ஆனால் இந்த சகரியா தன்னுடைய அவிசுவாசத்தினால் தண்டிக்கப்பட்டார். குழந்தை பிறந்து பெயரிடப்படும் வரை சகரியாவால் வாய் பேச முடியவில்லை.

தேவனிடத்தில் அன்பு கூர்ந்து அவருடையகட்டளைகளைக்கைக்கொண்டுநடக்கிற அவருடைய பிள்ளைகளே, மனுஷ சக்திக்கு அப்பாற்பட்ட காரியத்தை தேவன் செய்யப் போகிறகாரியத்தை உன்னை அவர் தன்னுடையபிள்ளை என்று எண்ணி தரிசனங்கள் மூலமாகவோ, சொப்பனங்கள் மூலமாகவோ தேவதூதர்கள் மூலமாகவோ உனக்கு முன்னறிவிக்கும் போது சந்தேகப்படாதே நீ விசுவாசிக்காமல் போனாலும் தேவன் முன்னறிவித்தது நடக்கும். ஆனால் உனக்கு பிரம்படி கிடைக்கும் என்பதை அறிந்து கொள்.

அடுத்து, இஸ்ரவேலனாயிருந்தும், இஸ்ரவேலின் தேவனுடைய கிரியைகளை அறிந்தவனாயிருந்தும், தேவ மனிதனுடைய வாயிலிருந்து புறப்பட்டவார்த்தையை விசுவாசிக்காமல் செத்துப் போன ஒருவனைப் பற்றிப்பார்க்கலாம். சீரிய ராஜா சமாரியாவை முற்றுகைப் போட்டிருந்ததால் தேசத்தில் கொடிய பஞ்சமுண்டாயிற்று. ராஜா தீர்க்க தரிசியாகிய எலிசாவிடத்திற்கு ஆள் அனுப்பி விசாரித்தான். அப்பொழுது எலிசா: நாளை இந்நேரத்தில் சமாரியாவின் வாசலிலே ஒருமரக்கால் கோதுமை மா ஒரு சேக்கலுக்கும் இரண்டு மரக்கால் வாற்கோதுமை ஒரு சேக்கலுக்கும் விற்கப்படும் என்று கர்த்தர் சொல்கிறார் என்றான். (II இராஜா. 7: 1). சமாரியாவில் ஒருகழுதைத் தலை என்பது வெள்ளிக்காசுக்கும், புறுக்களுக்கு போடிகிறகாற்படிபயிறு ஐந்து வெள்ளிக்காசுக்கும் விற்கப்படுகிறது (II இராஜா. 6: 25). இந்த எலிசா என்ன இவ்வளவு தாராளமாய் சொல்கிறார், இது எப்படியாகும்? அது கர்த்தராலே ஆகும். இராஜாவின் பிரதானி தேவமனுஷனுடைய வார்த்தையை விசுவாசிக்கவில்லை. எலிசா எப்படிப்பட்ட தேவமனுஷன் என்று சமாரியாவில் அறியப்பட்டிருந்தார். இந்த பிரதானி விசுவாசியாமற் போனாலும், எலிசா சொன்னது நடந்தது. சமாரியாவின் வாசலிலே ஒரு மரக்கால் கோதுமை மா ஒரு சேக்கலுக்கும், இரண்டு மரக்கால் வாற்கோதுமை ஒரு சேக்கலுக்கும் விற்கப்பட்டது. ஆனால் அந்த பிரதானியோ, அதை வாங்கி சாப்பிட முடியாமல், கூட்டத்தில் நெருங்குண்டு மிதிபட்டு செத்துப் போனான். தேவன் தம்முடைய சபையில், சபையைக்கொண்டு உலகில் தாம் செய்யப் போகிற கிரியைகளை

முன்னறிவித்துக்கொண்டு வருகிறதை கேட்கிற நீ விசுவாசியா விட்டாலும், தேவன் தம்முடைய மனுஷர்வாயிலிருந்து புறப்பட்ட வார்த்தைகளை நிச்சயம் நிறைவேற்றுவார். ஆனால் உனக்கோ அந்த மகிமையில் பங்கில்லாமல் போய்விடும்.

பிரியமானவர்களே, "உங்கள் நாட்களில் ஒரு கிரியையை நான் நடப்பிப்பேன், ஒருவன் அதை விவரித்துச் சொன்னாலும் நீங்கள் விசுவாசிக்க மாட்டீர்கள் என்று சொல்லியிருக்கிறபடி உங்களுக்கு நேரிடாதபடி எச்சரிக்கையாயிருங்கள்" அப். 13: 14.

(தொடர்ச்சி)

# மோட்ச வழி

சிஷ்யன் : தேவன் ஒருவர் என்பது எப்படி?

குரு : தேவன் ஒருவரே (ஏசா. 44: 24; 45: 18; 46: 9; 43: 11; உபா 6: 4; மாற். 12: 29, 30).

(2) ஆனால் அந்த ஒருமை என்றால் எப்படி என்று நமக்குத் தெரியாது, தெளிவாய் அறிய முடியாது. (யோபு 11: 7, 8, 9; ஏசா. 41: 28; ரோமர் 11: 33; சங். 147: 5; யோபு 38: 21).

(3) பஞ்ச பூதங்களிலுள்ளவைகளில் நமது பஞ்சேந்திரியங்களினால் அறியக் கூடிய அநேகத்தைப்பற்றி கூட முழுவதுமாய் அறிய முடிவதில்லை. அப்படியிருக்க மெய்ப் பொருளை நாம் முழுவதுமாய் எப்படி அறிய முடியும். ஆனால் அவர் தம்மை வெளிப்படுத்தியிருக்கிற பிரகாரம் நம்பி விசுவாசிப்பதே விசுவாசம். (கொலோ. 1: 15— 19; 2: 9; யோபு 11: 7)

(4) அவர் பன்மையாய் இருக்கிறார். (ஏசா. 48: 16; 34: 16; 53: 10; சங். 110: 1) இதில் ஒற்றுமையுண்டு பேதமில்லை (யோவான் 14: 10; 11: 22; 14: 26; I யோ 5: 6, 7)

(5) மூவரும் வெவ்வேறு ஆட்களே ஆனால் ஒன்றாயிருக்கிறார்கள் (I யோ 5: 6, 7; மத். 28: 19; II கொரி. 13: 14).

(6) கிறிஸ்தவ விசுவாசம். இயேசு கிறிஸ்துவை தேவனுடைய குமாரன் என்று விசுவாசிப்பதே (அப். 8: 37; 20: 21; யோ. 14: 1, 13). ஆனால் அவர் தேவன் (ரோமர் 9: 5; கொலோ 2: 9; I யோ. 5: 20; யோ. 1: 1).

(7) இது விசுவாசித்து நம்பி அன்பு கூர்ந்து தொழுது கொண்டு பின்பற்ற வேண்டியதேயல்லாமல் ஆராய்ச்சி செய்யக் கூடிய பொருளல்ல விசுவாசிக்கவும். (உ-ம்)நாம் கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவை விசுவாசித்து அவரண்டை வருகிறோம்; அவரிடம் வந்த பின் அவர் பிதாவே என்று கூப்பிட்டு

ஜெபிக்கும்படி பிதாவிடம் வழி நடத்துகிறார். இவ்விதமாய் விசுவாசிக்கவும் தொழுது கொள்ளவும் பின் பற்றி கீழ்ப்படியவும், ஐக்யப்படவும் நம்மை இயக்குவதும் தூண்டுவதும், வல்லமை கொடுப்பதும், உதவி செய்வதும் பரிசுத்த ஆவியானவரே இதை அநுபவரீதியாகவே அறிந்து கொள்கிறோம். இதுவே நமது அநுபவம். இது வேதத்துக்கு ஒத்ததாகும். நீரும் உமது அநுபவத்தில் அறியலாம்.

"என்னில் வாசமாயிருக்கிற பிதா..."
யோ. 14 : 10

**நித்திரை அடைந்தார்**

ஊழியர் சைமன் (பைங்குளம்) 21-5-'84 இரவு கர்த்தருக்குள் நித்திரையடைந்தார் என்பதை கிறிஸ்துவுக்குள் தெரிவித்து கொள்கிறோம். அவருடைய பிரிவால் வாடும் அவருடைய துணைவிக்காகவும், அவருடைய குடும்பத்தாருக்காகவும் எல்லாரும் ஜெபிக்கும்படி கேட்டுக் கொள்கிறோம்.

# வேத பாடம்

ஆதி. 15 : 1 இந்த காரியங்கள் நடந்த பின்பு, கர்த்தருடைய வார்த்தை ஆபிரகாமுக்குத் தரிசனத்திலே உண்டாயிற்று. அவர்: ஆபிரகாமே, நீ பயப்படாதே ; நான் உனக்கு கேடகமும், மகா பெரிய பலனுமாயிருக்கிறேன் என்றார். ஆம், தேவன் ஜாதிகளின் இராஜாக்களுக்குப் பயப்படக் கூடாது என்கிறார். நான் உன்னை பாதுகாப்பேன் என்கிறார். ஆம் தேவ ஜனங்களுக்கு தேவனே பாதுகாவலாயிருக்கிறார்.

2,3 ஆபிரகாம் தனக்கு சுதந்தரவாளியில்லை பிள்ளையில்லை என்றும், வீட்டு வேலைக்காரன் எலியேசர் வீட்டு விசாரணைக் காரனாய் இருக்கிறானே என்கிறார்.

4—18 அதற்கு கர்த்தர் இவன் உனக்கு சுதந்தரவாளியல்ல, உன் பிள்ளையே உனக்கு சுதந்தரவாளியாவான். உன் சந்ததி வானத்தின் நட்சத்திரங்கள் போல திரளாய் இருக்கும். உன் சந்ததி இந்த தேசத்தை சுதந்தரிக்கும்

இவ்விதமாய் இந்த தேசத்தை உனக்குக் கொடுப்பேன் என்றார். மேலும் ஆபிரகாமின் சந்ததி நானூறு வருஷம் அடிமைகளாய் உபத்திரவப் படுவார்கள் என்றும் பின் நாலாந்தலைமுறையில் இவ்விடத்துக்கு திரும்பி வருவார்கள் என்றும் கானானிலுள்ள பத்து ஜாதிகளைத் துரத்தி உன்சந்ததிக்கு சுதந்தரமாக இந்த தேசத்தைக் கொடுப்பேன் என்றும் தேசத்தின் எல்லை யையும் தேவன் குறிப்பிடுகிறார். என்னே தேவனின் வாக்குத்தத்தம்.

16 : 1,3. சாராய்க்கு பிள்ளையில்லாததினால் எகிப்திலிருந்து கொண்டு வந்திருந்த வேலைக்காரப் பெண்ணாகிய ஆகார் மூலம் தன் வீடுகட்டப்பட ஆகாரை மனைவியாக தன்கணவனுக்கு கொடுக்கிறாள் சாராள். ஆபிரகாம் அப்படியே செய்கிறார். இது தேவ ஆலோசனையில்லாமல் செய்த அவசர காரிய மாகும். ஆகார் கர்ப்பவதியானாள் அதினால் அவள் நன்றி கெட்டதனமாய் தனக்கு இந்த சிலாக்கியத்திற்கு காரணமாயிருந்த தன் நாச்சியாரை (எஜமாட்டி) அற்பமாய் எண்ணி அசட்டையாய் நடக்கத் தொடங்கினாள்.

5, 6 தன் தப்பிதத்தை உணர்ந்த சாராய் தன் கணவனிடம் முறையிட ஆபிரகாமின் அனுமதியோடு சாராய், ஆகாரைக் கடினமாய் நடத்தினபடியால் ஆகார் வீட்டை விட்டு ஓட வேண்டியதாயிற்று.

7—16 தேவதூதனுடைய எச்சரிப்பின் படி ஆகார் திரும்பிவந்து சாராய்க்குக் கீழ்ப்படிந்திருந்தாள். அவளுக்கு ஆண் பிள்ளை பிறக்கும் என்றும் அப் பிள்ளைக்கு இஸ்மவேல் என்று பேரிட வேண்டும் என்றும் ஆபிரகாமினி மித்தம் அந்த பிள்ளையையும் ஆசீர்வதிப்பேன் என்று கர்த்தருடைய தூதனானவர் சொல்ல அவ்விதமே சம்பவிக்கிறது. ஆபிரகாமுக்கு எண்பத் தாறு வயதாகும் போது ஆகாருக்கு இஸ்மவேல் பிறக்கிறான். தேவனு டைய வார்த்தைக்கு காத்திராதபடியினால் மாம்ச சித்தத்தின்படி ஆபிரகாமுக் கும் ஆகாருக்கும் இஸ்மவேல் பிறக்கிறான். வாக்குத் தத்தத்தின் சந்ததிக்கு மாறாய் இன்னொரு சந்ததி எழும்புகிறது ஒரு துஷ்டசந்ததி பிறந்தது (வச.12).

"அவனை...என் பிதாவின் முன்பாக அறிக்கை பண்ணுவேன்" மத். 10 32

## பள்ளங்கள் நிரப்பப்பட

பற்றுக்குறை மிகுந்த இந்த உலகில், ஜீவிக்கிற நமக்கு தேவைகள் ஏராளம். அநேகங்குறைவுகளுண்டு. நம்முடைய தேவைகள் பூர்த்தியாக, நமக்கு பணம் தேவை. தேவனை அறியாத அஞ்ஞானிக்கு திரளான செல்வமிருந்தாலும், திருப்தியடை யாதவனாய், இன்னும் தேவை, தேவை என்று தேடித்தேடி விருதாவாய் சஞ்சலப்

பட்டு ஆஸ்தியைச் சேர்க்கிறான். அவன் ஒரு போதும் திருப்தியடையப் போவதில்லை. அவனுடைய குறைவு என்றும் நிலைநிற்க கூடியதே. தேவனுடைய ராஜ்ஜியத்தையும், அதன் நீதியையும் தேடுகிற மெஞ்ஞானியோ உண்ணவும், உடுக்கவும் தனக்குண்டாயிருந்தால் அதுவே போதுமென்ற மனமுடன் நடந்து கொள்கிறான்.

தேவனுடைய பிள்ளைகளுக்கும் குறைவுகள் வருகிறது. அநேக தேவைகள் உண்டாகிறது. உன் குறைவுகளை நீக்க வகை தேடி ஒரு லௌகீக ஞானியிடம் போய் ஆலோசனைக் கேட்டால், உன் காரியங்களை திட்டமாய விசாரித்த அவன் இவ்வாறு சொல்லுவான்: உன் செலவுகளைக் குறைக்க வேண்டும். அடிக்கடி ஆலயத்துக்கு, ஊழியத்துக்கு போவதை நிறுத்த வேண்டும். காணிக்கை கொடுப்பதை ஒத்திவைக்க வேண்டும். பரிசுத்தவான்களுக்கு செய்கிற உபசாரத்தைக் குறைக்க வேண்டும். தசம பாகத்தை இப்போது செலவு பண்ணிவிட்டு, பின்னால் முடிந்தால் சேர்த்து கொடுக்கலாம், அல்லது கொடுக்காமலேயே பாவ அறிக்கை செய்து கொள்ளலாம். ஜெப, தியான, ஊழியங்களில் செலவழிக்கிற நேரங்களில் ஓவர் டைம் (Over time) வேலை செய்யலாம், எப்படியாவது பொருளீட்டலாம் அல்லது யாராவது விசுவாசியை, சபையைப் பற்றிக் கொண்டு விசுவாச ஜீவியம் என்று சொல்லி அவர்களை மொட்டையடிக்கலாம் என்று.

இப்படிப்பட்ட உலக ஞானியின் ஆலோசனை தேவனுடைய பார்வையில் பைத்தியமாயிருக்கிறது (I கொரி. 1 : 19, 20) தன்னுடைய சுய ஞானத்தினாலே ஆதிமுதலாய் தேவனுக்கு முன்பாய் பெருமை பாராட்டி தன்னைக் கெடுத்துக் கொண்டான் மாய மனிதன். இந்த மனிதனை தேவன் தம்முடைய ஞானத்தால் வெட்கி, தமக்கு முன்பாய் தாழ்மைப்பட்டு அடங்கி, ஒடுங்கி கீழ்படிந்து அவருக்கே மகிமை செலுத்தும்படி பைத்தியக்காரத்தனமாய் தோன்றுகிற பிரசங்கத்தினால் (உபதேசத்தால்) அவனை சீர்படுத்துகிறார் (I கொரி1 : 19-21).

எப்படியெனில் ஒருவனுக்கு தேவை 100 ருபாய், அவனிடமிருப்பதோ 50ருபாய், இருக்கும் 50தோடு, இன்னும் 50 தைக்கூட்டு இதுமனுஷ ஆலோசனை உன்னிடமிருப்பதையும் கொடு நீ நிறைவடைவாய் உன் தேவை பூர்த்தி செய்யப்படும் இது தேவ ஆலோசனை. மனிதனுடைய பார்வையில் இது பைத்தியமே. இந்த தேவனுடைய பைத்தியம் என்னப்படுவது மனுஷனுடைய ஞானத்திலும் அதிக ஞானமாயிருக்கிறது. (Iகொரி 1 : 25).

தேவனுடைய பிள்ளைகளாகிய நம்முடைய குறைவுகள் நீங்க தேவன் தம்முடைய திருவார்த்தையின் மூலம் தரும் ஆலோசனைகளைக் கவனிப்போம்.

பிலிப்பி பட்டணத்து சபையாரால் எப்பாப்பிராத்துவின் மூலமாய் அனுப்பப்பட்டவைகளை பெற்றுக்கொண்ட அப்போஸ்தலர் பவுல்: எல்லாம் எனக்கு கிடைத்தது, பரிபூரணமும் உண்டாயிருக்கிறது, நான் திருப்தியடைந்திருக்கிறேன் (பிலி. 4 : 18) என்று எழுதிவிட்டு அவர் சபையாரை ஆசீர்வதிக்கும் முறையைப் பாருங்கள், "என்தேவன் தம்முடைய ஐசுவரியத்தின்படி உங்கள் குறைவை எல்லாம் கிறிஸ்து இயேசுவுக்குள் மகிமையிலே நிறைவாக்குவார் (பிலி. 4 : 19) என்று. ஆங்கிலத்தில் "My God Shall Supply all Your need......" அதாவது என் தேவன் உங்கள் தேவைகளை எல்லாம் அருள்வார் என்று இருக்கிறது.

அப். பவுலுக்கு குறைவிருந்தது பிலிப்பியரால் அனுப்பப்பட்ட உபகாரத்தால் அது நீக்கப்பட்டது. அவர் திருப்தி அடைந்தார். சபையாரை ஆசீர்வதித்தார். அந்த ஆசீர்வாதம் அப்படியே இறங்கும். கர்த்தர் தம்முடைய ஸ்தானாதிபதிகளின் வார்த்தையை நிலை நிறுத்துகிறவராயிற்றே.

இவர் என் தேவன் என்று சொல்வதன் காரணம்: தேவனே இவரை அனுப்பி இருக்கிறபடியால், அந்த வேலையில் உண்டாகிற தேவையை சந்திக்க கடமைப்பட்டவர் இவரை அனுப்பின எஜமானாகிய இயேசுவே. இந்த சிறியரில் ஒருவனுக்கு எதைச் செய்தீர்களோ, அதை எனக்கே செய்தீர்கள் என்ற இறைவனின் வார்த்தைப்படி அவரால் அனுப்பப்பட்டவனை எவன்திருப்தி அடைய

செய்கிறேனே அவனுடைய தேவைகளை தேவன் சந்தித்து அவனைத் திருப்தி அடையப் பண்ணுகிறார்.

பிரியமானவர்களே, தேவனால் தேவனுடைய வேலைக்கு அனுப்பப்பட்டவர்களுக்கு சபைக்கு ஒரு குறைவு, ஒரு தேவை வருகிறதென்றால், நீங்கள் ஆசீர்வாதம் பெற, உங்கள் தேவைகள் சந்திக்கப்பட தேவன் வழி திறக்கிறார் என்பதை அறிந்து கொள்ளுங்கள். அவர் (இயேசு) ஐசுவரியமுள்ளவராயிருந்தும் நீங்கள் அவருடைய தரித்திரத்தினாலே ஐசுவரியவான்களாகும்படிக்கு உங்கள் நிமித்தம் தரித்திரரானாரே (II கொ. 8 : 9) ஆகையால் உங்கள் விருப்பத்தின்படி கொடுங்கள்-II கொ. 8 : 11 உங்கள் தகுதிக்குத் தக்க கொடுங்கள்—II கொரி. 8 : 12 சமநிலை பிரமாணத்தின் படி கொடுங்கள்- II கொரி. 8 : 15 உற்சாகமாய் கொடுங்கள். II கொ. 9 : 7 ; உதாரத்துவமாய் கொடுங்கள். உங்களுக்கு திரும்பக் கொடுக்கப்படும். நீங்கள் கொடுப்பதினால் தேவனுக்கு ஸ்தோத்திர முண்டாகும்-II கொ. 9 : 11. தேவனுக்கு மகிமை உண்டாகும்-II கொரி 9 : 13, 12. உன் வீடு கட்டப்பட முதலாவது தேவனுடைய வீட்டைக் கட்டு.

"அதிகமாய் வருமென்று நினைத்தீர்கள் கொஞ்சமாய் வந்தது ஆகையால் இன்னும் தேவை. அறுத்துக் கொண்டு வீட்டுக்கு வருகிறீர்கள் அது பறந்து போய் விடுகிறது ஆகையால் நிறைவில்லை. திரளாய் விதைக்கிறீர்கள் கொஞ்சமாய் அறுக்கிறீர்கள் ஆகையால் பற்றுக்குறை. கூலியை சம்பாதிக்கிறீர்கள். ஆனால் பொத்தலான பையில் போட்டாற்போல் எங்கு போகிறதென தெரியவில்லை. இவைகளுக்கெல்லாம் காரணம்தான் என்ன? உங்கள் வழிகளை சிந்தித்துப்பாருங்கள். பாழாய்க்கிடக்கிற கர்த்தருடைய வீட்டைக்குறித்த கவலை உண்டா? குறைவிலிருக்கிற தேவமனிதன் உங்களால் திருப்திஅடைந்ததுண்டா?"- ஆகாய் 1 : 5-9. முதலாவது அதைச் செய்யுங்கள், உங்கள் பள்ளங்கள் நிரப்பப்படும். இடங் கொள்ளாமல் போகுமட்டும் வானத்தின் பலகணிகளைத் திறந்து உங்களை தேவன் ஆசீர்வதிப்பார். உங்கள் குறைவுகள் நீங்கும், தேவைகள் சந்திக்கப்படும்.

---

"என் செல்வம் பூமியிலுள்ள பரிசுத்தவான்களுக்கும், என் முழு பிரியத்தையும் வைத்திருக்கிற மகாத்துமாக்களுக்கும் அது வேண்டியதாயிருக்கிறது. சங். 16 : 2, 3.

---

மாதர் பகுதி

# யெப்தாவின் மகள்

கிலெயாத்தியனான யெப்தா பலத்த பாரக்கிரமசாலியும், தேவ பக்தியுமுள்ளவராயிருந்தார், கிலெயாத்துக்குப் பிறந்த யெப்தா பரஸ்திரீயின் குமாரனாயிருந்தார், அவர் மேல் பொறாமை கொண்ட அவர் சகோதரர்கள் (தகப்பனின்பிள்ளைகள்) யெப்தாவை விரட்டிவிட்டார்கள் யெப்தா ஓடிப்போய் தோப் தேசத்தில் குடியிருந்தார். அவரோடு போக்கிரிகள் பலர் சேர்ந்தனர், பல இடங்களில் இவர்கள் போய் யுத்தம் நடப்பித்து ஜெயித்து வந்தார்கள். (நியா அதி. 11).

இஸ்ரவேலர் மேல் அம்மோன் புத்திரர் பாளையமிறங்கினார்கள். இஸ்ரவேலருக்கு தலைவனில்லை அதனால் அவர்கள் ஆலோசனை பண்ணி யெப்தாவை தங்கள் தலைவனாயிருக்க அழைத்து வந்தார்கள். யெப்தா தேவனோடு ஒரு பொருத்தனை செய்தார். நான் ஜெயங்கொண்டால் நான் சமாதானத்தோடு திரும்பி வரும்போது என் வீட்டு வாசற்படியிலிருந்து எனக்கு எதிர் கொண்டு வருவது எதுவோ அது கர்த்தருக்கு உரியது. அதை கர்த்தருக்கு சர்வாங்க தகனபலியாகப் பலியிடுவேன் என்று ஒரு பொருத்தனை மிஸ்பாவிலே (அப்பொழுது கர்த்தருடைய சந்நிதானம் மிஸ்பாவிலே இருந்தது) செய்து தன் காரியங்களை யெல்லாம் மிஸ்பாவிலே தேவ சந்நிதானத்தில் சொன்னார்.

பின்பு மிஸ்பாவிலிருந்து இஸ்ரவேலரைத் திரட்டிக்கொண்டு யுத்தத்திற்குப் போனார். தேவன் அம்மோனியரை யெப்தாவின் கையில் ஒப்புக் கொடுத்தார். அம்மோன்புத்திரர் முறியடிக்கப்பட்டு சங்காரமானார்கள் தாழ்த்தப்பட்டுப் போனார்கள். யெப்தா வெற்றியோடு தன் வீட்டிற்கு திரும்பி வரும்போது யெப்தாவிற்கு ஒரே குமாரத்தியிருந்தாள். அவள் கன்னிகையான தேவபக்தியுள்ள பெண் யெப்தாவிற்கு வேறு பிள்ளைகிடையாது. இப்படியிருக்க தன் தகப்பன் வெற்றியோடு திரும்பி வருகிறதைக் கண்ட அப்பெண் தன் தோழிமாரோடு ஆடிப்பாடி தன் தகப்பனை வரவேற்க எதிர்கொண்டோடினாள். யெப்தா கலங்கிப் போனார், மகளே நான் என் வாயைத் திறந்து இப்படியல்லவா பொருத்தனை செய்து விட்டேன் என்றார்.

அந்த பெண்ணோ கொஞ்சமும்சளைக்காமல் அப்படியா அப்பா, கர்த்தர் நீதியைச் சரிக்கட்டி உமக்கு ஜெயம் கொடுத்தபடியினால் நீர் தேவனிடம் பொருத்தனை செய்த பிரகாரம் எனக்குச் செய்யும் என்று சம்பூர்ணமாய் தன்னை ஒப்புக் கொடுத்தாள். என்னே! யெப்தாவின் மகளுடைய தேவ பக்தி. அன்றொருநாள் நம்முடைய தகப்பனாகிய ஆபிரகாம் தன் மகன் ஈசாக்கைப் பலியிட தேவன் காண்பித்த மலைக்கு கொண்டு போனபின் தன்னைத்தான் தகப்பன் பலியிடப் போகிறார் என்றறிந்த ஈசாக்கு தேவன்மேல் உண்டாயிருந்த பய பக்தியினால் தன்னை சம்பூரணமாய் ஒப்பு கொடுத்து பலிபீடத்தின் மேல் பலியிட தன்னை கையளித்தார். அப்பொழுது ஈசாக்குக்கு வயது பதினாறு இருக்கும்.

தகப்பன் கையைத் தட்டி விட்டு ஓடி விடமுடியும். ஆனால் தேவபக்தியுள்ள ஈசாக்கு அப்படி செய்யவில்லை. அப்படியே யெப்தாவின் மகளுடைய பக்தி வாழ்க்கையையும் பார்க்கிறோம், என் தகப்பனே......, உம்முடைய வாயிலிருந்து புறப்பட்டபடியே எனக்குச் செய்யும் என்றாள் *(நியா. 11: 36)*. தன் தகப்பனுடைய வாக்கை நிறைவேற்ற தன்னைப்பூரணமாய்க் கர்த்தருக்கு ஒப்புக் கொடுத்து தன்னை தியாகம் செய்த யெப்தாவின் மகளுடைய தேவதா பக்தி இன்றைய வாலிபப் பெண்களுக்கு ஒரு சவாலாகும். இந்த பெண்ணுடைய கற்பு, தியாகம், கீழ்ப்படிதல், தேவபக்தி (தேவன் மேல் அன்பு) தலை சிறந்த தியாகமாகும். சுகபோகமாய் வாழ்கிறவள் உயிரோடே செத்தவள் என்று வேதவாக்கியம் கூறுகிறது *(I தீமோ. 5:6)*. கீழ்ப்படிதலோடு கூடிய தேவ பக்தியும், தியாகவாழ்க்கையுமுடைய பெண்களைக் குறித்தும் தேவபக்தியுள்ளவர்களும் இஸ்ரவேலின் குமாரத்திகள் வருஷந்தோறும் யெப்தாவின் செல்ல மகளை நினைத்து துக்கங் கொண்டாடி புலம்பி வருகிறது போல் இவர்களைக்குறித்தும் இறைவனை போற்றுவார்கள். யெப்தாவின்பொருத்தனை நிறைவேற்றலும், யெப்தாவின் மகளுடைய ஒப்புக் கொடுத்தலும் தலை சிறந்த உதாரணங்களாகும். நீ என்ன செய்கிறாய், உங்களுடைய பக்தி எப்படிப்பட்டது.

---

"நீ நேர்ந்து கொண்டதை செய்"- பிரச. 5: 4

---

**பாலர் பகுதி**

# தானியேலின் தேவன்

நதிக்கரையின் மீது அமைந்திருந்த அக்கிராமத்திற்கு பெரியவர் வைத்தியலிங்கம் என்ற ஜமீன் எப்பொழுதும்பட்டு வேஷ்டியுடன் காணப்படுவார், தனது பணத்தையும், செல்வாக்கையும் எல்லோருக்கும் காண்பிப்பதற்காகச் அவருடைய எல்லாச் சொத்திற்கும் வாரிசு அவரது ஒரே மகன் பிரகாஷ். அவன் தனது தொடக்கப்பள்ளி படிப்பை முடித்துவிட்டான். அவனது தகப்பனார் அவரது குடும்ப கவுரவத்தை இன்னும் அதிகமாக்கும்படி தனது மகனை தலைநகருக்குப் படிக்க அனுப்ப திட்டமிட்டு மிகவும்

பிரபலியமான கிறிஸ்தவ பள்ளிக்கு அனுப்புகிருர்.

அவனது பள்ளியில் மத போதனையும் கொடுக்கப்பட்டது. பிரகாஷ் கல்வியில் நல்ல முன்னேற்றமடைந்து வந்தான். அது மட்டுமின்றி, ஆத்துமிக துறையில் முன்னேற அங்கு கர்த்தராகிய இயேசு கிறிஸ்து உலகிற்கு மனுக்குலத்தில் அவதரித்து, மரித்தது, உயிர்த்தெழுந்தது, பரலோகம் சென்றது எதற்காக என்பதையும் அறிந்து கொண்ட பிரகாஷிற்கு அவரோடு ஒன்றிவாழ வேண்டும் என்ற அவா அதிகமாகியது. இப்பொழுது பிரகாஷ் உணர்ந்து கொண்டான். தனது பெற்ருேர் மூலமாக தெரிந்து கொண்ட தெய்வங்கள் எல்லாம் பொய்யான தெய்வங்கள் என்றும், இவரே மெய்யான தெய்வம் எனவும் அறிந்து கொண்டான். இதற்கு காரணம் கர்த்தரிடத்தில் காணப்பட்ட அன்பு, பரிசுத்தம், இரக்கம் போன்ற குணதியங்களே.

அவன் பள்ளியில் படித்த நாட்களில் நடந்த எல்லா ஓய்வுநாள் பாடசாலையிலும் கலந்து கொண்டான். அங்கு சொல்லி கொடுத்த கதைகளில் அவனை மிகவும் கவர்ந்ததும், அவனை மிகவும் மெய் தெய்வத்தின் மீது பக்தி வைராக்கியம் உண்டாக்கியது. தானியேல் நண்பர்களின் சரித்திரம். ராஜாவின் சிலையை வணங்க வேண்டும் அப்படி வணங்காவிட்டால் அவர்கள் அக்கினி சூளையிலே போடப்படுவார்கள் என்ற கட்டளை கடுமையாக இருந்த போதும் தானியேல் நண்பர்களின் பதில் அவனை மிகவும் ஆச்சரியத்துக் குள்ளாக்கியது. நாங்கள் ஆராதிக்கிற எங்கள் தேவன் எங்களை தப்புவிக்க வல்லவராக இருக்கிருர். விடுவிக்காமற் போனலும் நாங்கள் உம்முடைய தேவர்களுக்கு ஆராதனை செய்வதுமில்லை, நீர்நிறுத்தின பொற்சிலையை பணிந்து கொள்வதுமில்லை என்கிறது ராஜாவாகிய உமக்கு தெரிந்திருக்கக்கடவது என்ற வார்த்தைகளே.

தனது உயர் நிலைப்பள்ளி படிப்பை அவ்வாண்டு முடித்து ஊர் திரும்பினன். அங்கு அவனுக்கு ஒரு அதிர்ச்சி காத்திருந்தது. அவ்வூரில் உள்ள இந்து கோவிலுக்கு வருடத்திற்கு ஒரு முறை திருவிழா நடத்துவது பழக்கம். அதில் அதிக பொறுப் பேற்று நடத்துவது ஜமீனின் குடும்பமே. அது மாத்திரமின்றி, முதலாவது பூஜை நடத்துவது பலி கொடுப்பதும் அந்த ஜமீனின் குடும்பமே. இவ்வாண்டு ஜமீன்தார் தனது ஒரே மகனை இந்த திருவிழாவின் முதலாவது பூஜையும், பலியும் நீ செலுத்த வேண்டும் என்று கூறி கோவிலுக்கு அழைத்தார். இப்பொழுது பிரகாஷிற்கு தானியேலின் வாழ்க்கை சரித்திரம் ஞாபகம் வந்தது. நான் இப்பொழுது ஒரு மெய் தெய்வபக்தன் மெய்யான தெய்வமாகிய இயேசு கிறிஸ்துவைப் பற்றி அறிந்தவன். இனி ஒரு போதும் நான் பொய் தெய்வங்களை நமஸ்கரிக்கவும் மாட்டேன். என தனது இருதயத்தில் முடிவெடுத்து தனது தகப்பனரிடம் மெய் தெய்வமாகிய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து வைப்பற்றியும், அவர் மனுக்குலத்திற்காக தன்னையே பலியாகக் கொடுத்ததையும் அமைதியாக எடுத்துக் கூறி நான் இனிமேல் பொய்யான தெய்வங்களை வணங்க மாட்டேன் எனக் கூறினன். எரிமலையாக வெடித்தார் ஜமீன் எனக்கே நீ போதிக்கிருயா? நமது அந்தஸ்து என்ன? நமது கவுரவம் என்ன? என சப்தமிட்டதுமன்றி, இன்று நீ பூஜைக்கு வரவில்லை என்ருல் இந்த வீட்டில் என்ன, இந்த ஊரில் நீ இருக்கவே கூடாது என கத்தினது மட்டுமின்றி, எனது சொத்தில் ஒன்றும் உனக்கு கிடையாது. வீட்டை விட்டு வெளியேறு என சொல்லி இந்த நாயை யார் காப்பாற்றுவார் எனக் கூறி வீட்டை விட்டு வெளியே விரட்டி விட்டார் ஜமீன்தார்.

தானியேலின் தேவன் நிச்சயமாக என்னையும் காப்பார் என்ற நம்பிக்கையுடன் வீட்டை விட்டு வெளியேறினன். ஊருக்கு வெளியே வந்து வெளியே உள்ள சாலையில் நடக்க ஆரம்பித்தான். காலையில் ஒன்றும் சாப்பிடாத பிரகாஷிற்கு சிறிது தூரம் சென்றதும் களைப்பு மேலிட சாலையின் ஓரத்தில் உள்ள பாலத்தின் மீது படுத்து விட்டான்.

அவ்வழியே காரில் வந்த ஒருவர் பெரிய இடத்து பையனுக தெரிகின்றதே என

நினைத்து, மனமிரங்கி, காரிலிருந்து இறங்கி அவனருகில் வந்தார், வந்து அவனைத் தட்டி எழுப்பி, தம்பி என அவனை அழைத்து அவனைப்பற்றி விசாரிக்க ஆரம்பித்தார். பிரகாஷ் தனக்கு நடந்த சம்பவங்கள் எல்லாவற்றையும் கூறினது மட்டுமன்றி தானியேலின் தேவன் என்னையும் காப்பார் என தைரியத்துடன் கூறினன். இதைக் கேட்ட மனிதர் மிகவும் உற்சாகப்பட்டு அவனை அணைத்துக் கொண்டார். தம்பி நான் ஒரு கிறிஸ்தவ மிஷனரி. உனக்கு விருப்பம் இருந்தால் நீ என்னேடு வரலாம் என அழைத்தார்.

பிரகாஷும் சம்மதம் தெரிவித்து மிஷனரியுடன் புறப்பட்டான். அவரோடு சேர்ந்து தேவனை ஆராதிக்கவும் வேதத்தை ஆராய்ந்து அதன் படி செய்யவும், கட்டளைகளையும் நீதி நியாயங்களையும் உபதேசிக்கவும், தன் இருதயத்தை பக்குவப்படுத்தினன். கர்த்தருக்குள் பலப்பட்டான். தனது வாலிப வயதில் கர்த்தருக்கு தன்னை அர்ப்பணித்து அவருக்கு ஊழியம் செய்ய முற்பட்டான். தேவன் அவனை எடுத்து உபயோகித்தார். குருகிய காலத்திற்குள் அனேகர்கள் தெரிந்து கொள்ளும்படியான ஒரு பெரிய ஊழியக்காரனுக தேவன் பிரகாஷை உபயோகித்தார். இப்படியாக தானியேலின் தேவன் பிரகாஷை காத்து வழி நடத்தினர்.

அது போல குழந்தைகளே நாமும் மெய் தெய்வத்தை அறிந்து கொண்ட பின்னர் ஒரு பொழுதும் பிற தெய்வங்களை நமஸ்கரியாமலும் சேவியாமலும் இருப்போமாக. அப்பொழுது தானியேலின் நண்பர்களை அக்கினியினின்றும், தானியேலை சிங்கக் குகையினின்றும் காத்த தேவன் நம்மையும் அக்கினி போன்ற பயங்கரங்களுக்கும், சிங்கம் போன்ற சாத்தானின் கரங்களுக்கும் நம்மை காத்து போஷித்து உயர்த்துவார். நாம் அவரது பலத்த கரத்திற்குள் அடங்கி இருப்போமாக.

(தொடர்ச்சி)

# புதிய எருசலேம் சபை நடபடிகளில் சில

நாங்கள் எப்படியும் தேவன் குறித்திருந்த நாளில் இந்தியா திரும்ப விமானம் ஏறி விட்டோம். பிரயாணத்தினுல் தேவன் எங்களோடு கூடவே இருந்து எங்களை பாது காத்துக் கொண்டுவந்து சேர்த்தார். நாங்கள் மோரிசைஸ் போய்ச் சேர்ந்ததும் அங்குள்ள விபரங்களை ஒவ்வொரு நாளும் கடிதம் மூலம் பெரிய பாஸ்டருக்கு பம்பாய்க்கு தெரியப்படுத்திக்கொண்டேயிருந்தோம். தேவன் திடீரென்று பம்பாய்க்குப் புறப்படச் சொல்லிவிட்டபடியால் பெரிய பாஸ்டருக்கு தந்தி கொடுத்து விட்டு நாங்கள் புறப்பட்டோம். நாங்கள் எழுதிய லட்டர்களும், தந்தியும் தலைமைக்கு வந்து சேரவில்லை. பம்பாய் சாந்தா குருஸ் விமான நிலையத்தில் நாங்கள் வந்து இறங்கின பொழுது, அங்கு எங்களை வரவேற்க யாரையும் காணேம். அன்று சனிக்கிழமையாக இருந்தது. நாங்கள் உடனே ஒரு வாடகைக் கார் ஒன்று பிடித்து பெரிய பாஸ்டர் வீட்டிற்கு வந்தோம். இரவு சுமார் 8மணி இருக்கும். உபவாச ஆராதனை நடந்து கொண்டு இருந்தது. ஒரு சகோதரர் ஆண்டவரே எங்கள் ஊழியர்கள் மோரிசைஸ் போனுர்கள். ஒரு தகவலும் இல்லை. அவர்களைப் பாதுகாத்து பத்திரமாய் அழைத்து வாரும் என்று விண்ணப்பம் செய்தார். நாங்களும் எங்கள் பெட்டிகளைக் கொண்டு அமைதியாக வைத்துவிட்டு அவர்களோடு ஜெபத்தில் கலந்து கொண்டோம். நாங்களும் ஜெபிக்க ஆரம்பித்த பொழுது எல்லாரும் ஆச்சரியப்பட்டார்கள். ஆராதனை முடிந்தும் தேவன் நடப்பித்த அற்புத செயல்களைச் சாட்சியாக கூறி தேவனை மகிமைப்படுத்தினேம்.

பம்பாயிலிருந்தும் அவசரமாக எங்களைத் தேவன் தமிழ் நாட்டிற்கு அனுப்பினர்.

வள்ளியூர் வந்து சேர்ந்தோம். மறுநாள் அதி காலையில் என்னுடைய குடும்பம் மகிழ்ச்சி புரத்தில் இருந்ததால் நான் ஆவியானவருடைய அனுமதியோடு அங்கு சென்றேன். வீட்டில் சென்று ஜெபித்தேன். வீட்டு வாசலில் ஒரு சகோதரியின் அழுகை சத்தத்தைக் கேட்டேன். யாரென்று வெளியே வந்து பார்த்தேன் ஒரு சகோதரி இவர்களுடைய கணவன் ஏற்கனவே இரட்சிக்கப் பட்டவர். இந்த சகோதரியினுல் அவர் பின் மாறிப்போனுர். இப்பொழுது காலரா வியாதியில் அவருக்கு உயிர் ஊசலாடுகிறது. நீங்கள் வந்து ஜெபிக்கமாட்டீர்களா என்று கேட்டது, சரி வருகிறேன் என்று கூறி பைபிளைக் கையில் எடுத்துக் கொண்டு கடந்து போனேன். சகோதரனுடைய வீட்டு முன்பு ஏராளமான மக்கள் கூடி நின்ருர்கள். பலர் என்னைப்பார்த்து சிரித்தார்கள், காரணம் வியாதியாயிருந்த சகோதரன் மரித்துப் போனுன். கட்டிலில் சரீரம் கிடத்தப்பட்டிருந்தது. ஆண்டவரே, நீர் இதற்காகவே மோரிசைஸ் ஊழியத்தை சீக்கிரமாய் முடித்துவிட்டு எங்களை ஊருக்கு அழைத்து வந்திருக்கிறீர் என நான் அறிகிறேன். இப்பொழுது நான் என்ன செய்வது என்று ஆண்டவரிடம் வேண்டினேன். கலங்காதே, இவனுடைய ஜீவனை நான் திரும்பத் தருவேன், நீ ஜெபம்பண்ணு என்று கர்த்தருடைய ஆவியானவர் என் உள்ளத்திலிருந்து பேசினுர். சகோதரனுடைய சரீரத்தில் கை வைத்து ஜெபித்தேன். சகோதரனுடைய காதில் என்னுடைய வாயை வைத்து உரத்த குரலில் ஜெய பாண்டி என்று கூப்பிட்டேன். உடனே கண்கள் இரண்டும் ஒரு நிமிடம் திறந்து அடைத்துக் கொண்டது, பார்த்துக் கொண்டிருந்த எல்லோரும் ஆச்சரியப்பட்டார்கள். சில வினுடிக்குள் சகோதரன் எழும்பி விட்டார். இதன்பின்பு இவருடைய துணைவியும் மனந்திரும்பி கர்த்தரை ஏற்றுக் கொண்டது கர்த்தருடைய பரிசுத்த நாமத்துக்கே மகிமையும் கனமும் சதாகாலங்களிலும் உண்டாவதாக.

(தொடரும்)

Pastor S. Sundarraj
Vallioor.

## சாட்சி

என் பெயர் நெகேமியா. என்னுடைய பழைய பெயர் மதுசூதனன் என்பது. நான் சிறுவயதிலேயே முர்க்கமுள்ள தீயபிள்ளையாய் எனது பழைய பெயருக்கு ஏற்றவனுகவே இருந்து வந்தேன். எனது இருதயத்தில் எல்லாம் தீமை நிறைந்து இருந்தது. என்னில் நன்மை ஒன்றும் இல்லை.

எனக்கு இரண்டு சகோதரர்கள் உண்டு. அதில் மூத்த சகோதரன் பொறியியல் கல்லூரியில் படிப்பதற்காக, சேலம் சென்று படித்துக்கொண்டிருந்த போது, கிறிஸ்துவின் உத்தமபக்தர் ஒருவர் மூலமாய் சந்திக்கப்பட்டு கிறிஸ்துவுக்கு உட்பட்டார்.

மிகச் சிறு வயதிலிருந்தே எனக்குள் பாவம் இருந்தாலும் பாவத்தின்மேல் ஒரு வெறுப்பு எனக்குள் இருந்தது. ஆனுலும் மிகச் சிறு வயதிலேயும் தீமையான சிந்தனைகளும் அவற்றின் மீது வெறுப்பும் என்னுள் இருந்தது. ஆனுல் அத்தீமைக்கு விரோதமாகப் போராடியும் வெற்றி பெறமுடியவில்லை. எங்கள் குடும்பமும் பக்தியுள்ள இந்துக் குடும்பமாக இருந்தது. நானும்கூட சபரிமலைக்கு, 'மகரஜோதி' நாளன்று சுற்று வழியாக ஏறிச் சென்றவன்தான். ஆனுலும் நான் ஜோதியைக் காணவில்லை. அப்போது நான் மூன்றும் வகுப்பு படித்துக் கொண்டிருந்தேன். நான் ஜோதியைக்காணுவிட்டாலும் ஜோதியைக் கண்டு விட்டதாகப் பொய் சொன்னேன். ஏனென்ருல், அப்படிச் சொல்லாவிட்டால் "நீ பாவி விரதம் சரியாக எடுக்கவில்லை" என்று சொல்லி விடுவார்கள் பிறகு எனது இரண்டாம் அண்ணனும் அங்கே வந்திருந்தபடியால் அவனி

டம் "நீ ஜோதியைக் கண்டாயா?" என்று கேட்டேன். அவன் தான் காணவில்லை என்றான்.

என் அண்ணன், நான் 7-ஆம் வகுப்பு படிக்கும்போது சேலத்தில் இருந்து வீட்டிற்கு விடுமுறையைக் கழிக்க வந்தார். எங்கள் வீட்டில் உள்ளவர்களுக்கு இயேசு கிறிஸ்துவைப்பற்றிச் சொன்னார். ஆரம்பத்தில் கடுமையாக எதிர்த்தேன். ஏனென்றால், அப்போதே எனக்குள் இந்துமத வெறியும் பக்தியும் எனக்குள் இருந்தது. தினமும் காலையில் குளித்தவுடன் ஈரத்துண்டு ஒன்றை அரையில் கட்டிக் கொண்டு மணி அடித்து விக்கிரகங்களையும் சொருபங்களையும் வணங்குவேன். அப்படிப்பட்ட நான் தேவகிருபையினால் கிறிஸ்துவை ஏற்றுக் கொண்டேன்.

கிறிஸ்துவை நான் ஏற்றுக் கொண்ட பின்பும் எந்தச் சபைக்கும் நான் போகவில்லை. எந்த உபதேசமும் எனக்குத் தெரியாது. ஆனாலும் பல கிறிஸ்தவ பிரசங்கிகளிடம் கடித தொடர்பு வைத்திருந்தேன். அப்போதும் எனக்குள் பாவம் வாசமாய் இருந்தது. நான் ஆண்டவரிடம் நான் பாவி, நான் பாவி என அறிக்கையிட்டும் எந்த விதப் பலனையும் விடுதலையையும் அடையவில்லை.

பிறகு தேவகிருபையால், 'புதிய எருசலேம் சபை' என்னும் சபையை அறிந்து அங்கே போய்க்கொண்டிருந்தேன். அங்கே சகோதரர்கள் ஒருவரில் ஒருவர் பாராட்டும் அன்பு என் உள்ளத்தைக் கவர்ந்துக்கொண்டது. அங்கே தேவனுடைய தெளிவான உபதேசத்தை அறிந்து கொண்டேன். இதுவே தேவனுடைய "மணவாட்டியாகிய சபை" என்றும் வசனங்கள் மூலமாகவும், முழு நிச்சயமாய் இப்போது உண்மையாய் அறிந்திருக்கிறேன்.

பிறகு புதிய எருசலேம் சபையில் பாவ மன்னிப்புப்பற்றி அறிந்து கொண்டேன். தேவன் தரும் ஆசீர்வாதங்கள் எல்லாம் நிபந்தனை உள்ளவை என்று அறிந்து கொண்டேன்.

(உ-ம் கேட்டால் தருவேன்- மத். 7: 7) (கைக் கொண்டால்- நானே உன் பரிகாரியாகிய கர்த்தர் யாத். 15: 26) (அறிக்கையிட்டால் மன்னிக்கப்படுவோம், I யோ. 1: 9)

அவருடைய வசனங்களைக் கைக்கொண்டு அவரில் நிலைத்திருந்தால் நம்மில் பாவக் கறைகள் அகன்று நம்மில் கனி உண்டாகும் என உணர்ந்தேன் (யோ. 15: 1- 5) நியாப்பிரமாணத்தை மீறுகிறதே பாவம் (I யோ. 3: 4) என்றும் எந்தப் பாவமும் நியாயப் பிரமாணத்தை மீறுகிறதினால் உண்டாகிறபடியினால் எல்லாமுமே கர்த்தருக்கு விரோதமான பாவமே என்றும் (ஆதி: 20: 6; 39: 9; யாத். 16: 8) அவற்றை அதிகாரம் பெற்ற ஊழியர்களிடம் வெளிப்படுத்தி அறிக்கையிட வேண்டும் என்றும் (யோவான் 20: 21, 22, 23; மத்தேயு 3: 5, 6; யாத். 19: 14; மாற்கு 1: 5) அல்லது சபையிலே வெளிப்படுத்தி அறிக்கையிட்டு மன்னிப்புப் பெறவேண்டும் என்றும் (அப்.19: 18; II கொரி.2:10; ரோமர் 10:10) இதுவே கர்த்தருடைய வழி, கர்த்தருடைய போதனை, சத்தியம் என்றும் அவரில் அன்பாய் இருக்கிறவன் அவருடைய கற்பனைகளைக் கைக் கொள்ளுவான் (யோ. 14: 21). நித்திய ஜீவனுக்கென்று நியமிக்கப்பட்டவர்கள் அவருடைய போதனையை ஏற்றுக் கொள்வார்கள் (அப். 13: 38)என்றும் அறிந்து கொண்டேன். சிலர் விசுவாசியாமல் போனாலுமென்ன? அவர்களுடைய அவிசுவாசம் தேவனுடைய சத்தியத்தை அவமாக்குமோ? (ரோமர் 3: 3) அவமாக்காது சத்தியம் சத்தியந்தான். புதிய எருசலேமில் சத்தியத்தை சத்தியமாகவே கைக்கொள்ளும்படியாகவும் தேவன் எனக்கு கிருபை செய்தபடியாலும் என் தேவனை நன்றியோடுஸ்தோத்தரிக்கிறேன். இப்போது கிறிஸ்துவின் பிரமாணம் என்னைப் பாவம் மரணம் என்னும் பிரமாணங்களிலிருந்து விடுதலை ஆக்குகிறதை உணருகிறேன் (ரோமர் 8: 1, 2). சத்தியம் எங்களை விடுதலை ஆக்குகிறது. இந்த சத்தியத்தைக் குறித்து சாட்சி கொடுக்கிறோம்.

இப்பொழுது எங்கள் குடும்பம் முழுவதும் கர்த்தரால் சந்திக்கப்பட்டுள்ளது. தேவனுக்கே மகிமையுண்டாவதாக. பழையவைகள் ஒழிந்து போயின எல்லாம் புதிதாயின, கர்த்தருக்கு ஸ்தோத்திரம் ஆமென்.

"நான் சீயோனிடத்தில் திரும்பி எருசலேமின் நடுவில் வாசம் பண்ணுவேன்; எருசலேம் சத்திய நகரம் என்றும் சேனைகளுடைய கர்த்தரின் பர்வதம் பரிசுத்த பர்வதம் என்றும் அழைக்கப்படும் என்று கர்த்தர் சொல்லுகிறார் (சகரி. 8: 3) "நான் எருசலேமுக்காவும், சீயோனுக்காகவும் மகா வைராக்கியம் கொண்டிருக்கிறேன்" சக 1: 14.

"நீங்கள் எருசலேமில் தேற்றப்படுவீர்கள்-" ஏசா. 66: 13, "எருசலேமே உன் வாசல்களில் எங்கள் கால்கள் நிற்கலாயிற்று. எருசலேம் இசைவிணைப்பான நகரமாய்க் கட்டப்பட்டிருக்கிறது. எருசலேமின் சமாதானத்துக்காக வேண்டிக் கொள்ளுங்கள். உன்னை நேசிக்கிறவர்கள் சுகித்திருப்பார்களாக (சங். 122: 2,3,6). "நீ ஜீவனுள்ள நாளெல்லாம் எருசலேமின் வாழ்வைக் காண்பாய் (சங். 128: 5)

இப்படிக்கு
சகோதரன் : நெகேமியா
கோயம்புத்தூர்.

# HOPE

These words should create belief in GOD, hope in life, and faith in the forth coming joyful future.

Many are troubled in doubts without having any hope. Many put their trust on vain things. Some disbelieve others and they are also not worthy to be believed.

What the scripture says, "Be ye in Hope". Next step to faith is hope. Faith continues with hope and after hope much faith is built turn after turn. Hope is the substance by which believing that all things are possible with GOD. That is the hope.

## Hope in God :

We must believe that "God is existing and He will do good to those who diligently seek Him (Heb. 11:6). He will perform that which He has uttered (Rom. 4:20,21). He is a GOD worthy to be trusted (Ps. 22:5) He will never forsake those who put their trust in Him (Ps. 26:5, II Sam 22:35). If we walk in His ways, He will do good according to His words and He will never do harm (Ps. 119:68)". This hope must exist till the death.

## Hope in life :

Believing in GOD, we must be courage our (Ps. 37:3,5). We must be faithful, that others may trust us (Lk. 16:11,12). We must not faint in the time of trouble (Ps. 50:15; 18:18). We must do good works hoping that we will receive the reward of our work (Jer. 31:6, Ecc. 9:10). According to your hope, shall it be done unto you (Ps. 34:5).

**About the future :**

We must believe the resurrection of the dead (Heb. 9:27). We must believe that Jesus Christ will come for the second time to call us (I Thes 4:13-16). If we live holy we can see GOD (Mt. 5:8). GOD is leading us in this path to do good in the latter days (I Jn. 3:?, Gen 50:20). GOD will add us into the Kingdom of GOD, delivering us from all evil (II Tim 4:18)". I will not make haste since I put my trust in GOD (Ps. 56:4,11). This kind of hope will create courage, joy and expectation.

You trust GOD and be worthy to be trusted. Believe the promises GOD. His decree and plan will come to pass.

> Our father trusted in thee : they trusted and thou didst deliver them – Ps. 22:4.

## விவாகம் யாவருக்குள்ளும் கனமுள்ளதாய் இருப்பதாக

கீழ்க்கண்ட பரிசுத்த விவாகங்கள் புதிய எருசலேம் சபையில் ஆசீர்வாதமாய் நடந்தது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவிக்கிறோம்.

1. சகோதரன் பீட்டருக்கும் சகோதரி வேதமணிக்கும் கயத்தாறு அருகேயுள்ள மணமகன் இல்லத்தில் 20-6-84 ல் பரிசுத்த விவாகம் நடந்தது.

2. சகேதரான் ஜேகப்புக்கும் சகோதரி எப்சிபாவுக்கும் பாளையங் கோட்டையில் 27-6-84 ல் பரிசுத்த விவாகம் நடந்தது.

3. சகோதரன் மொர்தெக்காய்க்கும் சகோதரி செல்விக்கும் ராஜபாளையத்தில் 4-7-84 ல் பரிசுத்த விவாகம் நடந்தது.

4. சகோதரன் பிரபாகரன் கோயில்ராஜ்க்கும் சகோதரி உம்மல் பிரிஸ்கில்லாளுக்கும் வள்ளியூர் தேவாலயத்தில் 23-7-84 ல் பரிசுத்த விவாகம் நடந்தது.

கர்த்தர் இந்த தம்பதிகளை ஆசீர்வதிக்க யாவரும் ஜெபிக்குமாறு கேட்டுக்கொள்கிறோம்.

# புதிய எருசலேம் செய்தி

**எக்காள சத்தம் - 9 * செப்டம்பர் '84**




''...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ, நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள்.... விழித்திருங்கள்...உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லோருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்...''

மாற்கு 13 : 35-37

**EDITOR: CHIEF PASTOR N. LAZAR**

BOMBAY, INDIA

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லோரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒருமனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும் படியாகவும் தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய்க் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும்; சபையானது வஞ்சக போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது.

(எபே.4:11-16)

## இதழின் உள்ளே



"கோவில்பட்டியில் புதிய எருசலேம் சபை ஆலயம் கட்டப்படும்படி எல்லோரும் ஜெபிக்கும்படி வேண்டுகிறோம்."

# ஆசிரியர் உரை

கிறிஸ்துவுக்குள் அன்பான தேவனுடைய பிள்ளைகளுக்கு, நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் வாழ்த்துக்கள் பல. சாத்தான் மாம்ச சக்திகளை ஒருங்கு திரட்டிக் கொண்டு தேவனுடைய மார்க்கத்துக்கும், தேவனுடைய நாமத்திற்கும், தேவனுடைய பிள்ளைகளுக்கும் விரோதமாய் போர் செய்ய ஆரம்பித்துள்ளான். இந்தபடி நடக்கும் என்று பல ஆண்டுகளுக்கு முன் கடவுள் நமக்கு சொன்னபடி ஆரம்பமாகிவிட்டது. நாம் இவைகளுக்கு விரோதமாய் ஆயத்தப்பட்டு அணிவகுத்து நிற்கவேண்டிய அவசியம் ஏற்பட்டுள்ளது. அன்று கோலியாத் தேவனுடைய நாமத்தையும், தேவனுடைய சேனை (தேவ ஜனங்கள்)யையும் நிந்தித்து, தூஷித்து சவால் விட்டபோது உண்மையில் பரிசுத்த ஆவியால் அபிஷேகம் பெற்ற தாவீது இஸ்ரவேலின் தேவனுக்கும், ஜனங்களுக்கும் ஏற்பட்ட நிந்தையை நீக்க வைராக்கியம் கொண்டு எதிரியை மடங்கடித்தது போல் உண்மையில் பரிசுத்த ஆவியையுடையவர்கள் எல்லாரும், அபிஷேகம் பெற்ற எல்லாரும் தேவ வைராக்கியம் கொள்வோமாக. சத்துருவுக்கு விரோதமாய் அணிவகுத்து நிற்போமாக. "யேகோவா சபயோத்" சேனைகளின் தேவனாகிய நம்முடைய தேவன் பரலோக வல்லமையை நமக்குத் தந்தருள்வார். வெற்றி தேவஜனங்களுக்கே.

கிறிஸ்துவுக்குள்,

N. Lazar

Chief Pastor N. LAZAR

# கைப்பிடிச்சுவர்

ஒருவன் வீடு கட்டினால் கைப்பிடிச்சுவர் வைத்துக் கட்டக் கடவன். கைப்பிடிச்சுவர் உபா. 22 : 8.

இந்நாட்களில் அநேகர் வீடு கட்ட ஆரம்பித்திருக்கின்றனர். சபை கட்ட ஆரம்பித்திருக்கின்றனர். வீடு என்றும் சொல்லும் போது அது இளைப்பாறும் இடமாகும். பிரயாணத்தில் இருக்கும் மனிதன் களைப் படைந்து சோர்வுறும் போது எப்பொழுது வீடு போய் சேர்வோம் என்று நினைப்பான். அங்கே தான் அவனுக்கு ஆகாரம், தண்ணீர், அடைக்கலம், இளைப்பாறுதல் கிடைக்கும். வீட்டை வாஞ்சிக்காதவர்கள் யாருமில்லை. ஆனால் அநேக வீடுகள் பழுதடைந்தும், பாதுகாப்பற்றதும், வசதியற்றதும், அபாயகரமானதும், இடிந்து எச்சமயத்திலும் விழக் கூடியதுமாய் இருக்கின்றன. அநேக வீடுகளுக்கு கைப்பிடிச்சுவர் இல்லை. மக்கள் தவறி விழ நேரிடுகிறது.

வீடு கட்டுகிறவன் கைப்பிடிச்சுவரும் வைத்து கட்ட வேண்டும். கைப்பிடிச் சுவர் தவறி விழாமலிருக்க உதவுகிறது. அதுதான் பாவ அறிக்கை. பாவ மன்னிப்பின் உபதேசம். ஒருவன் பாவம் செய்தால் மூப்பர்களிடம் வந்து தன் பாவங்களை அறிக்கையிடக் கடவன். யோசு. 20 : 4; யாக். 5 : 14-17. ஆசாரியன் அவனுக்காகப் பாவ நிவர்த்தி செய்யக் கடவன். எண். 5 : 5-7; லேவி. 5 : 1-6; மத். 3 : 1-6; நீங்கள் எவர்களுடைய பாவங்களை மன்னிக்கிறீர்களோ (அறிக்கை செய்தவர்களின் பாவங்கள்) அவைகள் அவர்களுக்கு மன்னிக்கப்படும். எவர்களுடைய பாவங்களை மன்னியாதிருக்கிறீர்களோ (அறிக்கை செய்யாத பாவங்கள்) மன்னிப்பைப் பெறு (யோ. 20 : 23).

விழுந்து விட்டவர்களை : பாவத்தில் தவறி விழுந்தவர்கள் கிருபையிலிருந்து தவறி விழுந்து விட்டவர்கள், பிரமாணத்தை மீறி தவறி விழுந்தவர்கள், பொருத்தனையிலிருந்து தவறி விழுந்தவர்கள், பெற்றுக் கொண்ட வரம், கிருபைகளை தவற விட்டவர்கள் எல்லாருக்குமே உதவும் கைப்பிடி இதுவாகும்.

அது என்ன? இந்த இடத்தில் விழுந்தேன், தவறி விட்டது என்று விழுந்த இடத்தை தேவனுடைய மனிதரிடத்தில் காண்பித்தலாகிய பாவ அறிக்கையே அது. அந்த இடத்தில் சிலுவை மரத்தைப் போட்டால் பாவ மன்னிப்பு உண்டாகும். பாரமான பொருளும் மிதக்கும் (II இராஜா 6 : 1-6). ஆனால் எந்த இடத்தில் தவறுதல் ஏற்பட்டது என்று கேட்பாருமில்லை. இந்த இடத்தில் தான் என்று ஒப்புக் கொண்டு அறிக்கை செய்வாருமில்லை. ஆனபடியால் சிலுவையின் மன்னிப்பு பலன் செய்யாமல் விழுந்தவர்கள் இறந்து போகிறார்கள். அது ஆத்தும சாவே. கர்த்தராகிய இயேசு கிறிஸ்து தம்முடைய சீஷர்களை - அப்போஸ்தலர்களை அனுப்பும் போது முதல் முதல் கொடுத்த அதிகாரமும், கட்டளையும் : தாம் உயிர்த்தெழுந்த அன்று மாலையில் சீஷர்கள் கூடியிருக்கும் போது அவர்கள் நடுவில் தோன்றி உங்களுக்குச் சமாதானம் உண்டாவதாக என்று சொல்லி அவர்கள் மேல் ஊதி பரிசுத்த ஆவியைப் பெற்றுக் கொள்ளுங்கள். பிதா என்னை அனுப்பினது போல நானும் உங்களை அனுப்புகிறேன் என்று சொல்லி, எவர்களுடைய பாவங்களை மன்னிக்கிறீர்களோ அவைகள் அவர்களுக்கு மன்னிக்கப்படும், எவர்களுடைய பாவங்களை மன்னியாதிருக்கிறீர்களோ அவைகள் அவர்களுக்கு மன்னிக்கப் படாதிருக்கும் என்றார் (யோவான் 20 : 20-23) என்பதே. ஆம் இன்ன இடத்தில் தாங்கள் தவறி விழ நேரிட்டது என்று சொல்லுகிறவர்களுக்கு பரிசுத்த ஆவியால் மன்னிப்பு கொடுக்க அப்போஸ்தலர்களுக்கு, மெய்யான சபைக்கு அதிகாரமுண்டு. எந்த மனிதனும் தன் பாவத்திலே அமிழ்ந்து மரிக்க வேண்டியதில்லை. தவறி விழ வேண்டியதில்லை. கைப்பிடிச் சுவரைப் பிடித்துக் கொள்ளலாம். கைப்பிடிச் சுவர் இருந்தும்

அதை உபயோகிக்க மறுப்பவர்கள், அதை மீறி நடப்பவர்கள் வீழ்ச்சியடைவது நிச்சயம். வீடு கட்டினவன் இரத்தப் பழிக்குத் தப்பித்துக் கொள்ளுவான். கைப்பிடிச்சுவர் இல்லாததினால் ஒருவன் விழ நேர்ந்தால் அவனுடைய இரத்தப் பழியை வீடு கட்டுகிறவனிடம் கேட்பேன் என்று கர்த்தர் சொல்லுகிறார் (உபா. 22 : 8).

சகோதரனே! சகோதரியே, உன்னுடைய சபைக்குக் கைப்பிடிச்சுவர் உண்டா? முறையாக கட்டப்படாத வீட்டில் இராதே. வீடுகட்டுகிறவர்களே கைப்பிடிச் சுவர் வைத்து வீடு கட்ட தேவன் சொல்லியிருக்கிறார். கர்த்தருடைய வீட்டில், கர்த்தர் கட்டுகிற வீட்டில் கைப்பிடிச் சுவருண்டு -அப். 19 : 18.

"கர்த்தர் வீட்டைக் கட்டாராகில் அதைக் கட்டுகிறவர்களின் பிரயாசம் விருதா" -சங் 127 : 1. "கர்த்தர் எருசலேமைக் கட்டுகிறார்......"சங் 147 : 2.

---

"அவன் மனுஷரை நோக்கிப் பார்த்து : நான் பாவம் செய்தேன்...... என்று சொல்லுவான்" —யோபு 33 : 27, 28.

---

# சுவிசேஷம்

உலகம் இவ்வளவு வளர்ச்சியடைந்த பிறகும் கடவுள் உண்டா? இல்லையா? என்று ஆராய்வது தேவையில்லாத ஒன்று என்று பலர் சொல்லலாம். ஆனால் மனிதனின் அடிப்படைத் தேவையே அதுதான். அஸ்திபாரமே அதுதான். அநேகர் அஸ்திபாரத்தை ஒதுக்குவதால் அவர்களின் வாழ்க்கையும் அஸ்திபாரமில்லாத வீட்டைப் போல் இருக்கிறது.

உலகத்தில் பொதுவான ஞானம் மூன்று. அவைகள் அஞ்ஞானம், விஞ்ஞானம், மெய்ஞ்ஞானம் என்பவைகளே! அஞ்ஞானியாயிருக்கிறவன் விஞ்ஞானத்தின் எல்லாத் தாற்பரியங்களையும் உணரும் தகுதியற்றிருப்பது போல விஞ்ஞானத்தை அறிந்தவனும் விஞ்ஞானவாசியும் மெய்ஞ்ஞானத்தைக் குறித்த எல்லாக் காரியங்களையும் அறியமுடியாதவனாயிருக்கிறான். சகல ஞானத்திலும் மெய்ஞ்ஞானமே உயர்ந்தது. அதுவே இறைவனைக் குறித்த அறிவாகும்.

அநேகர் கடவுள் இல்லை என்கிறார்கள். அவர்கள் அறியாமையினாலேயே அப்படிச் சொல்கிறார்கள். அறிந்தவனோ அவரை எப்போதும் மகிமைப்படுத்துகிறான். கடவுள் இல்லை என்பதற்குப் பலர் பல காரணங்கள் சொல்கிறார்கள். கண்ணால் கண்டவர்கள உண்டா? என்பது அநேகருடைய கேள்வியாயிருக்கிறது. கண்ணால் கண்டவர்கள் உண்டா? இல்லையா, என்பது ஒருபுறமிருக்க காணவில்லை என்பதால் அது கிடையாது என்ற நேரடி முடிவுக்கு நாம் வர முடியுமா என்பதை சிந்திக்க வேண்டும்.

கண்ணால் காணமுடியாத அநேக மூலக்கூறுகள், அணுக்கள், உயிரினங்கள், பாக்டீரியாக்கள் மத்தியில்தான் நாம் வாழ்ந்து கொண்டிருக்கிறோம் என்பதை அறிய வேண்டும். கண்ணால் காண்பதும், காதால் கேட்பதும், தொடு உணர்வினால் உணர்வதும், ஒரு குறிக்கப்பட்ட எல்லைக்குள்ளேயே சாத்தியமாகிறது. 20 முதல் 20,000 வரையுள்ள அதிர்வுள்ள சப்தத்தையே நம்மால் கிரகிக்க முடியும். அதுவும் அதின் ஆம்ளிடியூடு (Amplitude) போதுமானதாக இருக்க வேண்டும். இரவு என்று நாம் சொல்கிறோம். அங்கு வெளிச்சம் இல்லை என்கிறோம். ஆனால் உண்மை அதுவல்ல. அங்கே வெளிச்சம் உண்டு. அந்த வெளிச்சத்திலே நடமாடும் உயிரினங்கள் உண்டு. ஆனால் அவ்வொளியைக் கிரகிக்கும் சக்தி நம் கண்களுக்குஇல்லை என்பதுதான் உண்மை! நாம் அறியாத ஒலிகளை இன்ன பிற ஜீவராசிகளால் அறிய முடியும். ஆக மனிதன் தனது சரீர உணர்வுகள் மூலமாகவே சகலத்தையும் கிரகிக்கிறான். அவன் காண முடியாத, கேட்க முடியாத, உணர முடியாத அநேக ஒலிகளும், ஜீவன்களும் நம்மைச் சுற்றிலும்

எப்போதும் நிலவிக் கொண்டுதான் இருக் கின்றன.

அப்படியே மனித உணர்வுகளைத் தாண்டி நிற்கும் பரம்பொருளாகிய இறை வனை மனிதன் தன் சாதாரண உணர்வு எல்லைக்குள் அறிய நினைப்பதும் அடக்க முயற்சிப்பதும் சாத்தியமாகாது. கண்ணுக் குப் புலப்படாதவைகளைக் காண மனிதன் மைக்ராஸ்கோப் (உருப் பெருக்கி) என்னும் கருவியை கண்டுபிடித்தான். காதினுல் அறிய முடியாத தூரத்திலுள்ள ஒலியைக் கேட்க ஆம்ளிஃபைர் (Ampli fier) உண் டாக்கினன். புலன் உணர்வுக்கு அப்பாற் பட்டதை அறிய அவன் மற்ருென்றின் துணையை நாடுகிருன். அப்படியே பரந்து நிற்கும் இறைவனை அறியவும் காணவுமே மத நூல்கள் தோன்றின; மார்க்கங்கள் உண்டாயின, எண்ணத்தினுல் மாத்திரமே உணரமுடிகிற இறைவனை எழுத்து வாயி லாக அறிவிக்கும்படியாக இறைவனே சித்தம் கொண்டார். அதுவே வேதாகமம் என்ற கிறிஸ்தவர்களின் புனித நூலாகும்.

உலகத்தில் எழும் பிரச்சினையைத் தீர்க்க மனிதன் சில வழிமுறைகளை, சட்ட திட்டங்களை ஒழுங்கு அமைப்புகளை உரு வாக்கியிருக்கிருன். அரசியல் பற்றிய பிரச் சினைகளைத் தீர்க்க வரலாற்றைப் புரட்ட வேண்டும். நில அமைப்பை அறிய பூகோள சாஸ்திரங்களை ஆராய வேண்டும். உடற் கூறுகளை அறிய சரீர நூல்களை (Anatomy and Phisiology) சரீர சாஸ்திரங்களைக் கவ னிக்க வேண்டும். எதை அறிய வேண் டுமோ அது சம்பந்தப்பட்டவைகளை அறி கிற போதுதான் அது விளங்கும். இல்லை யென்ருல் ஒன்றும் விளங்காது. உடல் நல மில்லையென்று நீ பொறியாளரிடம் (Engi- neer) செல்வதில் பிரயோஜனமில்லை. இயந் திர ஆலோசனை பெற நீ மருத்துவரிடம் போய் பிரயோஜனம் இல்லை. அப்படிச் செய்யும் போது அவரவர்களுக்குத் தெரிந்த வைகளை மட்டும் அவரவர் சொல்லுவார் கள். முடிவு குழப்பமாகும்.

எதைக் குறித்து ஒருவன் பேசுகிருனே அதைக் குறித்து அவன் தெளிவாக அறிந் திருக்க வேண்டும். அப்படியே கடவுளைக் குறித்து பேசுகிறவன் கடவுளை அறிந்திருக்க வேண்டும். கடவுள் இல்லையென்பவர் யா வரும் கடவுளை அறியாதவர்களாயிருக்கிருர் கள். அவர்கள் அறியாததால்தானே இல்லை என்கிருர்கள். அறியாத ஒன்றைப் பற்றி நீ எப்படிப் பேசமுடியும்.

ஆம் நாங்கள் கடவுளை அறிந்திருக் கிருேம். அறிந்திருப்பதால் எங்களுக்குள் கேள்விகளும் இல்லை; குழப்பங்களும் இல்லை. அறிந்திருப்பதால் உறுதியாக நம்பு கிருேம். நம்புகிறதினுல் உங்களுக்கும் அறி விக்கிருேம். நாங்கள் அறியாதவைகளை அல்ல, அறிந்தவைகளையே உங்களுக்கும் அறிவிக்கிருேம். அது இறைவனுகிய இயேசு கிறிஸ்துவைக் குறித்த செய்தியாகும்.

ஆம் கடவுள் ஒருவர் உண்டு. அவர் பெயர் இயேசு கிறிஸ்து. அவராலே உலகத் திலுள்ள சகலமும் உண்டானது. அவரே மனிதனைப் படைத்தார். ஆனுல் அவனே அவரை மறந்துவிட்டு பாவம் செய்ய ஆரம் பித்தான். தாம் உண்டாக்கின மனிதன் பாவம் செய்து தன்னை விட்டுத் தூரமாய் போய் விட்டதால் அவனைத் தேடி வந்தார். காணமற் போன பிள்ளையை தாய் தேடுவது போல, மேய்ப்பனுனவன் தன் ஆட்டைத் தேடுவது போல அவர் தேடி வந்தார். அவன் செய்த பாவங்களை மன்னித்து அவனைத் திரும்ப தன்னுேடு இணைத்துக் கொள்ளும்படி வந்தார். அவரைக் கடவு ளாக ஏற்றுக் கொள்ளுகிறவன் இந்த உலகில் மட்டுமல்ல மறுமையிலும் நித்திய நித்தியமாய் அவரோடு வாழும்படி அவ னுக்கு ஒரு வழியை உண்டுபண்ணும்படி அவரே வந்தார். ஆம்! இம்மையில் இனிய வாழ்வும் மறுமையில் மோட்ச வாழ்வும் நீ அடையும்படி அவர் உன் அக்கிரமங்களுக் காக சிலுவையிலே தொங்கினுர். சிலுவை யிலே தொங்கும் கல்வாரி நாதரைப் பார். உனக்காக அவர் படும் பாடுகளைக் கோரச் சிலுவையிலே பார். கல் மனதும் கரைந்து ஒடும் அக்காட்சி உன் உள்ளத்தை இன் னும் உருக்கவில்லையா? சகோதரனே! சகோதரியே! அவர் உன்னை அழைக்கிருர்.

ஓடி வா மகனே! மகளே! என்று அழைக்கிறார். அவரை உன் ஆண்டவராக ஏற்றுக் கொண்டால் அவர் உன்னை ஆதரிப்பார், உன்னைச் சுமப்பார்; உன்னை தாங்குவார். ஆம்! உன் சந்தோஷம் நிறைவாகும் படி உனக்காக யாவையும் அவர் கல்வாரியிலே செய்து முடித்து விட்டார். அவரே உன் ஆண்டவராகிய இயேசுகிறிஸ்து. இனி காலம் செல்லாது. இன்றே அவரை ஏற்றுக் கொள்.

"நானே வழியும் சத்தியமும் ஜீவனுமாயிருக்கிறேன். என்னாலேயல்லாமல் ஒருவனும் பிதாவினிடத்தில் வரான்"

யோவான் 14:6

# சீர்கெட்ட பிள்ளைகளே திரும்புங்கள்

இன்றைய நாட்களில் அநேகர் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசித்து மனந்திரும்பி ஞானஸ்நானம் பெற்று பாவ மன்னிப்பும், அபிஷேகமும் பெற்று ரட்சிக்கப்பட்ட தேவ பிள்ளைகளில் அநேகர் கர்த்தரை நோக்கி முன்னேறிச் செல்லாமல் பின்மாறிக் (கொண்டே போய்க்) கொண்டிருக்கிறார்கள் இவர்களைப் பார்த்து கர்த்தராகிய ஆண்டவர் மனதுருகி : சீர்கெட்ட பிள்ளைகளே திரும்புங்கள் என்று சொல்லுகிறார். —எரே. 3 : 14.

இப்படிப்பட்டவர்கள் ஆரம்பத்தில் (ரட்சிக்கப்பட்ட சமயத்தில்) மிக உற்சாகமாய் காணப்படுவார்கள். எப்பொழுது பார்த்தாலும் ஜெபமும், தியானமும், வேதவாசிப்பும், ஆத்துமாக்களை ஆதாயப்படுத்துவதும், சுவிசேஷம் அறிவித்தலும், கைப்பிரதிகள் கொடுத்தலுமாகிய பலவித காரியங்களைச் செய்து தேவனுக்கு பிரியமாய் நடப்பார்கள். இப்படிப்பட்ட ஒரு பரிசுத்தவானை கர்த்தர் நம் மத்தியில் கூட்டிச் சேர்த்திருக்கிறார் என்றால் இது தேவனுடைய பெரிதான கிருபையே என்றும், இதைப்போன்ற அனேக ஆத்துமாக்களை கர்த்தர் எழுப்ப வேண்டும் என்று நாம் ஜெபிக்கக் கூடிய அளவிற்கு அவர்கள் காணப்படுவார்கள். அநேக ஆத்துமாக்களைக் கொண்டு வருவார்கள். சபையில் முதலில் எழும்பி நின்று அருமையாய் சாட்சி சொல்லுவார்கள். அவர்களுடைய காரியங்கள் எல்லாம் பார்ப்பவர்களுக்கு மிகவும் ஆச்சரியமாயிருக்கும். எல்லாக் காரியங்களையும் கர்த்தருக்கு பிரியமானபடியே செய்வார்கள். ஏன் இப்படி காணப்படுகிறார்கள் என்றால் அவர்கள் ரட்சிக்கப்படாததற்கு முன்னே பாவத்திற்கு அடிமைப்பட்டு சாபத்தை தலையில் போட்டு வாழ்க்கையில் தோல்வியும், பெருத்த நஷ்டங்களும், கஷ்டங்களும், நோய் பிணிகளிலும், பிசாசின் பிடிகளிலும் பீடிக்கப்பட்டு மன சமாதானமின்றி சந்தோசமின்றி அலைந்து திரிந்து கொண்டிருந்த நாட்களில் பரிசுத்தவான்கள் மூலமாகவோ, துண்டு பிரதிகள் மூலமாகவோ கர்த்தராகிய இயேசுவை அறிந்து விசுவாசித்து ரட்சிக்கப்பட்ட பின் வாழ்க்கையில் ஒரு பெரிய மாற்றம் காணப்படுகிறது. சமாதானம் சந்தோசம், பாவத்திலிருந்து மீட்பு, பிசாசின் பிடியிலிருந்து விடுதலை போன்ற அதியசங்களை கண்டு இப்படிப்பட்ட ஒரு பெரிய ஆண்டவரை நாம் கண்டு கொண்டோம் என்ற மகிழ்ச்சியின் உற்சாகத்தால் ஆரம்பத்தில் இப்படி சாட்சியாயிருப்பார்கள்.

பின் சிறிது நாட்கள் செல்ல செல்ல சிறிது வெறுப்பு ஏற்படுகிறது. எப்படி என்றால் இங்கு இருந்தால் எப்பொழுதும் ஜெபம் பண்ண வேண்டியிருக்கிறது, வேதம் வாசிக்க வேண்டியதிருக்கிறது. சுவிசேஷசம் சொல்ல வேண்டியதிருக்கிறது. தேவ காரியங்களைப் பற்றியே சிந்திக்க வேண்டியதிருக்கிறது. சபை சட்ட திட்டங்களுக்கு கீழ்படிய வேண்டியதிருக்கிறது. தன் சுய இச்சைப்படி நடக்க முடியவில்லை. உலக ஆசா பாசங்களில் கலந்து கொள்ள முடியவில்லையே என்று நினைத்து நாம் உலகத்தில் இருந்தால் (உலகப் பிரகாரமாக) இதை விட ஜாலியாக இருக்க முடியுமே என்று நினைத்து

சாத்தானின் அடிமைத்தனத்திலிருந்த அந்த பழைய எகிப்த்தை (உலகத்தை) நோக்கி சிந்திக்கிறார்கள். அவர்கள் தேவனை அறிந்தும் அவரை தேவனென்று மகிமைப்படுத்தாமலும் ஸ்தோத்தரியாமலுமிருந்து தங்கள் சிந்தனைகளினாலே வீணரானார்கள். உணர்வில்லாத அவர்களுடைய இருதயம் இருளடைந்தது (ரோம. 1 : 21) என்ற வேதவாக்கியப்படி பழைய எகிப்திற்கே (பாவ உலகத்திற்கே) போய் விட்டால் நலமாயிருக்கும் என்று நினைக்கிறார்கள்.

சிறிது துன்பம், துக்கம், நெருக்கம் சோதனை ஏற்பட்டவுடனே கர்த்தரை விட்டு பின் வாங்க ஆரம்பிக்கிறார்கள். கிறிஸ்தவ வாழ்க்கையானது நாம் நினைத்ததெல்லாம் நடக்கும், கேட்டதெல்லாம் கர்த்தர் கொடுப்பார், நமக்கு ஏதாவது சபை (பிறர்) உதவி செய்யும் (உதவி செய்வார்கள்) என்றல்லவா நினைத்தோம் என்று மருளுகிறார்கள். இந்த பாதை ஜீவனுக்குப் போகிற வழியாகையால் இது இடுக்கமும் வழி நெருக்கமுமானதாகும். ஒரு மனுஷன் கஷ்டப்பட்டு உழைத்தால் தான் அவன் சாப்பிட முடியும். கஷ்டப்படாமல், உழைக்காமல் இருந்தால் அவன் உயிர் வாழ முடியாது. இதைப்போல பரலோக ராஜ்யத்திற்கு போவதற்கு துன்பம், துக்கமெல்லாம் சகித்து, பரிசுத்தமாய் காணப்பட்டு, பழைய ஜீவியங்களையெல்லாம் வெறுத்து தள்ளி விட்டு தன்னுடைய ரட்சிப்பைக் காத்துக் கொண்டு கர்த்தருடைய வருகைக் கென்று ஆயத்தமாயிருக்கிறதே இந்த கிறிஸ்தவ வாழ்க்கை. இந்த ஜீவ வழியை (பாதையை) கண்டு பிடிக்கிறவர்கள் அறிந்து உணர்ந்து கொள்ளுகிறவர்கள் வெகு சிலரே; இப்படிப்பட்ட உன்னதமான நிலையை அடைந்து உற்சாகமாய் இருந்து விட்டு பின் உலக ஆசாபாசங்களிலும், பெருமையிலும், மாமிச இச்சைகளிலும் இழுக்கப்பட்டு சிக்குண்டு சீரழிந்து போகிறார்கள் சிலர். இப்படி சிலர் சபைகளில் இருந்து கொண்டே ஆரம்பத்தில் செய்த கிரியைகளை விட்டு விட்டு ஏனோ தானோ என்று நினைத்து பேருக்காக ஆராதனை செய்து கொஞ்சம் கொஞ்சமாக பின் மாறி போய்க் கொண்டிருக்கிறார்கள். சிலர் பின் மாறியே போய் விடுகிறார்கள். (சபையை விட்டு)

இவர்களைப் பார்த்து சீர் கெட்ட பிள்ளைகளே திரும்புங்கள் என்று கர்த்தர் சொல்லுகிறார். நான் உன் நாயகர். நான் உங்களை ஊரில் ஒருவனும், வம்சத்தில் இரண்டு பேருமாகத் தெரிந்து கொண்டு சீயோனில் கூட்டிச் சேர்த்து உங்களுக்கு என் இருதயத்திற்கு ஏற்ற மேய்ப்பர்களை கொடுத்து உங்களை அறிவோடும், புத்தியோடும் நடத்தினேன். (எரே. 3 : 14, 15) நீயோ உன் தேவனாகிய கர்த்தருக்கு விரோதமாக துரோகம் பண்ணி என் சத்தத்திற்கு செவி கொடாமற் போகிறாய் என்கிறார். இப்படி என்னை விட்டு தூரப்பட்டு மாயையைப் பின்பற்றி வீணராய் போகிறதற்கு என்னிடத்தில் என்ன அநியாயத்தைக் கண்டார்கள் (எரே. 2 : 6) என்று மனம் வருந்துகிறார் தேவன். நீ இரட்சிக்கப்பட்ட ஆரம்பத்தில் என்னைப்பின்பற்றி வந்த உன் இளவயதின்பக்தியையும் நீவாழ்க்கைப்பட்ட போது உனக்கிருந்த நேசத்தையும் நினைத்திருக்கிறேன் என்று கர்த்தர் சொல்லுகிறார்.

ஆம் அருமையானவர்களே உன் தீமை உன்னைத் தண்டிக்கும், உன் மாறுபாடுகள் உன்னைக் கண்டிக்கும். நீ உன் தேவனாகிய கர்த்தரை விடுகிறதும், என்னைப் பற்றும் பயம் உன்னிடத்தில் இல்லாமலிருக்கிறதற்கும் எத்தனைபொல்லாப்பும் கசப்புமான காரியம் என்று உணர்ந்து கொள்—என்று சேனைகளின் கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார் (எரே. 2 : 19) பின் மாற்றத்தில் இருக்கிறவர்களே சிந்தியுங்கள். நம்மை உருவாக்கி படைத்த ஆண்டவருடைய மனதை ஏன் இப்படி புண்படுத்த வேண்டும். கிறிஸ்தவ வாழ்க்கையில் நன்மை இல்லை என்று நினைக்கிறாயா? அப்படி நினையாதே. உங்கள் பாவங்கள் உங்களுக்கு நன்மையை வரவொட்டாதிருக்கிறது என்று கர்த்தர் சொல்லுகிறார் (எரே. 5 : 25) நான் உன்னிடத்தில் நல்ல கனி கிடைக்கும் என்று எதிர் பார்த்திருந்தேன் நீயோ கசப்பான கனியை கொடுத்தாய். நான் என் திராட்சை தோட்டத்திற்காக செய்யாத எந்த வேலையை அதற்கு இனி செய்யலாம். அது நல்ல திராட்சைப் பழங்களை தருமென்று காத்திருக்க அது கசப்பான பழங்களைத் தந்ததென்ன என்று சொல்லி கர்த்தர் மனம்

வருந்துகிறார். (ஏசா. 5:4) இதோ இரட்சிக்கக்கூடாதபடிக்கு கர்த்தருடைய கை குறுகிப் போகவுமில்லை, கேட்கக் கூடாதபடிக்கு அவருடைய செவி மந்தமாகவுமில்லை. உங்கள் அக்கிரமங்களே (பின் மாற்றமே) உங்களுக்கும், தேவனுக்கும் நடுவாக பிரிவினை உண்டாக்குகிறது. உங்கள் பாவங்களே அவர் உங்களுக்கு செவி கொடாதபடிக்கு அவருடைய முகத்தை உங்களுக்கு மறைக்கிறது (ஏசா. 59:1,2) பின்மாறிப் போனவர்களின் ஜெபமும் ஏறெடுக்கப்படாது. தேவனும் அவர்கட்கு செவி கொடார். ஏனென்றால் பின்மாறி அனேக பாவங்கள் அவர்களை சூழ்ந்திருப்பதால் இத்தனை பரிதாபமான நிலை ஏற்படுகின்றது.

அப்படியிருந்தும் கர்த்தர் அவனுக்காக பரிதபிக்கிறார். இரக்கம் கொள்ளுகிறார். மன்னிக்கிறார். மனந்திரும்புங்கள் என்று சத்தமிடுகின்றார். நான் எப்போதும் வழக்காடமாட்டேன், நான் என்றென்றைக்கும் கோபமாயிருப்பதில்லை ஏனென்றால் ஆவியும் நான் உண்டுபண்ணின ஆத்துமாவும் என் முகத்துக்கு முன்பாக சோர்ந்து போகுமே என்று கூறுகிறார். (ஏசா 57:16) அவர் நினைத்தால் ஒரு மனிதனை உருவாக்க முடியும். மாற்ற முடியும், அழிக்க முடியும். ஆனால் அவர் அப்படி செய்யாமல் மனிதன் திருந்தி கொள்வதற்கு நேரத்தையும் காலத்தையும் கொடுக்கிறார். அவர் மிகவும் அன்புள்ளவர் மன்னிக்கிற தேவன் ஆகையால் சீர்கெட்ட பிள்ளைகளே திரும்புங்கள் என்று கர்த்தர் சொல்லுகிறார்.

இப்படி பின் மாறியிருக்கிறவர்களைப் பற்றி கர்த்தர் என்ன சொல்லுகிறுறென்றால், கர்த்தரும் இரட்சகருமாயிருக்கிற இயேசு கிறிஸ்துவை அறிகிற அறிவினாலே உலகத்தின் அசுத்தங்களுக்குத் தப்பினவர்கள் மறுபடியும் அவைகளில் சிக்கிக் கொண்டு ஜெயிக்கப்பட்டால் அவர்களுடைய பின்னிலமை முன்னிலமையிலும் கேடுள்ளதாயிருக்கும் என்று கூறுகிறார். (II பேது 2:20). ஆகையால் அருமையானவர்களே நீங்கள் எவைகளில் பின்மாறியிருக்கிறீர்கள்? ஜெபத்திலா? வேதம் வாசிப்பிலா?? ஆத்தும ஆதாயம் செய்வதிலா? சுவிசேஷம் அறிவித்தலிலா? கர்த்தருக்கு கொடுப்பதிலா?(கர்த்தரை எப்போழுதும் ஸ்தோத்தரிப்பதிலா?) ஆராதனை ஒழுங்குகளிலா? சபை சட்ட திட்டங்களுக்கு அடங்கி நடப்பதிலா? கீழ்ப்படிதலிலா? எதில் பின் மாறியிருக்கிறீர்கள், அல்லது எல்லாவற்றிலுமே பின்மாற்றமா?

கர்த்தருக்குள் அன்பானவர்களே, நாட்கள் பொல்லாதவைகளாயிருக்கிற படியால் காலத்தை பிரயோஜனப் படுத்திக் கொள்ளுங்கள், நீங்கள் மறுபடியும் மனந்திரும்ப கர்த்தர் இந்தநாட்களை கொடுத்திருக்கிறார். இதுவே அனுக்கிரக காலம், இப்பொழுதே இரட்சண்ய நாள். மனந்திரும்புங்கள் பரலோக ராஜ்யம் சமீபத்திருக்கிறது என்று கர்த்தருடைய வார்த்தை உரைக்கிறது (மத். 3:2) மனந்திரும்பி, பாவமன்னிப்பு பெற்று இரட்சிப்புக்குள்ளாய் கடந்து செல்லுங்கள். மனந்திரும்புதலுக் கேற்ற கனிகளை கொடுங்கள். ஆபிரகாம் எங்களுக்குத் தகப்பன் என்று சொல்லிக் கொள்ளாதிருங்கள். தேவன் இந்தக் கல்லுகளினாலே ஆபிரகாமுக்கு பிள்ளைகளை உண்டு பண்ண வல்லவராயிருக்கிறார். இப்பொழுதே கோடாரியானது மரங்களின் வேர் அருகே வைக்கப்பட்டிருக்கிறது. ஆகையால் நல்ல கனி கொடாத மரமெல்லாம் வெட்டுண்டு அக்கினியிலே போடப்படும் என்று கர்த்தர் உரைக்கிறார். (மத். 3:8-10)

சகோதரனே! சகோதரியே!! உன்பேரில் எனக்கு குறைவுண்டு என்று கர்த்தர் சொல்லுகிறார். ஆகையால் நீ இன்ன நிலமையிலிருந்து விழுந்தாயென்பதை நினைத்து மனந்திரும்பி ஆதியில் செய்த கிரியைகளைச் செய்வாயாக (வெளி. 2:5). இல்லாவிட்டால் சீக்கிரம் உன்னிடத்தில் வந்து நீ மனந்திரும்பாத பட்சத்தில் உன் விளக்குத் தண்டை அதினிடத்திலிருந்து நீக்கி விடுவேன் என்கிறார். பின் மாற்றமாயிருக்கிறவர்களே சீக்கிரம் மனம் மாறுங்கள். இதோ சீக்கிரமாய் வருகிறேன், அவனவனுடைய கிரியைகளின் படியே அவனவனுக்கு நான் அளிக்கும் பலன் என்னோடே கூட வருகிறது. இவ்வித

மான தண்டனைகளுக்கு தப்பித்துக் கொள்ள என் பிள்ளைகளே திரும்புங்கள் என்று மறுபடியும், மறுபடியும் உங்களுக்குச் சொல்லுகிறேன். அப்படி கர்த்தருடைய சத்தத்திற்கு கீழ்படிந்து தன்னுடைய பின் மாற்றத்திலிருந்து மாறி, கர்த்தருடைய நாமத்தை மகிமைப் படுத்துங்கள் கர்த்தர் உங்களை ஆசீர்வதிப்பாராக.

"மனந்திரும்புங்கள் பரலோக ராஜ்யம் சமீபித்திருக்கிறது" —மத். 3 : 2.

# இந்த ஏழை

1. இந்த ஏழையின் மேன்மை என்ன?

இந்த ஏழையைக் கர்த்தர் ஒரு போதும் மறவாமல், எப்போதும் இவன் மேல் நினைவாயிருக்கிறார்-சங். 9 : 18.

இந்த ஏழையைக் கர்த்தர் தம்முடைய அப்பத்தினால் திருப்தியாக்குகிறார்—சங். 132 : 15

இந்த ஏழைக்குக் கர்த்தர் பெலனும், திடனும், பெருவெள்ளத்துக்கு (கிறிஸ்துவின் அன்பை விட்டு பிரிக்க முயலும் சோதனைகள்) தப்பும், அடைக்கலமும், வெயிலுக்கு (விசுவாசத்தில் வீழ்ச்சி உண்டாக்க வரும் சாத்தானின் மோசங்கள்) ஒதுங்கும் நிழலுமாயிருக்கிறார்—ஏசா. 25 : 4.

இந்த ஏழையின் விண்ணப்பத்தைக் கர்த்தர் கேட்டு இவனை பலவானின் (பிசாசு) கைக்கு விலக்கி இரட்சிக்கிறார்—யோபு 5 : 7, எரே. 20 : 13

இந்த ஏழை தன்னுடைய இடுக்கணில் கர்த்தரை நோக்கி கூப்பிட்ட உடனே கர்த்தர் கடந்து வந்து இரட்சிக்கிறார்—சங். 34 : 17

2. இந்த ஏழையின் தன்மை என்ன?

இவர் தன்னை முற்றிலுமாய் கர்த்தருக்கு ஒப்புவித்திருக்கிறார்—சங். 10 : 14.

இவருடைய அவயவங்களை இறைவன் நீதியின் அவயவங்களாய் பயன்படுத்த தன்னுடைய சரீரத்தை ஜீவபலியாய் கர்த்தருக்கு ஒப்புக் கொடுத்திருக்கிறார்—I கொரி. 6 : 19, 20; ரோமர் 6 : 13; 12 : 1.

3. இவர் எப்படி ஏழையானார்?

இவர் தனக்குள்ளவைகள் ஒன்றையும் தன்னுடையது என்று எண்ணாமல், தன்னுடையது யாவும் இறைவனுடையது என்று எண்ணி தனக்கென்று ஒன்றுமில்லாதவராயிருக்கிறார்—அப். 4 : 32.

கிறிஸ்துவுக்காக தனக்கு லாபமாயிருந்தவைகளை குப்பையாக மதித்து, நஷ்டமென்று விட்டுவிட்டார்—பிலி. 3 : 7, 11.

நித்தியமான வீடுகளில் தன்னை ஏற்றுக் கொள்வார் உண்டாகும்படி நண்பர்களை சம்பாதிக்க தன்னுடைய உலகப் பொருளை செலவு பண்ணிப் போட்டார். லூக். 16 : 9.

4. இவர் ஏன் ஏழையானார்?

கிறிஸ்து இயேசுவை விசுவாசிக்கிற நாமனைவரும் ஐசுவரியவான்களாகும்படி இவர் இப்படியானார். எப்படியெனில் இவருடைய குறைவை இறைவன் நமது மூலம் நிறைவாக்க, இவர் திருப்தியடைந்து, சந்தோஷப்பட்டு தேவனுக்கு ஸ்தோத்திரம் செலுத்தி நமக்காக வேண்டுதல் செய்ய அது இறைவனால் அங்கிகரிக்கப்பட்டு நாம் ஆசீர்வாதிக்கப்பட்டு ஐசுவரியவான்களாய் மாறுகிறோம்—II கொரி. 8 : 9, 9 : 12—14; பிலி 4 : 18, 19; II கொரி. 6 : 10.

5. இவர் எப்படி இருக்கிறார்?

கர்த்தருக்குள் மகிழ்ச்சியாயிருக்கிறார்—ஆப. 3 : 17, 18. இஸ்ரவேலின் பரிசுத்தருக்குள் களிகூர்ந்து கொண்டிருக்கிறார்—ஏசா. 29 : 19.

# மோட்சவழி

(தொடர்ச்சி)

## குரு—சிஷ்ய உரையாடல்

**சிஷ்யன் :** கடவுளை நமது பிதா என்று சொன்னீர்கள் அவர் நமக்கு என்ன செய்கிறார்?

**குரு :** ஒரு நல்ல தகப்பன் தன் பிள்ளைகளுக்கு என்னசெய்கிறாரோ அதைக் காட்டிலும் அதிகமாகச் செய்கிறார்.

**சிஷ்யன் :** கொஞ்சம் விளக்கமாய்ச் சொல்ல வேண்டுகிறேன்.

**குரு :** 1 தகப்பன் தன் பிள்ளைகளுக்கு ஜீவனைக் கொடுக்கிறான். கடவுள் மனிதனை மண்ணினால் உருவாக்கி அவன் நாசியிலே தமது ஜீவசுவாசத்தை ஊதினார் அவன் ஜீவனும், ஆத்துமாவுமானான். அவர் நமக்காக தம்முடைய ஜீவனைக் கொடுத்தார். (ஆதி 2 : 7 ; I யோ. 3:16).

2 பிள்ளைகள் தகப்பனுடைய சாயலாயிருக்கிறார்கள். தேவன் மனிதனை தம்முடைய சாயலின்படியும் ரூபத்தின்படியும் உண்டாக்கினார் (ஆதி. 1 : 26, 27).

3 பிள்ளைகளுக்குத் தேவையானதை தகப்பன் சம்பாதித்துக் கொடுக்கிறான் அப்படிப்போல பரமபிதாவும் தம்முடைய பிள்ளைகளை பிழைப் பூட்டுவதும், உடுத்துவிப்பதும், நன்மையானவைகளைக் கொடுப்பதும் நிச்சயம். (மத். 6 : 26-32; 7 : 11)

4 தகப்பன் தன் பிள்ளைகளைப் படிப்பித்து சிட்சிக்கிறான். அது போல கடவுள் தம்முடைய பிள்ளைகளை படிப்பித்து சிட்சிக்கிறார். பள்ளி போவதும், கண்டிக்கப் படுவதும் பிள்ளைகளுக்கு கஷ்டமாகத் தோன்றின போதிலும் தகப்பன் சிட்சை செய்யும் போது அவர்கள் தகப்பனை நம்பவேண்டியது—அவசியம். அதுபோல ஏழைகள், துயரப்படுகிறவர்கள், நீதியினிமித்தம் துன்பப் படுகிறவர்கள் பாக்கியவான்கள் என்றார் பரமன் இயேசு. அச்சமயங்களில் நாமும் நம்முடைய பிதாவை நம்ப வேண்டும். பிதாவின் மனதை அடிக்கடி நாம் அறியாதிருந்தாலும் அவர் செய்வதெல்லாமே நன்மை என்றெண்ணி "ஆம் பிதாவே இப்படிச் செய்வது உமது திருவுளத்திற்கு பிரியமாயிருந்தது" உமது சித்தத்தின்படி ஆகக்கடவது என்று அமர்ந்திருந்து கற்றுக் கொள்வோமாக.

5 தகப்பன் எப்போதும் பிள்ளைகளோடு கலந்துரையாடுவான். அப்படியே நமது அருமை பிதாவுக்கும் மனுஷராகிய நமக்கும் ஐக்யமுண்டு. நம் ஜெபத்தின் மூலம் அவரோடு பேசலாம் சோர்ந்து போகாமல் ஜெபிக்க வேண்டும், ஊக்கமாய் விசுவாசத்தோடு ஜெபிக்க வேண்டும், எப்போதும் ஜெபிக்க வேண்டும். அவ்வித ஜெபங்களைக் கேட்டு அவர் உத்தரவு அருளுகிறார் (லூக். 18 : 1 ; 11 : 5 ; மத். 21 : 22). பிதாவோடு பேசவேண்டிய விதம் (மத். 6:9—13).

6 தகப்பன் தன் பிள்ளைகளின் தப்பிதங்களை மன்னிக்கிறான். அப்படிப்போல கடவுள் தம்முடைய பிள்ளைகளின் தப்பிதங்களை மன்னிக்க சித்தமான மனதுள்ளவராய் இருக்கிறார். கடவுள் தம் மக்கள் பாவம் செய்யினும் அவர்களைச் சத்துருக்களாகப் பாவித்து அவர்களுக்கு தீமை செய்ய வேண்டுமென்று கருதாமல் அவர்களைக் கெட்டுப் போன பிள்ளைகளைப் போலப்பாவித்து அவர்கள் மனந்திரும்பினால், உடனே பரமபிதாவடைவான் அன்போடு ஏற்றுக் கொள்வதற்கும் ஆயத்தமாயிருக்கிறார். (லூக் அதி 15.)

7 தகப்பன் தன் பிள்ளைகளுக்கு ஒரு சுதந்தரத்தைக் கொடுக்கிறன். "பயப்படாதே சிறுமந்தையே உங்களுக்காக உலகத் தோற்றமுதல் ஆயத்தம் பண்ணின இராஜ்யத்தைக் கொடுக்க உங்கள் பிதா பிரியமாயிருக்கிறர். தேவன் தம்மில் அன்பு கூறுகிறவர்களுக்கு ஆயத்தம் பண்ணியிருக்கிறவைகளை மனிதனுடைய கண்கண்டதுமில்லை காதுகேட்டதுமில்லை, மனுஷருடைய இருதயத்தில் தோன்றினதுமில்லை. நமக்கோ தேவன் நமது ஆவியினுல் வெளிப்படுத்தினர். தேவன் நமக்காக எல்லா நன்மையும் செய்ய ஆவலாயிருக்கிறர். நம்முடைய பிதாவாகிய தேவனுக்கு ஸ்தோத்திரம்!

> "பரமண்டலங்களிலிருக்கிற எங்கள் பிதாவே" —மத். 6:9

# வேதபாடம்

ஆதி. 17 : 1 —தேவன் ஆபிராமுக்கு தரிசனமாகி நான் சர்வவல்லமையுள்ள தேவன் = ஏல்சடாய் என்கிறர். தேவன் தம்மை வெளிப்படுத்தும் போது பற்பலவிதமான நாமோதயங்களுடன் வெளிப்படுகிறர். அவைகளெல்லாம் காரணப் பெயர்களே.

| | | | |
|---|---|---|---|
| யேகோவாயீரே | ஆதி. 22 : 14 | — | கர்த்தர் பார்த்துக் கொள்வார். |
| யேகோவா | யாத். 3 : 14, 15 | — | இருக்கிறவராக இருக்கிறேன். |
| ஏலோகீம் | ஆதி. 1 : 1 | — | பலமிகுந்தவர், எல்லாம் வல்லவர். |
| அதோனே | யாத். 4 : 10 | — | ஆண்டவர், எஜமான். |
| ஏல் சடாய் | ஆதி. 17 : 1, 2 | — | எல்லா ஆசீர்வாதங்களுக்கும் காரணமான கர்த்தர். |
| யேகோவாராபே | யாத். 15 : 22-26 | — | தேவன் குணமாக்கும் தேவன். |
| யேகோவா நிசி | யாத். 17 : 15 | — | கர்த்தர் நமது ஜெயக் கொடி. |
| யேகோவா மக்காதேஸ் | லேவி. 20 : 8 | — | தேவன் மகா பரிசுத்தர். |
| யேகோவா சபயோத் | ஏசா. 6:5 | — | தேவன் சேனைகளின் கர்த்தர். |
| யேகோவா ஷாலோம் | நியா. 6 : 24 | — | கர்த்தர் புத்திக் கெட்டாத சமாதானத்தின் ஊற்றும் காரணமாயிருக்கிறர். |
| யேகோவா ரோகி | சங். 23 : 1 | — | கர்த்தர் என் மேய்ப்பராயிருக்கிறர். |
| யேகோவா ஜிட்கேனு | எரே. 23:16 | — | கர்த்தர் நமது நீதியாயிருக்கிறர். |
| யேகோவா ஷம்மா | எசேக். 48 : 35 | -- | கர்த்தர் அங்கு இருக்கிறர். |
| இயேசு என்ற திருப்பெயர் | மத். 1 : 21 | — | அவர் தமது ஜனங்களின் பாவங்களைநீக்கி இரட்சிப்பார். |
| கிறிஸ்து | மத். 1 : 16<br>லூக். 4 : 18 | — | மேசியாவாக அபிஷேகம் பெற்றவர். |

கர்த்தர் (ஆண்டவர்) பிலி. 2 : 9-11—எஜமான் என்பதுபோல.

நான் சர்வ வல்லமையுள்ள தேவன் = ஏல்சடாய் என்ருல் எல்லாம் செய்யக் கூடும் என்கிறர். ஆம் அவரால் செய்யக்கூடாத காரியம் ஒன்றுமில்லை. அவரால் எல்லா ஆசீர்வாதங்களும் உண்டாகும்.

ஆதி.17:2-14 தேவன் ஆபிராமை நோக்கி நீ திரளாய்ப் பெருகுவாய் என்றார், திரளான ஜனங்களுக்கு தகப்பனுவாய் என்றார். மேலும் தேவன் ஆபிராமோடும், ஆபிராமின் சந்ததியோடும் விருத்த சேதனமான உடன்படிக்கையையும் செய்து ஆபிராமின் பெயரை ஆபிரகாம் என்று மாற்றுகிறார். தேவனுக்கும், ஆபிரகாம் சந்ததிக்கும் சம்பந்தமுண்டு, உடன்பாடு உண்டு என்பதற்கும் தேவனேடு உடன்படிக்கை செய்த சந்ததி இது என்பதற்கு விருத்த சேதனம் அடையாளமாயிருக்கிறது. பிறக்கும் ஆண்பிள்ளைகளெல்லாம் எட்டாம் நாளில் சுன்னத்து செய்யப்பட வேண்டும் என்றார்.

ஆதி.17:15-19 கடவுள் சாராயின் பெயரைமாற்றி சாராள் என்று பெயர் சூட்டி அவளுக்கு ஒரு குமாரன் கொடுப்பேன் என்றார். அப்பொழுது ஆபிரகாமுக்கு வயது தொண்ணூற்றென்பது. சாராளுக்கு வயது என்பத்தொன்பது. பிறக்கும் பிள்ளைக்கு ஈசாக்கு என்று பெயரிடுவாயாக என்று கர்த்தர் சொன்னார்.

ஆதி. 17:20-27 ஆபிரகாம் தன்னையும் தன் மறுமனையாட்டியிடம் பிறந்த குமாரன் இஸ்மவேலையும் மற்றும் தன் வீட்டிலுள்ள எல்லா ஆண்களையும் விருத்தசேதனம் பண்ணுவிக்கிறார். இந்த வழக்கம் இஸ்ரவேலிடமும், இஸ்லாமியரிடமும் இன்றைக்கும் நடைபெற்று வருகிறது.

ஆதி. 18:1-15 ஆபிரகாமை மறுபடியும் கர்த்தர் சந்திக்கிறார், இரண்டு தூதர்களோடு. ஆபிரகாமின் விருந்தோம்பல் குணத்தை இங்குபார்க்கிறோம். அந்த மூவருக்கும் விருந்து செய்கிறார். அப்பொழுது கர்த்தர் மறுபடியும் உன் மனைவியாகிய சாராள் அடுத்த வருஷம் ஒரு குமாரனை ஈன்றெடுப்பாள் என்கிறார். இதைப் பின்புறமாய்க் கேட்டுக் கொண்டிருந்த சாராள் நகைத்து நான் கிழவி, எனக்கு ஸ்திரீகளுக்குள்ள வழிபாடு நின்று போயிற்று. என் ஆண்டவனும் (எஜமான்) வயது சென்றவர். இப்படியிருக்க அதெப்படி நடக்கும் என்று தன் உள்ளத்தில் சொல்லிக் கொண்டாள். உடனே கர்த்தர் அதை அறிந்து சாராள் நகைப்பானேன் கர்த்தரால் ஆகாத காரியம் உண்டோ. திரும்ப வருவேன் அப்பொழுது சாராளுக்கு ஒரு குமாரன் இருப்பான் என்றார். என்னே! சர்வ வல்லமையுள்ள தேவனின் மகத்துவம். ஆம் அவர் சர்வ வல்லவரே. அவரால் செய்யக்கூடாத காரியம் ஒன்றுமில்லை. எல்லா நன்மைகளையும் தேவன் தர வல்லவர் வெளிப்படுத்தும் அவருடைய திருப்பெயர்களின் மூலம் மனுமக்களாகிய நாம் அடைந்து கொள்ளும் ஆசீர்வாதங்கள் நன்மைகள் அடங்கி இருக்கின்றன.

> '' தேவனல் கூடும்...''
>
> —லூக். 18 : 27

பாலர் பகுதி

# பாவம் எந்த ஜனத்துக்கும் இகழ்ச்சி

''என்னடா செய்றே. ஸ்கூலுக்கு நேர மாகி விட்டது. இன்னிக்கு சாப்பிடாமத் தான் போகப் போறே. போயி தரிகாய்வாங்கிட்டு வர்றியா இல்லியா'' டேவிட்டின் அம்மா குரல் கொடுத்தாள். இதோ போறேன் என்று சொல்லிவிட்டு வழி நடந்த டேவிட்டுக்கு நண்பன் சுரேஷின் என்று ஞாபகம் வந்தது. எப்பொழுதும் டேவிட்டு

தான் கடைக்குச் செல்வான் மீதிப் பணத்தை அம்மாவிடம் ஒழுங்காக கொடுக்கும் நல்ல பழக்கம் உள்ளவன். சுரேஷ் கடைக்கு போகும்போது 'கமிஷன்' அடித்து விட்டு வீட்டில் கணக்கு சொல்லி விடுவான். இதனல் ஸ்கூலுக்குப் போனதும்சுரேஷ் தின்பண்டங்கள் நிறைய வாங்குவான். ஏண்டா டேவிட் கடைக்குப் போகும் போது நீயும் வீட்டில் அம்மாவுக்குத் தெரியாமல் சில்லறையை எடுத்தால் இப்போ பண்டம் வாங்கலாமே! பாவம் போல நிக்கிறீயே! என்று டேவிட்டிடம் சொல்லுவான். ஆனல் டேவிட் கடவுள் பக்தியுள்ளவன் ஆதலால் அப்படிச் செய்ய தயங்கினன். தினமும் பள்ளிக்குப் போகும் போது அவன் அம்மா ஐந்து பைசா கொடுப்பாள். இப்போ கஷ்டகாலமாதலால் அதுவும் கிடைப்பதில்லை. ஆதலால் சுரேஷ் சொன்ன ஐடியா இப்போது அவனுக்கு ஞாபகம் வந்தது. ஆனலும் மனசாட்சி உறுத்தியது. சும்மா ஒரு பத்து பைசா தானே என ஒருவழியாகத் துணிந்து விட்டான். என்னடா டேவிட்டு பத்துபைசா காலையிலே குறையிது என்ற அம்மாவின் சப்தம் கேட்டது. பொய் சொல்லத் தைரியமில்லாமல் 'பண்டம் வாங்கித் தின்னிட்டேன்மா' என்ருன். அன்றிலிருந்து அவனுக்கு அது வாடிக்கையாகிவிட்டது.

இப்போது வீட்டிற்கு மீதிக்காசை சரியாகக் கொடுப்பதில்லை. ஏதாவது காரணம் காட்டி விடுவான். மேல்நிலைப் பள்ளியில் படிப்பதற்காக டேவிட் இப்போது ஹாஸ்டலில் சேர்ந்தான் நன்ருகப் படிக்க ஆரம்பித்தான் ஆனல் திருடுகிறதை அவனல் நிறுத்த முடியவில்லை. பள்ளி இறுதித் தேர்வில் முதல் மாணவனுகத் தேர்வு பெற்று ரொம்ப நல்ல மாணவன் என்ற பெயருடன் கல்லூரிப் படிப்புக்காகச் சென்று விட்டான்.

ஒருமுறை அவனுக்கு பழைய பள்ளியிலிருந்து ஒரு சான்றிதழ் தேவைப் பட்டது. தலைமைஆசிரியரிடம் சென்று விபரம் கூறினன். அங்கிருந்த ஹாஸ்டல் வார்டன் அவனை இமை கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தார். அவரது பார்வையினல் டேவிட்டுக்கு இனம் புரியாத கலக்கம் உண்டானது.

என்ன டேவிட்! எப்படியிருக்கிருய் என்ருர் வார்டன். நல்லா இருக்கேன் சார் என்று சொல்லி முடித்ததும், "சட்டை ரொம்ப நல்லா இருக்கே! யாருக்குரியது" என்று தொடர்ந்தார் வார்டன். எனக்குள்ளதுதான் சார் எங்க மாமா எடுத்துக் கொடுத்தார் என்று வியர்வை கொட்டச் சொன்னுன். டேவிட் உனக்குரியதா? இல்லை யாருடையதுன்னு தெரியாதா? உண்மையைச் சொல் என்று கடுத்தார் வார்டன். ஒன்றும் ஓடாமல் டேவிட் விழித்தான். பாவம்! பள்ளியை விட்டு போகப் போற தைரியத்தில் கையில் கிடைத்ததைச் சுருட்டிக் கொண்டு போய் விட்டான் டேவிட். அதில் தன்னேடு படித்த வார்டனின் மகன் பொருளும் இருந்தது என்று அவனுக்கு தெரியவா போகிறது? நிலைமையைப் புரிந்து கொண்ட தலைமை ஆசிரியர் உண்மையைச் சொல்லாவிட்டால் சர்டிபிகேட் தரமுடியாது என்று கண்டிப்பாய்ச் சொல்லி விட்டார். உண்மையைச் சொன்ன டேவிட் 'இவ்வளவு காலம் நல்ல பெயர் எடுத்திட்டு இப்போ திருட்டுப் பையன் என்று பெயர் எடுத்து விட்டேனே' என்று சத்தமிட்டு அழுதான். அதற்குள் ஆசிரியர்களும் மாணவர்களும் கூடி விட்டனர். அவர்களைப் பார்க்கவே டேவிட்டுக்கு கஷ்டமாயிருந்தது. குற்ற உணர்வு உறுத்தியது. தெரியாமல் எடுத்ததை எல்லாம் திருப்பி தந்துவிடுகிறேன், என்னை மன்னித்துக் கொள்ளுங்கள் சார் என்று அழுகையோடு சொன்னுன். சரி நடந்ததை மறந்து விடு. இதை உன் வாழ்க்கையில் பாடமாக வைத்துக் கொள். பல நாள் திருடன் ஒரு நாள் அகப்படுவான் என்று சொல்லி அனுப்பி வைத்தார் தலைமை ஆசிரியர்.

ஆம் பிள்ளைகளே! சிறுவர்களே! நீங்களும் அந்த டேவிட்டைப் போல வீட்டில் திருடாதீர்கள். சின்ன சின்ன விஷயங்களில் நீங்கள் தவறு செய்தால் நீங்களும் அந்த டேவிட்டைப் போல் ஒரு நாள் நிற்க வேண்டியது வரும். சுரேசைப் பார்த்துப் பழகின டேவிட்டின் நிலையைப் பார்த்தீர்களா? மற்ற உலகப்பிள்ளைகளைப் பார்த்து நீங்களும் பழகாதிருங்கள். நீங்கள் ஆண்டவருடைய பிள்ளைகளல்லவா? ஆதலால் பிள்ளைகளே கர்த்தருக்குப் பயந்து உங்கள் கைகளைச் சுத்தமாய் வைத்திருங்கள்.

---

"சிலருடையப் பாவங்கள் வெளியரங்கமாயிருந்து நியாயத் தீர்ப்புக்கு முந்திக் கொள்ளும்"
I தீமோ. 5: 24

---

# உத்தமராகிய யோபு

எப்போதும், எந்த சூழ்நிலையிலும் இறைவனை துதித்துக் கொண்டிருப்பதும், அவர் மீது வைத்திருக்கிற விசுவாசத்தில் உறுதியாயிருப்பதும், நீதி வழுவாமல் இருப்பதும் தேவனுக்கு உகந்த காரியம். இப்படிச் செய்கிறவர்கள் தெய்வத்தினுடைய பார்வையில் உத்தமர்களாய் காணப்படுகிறார்கள். இப்படிப்பட்ட மனிதர்கள் மீது மனுஷ கொலை பாதகனாகிய சாத்தானுக்கு ஒரு திட்டம் உண்டு. அஃதென்னவெனில் இந்த உத்தமர்கள் தங்கள் வாயினால் தேவனை தூஷிக்க வேண்டும். அவர்கள் இறைவன் மீது அவிசுவாசம் கொள்ள வேண்டும், நீதிவழுவி பாவம் செய்து அழிய வேண்டும் என்பவைகளே.

ஒருவன் மீது பகைமையுடைய வஞ்சகன், அவன் மகனை தன் வசப்படுத்தி மகனைக் கொண்டே தகப்பனை அழித்து தன் வஞ்சகத்தைத் தீர்த்துக் கொள்ள நினைப்பது போல, தேவனுக்கு பகைவனான சாத்தான் அவருடைய உத்தம பிள்ளைகளைக் கொண்டே அவரை பகைக்க விரும்புகிறான்.

இந்த தன்னுடைய திட்டத்தை நிறைவேற்ற கர்ச்சிக்கிற சிங்கம் போல் வகை தேடி அலைகிறான். சர்ந்தப்ப சூழ்நிலைகளை மிகவும் கவனத்தோடு எதிர்ப்பார்த்துக் கொண்டிருக்கிறான். தேவன் தம்முடையவர்களை சிறுமைக்கு ஒப்புக் கொடுக்கும் ஒரு காலமுண்டு. II நாளா 32 : 31. இந்த சமயத்தை தீவிரமாய் பயன் படுத்த விரும்புகிறான் சாத்தான்.

கர்த்தர் நம்மை சிறுமைப்படுத்த காரணங்களுண்டு.

1) நாம் தேவனிடத்தில் எவ்வளவு அன்பும், கீழ்ப்படிதலும் உள்ளவர்களாய் இருக்கிறோம், இருப்போம் என்பதை நாம் (அவரல்ல, அவர் எல்லாவற்றையும் அறிவார்) அறிந்து கொள்ளும் படியாக (உபா. 8 : 2).

2) இந்த உலகத்தின் ஆசீர்வாதமும், மேன்மையும் பெரிதல்ல, ஆவிக்குள்ளாய் அடைகிற ஆசீர்வாதமும் மேன்மையுமே பெரிது என்பதை நாம் உணரும் படியாக. (உபா. 8 : 3)

3) பலவித மேடு பள்ளங்கள் வழியால் நடந்து, பலமடைந்து அனுபவசாலிகளாக தேர்ச்சி அடைந்து, நம்முடைய பின் நாட்கள் நலமாய் இருக்கும் படியாக (உபா. 8 : 15).

நம்முடைய தலைமயிர் எல்லாம் எண்ணப்பட்டிருக்க அவருடைய சித்தமில்லாமல் நம்முடைய வாழ்க்கையில் ஒன்றும் நடைபெறாது. நம்மை கர்த்தர் சிறுமைப்பட ஒப்புக் கொடுக்கலாம்; இந்த நாட்களில் தேவஜனம் மிகவும் கவனமாய் இருக்க வேண்டும். இந்த சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தி சாத்தான் தன்னுடைய திட்டத்தை நிறைவேற்ற முழு மூச்சோடு செயல் படுவான். இது பரீட்சையின் காலம். விழிப்புள்ளவர்களாயிருக்க வேண்டும். யோபுவைக் கவனித்துப் பாருங்கள். அவர் எவ்வளவு பெரிய ஐசுவரியவான், எவ்வளவு கனம் பொருந்தியவர் (யோபு 1 : 3) எவ்வளவு பெரிய பரிசுத்தவான் (யோபு 1: 1) இவரால் தேவனுக்கு துதி உண்டாகிறதை கண்ட பிசாசுக்கு பொறுக்க முடியவில்லை அவரை சுற்றி சுற்றி வருகிறான் ஆனால் நெருங்க முடியவில்லை, ஏனெனில் கர்த்தர் அவரையும் அவர் வீட்டையும் அவருக்கு உண்டான எல்லாவற்றைச் சுற்றிலும் வேலி அடைத்திருந்தார் (யோ. 1 : 10). சாத்தான் நினைத்தான் யோபுவை நஷ்டப்படுத்தி விட்டால், உலக சம்பத்தை அழித்து விட்டால் தேவனை துஷிப்பார் என்று, பாருங்கள் அவனுடைய அற்பதனமான ஆசையை (யோபு 1 : 11).

யோபு தன்னுடைய உலக மேன்மைக்காகவா தேவனை போற்றி வந்தார். தன்னுடைய உள்ளான மேன்மைக்காயல்லவா தேவனைத் துதித்து வந்தார். தேவ அனுமதி பெற்று சாத்தான் நாசப்படுத்த ஆரம்பித்தான். தேவனிடம் சாத்தான் விட்ட சவால் இதுதான்.

யோபு நீர் அருளிய ஆசீர்வாதங்களுக் காகவே உம்மை துதிக்கிறார் என்பதே. ஒரே நாளில் சாத்தான் யோபுடைய பிள்ளைகள், வேலைக்காரர்கள், ஆடுகள், மாடுகள், ஒட்டகங்கள், கழுதைகள் எல்லாவற்றையும் சர்வ சங்காரம் பண்ணினான். யோபு துக்கத்தால் நிறைந்தார், சாத்தான் ஆவலோடு அவர் வாயை ஆவென்று பார்க்கிறான். யோபு தேவனை தூஷிப்பார் தேவனைப்பற்றி குறை சொல்வார் என்று அவருடைய வாயின் வார்த்தைகள் வெளிப்பட்டது.

"நான் நிர்வாணியாய் என் தாயின் கர்ப்பத்திலிருந்து வந்தேன். நிர்வாணியாய் அவ்விடத்துக்குத் திரும்புவேன், கர்த்தர் கொடுத்தார், கர்த்தர் எடுத்தார், கர்த்தருடைய நாமத்துக்கு ஸ்தோத்திரம் என்றார் (யோபு 1 : 21) சாத்தானுடைய முகம் கோணா ஆரம்பித்தது. வெட்கிப் போனான் பிசாசு. அவன் நினைத்ததற்கு மாறாக யோபு தேவனுக்கு ஸ்தோத்திரம் செலுத்தினார். பிரியமானவனே நீ நன்மைப் பெற்று சந்தோஷத்தால் நிறைந்து கர்த்தர் எனக்கு இதைக் கொடுத்தார், அவருக்கு கோடா கோடி ஸ்தோத்திரம் என்று சாட்சி சொன்னாயே. அவர் கொடுத்தார் என்று உன்வாயே அறிக்கை இட்டதால் அது அவருடையது தான் உன்னுடையதல்ல என்றுதானே அர்த்தம். இப்போதும் கொடுத்தவர் அவருடையதை எடுத்துக் கொண்டால், அவர் அநியாயம் செய்து விட்டார், அவர் இரக்கமில்லாதவர், அன்பில்லாதவர் என்று குறை சொல்லலாமா? யோபு சொன்னது போல அவர் கொடுத்தார், எடுத்தார், இவ்வளவு காலம் நான் அனுபவிக்கக் கொடுத்தாரே. அதற்காய் ஸ்தோத்திரம் என்றல்லவா சொல்வது முறை கர்த்தரைப் பற்றி குறை சொல்லாதே. அவர் நல்லவர், அவர் நீதிபரர், அவர் சரியாய் செய்கிறார்.

(தொடரும்)

"யோபின் பொறுமையைக் குறித்து கேள்விப்பட்டிருக்கிறீர்கள்"

—யாக் 5 : 11.

# உன்னை நீயே சோதித்துப்பார்

விடிந்தும் விடியாததுமாகக் கிணற்றடிக்கு ஓடினாள் மெர்ஸி. அவளுக்குள் ஒரே பூரிப்பு இன்னும் ஒரு வாரத்தில் காய் காய்த்து விடும் போலிருக்கிறதே! இதோ. இங்கே பூப்பூக்க ஆரம்பித்திருக்கிறது. அடடே அங்கே நிறைய பூப் பூத்திருக்கிறதே! 'டேய் சுரேஷ் இன்னும் ஒரு வாரத்தில் இது காய் காய்க்கிறதா?... இல்லையா? என்று பாரேன், என்று அருகிலிருந்த சுரேஷிடம் ஒரே மூச்சில் சொல்லி முடித்தாள் மெர்ஸி.

ஐந்து வருடங்களுக்கு முன்பு தான் வைத்த முருங்கைக் கொப்பு துளிர்த்து, வளர்ந்து, மரமாகி... அதைத்தன் கண்களால் பார்த்துப் பூரிப்பதில் அவளுக்குக் கொள்ளை ஆசை அது பலன்தரும் நாளுக்காக நாள் தோறும் அதைச் சுற்றி சுற்றி வருவது இயற்கைதானே!... கைகள் வலிக்க அதில் காய்களையும் பறித்து அவள் ஆனந்தம் அடைந்தாள். நாட்கள் கடந்தன... என்ன இது ஒன்றுமே புரியவில்லையே என்று தலையைப்பிய்த்துக் கொண்டாள் மெர்ஸி. ஒருவேளை நேற்று இரவு அடித்த காற்றில் பூவெல்லாம் கீழே விழுந்திருக்கலாம் என்று தனக்குள் ஆறுதல் சொல்லிக் கொண்டாள்.

நாட்கள் கடந்தன. அடேயப்பா! இன்று மரம் பூராவும் ஒரே பூவாகப் பூத்திருக்கிறது! இந்த முறையாவது காய்த்தால் தேவலை. இவ்வளவு பூவும் காய்த்தால் ஏ அப்பா! எவ்வளவு காய் கிடைக்கும் என்று தன் ஆள்காட்டி விரலினால் ஒன்று... இரண்டு... மூன்று... என்று எண்ண ஆரம்பித்து, சேச்சே! அதெல்லாம் எண்ணக் கூடாது என்று விரலைக் கடித்துக் கொண்டாள்.

மறுபடியும் நாட்கள் கட ந்தன. என்ன இது வர வர காயே காய்க்கிறதில்லை பூவெல்லாம் உதிர்ந்து போகிறது. இலை கூடக் கொஞ்சம் கொஞ்சமாக உதிர ஆரம்பிக்கிறதே என்று தனக்குள் நொந்து கொண்

டாள்... சிலர் தண்ணீர் சரியில்லை என்றார் கள் சிலர் உரம் போடு என்றார்கள்...சிலர் இன்னும் என்னன்னவோ சொன்னார்கள். ஆனால் அவர்களின் அபிப்பிராயங்கள் வெறும் அபிப்பிராயங்களாக இருந்ததே ஒழிய பலனில்லை.

இப்போதெல்லாம் விடியப் போகிறது என்றாலே மெர்ஸிக்கு மிகவும் கஷ்டகால மாகி விட்டது. அவள் உண்டு அவள் பாடு உண்டு என்று இருக்கும் அவளுக்கு அந்த மரம்தான் ஆறுதல் போல இருந்தது. ஆனால் பிரயாசப்பட்டு எல்லாம் வீணாகிவிட்டதே என்று வேதனைப்பட்டாள்.

ஒரு நாள் மாலையில் இலையுதிர்ந்து அலங் கோலமாய்க் காட்சியளித்த அந்த மரத்திலே சாய்ந்து அதன் பட்டையைக் குத்திக் கொண்டிருந்தாள். குத்திக் கொண்டிருந்த அந்த இடத்தில் மரப்பட்டை மெல்ல உரிந்து கீழே விழுந்தது..."அப்பா... அப்பா ...இங்கே என்னதுப்பா?" என்று அலறி ஓடி னாள் மெர்ஸி. ஆமாம் பட்டை உரிந்து விழுந்த இடத்தில் பாளம் பாளமாய் புழுக் கள் நெளிந்து கொண்டிருந்தன... வளைந்து திரிந்து அவைகள் உல்லாசமாய் வாழ்ந்து கொண்டிருந்தன. செயலிழந்து, பொலி விழந்து மரமோ பட்டுக் கொண்டிருக்க உள்ளே புழுக்களோ பூப் பூத்துக் காய் காய்த்துப் பலுகிக் கொண்டிருந்தன. மரத் தின் பட்டையை உரிக்க உரிக்க அவைகள் பூராவும் புழுக்களால் அலங்கரிக்கப்பட்டி ருப்பதைப் பார்க்கப் பார்க்க மெர்ஸிக்குக் கண்ணீர் ஆறாக ஓடியது...சே! இதை முதலி லேயே கண்டு பிடித்திருந்தால் மருந்து தெளித்திருக்கலாமே... ஒன்று இரண்டாகி அவைகள் பலுகிப் பெருகி இப்போது நல்ல மரத்தையே காலி செய்து விட்டதே என்று நினைக்க நினைக்க அவளால் தாங்கிக் கொள்ள முடிய வில்லை.

இதை வாசிக்கும் அருமையான சகோதரனே! சகோதரியே! பாவமும் ஒரு கொடிய புழு தான். அது ஒன்றிலே ஆரம் பித்துப் பலுகிப் பெருகி உன்னைப் பூரண மாயக் காலி செய்யும் ஒரு விஷப் புழு. அதை உடனே கண்டுபிடி, மருந்து வைத் துக் கொன்று போடு. அப்பொழுது நீ பூப் பூத்துக் காய் காய்த்துப் பலன் தருவாய்.

பார்வைக்கு அழகான முருங்கை மரம்... ஒரு நாள் கை நிறைய காய் காய்த்த அந்த மரம்...பூக்களால் பொதிந்திருந்த அந்தமரம் அதை இமை கொட்டாமல் பார்ப்பதில் மெர் ஸிக்கு அவ்வளவு ஆனந்தம்... ஆனால் உள்ளே பொதிந்திருந்த புழுக்கள்...அவை களுக்குப் புகலிடம் கொடுத்தாற்போல் அதைச் சுற்றியிருந்த பட்டைகள். ஆம். உரித்துப் பார்த்த போதுதான் தெரிந்தது அதன் வண்டவாளம்! ஆம் சகோத (ரனே/ ரியே) பார்ப்பவர்களுக்கு வெளியே தெரியா தபடி தனக்குள் மறைத்துவைத்ததால் பாது காப்பாய் வளர்ந்து பெருகியிருந்த விஷப் புழுக்கள் அவை!

அன்பான சகோத (ரனே/ரியே) அந்த முருங்கை மரத்தைப் போல் நீயும் வாழ்ந்து கொண்டிருக்கிறாயா? வெளியே அழகாக— உள்ளே புழுக்களாய் நிறைந்து அவை களால் அரிக்கப் பட்டுக் கொண்டிருக் கிறாயா? ஒருவேளை உன்னுடைய பாவங் கள் உலகுக்குத் தெரியாமல் இருக்கலாம். ஆனால் கர்த்தர் அவைகளை அறிந்திருக்கிறார். அவர் உன்னைக் காண்கிற தேவனல்லவா? சிலருடைய பாவங்கள் வெளியரங்கமா யிருந்து நியாயத் தீர்ப்புக்கு முந்திக் கொள் ளும். சிலருடைய பாவங்கள் அவர்களைப் பின் தொடரும் (I தீமோத். 5 : 24). உன் பாவங்களை நீ வெளியரங்கமாக்குவாயே யானால் நியாயத் தீர்ப்புக்குத் தப்பித்துக் கொள்ளலாமே! தன் பாவங்களை மறைக்கிற வன் வாழ்வடைய மாட்டான்; அவைகளை அறிக்கை செய்து விட்டு விடுகிறவனே இரக்கம் பெறுவான் (நீதி. 28 : 13) என்று நீ வேதத்தில் வாசித்ததுண்டா? வாசித்து முடிந்ததும் அவைகளை மறந்து விட்டாயா? அல்லது உன் இருதயமாகிய பலகையிலே பதித்து வைத்திருக்கிறாயா?

அப்படியானால் பட்டையை உரித்து விஷப்புழுக்களை வெளியே கொண்டுவா! அவைகளை வெளியே தள்ளு!! அவைகளை கொன்று குவியலாக்கு!!! அவைகளை நிர்மூல மாக்க நிரந்தரமாய்க் கொன்றுபோட அழித் துப் போட இயேசு கிறிஸ்துவின் கல்வாரி இரத்தம் உனக்குப் போதுமானதாயிருக் கிறதே! —ஆமென்—

(தொடர்ச்சி)

# புதிய எருசலேம் சபை நடபடிகளில் சில

கிறிஸ்துவுக்குள் அருமையானவர்களே! கர்த்தர் பெரியவர், அவர் வல்லமையுள்ளவர். ஒவ்வொருவரும் தேவனை எந்த அளவுக்கு அநுபவிக்கிறார்களோ அந்த அளவுக்கே தேவனை அறிந்து கொள்ள முடியும்.

வியாதி வரும் பொழுது பரம வைத்தியராகவும், பஞ்சகாலம் ஏற்படும் பொழுது பரலோக மன்னாவாகவும், பகைவர்கள் சூழும் பொழுது அக்கினி மதிலாகவும் நம்மைக்காக்கிறார். அவருக்கே என்றென்றும் மகிமையுண்டாவதாக.

நானும், உடன் ஊழியருமாக ஓர் நாள் ஜெபித்துக் கொண்டிருந்த பொழுது: "உங்களைத் துன்மார்க்கர்களின் மத்தியில் கொண்டு போவேன்; அங்கே என்னுடைய வல்லமை வெளிப்படுவதைக் காண்பீர்கள்" என்று தேவன் பேசினார்.

அப்படியே சில மாதங்கள் கடந்த பின்பு ஜெபத்தில் இருக்கும் பொழுது, "நாளை காலையில் இங்கிருந்து புறப்பட்டு திருவனந்தபுரம் சென்று, அங்கிருந்து விமான நிலையம் சென்று மீண்டும் இன்னின்ன அடையாளம் உள்ள வழியாகக் கடந்து போய் நான் காண்பிக்கும் இடத்திலே என்னுடைய வார்த்தைகளைப் பேச வேண்டும். அங்கே என்னுடைய மகிமையை வெளிப்படுத்துவேன்" என்று கர்த்தருடைய ஆவியானவர் பேசினார்.

தேவன் காட்டிய அடையாளங்களை குறித்துக் கொண்டு நானும் உடன் ஊழியருமாக மறுநாள் காலையில் நாகர் கோயில் போய் அங்கிருந்து திருவனந்தபுரம் சென்றோம். அங்கிருந்து விமான நிலையம் செல்லும் பஸ்ஸில் ஏறி அங்கு போய் இறங்கினோம். மழை பயங்கரமாய் பெய்து கொண்டிருந்தது. அங்கிருந்து நாங்கள் மீண்டும் செல்லக்கூடிய பாதையின் அடையாளங்களை குறித்து வைத்திருந்தடைரியைத் திறந்து பார்த்து சரியான அடையாளங்களை அறிந்து கொண்டு கொட்டும் மழையில் குடைகளைப் பிடித்துக் கொண்டு நடந்தோம். எங்கள் உடுப்புகளெல்லாம் நன்றாக நனைந்து விட்டது. தேவன் காட்டிய அடையாளத்தின் படியுள்ள இடத்தைப் பல மைல் தூரம் நடந்து போய் கண்டு பிடித்தோம். இப்பொழுது நேரம் மாலை சுமார் 5 மணியாகி விட்டது.

நாங்கள் ஒரு ஏரியாவுக்குள் சென்று அங்குள்ள மக்களுக்கு சுவிசேஷத்தை அறிவிக்க வேண்டும் என்று கடந்து போகும் பொழுது ஒரு வாலிபன் ஓடி வந்து எங்களை மறித்துக் கொண்டு நீங்கள் எங்கேயிருந்து வருகிறீர்கள்? உங்களுடைய சொந்த இடம் யாது? எதற்காக இங்கே வந்தீர்கள் என்றெல்லாம் கேள்வி கேட்டார். நாங்கள் அவரிடம் சாந்தமாக நாங்கள் கிறிஸ்துவின் ஊழியக்காரர்கள். நாங்கள் இயேசு கிறிஸ்துவைப் பற்றி அறிவிக்க வந்தோம். எங்கள் சொந்த இடம் நெல்லை ஜில்லா என்று கூறினோம். அதற்குள் இன்னொரு வாலிபனும் அங்கு வந்தான். உங்களைப் பார்த்தால் போதகர்கள் போல் தெரியவில்லை. நக்சலைட்கள் போல் காணப்படுகிறது. ஆகையால் உங்கள் உடமைகளை நாங்க பரிசோதிக்க வேண்டும் என்றார்கள். எங்கள் தோற்றத்தைப் பார்த்தாவது நீங்கள் எங்களை யார் என்று தெரிந்து கொள்ளக் கூடாதா என்றோம். சரி அப்படியானால் அதோ அந்த இடத்தில் எங்கள் ஆட்கள் இருக்கிறார்கள் நீங்கள் அங்கே வாருங்கள். உங்களைப் பரிசோதனை செய்து விட்டு அனுப்பி விடுகிறோம் என்றார்கள். அவர்கள் காட்டிய திசையை நோக்கிப் பார்த்தேன். அங்கே சுமார் 20க்கும் அதிகமான வாலிபர்கள் சீட்டு விளையாடிக் கொண்டிருந்தார்கள். நாங்கள் அங்கே வர முடியாது எங்களைப் போக விடுங்கள் என்று நாங்கள் சொல்லி பேசிக் கொண்டிருந்த பொழுது ஒரு பெரியவர் தூரத்திலிருந்து ஓடி வந்தார். நாங்கள் நின்று கொண்டிருந்த இடத்துக்கு அருகாமையில் ஒரு ஓலைக் குடிசை இருந்தது. அந்தப் பெரியவர் அந்த குடிசைக்கு சொந்தக்காரர் போல் தெரிந்தது. அவர் வந்து தம்பிமார்களே தயவு செய்து என்னுடைய வீட்டு முன்னே வச்சி கொலை செய்திடாதீங்க வேண்டுமானால் வேறு எங்கேயும் கொண்டு போங்கள் என்று பதறிப் போய் கூறினார். அப்பொழுது தான் சில மாதங்களுக்கு முன்பாகத் துன்மார்க்கர்களின் மத்தியில் கொண்டு போய் என்னுடைய வல்லமையை வெளிப் படுத்துவேன் என்று தேவன் வெளிப்படுத்திய செய்தி ஞாபகத்திற்குவந்தது. சரி இனி என்ன நடக்கிறதென்று பார்க்கலாம் என்று எண்ணிக் கொண்டேன்.

Pastor S. SundarRaj
Vallioor.

(தொடரும்)

# BATTLEMENT

22 : 8. If one builds a house, he must build it with battlement. BATTLEMENT – Due.

Nowadays many started building houses. They started building churches. House is known as a resting place. A man in his journey, when he is tired and wearied, will think within himself when he will reach home. There only he gets food, water, shelter and rest. There is no one else who don't desire a home. But many houses are damaged, without saftey, inconvenient and in danger that it may fall at any time. Many houses don't possess battlement and hence there is chance for people to fall.

A man who is building a house must build it with a battlement. This battlement will help people from slipping. That is the confession of sin. It is a doctrine of remession of sin. If one commits sin, he must come to the elders and confess his sin (Josh. 20 : 4; James 5 : 14–16). The priest shall make attonement for his sin (Num. 5 : 5-7; Lev. 5 : 1-6; Mt. 3 : 1-6). Whosesoever sin you remit (the sins of him that confessed) that will be remitted, whosesoever sin you retain (unconfessed sins) that will be retained.

This is the battlement which helps to the fallen ones, those fell in sin, fell from grace, fallen by transgressing the law, and from breaking the pronounced vows and to them that have lost the spiritual gifts.

What is it? That is the confession of sin of showing to the man of GOD, saying "I fell down here or lost in this place." If the cross of wood is put on that spot, forgiveness of sin will be obtained. Even heavy article will float (II kings 6 : 1-6). But there is no body to enquire in which place, the mistake occured and there is no body who come forward to agree and confess. Hence people fall and die being not worked by the power of the forgiveness of sin of the cross. That is the death of a soul. In the evening of the day in which Lord Jesus christ resurrected, he appeared in the midst of his apostles and said unto them. "Peace be unto you,". He breathed on them and said, "Receive ye the Holy Ghost; as my Father has sent me, even I so send you, whosesoever sins ye remit, they are remitted unto them, and whosesoever sins ye retain, they are retained" -(Jn. 20 : 20 -23).This is the first authority and commandment which Lord Jesus christ gave to his desciples (apostles) when He sent them. Yea, the apostles (the true church) have the authority to give forgiveness of sin by the Holy Spirit to those who make open confession saying that "In this place I erred and fell." It is not necessary, for a man to be immersed in sin and die. No need to slip off. Can hold the battlement. Those who refuse to utilise the battlement, while it is available, will surely fall and perish, but the man who built the house will escape from the blood. If any one falls, for not having the battle ment, GOD will require his blood in the hands of the man who has built the house (Due. 22 : 8).

Brother and sister, Does your church possess the battlement? Do not dwell in a house which was not built properly. 'O, ye builders of the church, God's counsil to you to build the house with battlement. There is battlement in the house of GOD, which GOD builds (Acts 19 : 18).

"Except the Lord build the house, they labour in vain that build it" (Ps. 127 : 1). "The LORD doth build up Jerusalem" (Ps. 147 : 2).

# புதிய எருசலேம் செய்தி

எக்காள சத்தம் -10 * அக்டோபர் '84



"...வீட்டெஜமான (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ, நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள் விழித்திருங்கள்... உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லோருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்..."

மாற்கு 13 35-37

**EDITOR: CHIEF PASTOR N. LAZAR**

BOMBAY, INDIA

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லோரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒருமனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும் படியாகவும் தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய்க் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும்; சபையானது வஞ்சக போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது.

(எபே.4:11-16)

## இதழின் உள்ளே



சகோதரன் டார்வின் ஜெயசிங்-க்கும் சகோதரி செல்வி சாந்தகுமாரிக்கும் 10-9-84ல் பரிசுத்த விவாகம் நடந்தது.

# ஆசிரியர் உரை

தேவனுடைய பிள்ளைகளே! ஆதிசபை கி. பி. 150 முதல் பரிசுத்த ஆவியின் ஆளுகையை இழந்துவிட்டது, பின்மாற ஆரம்பித்தது. கி. பி. 300 முதல் சபை வெறும் சடங்காச்சாரமான மதமாக பரவ ஆரம்பித்தது. அநேக தப்புக் கொள்கைகளும், புறமத ஆச்சாரங்களும், கொள்கைகளும் உட்புகுந்தன. உள்ளேயிருந்தும் சிலர் எழும்பி தாறுமாறுனவைகளைப் போதிக்க ஆரம்பித்தனர். அப். பவுல், அப்போஸ்தலர் நடபடிகள் 20:29, 30ல் சொல்லியபடியாயிற்று. கி. பி. 16-ம் நூற்றுண்டில் மதசீர்திருத்தம் உண்டான போதிலும், ஆதிசபையின் அஸ்திபாரமோ காணப்படாமற்போயிற்று. சீர்திருத்தவாதிகளிலும் கருத்து வேறுபாடு, கொள்கை வேறுபாடுகள் உண்டாயிற்று. பிரிந்து, பிரிந்து போய்க்கொண்டிருக்கும் இறைவனின் மக்களுக்கு விமோசனம்-இது இப்படிதான் என்று அறிவிக்கும் அப்போஸ்தலனும், மெய்சபையுமே. மெய்யான சபையின்றேல், பூரணமான சபையின்றேல் பூரணமான இரட்சிப்பும் இல்லே. சபையை எடுத்துக் கொள்ளும்படிக்கே இயேசு கிறிஸ்து வரப்போகிறுர், தனி ஆளேயல்ல-எபேசி 5:26, 27. ஆனபடியால் சபையாக மாறுங்கள். சபை ஐக்கியத்தைக் காத்துக் கொள்ளுங்கள். இதோ கர்த்தர் வருகிறுர்.

கிறிஸ்துவுக்குள்,

Chief Pastor N. LAZAR

# தேவனுடைய இராஜ்யம் [சபை]

தெயோப்பிலுவே, இயேசுவானவர் தாம் பாடுபட்டு உயிர்த்தெழுந்தபின் நாற்பது நாளளவும் அப்போஸ்தலருக்கு தரிசனமாகி தேவனுடைய இராஜ்யத்துக்குரியவைகளை அவர்களுடனே பேசினர். அப். 1 : 3.

தேவனுடைய பரிசுத்த நாமத்திற்கு ஸ்தோத்ரம். நம்முடைய தேவனாகிய இயேசு கிறிஸ்து தாம் உயிர்த்தெழுந்த பின்புதான் பரிசுத்த ஆவியினாலே அப்போஸ்தலருக்கு கட்டளையிட்டார்- அப். 1 : 1. தாம் உயிர்த்தெழுந்த பின்புதான் தனக்குப் பதிலாக தாம் விட்ட ஊழியத்தை செய்யும்படி, திருச்சபையைக் கட்டும்படி தம்முடைய ஆவிக்குரிய இராஜ்யத்தை ஸ்தாபிக்கும்படி கட்டும்படி உலகத்தில் அப்போஸ்தலராக தம்முடைய சீஷர்களை அனுப்புகிறார். (யோ. 20: 21-23; அப். 1 : 1).

தேவனுடைய இராஜ்யம் என்பதும், திருச்சபை என்பதும் ஒன்றே-அப். 20 : 25 - 28. என் சபையைக் கட்டுவேன் என்று இயேசுகிறிஸ்து சொன்னதாக சுவிசேஷத்தில் வாசிக்கிறோம் —மத். 16 : 18. அந்தசபை என்பது தெய்வீகக்கூட்டம் என்றும் அதற்கு கட்டவும், கட்ட விழ்க்கவும்; பாவத்தை மன்னிக்கவும், மன்னியாதிருக்கவும் அதிகாரமுண்டு. அப்படிச் செய்யும் போது அது பரலோகில் நிகழ்கிறது என்று இறைவன் இயேசு சொன்னர் (மத். 18 : 16-18, 16: 19; யோ. 20 : 23). பின் சுவிசேஷங்களில் சபை என்கிற வார்த்தையை நாம் பார்ப்பதில்லை. அப்படி என்றால் திருச்சபையைக் குறித்து இயேசுகிறிஸ்து ஒன்றும் சொல்லவில்லையா? நிறைய சொல்லியிருக்கிறார். கர்த்தர் தேவனுடைய இராஜ்யம் என்றும், பரலோக இராஜ்யம் என்று சொல்லியிருப்பதெல்லாம் சபையைக் குறித்தே. தேவனுடைய இராஜ்யம், பரலோக இராஜ்யம் என்று சொல்லப்பட்டிருக்கிற இடங்களிலெல்லாம் சபை என்கிற வார்த்தையை உபயோகித்து படித்துப் பாருங்கள் விளங்கும். அவர் மறுருப மலையில் மறுருபமான காட்சியைக் கண்டு, பரலோக வாசிகளான மோசே, எலியாவைக்கண்டு சீஷர்கள்பிரமிப்படைந்தனர். அதற்கு முன் தேவனுடைய இராஜ்யம் பலத்தோடு வருவதைக் காணு முன் இங்கே நிற்கிறவர்களில் சிலர் மரணத்தை ருசி பார்ப்பதில்லை என்று கர்த்தர் சொன்னர்-மத். 17:1-13; மாற்.9:1. இங்கே சொல்லப்படும் தேவனுடைய இராஜ்யம் என்பது ஆயிரவருஷ (1000) அரசாட்சியையல்ல, தேவனுடைய இராஜ்யம் பெந்தெகொஸ்தே நாளன்று இராஜ்யம் ஸ்தாபிக்கப்படுவதையே (சபை ஸ்தாபிக்கப் படுவதையே) இயேசு சொன்னர். அவர் பிசாசுகளைத்துரத்தி, வியாதியஸ்தர்களை சுகப்படுத்தி மக்களுக்கு ஆறுதல் அளித்தபோது நான் தேவனுடைய ஆவியினால் பிசாசுகளைத் துரத்துகிறபடியால் தேவனுடைய இராஜ்யம் உங்களிடத்தில் வந்திருக்கிறதே என்றார்-மத்: 12 : 28 தேவனுடைய இராஜ்யத்தில் (சபையில்) இப்படி நடக்கும் என்றார். அந்த தேவனுடைய இராஜ்யத்துக்குள் (திருச்சபைக்குள்) பிரவேசிக்க, அதன் அருமையைக் காண தேவனுடைய குமாரன் மரத்தில் (சிலுவையில்) உயர்த்தப் படவேண்டும் என்றும்-யோ. 3 : 14, 15 தேவனுடைய குமாரனைப் பற்றிய விசுவாசமும் மனந்திரும்புதலும் உள்ளான மனந்திரும்புதலுக்கு அடையாளமான வெளிப்படையான தண்ணீர் முழுக்கு ஞானஸ்நானமும், ஆவியின் ஞானஸ்நான முமாகிய மறுபிறப்படையாவிட்டால் அதற்குள் அந்த தேவனுடைய இராஜ்யத்துக்குள் (திருச்சபைக்குள்) பிரவேசிக்க முடியாது என்று இயேசு மொழிந்தார் (யோ. 3 : 16—18; 3: 3,5). அந்த இராஜ்யம் வரும்படி ஜெபிக்கக் கட்டளையிட்டார்-மத். 6 : 10.

அப்படியே பெந்தெகொஸ்தே நாளில் அப்போஸ்தலனாகிய பேதுருவின் வார்த்தையை சந்தோஷமாய் ஏற்றுக் கொண்டவர்கள் தண்ணீரினால் ஞானஸ்நானம் பெற்று தேவனுடைய இராஜ்யத்தின் பிரஜைகளானார்கள் அல்லது திருச்சபையில் சேர்த்துக் கொள்ளப்பட்டார்கள். இப்படி இரட்சிக்கப்படுகிறவர்களை மனந்திரும்பி

இயேசுகிறிஸ்துவை விசுவாசித்து, முழுகி ஞானஸ்நானம் பெற்றுக் கொண்டவர்களை கர்த்தர் தம்முடைய (சபையில்) இராஜ்ஜியத்தில் அநுதினமும் சேர்த்துக் கொண்டு வந்தார் (அப். 2 : 38 - 47). பெந்தெகொஸ்தே நாளில் சபை பூமியில் ஸ்தாபிக்கப்பட்டது (அப். அதி. 2). அது முதற் கொண்டு ஆதி அப்போஸ்தலர்களும், சுவிசேஷகர்களும், சீஷர்களும் இயேசு கிறிஸ்துவைப்பற்றி மட்டுமல்ல திருச்சபையைக் குறித்தும் பிரசங்கித்து வந்தார்கள். திருச்சபையில் சேர ஞானஸ்நானம் பெறவேண்டுமென்றும் பரிசுத்த ஆவி பெறவேண்டும் என்றும் போதித்தார்கள். ஆனபடியால் அவர்களுடைய வார்த்தைகளைக் கேட்டவர்கள் உடனே முழுகி ஞானஸ்நானம் பெற்றுக் கொண்டார்கள். காண்:- "தேவனுடைய இராஜ்யத்துக்கும் இயேசுகிறிஸ்துவினுடைய நாமத்துக்கும் ஏற்றவைகளைக் குறித்து பிலிப்பு பிரசங்கித்ததை அவர்கள் விசுவாசித்தபோது புருஷர்களும் ஸ்திரீகளும் ஞானஸ் நானம் பெற்றார்கள்" (அப். 8: 12; 8: 34 - 40). அப்போஸ்தலனாகிய பவுலினுடைய பிரசங்கத்தின் முக்கிய பொருள் தேவனுடைய இராஜ்யமாகிய திருச்சபையைக் குறித்தே (அப். 16 : 30—34;20:25; 28: 23, 31). மனுமக்களை தேவன் இருளின் அதிகாரத்தினின்று விடுதலையாக்கி தமது அன்பின் குமாரனுடைய இராஜ்யத்துக்குட் படுத்துகிறார் என்றே அப்போஸ்தலனாகிய பவுல் சொல்லுகிறார்—கொலோ. 1 : 13; அப். 26 : 18.

ஆனால் இந்நாட்களில் சபை வேண்டாமென்போரும் இயேசுகிறிஸ்துவின் மேல் விசுவாசம் மாத்திரம் போதும் என்போரும், ஞானஸ் நானம் வேண்டாம், பரிசுத்த ஆவியின் அபிஷேகம் வேண்டாம் என்போரும், ஏதாவது ஒரு சபாவில், சொஸைட்டியில், அஸெம்பிளியில், சங்கத்தில், குழுவில் அவரவர்கள் விருப்பப்படி ஏதாவது ஒன்றில் சேர்ந்து கொள்ளலாம் என்போரும்; அது வேண்டாம் என்போரும், ஒரு பெயர் முக்கியமானதல்ல என்போரும், அது வேண்டாம், இது வேண்டாம், அது அந்த சபையின் உபதேசம், இது இந்த சபையின் உபதேசம் அதனால் வேண்டாம் என்போரும் (வசன ஆதாரத்தின் படி எந்த உபதேசமாய் எந்த பிரிவின் பாரம்பரிய வழக்கமாய் இருந்தாலும் சரி அதை நாம் தள்ளிப் போடக் கூடாது) நாங்களே மணவாட்டி என்று சொல்லிக் கொண்டு கர்த்தரால் கட்டளை பெறாதவர்கள் (அப். 1 : 1) எழும்பி தாறுமாறாய்ப் பிதற்றி தங்களையும் கெடுத்து, தங்கள் வார்த்தைகளைக் கேட்பவர்களையும் கெடுத்து வருகின்றனர். இவர்கள் தேவனுடைய திருச் சபையைப்பற்றி மக்களுக்குப் பிரசங்கிப்பதில்லை, காரணம் அவர்களுக்கு தேவனுடைய சபையைப் பற்றி தெரியாது. அவர்களில் அப்போஸ்தலனில்லை. இயேசு கிறிஸ்து தாம் உயிர்த்தெழுந்த பின் அப்போஸ்தலருக்கு நாற்பது (40) நாளளவும் தரிசனமாகி தேவனுடைய சபைக்குரியவைகளை அவர்களுக்கு போதித்தார்; கட்டளையிட்டார்- அப். 1 : 3, 2, 1. உயிர்த்தெழுந்த கர்த்தரால் நேரடி கட்டளை பெறாதவர்களுக்கு திருச்சபையின் இரகசியம் தெரியாது. அவர் அப்போஸ்தலருக்கே தரிசனமாகி சபை கட்டும் படி கட்டளையிட்டார், கட்டளையிடுகிறார். சிலர் நாங்களும் அப்போஸ்தலர்கள்தான் கர்த்தர் எங்களுக்கு வெளிப்படுத்தினார் என்று தங்கள் சபைகளுக்கு பெயர் சூட்டிக் கொள்கிறார்கள். பிறகு அந்த பெயர்கள் அழிக்கப்பட்டு வேறு பெயர்களினால் தங்களை அழைத்துக் கொள்கின்றனர். கொள்கைகளை மாற்றிக் கொள்கின்றனர். கர்த்தரோ "மலையிலே உனக்கு காண்பிக்கப்பட்ட மாதிரியின்படியே எல்லாவற்றையும் செய்ய எச்சரிக்கையாயிரு என்று அவனுக்கு கட்டளையிட்டார்" —எபி. 8 : 5. வேதத்தில் திருச்சபையைப் பற்றிய மாதிரியில்லையா? வேத வாக்கியங்கள் அவரவர்கள் சுயவிருப்பத்தின்படியான பொருளையுடையதல்ல—II பேதுரு 1 : 20, 21. தேவனுடைய சித்தம், தேவனுடைய திட்டம், தேவனுடைய நன்மையும், பிரியமும், பரிபூரணமுமான சித்தம் என்று ஒன்றுண்டு; இதற்கு மாறுபட்டதெல்லாம் அழிவுறும்; பூரணப்படாது.

இராஜ்யம் என்றால் அதற்கு இராஜா உண்டு சட்டம் உண்டு, அதிகாரிகள் (ஊழி

யர்கள்) உண்டு. கீழ்ப்படிதலுள்ள குடிமக்களும் உண்டு (எபேசி.4: 11—13; 1கொரி 3:9; அப். 20:28). இங்கே அவரவர்கள் இஷ்டம் என்பதற்கு இடமில்லை.

நாங்கள் கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவுக்கும் தேவனுடைய இராஜ்யத்துக்கும் (சபைக்கும்) உரியவைகளைப் பேசுகிறோம். ஆதி அப்போஸ்தலர் பிரசங்கித்து நடப்பித்தவைகளையே நாங்களும் செய்கிறோம். இந்த சபைக்குரிய) இராஜ்யத்துக்குரிய செய்தி "ராஜ்யத்தினுடைய இந்தச் சுவிசேஷம் பூலோகமெங்குமுள்ள சகல ஜாதிகளுக்கும் சாட்சியாகப் பிரசங்கிக்கப் படும் அப்போது முடிவு வரும்"- மத்.24:14.

"தேவனுடைய ராஜ்யத்தைக் குறித்துப் பிரசங்கித்து, கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவைப் பற்றிய விசேஷங்களை உபதேசித்துக் கொண்டிருந்தான்"

—அப். 28 : 31

# கர்த்தாவே! எனக்கு விளங்கவில்லை; ஆனாலும் கீழ்ப்படிகிறேன்

ஆவியானவர் சபைகளுக்குச் சொல்லுகிறதை காதுள்ளவன் கேட்கக் கடவன் என்ற வார்த்தையின்படி கர்த்தர் நமக்கு சொல்லுகிற எல்லா காரியங்களுக்கும் கீழ்ப்படிய வேண்டியது நம்முடைய கடமை. கர்த்தர் சொல்லுகிற எல்லாவற்றையும் விளங்கிக் கொள்ளக் கூடிய அறிவு வளர்ச்சி நமக்கு இல்லை என்பதை நாம் உணர்ந்திருக்க வேண்டும். மேலும் அவர் எஜமான், நாம் வேலையாள் ஆகையால் எல்லாக்காரியங்களையும் அவர் நமக்கு விளக்கி சொல்ல நாம் எதிர்பார்க்கக் கூடாது. கர்த்தர் சொல்லுகிறார் நாம் செய்வோம். இது வரைக்கும் ஒரு குறிப்பிட்ட வேலையையே செய்து வந்த வேலைக்காரனுக்கு, அவன் எஜமான் முற்றிலும் மாறின புதிய வேலையொன்றை செய்யச் சொல்லும் போது, அவன் மாட்டேன் என்று சொல்லக் கூடாதே. அப்படியே கர்த்தரும் புதிய பாதையில் நடக்கச் சொல்வாரானால், அப்படியல்ல ஆண்டவரே என்று அவருக்கு விளக்கம் கொடுக்க முற்படக்கூடாது. சர்வ ஞானமுள்ள கர்த்தர் சொல்லுகிறார், ஆதி முதல் அந்தம் வரை அறிந்தவர் சொல்லுகிறார்; நாம் கீழ்ப்படிவோம்.

பாடுகளுக்கு பயப்படாதே :-

யூதேயா தேசத்திலே இயேசு கிறிஸ்துவை கல்லெறிய துஷ்டர்கள் வகை தேடினார்கள். அவர் அவர்களுடைய கைகளுக்குத் தப்பி யோர்தானுக்கு அக்கரையிலே போய் தங்கினார். அந்நாட்களில் யூதேயாவில் வசித்து வந்த லாசரு என்ற பெயரையுடைய இயேசுவுக்கு பிரியமான மனிதன் மரித்துப்போனான். இயேசு கிறிஸ்து தம்முடைய சீஷர்கள் விசுவாசிக்கத்தக்கதாக அவனை உயிரோடு எழுப்ப சித்தங்கொண்டார். ஆகையால் மறுபடியும் யூதேயாவுக்கு போவோம் வாருங்கள் என்று சீஷர்களிடம் சொன்னார். அவர்கள் குழம்பினார்கள் ரபீ, இப்பொழுதுதானே யூதர்கள் உம்மை கல்லெறிய வகை தேடினார்கள், மறுபடியும். அவ்விடத்துக்கு போகலாமா? என்றார்கள். லாசருவை எழுப்ப போகிறேன் என்றார். அவர்களால் தேவன் சொல்வதை கிரகித்துக் கொள்ள முடியவில்லை. ஆனால் தோமா மற்றவர்களை நோக்கி: அவரோடே கூட நாமும் மரிக்கும் படிக்கு போவோம் வாருங்கள் என்றான். இறைவனுடைய வார்த்தைக்கு கீழ்ப்படிந்து சென்றார்கள். சாவை எதிர் நோக்கி சென்ற அவர்கள் கர்த்தரின்

வல்லமையின் சத்துவத்தைக் கண்டார்கள் (யோவா.11. அதி.)

கர்த்தர் சொல்லுகிற காரியத்தை செய்யப்போனால் பெரும் பாடுகள் நம்மை சந்திக்கும் என்று நம்முடைய அறிவின்படி தீர்ப்பு செய்து பாடுகளை சந்திக்கப் பயப்படுவோமானால் கர்த்தரின் வல்லமையைக் காணமுடியாமலேயே போய் விடும். கர்த்தர் சொல்லுகிறார், அவர் நம்முடைய எஜமான், ஆகையால் தோமாவைப் போல, செத்தாலும் பரவாயில்லை அவர் சொல்லுகிறபடி மாத்திரம் செய்வோம் என்று துணிந்து செல்வோமானால், தேவன் நம்மோடிருந்து கிரியை நடப்பிப்பதோடு மாத்திரமல்ல, நாம் எதிர்பார்த்து பயப்படுகிற எந்த தீமையும் வராதபடி காத்து, எதிர் பார்க்காத பெரிய நன்மைகள் கடந்து வருவதை நிச்சயமாய் காணச் செய்கிறார். அவர் சொல்படி நாம் செய்யப்போகும் போது நமக்கு முன்பே அந்த ஸ்தலத்துக்கு அவர் கடந்து சென்றிருக்கிறார் (யாத். 17:5, 6) என்று அறியவேண்டும்.

அறிவீனம் என்று அலப்பாதே :-

லாசரு மரித்து கல்லறையில் வைத்து நாலு நாளாயிற்று. இயேசுகிறிஸ்து கல்லறை பக்கம் வந்து நின்று, கல்லை எடுத்துப் போடுங்கள் என்றார். லாசருவுடைய சகோதரியாகிய மார்த்தாளுக்கு புரியவில்லை. கல்லைப் புரட்டினால் நாற்றம் எடுக்குமே, போதகர் என்ன இப்படி புரியாமல் சொல்கிறார் என்று எண்ணினாள், சொல்லியும் விட்டாள். ஆனாலும் சொல்லுகிறவர் பெரியவரானபடியால் கீழ்ப்படிந்தார்கள். கல் புரட்டப்பட்டது. நான்கு நாட்களுக்கு முன் மரித்த லாசரு உயிரோடே வெளியே வந்தான். இவ்வளவு பெரியவராயிருந்தும் அறிவில்லாமல் கல்லை புரட்ட சொல்லுகிறாரே என்று எண்ணியவர்கள் இதுவரை கண்டிராத, கேட்டிராத அற்புதத்தைக் கண்டு ஆச்சரியப்பட்டார்கள்.

கர்த்தர் சொல்கிறதான ஆலோசனைகள், நடத்துதல்கள், உணர்த்துதல்கள் நாம் எதிர் பார்க்கிறதற்கு முற்றிலும் மாறாய் இருக்கும். ஏன்? யோசித்துப் பார்த்தால் பைத்தியக் காரத்தனம்போல் தோன்றும். இப்படிச் செய்தால் அது அப்படியாகும், இப்படியாகும் என்று அலப்ப ஆரம்பித்துவிடுவார்கள் பலர். நம் கர்த்தருக்கு "ஆலோசனைக் கர்த்தர்" என்ற பெயருண்டு என்று மறந்து விடக்கூடாது. நம்மால் விளங்கிக் கொள்ள முடியாமலிருக்கலாம், ஆனாலும் அவருடைய வார்த்தைக்கு கீழ்ப்படிவோம். மகிமையைக் காண்போம். சுயபுத்தியின் மேல் சாய்ந்தால் கண்ணிகளில் சிக்க நேரிடும்.

புதுமை என்று புலம்பாதே :-

பரி.பேதுருவும்,மற்ற அப்போஸ்தலரும், சகோதரர்களும் யூதர்களாகிய தாங்கள், யூதர்களல்லாத புறஜாதியாரோடே கலந்து அவர்களோடே போக்குவரத்தாயிருப்பதும், போஜனம் பண்ணுவதும் தவறு என்று எண்ணி புறஜாதியாருக்கு விலகியிருந்தார்கள் (அப். 10:28; 11:3). இப்படியிருக்க ஒரு நாளில் பேதுரு ஜெபம் பண்ணிக்கொண்டு இருக்கும்போது ஞானதிருஷ்டியடைந்து: வானம் திறந்திருக்கிறதையும், ஒரு விநோதமான கூடு இறங்கித் தரையிலே தன்னிடத்தில் விடப்பட்டிருக்கிறதும், அதிலே பூமியிலுள்ள சகலவிதமான நாலுகால் ஜீவன்களும், காட்டு மிருகங்களும், ஊரும்பிராணிகளும், ஆகாயத்துப் பறவைகளும் இருக்கிறதைக் கண்டார். அல்லாமலும் பேதுருவே எழுந்திரு, அடித்துப் புசி என்று அவருக்கு சொல்லும் ஒரு சத்தம் உண்டாயிற்று. ஒட்டகம், முசல், குழிமுசல், பன்றி, கழுகு, கருடன், தீக்குருவி, காகம், கூகை, ஆந்தை, கொக்கு மற்றும் ஊர்வன ஆகிய இவைகள் எல்லாம் அசுத்தமானவைகள்; புசிக்கத்தகாதவைகள் (உபா. 14:7-19) என்ற பிரமாணத்தை அறிந்து, கடைபிடித்து வந்த பேதுருவுக்கு இவைகளை அடித்து புசி என்று சொன்ன சத்தம் புதுமையாயிருந்தது. ஆகையால் உடனே பிரதியுத்திரமாக, அப்படியல்ல ஆண்டவரே! தீட்டும், அசுத்தமாயிருக்கிற ஒன்றையும், நான் ஒருக்காலும் புசித்ததில்லை என்றார். மறுபடியும் தேவன் சுத்தமாக்கினவைகளை தீட்டாக எண்ணாதே என்று தேவன் பேசினார்.

இதைக் காண்பித்து, இதுவரை புற ஜாதியாரோடே கலக்கக்கூடாது என்ற பழைய பாதையை மாற்றி பரிசுத்த ஆவியா னவர் "புறஜாதியோடே போஜனம் பண்ண வும், கலக்கும்படியான புதிய பாதைக்குள் பேதுருவை நடத்தினர். பேதுருவுக்கு இதனு டைய இரகசியம் விளங்கவில்லை. ஆனாலும் ஆவியானவரின் நடத்துதலுக்கு கீழ்ப்படிந் தார். புறஜாதியார் இரட்சிக்கப்பட்டனர்.

இவைகளை கேள்விப்பட்ட மற்ற அப் போஸ்தலரும், சகோதரர்களும் கொதித் தெழுந்தனர். பரிசுத்த பேதுரு ஆவியான வர் நடத்தின விதத்தை விவரித்து காண் பித்து, தேவனை தடுக்கிறதற்கு நான் எம் மாத்திரம் என்றார். இவைகளைக் கேட்ட மற்றவர்களுக்குள்ளிருந்த பரிசுத்த ஆவி யானவர் அங்கிகரித்தார். எல்லாரும் சேர்ந்து தேவனை மகிமைப் படுத்தினர்கள். ஆவி யானவரின் நடத்துதலில்லாத மற்ற யூதர் கள் விளங்காமல் இதை எதிர்த்திருப்பார் கள்.

பேதுருவானவர் பரிசுத்தாவியின் வார்த் தைபடி செய்ததான இந்த காரியம் "நீர் பூமி யின் கடைசிபரியந்தம் இரட்சிப்பாயிருக்கும் படி உம்மை ஜாதிகளுக்கு ஒளியாக வைத் தேன்" (அப் 13:47). ஆபிரகாமை நோக்கி கர்த்தர் "உனக்குள் சகலஜாதிகளும் ஆசீர் வதிக்கப்படும்" (கலா. 3:8) என்ற தீர்க்கதரி சன வாக்கியங்கள் நிறைவேறுவதற்கேது வாயிற்று.

பிரியமானவர்களே, "உலகத்தோற்ற முதல் தேவன் தம்முடைய பரிசுத்த தீர்க்க தரிசிகளுடைய வாக்கினாலும் உரைத்தவை கள் எல்லாம் நிறைவேறித் தீருங்காலங்கள் வருமளவும் பரலோகம் அவரை ஏற்றுக் கொள்ளும்" (அப். 3:21). இயேசுகிறிஸ்து உலகுக்கு மறுபடியும் வரவேண்டுமானால் எழுதப்பட்ட, உரைக்கப்பட்ட தீர்க்கதரி சன வார்த்தைகளெல்லாம் நிறைவேற வேண்டும். காலாகாலங்களில் தேவன் தாம் தெரிந்து கொண்ட (அப். 15:7) மனிதன் மூலமாக அதை நிறைவேற்றும் படி நடத்துகிறார். அவர் தாம் செய்கிற காரியத்திற்கு வேத ஆதாரத்தை காட்டுவார் (அப். 13:47) இதுவரை அறிந்தும், அடைந் தும் வநததான அனுபவத்திற்கு மாறாக பரிசுத்த ஆவியானவர் வேத ஆதாரத் துடன் வெளிப்படுத்தும் போது புதுமை யாய் தோன்றலாம். ஆனால் கீழ்ப்படிய வேண்டியது நம்முடைய கடமை. தேவனை எதிர்த்து நிற்பதற்கு நாம் எம்மாத்திரம். பரிசுத்த ஆவியானர் சகல சத்தியத்திற் குள்ளும் நடத்துகிறவராயிருக்கிறார் (யோ. 16:13). எழுதப்பட்ட வார்த்தைகள் சத்திய மாயிருக்கிறது (லூக். 4:27).

"சொல்லும் கர்த்தாவே! அடியேன் கேட்கிறேன்"

---

"விசுவாசமானது நம்பப் படுகிறவை களின் உறுதியும், காணப்படாதவைகளின் நிச்சயமுமாயிருக்கிறது"—எபி. 11:1.

---

# ஜெபம்

ஜெபம் என்பது கர்த்தருடைய சமுகத் தில் அமர்ந்திருந்து, அவரை மகிமைப்படுத்தி, துதித்து, அவருடைய சித்தம் பூமியிலே செய்யப்படவும், நம்முடைய தேவைகள் பூர்த்திச் செய்யப்படவும் வேண்டுதலினா லும், விண்ணப்பங்களினாலும் இறைவனைத் தேடி கேட்டுப் பெற்றுக் கொள்வதே.

"ஜெபத்தைக் கேட்கிறவரே!" என்று சங்கீதக்காரன் தேவனை அழைக்கிறபடி அவர் ஒருவருடைய ஜெபத்தையும் அசட்டை பண்ணாது கேட்டு பதில் சொல் கிறவர். ஆனால் துன்மார்க்கரின் ஜெபமும், வேதத்தை கேளாதபடி தன் செவியை விலக்குகிறவனுடைய ஜெபமும் அவருக்கு அருவருப்பானது. வேதத்தில் சொல்லிய பிரகாரம் தன்னைக் கழுவிச் சுத்திகரித்து தீமை செய்தலை விட்டு ஒய்ந்து, நன்மை செய்து, நீதிமானாக, செம்மையானவனாக காணப்படுகிறவர்களை கர்த்தரின் கண்கள்

தேடுகிறது. அவர்கள் செய்யும் ஜெபமே அவருக்குப் பிரியம். ''அவருடைய செவிகள் அவர்கள் வேண்டுதலுக்குக் கவனமாயிருக்கிறது'' (I பேதுரு 3 : 12). கர்த்தருடைய வார்த்தைகளுக்கு கீழ்ப்படியாதவர்கள் ''மிகுதியாய் ஜெபம் பண்ணினாலும் கேட்க மாட்டார்''... ஏசா 1 : 15.

சங்கீதக்காரன் அந்தி, சந்தி, மத்தியான வேளைகளிலும் தியானம் பண்ணி முறையிடுவேன் (சங். 55 : 17) என்பதாகக் கூறுகிறார். தானியேலும் தினம் மூன்று வேளையும் தன் தேவனுக்கு முன்பாக முழங்காற்படியிட்டு ஜெபம் பண்ணி, ஸ்தோத்ரம் செலுத்தினன். பேதுரு ஆறும் மணி நேரத்தில் ஜெபம் பண்ணும்படி மேல் வீட்டில் ஏறினன் என்று எழுதப்பட்டிருக்கிறது. எனவே சமயம் வாய்த்தாலும் வாய்க்கா விட்டாலும் தினமும் மூன்று வேளைகளிலும் நாம் உணவு அருந்துவது போல மூன்று வேளைகளிலும் ஜெபம் செய்ய வேண்டும்.

மற்ற வேளைகளிலும் ஜெபம் பண்ணலாம். பவுலும், சீலாவும் நடு ராத்திரியிலே தேவனைத் துதித்துப் பாடினார்கள் என்றும் (அப். 16 : 25); இயேசு கிறிஸ்து 12 (பன்னிரண்டு) அப்போஸ்தலர்களை தெரிந்து கொள்வதற்கு முந்தினநாள் இரவு முழுவதும் தேவனை நோக்கி ஜெபம் பண்ணிக் கொண்டிருந்தார் (லூக். 6 : 12) என்றும் நாம் வேதத்தில் பார்க்கிறபடி, விசேஷமான காரியங்களுக்காக நாம் நீண்ட நேரம் ஜெபித்த பிறகே அதைச் செய்ய வேண்டும். இயேசு பகலில் ஜனங்கள் கூடி வந்து விடுவதால் பகலில் ஜெபிக்க முடியாத போதிலும் இராமுழுவதும் ஜெபித்தார். இடைவிடாமல் ஜெபம் பண்ணுங்கள் என்று பவுல் அப்போஸ்தலன் கூறியபடி (கொலோ. 4:2) கொர்நேலியு எப்பொழுதும் தேவனை நோக்கி ஜெபம் பண்ணிக் கொண்டிருந்தார் (அப். 10 : 2). அன்னாள் என்னும் தீர்க்கதரிசியான விதவை இரவும் பகலும் உபவாசித்து, ஜெபம் பண்ணி ஆராதனை செய்து கொண்டிருந்தாள் (லூக். 2 : 37). பவுல் எந்த சமயத்திலும் சகல விதமான வேண்டுதலோடும், விண்ணப்பத்தோடும் ஜெபிக்க வேண்டும் என்று எழுதுகிறார் (எபே. 6 : 18); ஜெபம் பண்ணுவதற்கு ஜாக்கிரதையுள்ளவர்களாயிருங்கள் என்றும் (I பேதுரு 4 : 7) ஜெபத்திற்கு தடை வரக் கூடாது என்றும் (I பேதுரு 3 : 7), ஜெபத்திலே உறுதியாய் தரித்திருங்கள் என்றும் (ரோமர் 12 : 12) தேவ வாக்கு எச்சரிக்கிறது. ஒரு மணி நேரமாவது என்னோடே விழித்திருக்கக் கூடாதா? என்று இயேசு அப்போஸ்தலர்களிடம் கேட்டார்.

ஜெபம் இல்லையேல் வெற்றி இல்லை. சமயம் கிடைக்கும் வேளைகளில் எல்லாம் ஜெபிக்கலாம். இரவில் தூக்கம் வருகிறது என்றல் தூங்கி விட்டு விழித்த பிறகு ஜெபிக்கலாம். ஜெபிக்க வேண்டும் என்ற வாஞ்சை இருக்கலாம்; ஆனல் தூக்கம் வரும் போது ஒரே மனதோடு, கருத்தோடு ஜெபிக்க முடியாதபடி இருக்கும் போது இளைப்பாறுவதே நலம். வீணக தூக்கத்தோடு ஜெபிக்கக் கூடாது. அதினல் யாதொரு பிரயோஜனமும் இல்லை. ஐந்து நிமிடம் ஜெபித்தாலும் விழித்திருந்து கருத்தோடு ஜெபிக்க பழக வேண்டும்.

ஜெபம் பண்ண ஆரம்பிக்கும் போது கண்ணடியில் நம்முடைய முகத்தைப் பார்த்து தலைமுடியை சீர்ப்படுத்துவது போல் நம்முடைய ஆவியால் சரீரத்தில் காணப்படும் பாவங்களை பரிசுத்த ஆவியின் உதவியால் கண்டு பிடித்து அறிக்கை செய்து விட்டு விட வேண்டும். பாவங்களை மறைக்கிறவன் வாழ்வடைய மாட்டான். அவைகளை அறிக்கை செய்து விட்டு விடுகிறவனே இரக்கம் பெறுவான். பாவத்தோடு செய்யும் வேண்டுதல் அதிகபலன் உள்ளதாக இருக்காது. சாத்தான் நமது வலது பக்கத்தில் கடந்து வந்து நிற்பான். பாவங்களை அறிக்கை செய்து விட்டுவிடும் போது நம்மை விட்டு ஓடிப் போவான். இரண்டு நிமிடமாவது நம்மை தற்பரிசோதனை செய்த பின்பு ஜெபத்தை ஆரம்பிப்பது விரும்பப்படத்தக்கது.

தனியாக இருந்து நாம் ஜெபிக்கலாம். கூடி சபையாருடன் சேர்ந்தும் ஜெபிக்கலாம். ஆனல் இவ்விரண்டு ஜெபமும் தினமும் இருந்தால் அது மிகவும் நல்லது. தனியாக நீண்ட நேரம் ஜெபித்தால் மட்டும்

போதாது. அது போல மற்றவர்களுடன் மாத்திரம் ஜெபித்தாலும் போதாது. சபையார் கூடி ஜெபிக்கும் போது கிருபைகள், வரங்கள் அதிகமாக கிரியை செய்யும் தேவன் இரகசியங்களை, மறைபொருள்களை தீர்க்கதரிசிகள் மூலம் வெளிப்படுத்துவார். கர்த்தருடைய சரீரமாகிய சபை கூடிவரும் போது எல்லா அவயவங்களுக்கும் பெலன், கிருபை, வல்லமை ஆகியவை தலையாகிய கிறிஸ்துவின் மூலம் கொடுக்கப்படுகிறது. எனவே பொது ஜெபம் மிகவும் முக்கியம். தனி ஜெபமும் பண்ண வேண்டும், பொது ஜெபத்தையும் விடாதிருக்க வேண்டும். தனி ஜெபம் செய்யும் போது நீண்ட நேரம் அமர்ந்திருந்து ஜெபிக்கலாம். ஆனால் எல்லோரும் கூடி ஜெபிக்கும் போது ஆவியானவர் ஏவுகிற காரியங்களுக்காக சுருக்கமாக ஜெபிக்க வேண்டும். பொது ஜெபத்தில் அதிக நேரம் ஒருவர் ஜெபித்தால் எல்லோரும் ஜெபிப்பதற்கு நேரம் இல்லாமல் போய் விடுவது மட்டும் அல்லாமல் ஒரு மனம் இல்லாது போய் விடும். ஆனபடியினால் அந்த ஜெபத்தினால் பிரயோஜனம் இல்லாது போய் விடும். பொது ஜெபங்களில் சுருக்கமாக மற்றவர்கள் ஜெபிக்காத காரியங்களுக்காக ஜெபிக்கும் போது, ஒரு மனம் ஏற்படும் அதனால் அதிக பலன் உண்டு.

யுத்தத்திற்கு ஆயத்தமாகிற வீரர்கள் தனித்தனியே பயிற்சிப் பெற்று எல்லோரும் எதிராளியைத் தாக்க வல்லமை பொருந்தினவர்களாக மாறுகிறது போல, நாமும் தனித்தனியே பயிற்சிப் பெற்று வீரர்களாகி, சேர்ந்து சத்துருவுடன் போராடி வெற்றி பெற வேண்டும். ஒவ்வொருவரும் வீரர்கள் ஆகா விட்டால் வெற்றி இல்லை.

இயேசுவும் தனித்து ஜெபம் பண்ண ஒரு மலையின் மேல் ஏறி சாயங்காலமான போது அங்கே தனிமையாயிருந்தார் (மத் 14: 23). ஈசாக்கு, பேதுரு, பவுல் போன்ற பக்தர்கள் தனித்தனியே ஜெபம் பண்ணினதை நாம் வேதத்தில் பார்க்கிறோம்.

அதே சமயத்தில் பிரசங்கி ''ஒண்டியாயிருப்பதிலும் இருவர் கூடியிருப்பது நலம்... ஒண்டியாயிருக்கிறவனுக்குச் துணையுண்டாவது எப்படி?'' (பிரசங்கி 4 : 8, 11) என்று சொல்கிறார்.

மோசே, யோசுவா, எலியா போன்ற பக்தர்கள் திறப்பின் வாசலில் நின்று, ஜனங்களுக்காக வேண்டுதல் செய்த போது தேவன் அவர்கள் விண்ணப்பத்தைக் கேட்டார். ஒரு தனி மனிதனுடைய ஜெபத்தைக் கேட்டு, கர்த்தர் பெரிய அற்புதங்களையும் செய்து இருக்கிறார்.

(தொடரும்)

---

''நீங்கள் சோதனைக்குட்படாதபடிக்கு விழித்திருந்து ஜெபம் பண்ணுங்கள்''
-மத். 26 : 41

---

# மோட்ச வழி

## குரு–சிஷ்ய உரையாடல்

(தொடர்ச்சி)

சிஷ்யன் : கடவுளை நாம் அறிந்து கொள்வது எப்படி?

குரு : மூன்று விதமாக நாம் கடவுளை அறிந்து கொள்ளலாம்.

சிஷ்யன் : எவ்விதத்தில்?

குரு : 1. இயல் வேதம் 2. ஒலி வேதம் 3. வரி வேதம்

1. இயல் வேதம்: தேவன் வானத்தையும், பூமியையும், மலைகளையும், பள்ளத்தாக்குகளையும், ஆறுகளையும், நீரூற்றுகளையும், சமுத்திரத்தையும் அவைகளில் ஜீவித்திருக்கும் எண்ணிறந்த ஜீவன்களையும், நிரப்பியிருக்கும் எண்ணிறந்த பொருட்களையும், சக்திகளையும், காற்றையும் நாம் பார்த்து இறைவனுடைய ஞானம், வல்லமை, வியாபகம், பராமரிப்பு, ஆளுகை இவைகளை உற்றுப் பார்த்து இவைகளை நடப்பிக்கிற புத்தியும், ஞானமுமுள்ள வல்லமையுள்ள தேவன் ஒருவர் உண்டு என்று இவைகளின் மூலம் அறிந்து கொள்கிறோம். இதற்கு இயல் வேதம் என்று பெயர்.

2. ஒலி வேதம் : இறைவன் தம்மைத் தேடின பக்தர்களுக்கு தம்மை வெளிப்படுத்தி பேசி சொன்னவைகளும், காண்பித்தவைகளையும், உணர்த்தியவைகளையும் அவர்கள் பிறருக்கு வாய்மொழிமூலமாக சொல்ல அவர்கள் மற்றவர்களுக்கு போதிக்க இப்படி பரம்பரையாக இறைவனைப் பற்றி உபதேசித்து வந்தவைகளுக்கு ஒலி வேதம் என்று பெயர்.

3. வரி வேதம் : இறை ஆவியின் தூண்டுதலினாலும் தேவகட்டளைப்படியும் தேவனுடைய பரிசுத்த மனிதர்கள் இறைவனைப்பற்றிய ஒலிவேதத்தை எழுதி வைத்தார்கள் அதுவே HOLY BIBLE என்று அழைக்கப்படும் மகாபரிசுத்த சத்திய வேதம். உலகில் மெய் இறைவனை காண்பிக்கும் ஒரே நூல் இதுவே. மற்ற நூல்களெல்லாம் பற்பல விதமாய் மாறுபாடாய், முன்னுக்குப் பின் முரணாய், இறைவனைப்பற்றி பொய்யுரைத்துள்ளன. அவைகளில் மெய் இறைவனை பராபரனை அறிய முடியாது. நீர் பரிசுத்த வேதாகமத்தை முறைப்படி படியும் கற்றுக் கொள்ளும் இறைவனைப் பற்றி அறிந்து கொள்வீர்.

சிஷ்யன் : வேதாகமத்தைப் படித்து இறைவனை அறிந்து கொள்ளலாம், இரட்சிக்கப் படலாம், மோட்ச மடையலாம் என்று சொல்லுகிறீர்களா?

குரு : நீர் சரியாக புரிந்து கொள்ளவில்லை. வேதாகமத்தை முறையாகப் படிக்க வேண்டும், கற்றுக் கொள்ள வேண்டும் என்று சொன்னேன். அப்போ இறைவனைப் பற்றி நம்மைப்பற்றி இறைசித்தத்தைப்பற்றி, நம்முடைய கடமைகளைப் பற்றி உலக சிருஷ்டிப்பு, உலக முடிவுகளைப்பற்றி அறிந்து கொள்ளலாம்.

சிஷ்யன் : வேதாகமத்தை எங்கே கற்றுக் கொள்ளலாம்?

குரு : மெய்யான திருச்சபையில், மெய்த்திருச்சபைமூலம் வேதாகமத்தைக் கற்றுக் கொள்ளலாம்.

சிஷ்யன் : அப்போ வேதாகமத்தை படித்து நாம் இரட்சிக்கப்பட முடியாதா? மோட்சமடைய முடியாதா?

குரு : வேதாகமத்தைப் படித்து ஒவ்வொருவரும் சில காரியங்களை அறிந்து கொள்ளலாம். ஆனல் ஒரு மனித ஆத்துமா இரட்சிக்கப்பட தேவனுடைய ஒழுங்கு, திட்டம் என்ன என்பதை முழுவதும் அவர் அறிந்து கொள்ளவோ புரிந்து கொள்ளவோ முடியாது. அவர் எவ்வளவுதான் படிப்பாளியாயிருந்தாலும் ஒருவர் விளக்காவிட்டால் விளங்குவதுஅரிது (அப். 8:31;நெகேமியா 8:

7,8) ஒரு ஆத்துமா இரட்சிக்கப்பட முழு இரட்சிப்புஅடைய தேவனுடைய நியமம் எவை, எவை என்று அப்போஸ்தலனுக்கு மெய்யான திருச்சபைக்கே தெரியும்.

சிஷ்யன் : சிலர் சபை வேண்டாம், அப்போஸ்தலன் வேண்டாம், கூட்டம்வேண்டாம் பைபிளைப் படித்து அதன்படி நடந்தால் போதும் பைபிள் மட்டும் போதும் என்கின்றனரே அதெப்படி?

குரு : அந்நாட்களில் இஸ்ரவேலிலே இராஜா இல்லை அவனவன் தன்தன் மனம் போனபடி நடந்தான் என்ற திருவசனப்படி நியா. 21:25; 17:6 அவனவன் தன் தன் மனம் போனபடி சாமி கும்பிட்டு தங்கள், தங்கள் மனம் போனபடி பாவம் செய்து சண்டையிட்டுக் கொண்டு பிரிந்து போனபடி இந்நாளிலும் நடந்து கொள்கின்றனர் இதன் முடிவு அழிவுதான். பைபிள் மட்டும் இரட்சிக்க போதும் என்றால் ஒவ்வொரு மனித ஆத்துமாவிடமும் பைபிளை வாங்கி கொடுத்து இரட்சிக்கப்பட்டுக் கொள்ளுங்கள் என்று கூறிவிடலாமே போதனை எதற்கு? பிரசங்கம் எதற்கு? கூட்டங்கள் எதற்கு? ரேடியோபிரசங்கம் எதற்கு? பைபிள் மட்டும் போதும் என்பவர்களும் ஏன் பிரசங்கிக்கிறார்கள். அவரவர்கள் பைபிளை வேதாகமத்தை படித்து இரட்சிப்பு அடைந்து கொள்வார்கள் தானே. சபைகள் எதற்கு? பத்திரிக்கைகளும், புத்தகங்களும் தேவை இல்லையல்லவா?

சிஷ்யன் : குருவே, நீங்கள் சொல்வது சரியே. பைபிள் மட்டும் போதும் என்றால் நீங்களும் எதற்கு? நானும் கேள்வி கேட்டு அறிந்து கொள்ளவும் தேவை இல்லைதான்.

குரு : சரியாய் சொன்னாய். சபை தேவை இல்லை என்று சொல்லவும் ஒருவரும் தேவை இல்லையல்லவா?

(தொடரும்)

> ''கர்த்தர் மோசேயைக் கொண்டு இஸ்ரவேல் புத்திரருக்கு சொன்ன சகல பிரமாணங்களையும் அவர்களுக்குப் போதிக்கும்படிக்கும், இது உங்கள் தலைமுறைதோறும் நித்திய கட்டளையாயிருக்கும் என்றார்" —லேவி. 10:11

## வேத பாடம்

ஆதி. 18 : 16 அந்த புருஷர்கள் மூவரும் புறப்பட்டார்கள் சோதோமை நோக்கி ஆபிரகாம் வழிவிட்டனுப்பும்படி கொஞ்சதூரம் கூடவே போனார். இது ஒரு மரியாதையான வழக்கம் நல்ல பழக்கம் கனம் பெற்றவர்களை கூடச் சென்று வழியனுப்புவதில் அநேக நன்மைகள் உண்டு.

ஆதி.18:17-21 ஆபிரகாமைக் குறித்து தேவனுடைய சாட்சி :- ஆபிரகாம் தன் பிள்ளைகளுக்கும் வீட்டாருக்கும் என்னைக் குறித்துப் போதித்து நீதி, நியாயங்களின்படி நடக்கச் செய்வான் என்று அறிந்திருக்கிறேன் என்றார். என்ன

அருமையான கர்த்தருண்டைய சாட்சி. இந்நாட்களில் பக்தியுள்ளவர்களாய்க் காணப் படுகிறவர்களும் தங்கள் பிள்ளைகளுக்கு கர்த்தருடைய இரட்சிப் பின் வழியைப் போதித்து கண்டிப்பாய் கர்த்தருடைய வழிகளில் நடத்த விரும்புவதில்லை, அவர்கள் பெரியவர்களான பின் இரட்சிக்கப் படுவார்கள் நாம் கட்டாயப் படுத்த முடியுமா என்று நினைக்கின்றனர், அப்படியே சொல்லுகின்றனர். இப்படியே அநேக போதகர்களுடைய, விசுவாசி களுடைய பிள்ளைகள் குடும்பத்தினர் மூலம் தேவனுடைய நாமமும் மார்க்கமும் தூஷிக்கப்படுகின்றது. சாத்தான் இப்படிப்பட்டவர்கள் மூலம் தேவனுடையமார்க்கத்தை மேற் கொள்ளுகிறன். உணவுக்கும், உடைக் கும், உறைவிடத்திற்கும் பெற்றோர்களைச் சார்ந்திருக்கும் பிள்ளைகளுக்கு நித்திய நன்மைகளை வருவிக்கும் தெய்வீக பக்தியில் இரட்சிப்பின் வாழ்க் கையில் நமக்கு நன்மையென்று தெரியும் வழியில் பிள்ளைகளை கட்டாய மாய் நடத்துவது பெற்றோரின் கடமையாகும்.

கர்த்தருக்குப் பயந்து நடந்த ஆபிரகாமுக்கு தேவன் தான் செய்யப் போகிறதை அறிவிக்கிறர், தாம் செய்யப் போகிறதை ஆபிரகாமுக்கு மறைக்க மாட்டேன் என்கிறர். ஆம், கர்த்தருக்குப் பயந்தவர்களிடம் அவருடைய இரகசியம் இருக்கிறது (சங். 25 : 14) கர்த்தருக்குப் பயந்தவர்களுக்கு தமது வழியைப் போதிக்கிறர் (சங். 86:11). தம்முடைய தீர்க்கதரிசிகளாகிய தம்முடைய ஊழியக்காரருக்கு அறிவியாமல் கர்த்தர் பூமியிலே ஒரு காரியத்தையும் செய்யார் (ஆமோஸ் 3:7) தங்களுக்கு அறிந்த சத்தியத்திற்குக் கீழ்ப்படியாமல் தங்களைக் கெடுத்துக் கொள்ளுகிறவர் களுக்கும் (யூதா 10) தேவனுடைய மார்க்கத்தைப் பற்றி (வழி) வைராக்கிய மில்லாதவர்களுக்கும், பண்பாடு இல்லாதவர்களுக்கும் தேவன் தம்முடைய இரகசியங்களை வெளிப்படுத்த மாட்டார். தாம் சோதோம் கொமோராவை அழிக்கப் போகிறதை கர்த்தர் ஆபிரகாமுக்கு அறிவித்தார்.

ஆதி. 18:22 ஆபிரகாம் கர்த்தருக்கு முன்பாக நின்று கொண்டிருக்கிறர். கர்த்தருக்கு முன்பாக நிற்பது சிலாக்கியமும், ஸ்தானமுமாகும். அதற்கு நாம் தகுதி யுடையவர்களாயிருக்க வேண்டும். காபிரியேல் சொல்வதைப் பாருங்கள் -லூக். 1 : 19.

ஆதி. 18 : 23-33 ஆபிரகாமின் பரிந்துபேசுதல்:- சோதோம் கொமோராவில் (50) ஐம்பது நீதி மான்கள் இருந்தால் அவர்களினிமித்தம் அந்த ஸ்தலத்தை இரட்சிக்க வேண்டும். துன்மார்க்கரோடு நீதிமான்களை அழிக்காதிரும் என்று இறை வனிடம் மன்ருடுகிறர். ஐம்பது நீதிமான்கள் இருந்தால் அவர்களினி மித்தம் அந்தப் பட்டணத்தை அழிக்கமாட்டேன் என்றர் இறைவன். மறுபடி, மறுபடி ஐந்து தரம் மன்ருடினதினிமித்தம் பத்து நீதிமான்கள் சோ தோம் கொமோராவில் இருந்தாலும் அதை அழிப்பதில்லை என்றர் தேவன். பின்பு கர்த்தர் போய் விட்டார். ஆம் நீதிமான்களினிமித்தம் உலகம் காக்கப்பட்டு வருகிறது.

ஆதி. 19 : 1 கர்த்தர் கூடவந்த தூதர்கள் இருவரும் சோதோமுக்குப் போகிறர்கள். லோத்து சோதோமின் ஒலிமுகவாசலில் உட்கார்ந்திருக்கிறர். இதனல் இவர் சோதோமில் உள்ள பெரிய மனிதர்களில் ஒருவராகி விட்டார் என்று அறிகிறோம். சோதோமின் ஜனங்கள் மகா பாவிகளும், பொல்லாத வர்களுமாயிருந்தார்கள். இதை அறிந்தும் தன் குடும்பத்தின் சன் மார்க்க

ஜீவியத்தைப் பற்றி ஆவிக்குரிய வாழ்க்கையைப் பற்றியும் கவலைப்படாமல் பிழைப்பையே நோக்கமாகக் கொண்ட லோத்து சோதோமை தெரிந்து கொண்டு சோதோமுக்கு எதிரே முதலாவது கூடாரம் போட்டவர் (ஆதி 13 : 12) அடுத்தபடி சோதோமுக்குள் குடியிருக்கிறார். (ஆதி. 14: 12; 19: 3) பிறகு பார்க்கிறோம் சோதோமின் ஒலிமுகவாசலில் அமர்ந்திருக்கும் அளவு ஊரில் பெரிய மனிதனாகிவிட்டார். பட்டணத்தின் வாசல்களில் ஒலிமுக வாசல்தான் பிரதான வாசல் அதன் நுழை வாயிலண்டை நியாயவிசாரணை மேடையிருக்கும் ஊரின் பெரியமனிதர்கள் மூப்பர்கள் அங்கே கூடி ஊர் வழக்குகளைத் தீர்ப்பார்கள், மந்திராலோசனைகளைச் செய்வார்கள். காண். ரூத் 4:1-12; உபா 21:19-21.

(தொடரும்)

> "இதோ, கெர்வமும் ஆகாரத்திரட்சியும், நிர் விசாரமான சாங்கோபாங்கமுமாகிய இவைகளே உன் சகோதரியான சோதோமின் அக்கிரமம்; இவைகளே அவளிடத்திலும் அவள் குமாரத்திகளிடத்திலும் இருந்தன "
>
> எசேக். 16 : 49

(சென்ற இதழ் தொடர்ச்சி)

# உத்தமராகிய யோபு

வெட்கமடைந்த சாத்தான் தன்னை சமாளித்துக் கொண்டு மறுபடியும் தன்னுடைய திட்டத்தை நிறைவேற்ற முயற்சி எடுக்கிறான். யோபுடைய சரீரத்தை வேதனைப் படுத்த உத்தரவு பெற்று தன்னுடைய உக்கிர கோபத்தை எல்லாம் யோபு மீது ஊற்றினான். தாங்கொண்ணு வேதனை. அவருடைய மனைவியை தூண்டி வாயின் அம்பினால் அவரை குத்த செய்து வன்மத்தோடு தன் கண்களை உருட்டி, இமை கொட்டாது யோபுவின் வாயை உற்றுப் பார்க்கிறான். இப்போதாவது யோபு தேவனை தூஷிக்கிறாரா வென்று. முஞ்சை திருப்பிக் கொண்டு போயே போய்விட்டான். அப்புறம் அவன் ஏன் கர்த்தருடைய சந்நிதியை எட்டிப் பார்க்கிறான். யோபு தன் மனைவியைப் பார்த்து "நீ பயித்தியக்காரி பேசுகிறது போலப் பேசுகிறாய். தேவன் கையிலே நன்மை பெற்ற நாம் தீமையையும் பெற வேண்டாமோ என்றார்; இவைகள் எல்லாவற்றிலும் யோபு தன் உதடுகளினால் பாவஞ் செய்யவில்லை"-யோபு 2 : 10.

அருமையானவர்களே, சரீரத்தில் வேதனை வரும் போது தெய்வத்தின் மீது கசப்பு உண்டாகிறதா, எரிச்சல் உண்டாகிறதா, நான் அவருடைய பிள்ளையானால் என்னை ஏன் இப்படி வாதிக்க வேண்டும் என்ற கேள்வி எழும்புகிறதா? சரீரத்தில் வாதை வந்தால் கஷ்டந்தான், என்ன செய்வது. கஷ்டந்தான். முறுமுறுக்கலாமா, அப்படி செய்தால் அழிந்து போவோமே. யோபுவைப் பாருங்கள். கர்த்தரிடம் பெற்ற நன்மைகளை ஒவ்வொன்றாய் எண்ணிப் பார்த்தார்(யோபு 2 : 10)ஆ, அது எத்தனை அதிகம். இப்போதுண்டாயிருக்கிற தீமையையே பெரிதுபடுத்தி திரளான நன்மைகளை மறக்கலாமா? யோபுவின் மனைவியைப் போன்று தேவனை மறுதலித்து தூஷிக்கலாமா? அப்படிச் செய்யாதே. இறைவனிடம் நன்றி உள்ளவனாயிரு.

யோபு சுகித்திருந்த நாட்களில் தேவனிடத்தில் விசுவாசமுடையவராயிருந்தார், ஆஸ்திபோயாயிற்று, பிள்ளைகள் மரித்தாயிற்று, அந்தஸ்து போய்விட்டது, இப்படி முழுவதும் நொடித்து போனதுபோதாதென்று

சரீரமும் சிதைந்து தெருவுக்கு வந்தாச்சு. இவருடைய துக்கம் மகா கொடிய துக்கம் என கண்டு, அவருடைய அருமையான நண்பர்கள் ஏழு நாட்கள் பேச நா எழாமல் துக்கத்தால் நிறைந்து அவரோடு இராப் பகல் தரையில் உட்கார்ந்திருந்தார்கள் (யோபு 2 : 13). இவருடைய துயரம்எவ்வளவு பெரியது. "கடவுள் என்று ஒருவர் இருந்தால் இந்த கஷ்டம் ஏன் வருது? இந்தக் காரியத்தி லேயே கடவுள் காப்பாற்றவில்லை. இனிமேல் என் வாழ்வில் எதைச் செயயப் போகிறார்? போதும் போதும் காணதக் கடவுளை நம்பும் கண்மூடித்தனம்" என்று யோபு பேசிவிடு வார் என்று சாத்தான் எதிர்பார்த்திருப்பான். இந்நிலையிலும் அந்த பக்தர் சொன்னார்:

"அவர் (கர்த்தர்) என்னைக் கொன்று போட்டாலும் அவர்மேல் நம்பிக்கையாயி ருப்பேன்" (யோபு 13 : 15) என்று. எவ்வளவு பெரிய விசுவாசம் பாருங்கள். இந்த பக்தன் வேதாகமத்தில் எவ்வளவு முக்கியத்துவம் பெற்றிருக்கிறார் பாருங்கள். நித்திய கால மாய், துயரப்படுகிற யாவருக்கும் ஆறுதல ளிக்க கூடிய மாறாத ஸ்தானத்தில் தேவன் அவரை வைத்து விட்டார்.

பிரியமானவர்களே, இந்த மனிதருடைய துன்பங்களை விடவா நம்முடைய துன்பங் கள் தாண்டிச் செல்கிறது. அவரிடமிருந்து விசுவாசத்தைக் கற்றுக் கொண்டு அவிசுவா சியாயிராமல் விசுவாசிகளாக இருப்போ மாக.

துக்கம், ஏமாற்றம், சலிப்பு, வாழ்க்கை யில் கசப்பு ஏற்படக் கூடிய சமயங்களில் இவைகள் ஒரு திரையைப் போல் தேவனு டைய முகத்தை மறைக்கிறது. இச்சந்தர்ப்பங் களில் சாத்தான் இறங்கி நாம் இருதயத்தில் துணிகரங் கொண்டு நீதிவழுவி பாவம்செய்ய தூண்டுகிறவனாகயிருக்கிறான். யோபுவிடமும் அப்படி செய்து பார்த்தான். அவர் சொல்லி விட்டார். என் நீதியை கெட்டியாய்ப் பிடித் திருக்கிறேன். நான் அதை விட்டு விடேன், ஆகையால் நான் குற்றவாளி என்று என் உயிருள்ளவரை என் இருதயம் என்னை நிந்திக்காது (யோபு 27 : 6) என்று நாமும் நம்மை தூண்டுகிற சாத்தானிடம் அப்ப டியே சொல்லி அவனை வெட்கப்படுத்தி விரட்டுவோமாக. கேவலம் இந்த அற்ப காரியத்திற்காகவா பரிசுத்தன் என்று பெயர் பெற்ற நாம் அசுத்தனாக வேண்டும்.

யோபு பக்தரிடம் கற்றவைகளினால் தேர்ச்சி அடைவோமாக. சாத்தானை தோற்கடிப்போமாக, அவனுடைய திட் டத்தை சிதைப்போம், அவனுடைய அபிலா சைகளை நிறைவேறாமல் போக செய்வோ மாக.

பொதுவாக வாழ்க்கையில் ஒரு இழப்பு வரும் போது, எதிர்பார்த்த ஒன்று கைகூடி வராமல் போகும் போது, தோல்வி வரும் போது, விரும்பியது கிடைக்காமல் போகும் போது நினைத்ததற்கு முற்றிலும் மாறாய் நடக்கும் போது வியாகுலமும் வருத்தமும் ஏமாற்றமும் ஏற்படுவதுண்டு.

இந்த சமயங்களில் நம்முடைய வாயி னால் தேவனை தூஷிக்கவும், அவரைப் பற்றி குறை சொல்லவும், முறுமுறுக்கவும் அவர் மீது குற்றம் சாட்டவும் சாத்தான் தூண்டு வான்.

இறைவனால் யோபு உத்தமன் என நற்சாட்சி பெற்றார். நாமும் தேவன் அருளு கிற சலுகைகளுக்காக மாத்திரம் அவர் மேல் பக்தி, விசுவாசம் உடையவர்களாய் அவரைத் தொழுது கொள்ளாமல் அவர் மேலுள்ள அன்பினால் அவரைத் துதித்து ஆராதித்து. அவரை மகிமைப்படுத்தி உத்த மன் என்று சாட்சி பெறுவோம்.

---

"யோபின் பொறுமையைக் குறித்து கேள்விப்பட்டிருக்கிறீர்கள்"—யாக். 5 : 11

---

பாலர் பகுதி

# அப்சலோமின் கற்குவியல்

அவர் ஒரு பிரபு, நாஸ்த்திகர் கப்பற் படையில் Captain ஆக இருந்து ஒய்வு பெற்றதும் தன்னுடைய வாழ்க்கையில் வேதாகமம் (Bible) பொய் என்பதை நிரு பிக்கப் போகிறேன் என்று வேதாகம சம் பவங்களை ஆராய்ச்சி செய்ய புறப்பட்டார். அவருடைய மனைவியோ மிகவும் பக்தி யுள்ள ஸ்திரீ. கடவுள் உண்டு, வேதாகமம் உண்மையானது; நீங்கள் வீணே பிரயாசம் எடுக்காதிருங்கள் என்று சொல்லியும் அவர் கேட்கவில்லை. தனக்கு உதவியாக பலஆட் களைக் கூட்டிக்கொண்டு புதைபொருள் ஆராய்ச்சியில் இறங்கினர். கடலாவது வழி விடுவதாவது. கடல் இரண்டாகப் பிளந் தது என்று யாத். அதி 14 ஐ பொய் என்று நிருபிக்க விரும்பி இஸ்ரவேலர்கள் கடலில் இறங்கியதாகவும் கரையில் ஏறியதாகவும் கூறப்பட்டுள்ள இடத்தைக் கண்டு பிடித்து பல நவீன சாதனங்களுடன் ஆராய்ந்தார், திகைப்படைந்தார்.

மலைகளோ, பாறைகளோ இல்லாமல் ஒரு ரோடு போன்ற பாதை கடலில் இருப் பதைக்கண்டு தம்முடைய ஜனங்களுக்கு வழிவிட மலைகளும், குன்றுகளும் துள்ளி விலகின என்பதையும் யோசித்தார் (சங். 114:3-6). பின்னொருநாள் எப்பிராயீம் காட் டில் பிரபுவும் அவரது கோஷ்டியும் பிரயாணம் செய்து கொண்டிருந்தனர். அங்கே ஒரு கற்குவியலைக் கண்டனர். அந்த வழியாக ஒரு தாயும் அவளது சிறிய மகனுமாக வந்து கொண்டிருந்தனர். அப்பொழுது அந்த தாய் மகனைப் பார்த்து தூரமாய்க்கிடந்த கல் ஒன்றை எடுத்து அந்த கற்குவியலில் போ டும்படி பணித்தாள். சிறுவனும் அப்படியே செய்துவிட்டு இந்தக் கற்குவியல் என்ன அம்மா என்றான். தாய் மகனுக்கு விளக் கிச் சொன்னாள்.

முற்காலத்தில் தாவீது ராஜா என்ற ஒரு பெரிய இராஜா ஒருவர் இருந்தார். அவருக்கு அப்சலோம் என்றொரு மகன் இருந்தான். அவன் தகப்பனுக்கு கீழ்ப்படியாமல் துரோ கம் செய்து சண்டையிட்டான். முடிவில் சண்டையில் கொலை செய்யப்பட்டு அகால மரணமடைந்தான். அவனை இங்கே குழி யில் போட்டு கற்களை அவன் மேல் குவிய லாக குவித்து போட்டிருக்கிறார்கள். நீயும் கீழ்ப்படியாதவனாக ஆகாதபடி இதில் கல் லெடுத்து போடச் சொன்னேன் என்றாள்.

இதை செவி மடுத்து பிரபுவும் அவரது குழுவும் அந்த அம்மாளுடன் பேசி மறுப்பு கொடுத்தார்கள். இது வெறும் கற்குவியல் தான் இதில் விசேஷம் ஒன்றுமில்லை என்ற னர். அந்த அம்மாளோ எங்கள் முற்பிதாக் களுக்கு முற்பிதாக்கள் முதல் ஆதிகால முதலே இப்படி போதிக்கப்பட்டு வருகிறது. இது பொய்யல்ல நீங்கள் வீணர்கள் என்று திட்டிவிட்டு வழியே தன் மகனுடன் சென்று விட்டார்கள். பிரபுவோ அதை ஆராய்ந்து பொய் என்று நிருபிப்பேன் என்று வஞ்சினம் கூறி தன் ஆட்களுடன் பல மாதங் கள் அக்கற்குவியலை மாற்றி வேறு இடத்தில் குவித்தார்கள்.

கடைசியில் அதில் ஒரு எலும்புக்கூடு நசுங்கி இருப்பதைக் கண்டு அதை ஆராய்ந்தபோது இத்தனை ஆண்டுகளுக்கு முன்னுள்ளது என்று கண்டு திகைப் படைந்து II சாமு. அதி. 18 ன் சம்பவம் உண்மையென்று கண்டனர். பத்து (10) வருட ஆராய்ச்சியினால் வேதாகமத்தின் ஒரு சம்பவத்தைக் கூட பொய்யென்று நிருபிக்க முடியவில்லையே. செல்வமெல்லாம் அழிந் ததே என்று மனம் வருந்த வீட்டில் போய் அமர்ந்தார் அந்த பிரபு. அவருடைய பக்தி யுள்ள மனைவி விசாரித்தாள். நான் முன்னே சொன்னேனே இப்பவும் ஒரு காரியம் செய்யுங்கள், உங்கள் ஆராய்ச் சியையெல்லாம் உண்மையென்று நீங்கள் கண்டறிந்ததை விசுவாசியுங்கள், வேதத் தின் கடவுளை நம்புங்கள், உங்கள் ஆராய்ச் சியை ஒரு புஸ்தகமாக எழுதி வெளியிடுங் கள்; கடவுள் உங்கள் பிரயாசத்தை ஆசீர்

வதிப்பார் என்று ஆலோசனை சொன்னான். பிரபு அப்படியே செய்தார்; மெய்பக்தரானார். தன் ஆராய்ச்சிகளை புஸ்தகமாக எழுதி வெளியிட்டார். புஸ்தகம் அமோக விற்பனையாயிற்று.

பிள்ளைகளே! அப்சலோமைப் போலிராதேயுங்கள். தேவனுக்கும் பெற்றோர்களுக்கும் கீழ்ப்படிகிற பிள்ளைகளாயிருங்கள். கர்த்தர் உங்களை ஆசீர்வதிப்பார்.

---

"பிள்ளைகளே, உங்கள் பெற்றோருக்குக் கர்த்தருக்குள் கீழ்ப்படியுங்கள், இது நியாயம்" —எபே. 6 : 1

---

மாதர் பகுதி

## ஸ்திரிகள்

பெண்கள் ஆண்களுடன் சரிசமமாக எல்லா விஷயங்களிலும் போட்டியிடும் காலம் இது. திருச்சபை வாழ்விலும் இந்த நிலை தோன்றியுள்ளது. வேதாகமத்தை தங்களுடைய சட்ட நூலாக கொண்டிராத சில கிறிஸ்தவ கூட்டாமைகளிலே ஸ்திரீகள் குருக்களாகின்றனர் என்றும் கேள்விப்படுகிறோம். ஸ்திரீகள் பாடலாமா? ஜெபிக்கலாமா? ஞாயிறு பாடசாலை நடத்தலாமா? பெண்கள் கூட்டங்களில் பேசலாமா? என்பதல்ல கேள்வி. பொருத்தமான இடங்களிலும், நேரங்களிலும் தங்கள் திறமைக்குத்தக்கபடி ஸ்திரீகள் நாம் மேலே குறிப்பிட்ட ஊழியங்களில் எதையாகிலும் அவர்கள் செய்யலாம். கர்த்தருக்குள் சந்தோசப்படலாம். நமது கேள்வி அவர்கள் குருக்களாய், சுவிசேஷகியாய், சபை ஊழியக்காரியாய் தலைமை வகிக்கிறவளாய் இருக்கலாமா? என்பதே.

வேதாகமம் இதைக் குறித்து என்ன சொல்கிறது? வேதாகமம் 1600 வருஷங்களாய் 40 க்கும் மேற்பட்ட பக்தர்களால் எழுதப்பட்டதாயினும் இரண்டு அட்டைகளுக்கு நடுவில் ஒரே நூலாக அமைந்துள்ளது. முதல் பக்கம் முதல் முடிவு பக்கம் வரை தேவன் மனித இனத்துக்கு அருளும் முரண்பாடில்லாத ஒத்திசைவுடைய அருட்செய்தியை உடையதாயிருக்கிறது. தேவ ஆவியால் இது அருளப்படவில்லை என்றால் எவரும் மனித மனதால் நினைத்து பார்க்கவும் முடியாதவையாகும். வேதாகமம் தன்னுள் தானே முரண்படவில்லை. ஆனால் மனிதர்கள் கடவுளுடைய திருவுளத்தை விளங்கிக் கொள்ளும் முயற்சியில் ஒருவருக்கொருவர் முரண்படலாம். வேதாகமம் தானே முரண்படுவதில்லை. பெண்களின் ஊழியத்தைப் பற்றி வேதாகமம் என்ன சொல்லுகிறது என்பதே கேள்வி.

ஆண், பெண் இருவரின் உண்மையான பால் உறவு முறையாவது என்ன. புதிய ஏற்பாடு இதைப் பற்றி என்ன சொல்கிறது? வேத வசனத்தின் எந்த பகுதிக்கும் விளக்கம் சொல்லி அதனை வேண்டாம் என்று நீக்கி விடுதல் நமது வேலை அன்று. வேத வாக்கியங்கள் எந்த பொருளைப் பற்றியேனும் அது கொடுக்கும் உபதேசத்தின முடிவே எல்லா விதமான கருத்து வேறுபாடுகளுக்கும் முடிவு கட்டுவதாகும். வேத வாக்கியங்கள் பேசும் இடத்தில் நாம் பேசுகிறோம் வேத வாக்கியங்கள் பேசாத இடத்தில் நாமும் பேசாமல் இருக்கிறோம். தேவனாகிய கர்த்தர் தம்முடைய சாயலின் படியும் ரூபத்தின் படியும் மனிதனை உண்டாக்குவோமாக என்றார். அவர்களை ஆணும் பெண்ணுமாக உண்டாக்கினார் —ஆதி. 1 : 27. மனிதன் தனிமையாயிருப்பது நல்லதல்ல என்று கண்ட கர்த்தர் அவனுக்கு ஏற்ற துணையை சரிநிகரான துணையை உண்டாக்குவோம் என்று ஆதாமை நித்திரைக்குள்ளாக்கி அவன் விலா எலும்புகளில் ஒன்றை எடுத்து மனுஷியை உருவாக்கினார். ஆதாமிடம் கொண்டு வந்து விட்டார்; அவள் அவனுக்கு மனைவியானாள் —ஆதி. 2 : 21-24. மேலே சொல்லப்பட்ட வேத வாக்கியங்களின்படி ஆணும் பெண்ணும் ஒரே இயற்கையும் ஒரே இன அமைப்பும் ஆனால் வெவ்வேறான பால் பண்பும், அப்பால் பண்புக்கு ஏற்றார் போல் வெவ்வேறான சிறப்பியல்புகளும் உள்ளவர்களாய் விளங்குகின்றனர். அவர்கள் இருவரும் தோழமை உள்ளவர்கள், ஒருவர் குறையை மற்றவர் நிரப்பி இப்படி ஒருவரையொருவர் முழுமை

யாக்கும் பண்பினர். ஒரே சுபாவமுடையவர்களான படியால் ஆடவரும் பெண்டிரும் பல பண்புகளில் பொதுவாக ஒத்துள்ளனர். ஆனால் பால் வேறுபாட்டிற்கு ஏற்றபடி உடலிலும் உள்ளத்திலும் ஒழுக்க நலத்திலும் ஒருவருக்கொருவர் ஒத்திசைவான வேறுபாட்டு அமைப்புள்ளவர்களாக விளங்குகின்றனர். பெண்கள் பொதுவாக ஆண்களை விட சிறியவர்களும் பலவீனமுள்ளவர்களுமாக விளங்குகின்றனர். பெண்டிர் உறுப்பமைதி ஆடவர் உறுப்பமைதியை விட மென்மையும் உணர்வு நுட்பமும் உடையது. இதனாலே தான் பொதுவாக பெண்கள் ஆண்களை விட சமுதாய வாழ்விலே சுமையையும், பெருங்கூட்டங்களிலே ஏற்படும் மனக்கிளர்ச்சியைத் தாங்க கூடாதவர்களுமாயிருக்கிறார்கள். விதிவிலக்கு இருக்கலாம். சரீரத்தைப் பொறுத்தவரையில் ஆண் தான் பெண்ணுக்கு காவலன். அவன் உடல் வல்லமையும் கடின உழைப்பும் உடையவன் பலவீனப் பாண்டமாகிய பெண்ணுக்குப் பாதுகாப்பு தேவை.

(தொடரும்)

"உன் ஆசை உன் புருஷனைப் பற்றியிருக்கும், அவன் உன்னை ஆண்டு கொள்ளுவான் என்றார்" ஆதி. 3 : 16.

# THE KINGDOM OF GOD [CHURCH]

O' Theophilus, after resurrection, Jesus Christ, being seen of the apostles forty days talked with them the things pertaining to the Kingdom of GOD [Acts 1:3].

Glory to the Holy name of GOD. Our Lord Jesus Christ gave commandments to the apostles through the Holy Spirit only after resurrection [Acts 1:1], and sent them (Disciples) as apostles into the world to do the ministry which he had left, and to build the Church, that is to establish his spiritual Kingdom. (Jn. 20:23; Acts 1:1)

The Kingdom of God and the Church mean the same [Acts 20:25—28]. We read in the Gospel that Jesus Christ said, ' I will build my Church" [Mt. 16:18]. That Church is called as the fellowship of GOD. It has power to bind and loose and to remit and retain the sins; Jesus said, when this is done here, the same is done in heaven [Mt.18:15—18; 16:16—19; Jn. 20:23].

After this we don't see the word Church in the Gospels. If it is so, has not Jesus told anything about the Church? He said a lot. All the things which the Lord mentioned as the Kingdom of GOD and the Kingdom of heaven represent the Church only. It will be clear when you put the word Church and read in the place of Kingdom of GOD or Kingdom of heaven. Seeing Him transfigured at the mount of transfiguration, and or seeing Moses and Elijah, the heavenly dwellers, the disciples marvelled. Before that incident, GOD said, "There be some of them that stand here, which shall not taste of death, till they have seen the Kingdom of GOD come with power [Mt. 17:1—13; Mk. 9:1]. The Kingdom of GOD mentioned here doesn't refer to the millennium [1000 years reign]. But Jesus referred to the Kingdom of GOD [The Church] which was established on the day of pentecost. Casting out the demons, healing the sick, He comforted the people and told them." The Kingdom of GOD is come unto you because I have cast out the devils by the spirit of GOD [Mt. 12:28]. By saying this He meant, these things will happen in the Kingdom of GOD [The Church]. To enter into the Kingdom of GOD, the church and to see its glory. The Son of God must be lifted up (Jn. 3:14, 15] and a person, having faith in Jesus must obtain the regeneration of baptism with water, and Spirit. Otherwise no one can enter into the Kingdom of GOD. Thus said Jesus [Jn. 3:16—18, 3, 5]. He commanded to pray that the Kingdom may come (Mt. 6:10).

Those who had accepted the word of Peter with joy in the day of Pentecost, took baptism with water and became citizens of the Kingdom of GOD, that is, they were added into the Church. GOD added everyday into His Kingdom those who were saved thus, that is those who believed Jesus and took baptism, having repented (Acts 2:38—47]. In the day of pentecost the Church was established in the earth (Acts 2:2). From that day onwards the apostles who were at the beginning, evangelists and disciples were not only preaching about Jesus but also about the church. They preached that one must take baptism and receive the Holy Spirit to enter into the church and hence those who heared them took baptism at once—Refer: When they believed Philip preaching the things concerning the Kingdom of GOD and the name of Jesus Christ, they were baptised both men and women (Acts 8 12). The main theme of Apostle Paul's preaching was about the Church, which is the Kingdom of GOD [Acts 16: 30—34; 20:25; 28 23,31]. Apostle Paul says "GOD delivers mankind from the power of darkness and translates them into the Kingdom of his dear son [Col. 1:13; Acts 26:18]

But nowadays, many say, a church is not essential, having faith in Jesus Christ is sufficient and few say, baptism with water and the baptism of the Holy Spirit are not needed and there are still some others who are of the opinion that one can join in any group, society, assembly or mission according to his will and pleasure. There are also people who say, "This is not important, that is not important; this is the doctrine of that Church or this church (We should not reject any traditional doctrine of any denomination if it is based on the Scriptures) and certain people claim themselves to be the bride eventhough they haven't received the commandment of GOD (Acts 1:1). These people rise up and spoil themselves and others who hear their words, babbling perverse things. They do not preach about the Church of GOD, because they do not know about the Church of GOD, for they do not have any apostles. After resurrection Jesus appeared unto the apostles forty days and taught them about the Church of GOD, that is, He commanded (Acts 1:3,2,1) The secrets of the church are not known to them who haven't received commandment directly from the risen Lord. He showed (shows) himself only to the apostles and commanded (is commanding) them to build the church. Some claim "We are also apostles", and name their church saying, GOD revealed this to them. Afterwards that name is erased and they call themselves by some other name. They change their doctrine also. But God said, "See, that thou make all things according to the pattern showed to thee in the mount" (Heb. 8 5). Is there no mention in the scriptures about the pattern of the church? The scriptural words are not of any private interpretation [II Pet. 1:20, 21].

There is a specific thing as GOD's will (plan) which is perfect good any acceptable. Anything which is contrary to this, will perish and will not attain perfection

If there is a Kingdom, there should be a King, laws, officers (ministers) and obedient citizens [Eph. 4:11—13; I Cor. 3 9; Acts 20:28]. Here there are no means for them to exercise their own will.

We speak things concerning. The Lord Jesus Christ, and the Kingdom of GOD (Church). We do the things that were preached and done by the apostles who were at the beginning. The message concerning the church (Kingdom) the gospel of the Kingdom, shall be preached in all the world for a witness unto all nations, and then shall the end come [Mt. 24:14].

"Preaching the Kingdom of GOD and teaching those things which concern the Lord Jesus Christ"

—Acts 28 31

# புதிய எருசலேம் செய்தி

எக்காளசத்தம் - 11 * நவம்பர் '84




"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ, நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள்.... விழித்திருங்கள்...உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லோருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்...,"

மாற்கு 13 : 35-37

**EDITOR: CHIEF PASTOR N. LAZAR**

BOMBAY. INDIA

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லோரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒருமனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும் படியாகவும் தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய்க் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும்; சபையானது வஞ்சக போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது.

(எபே.4:11-16)

## இதழின் உள்ளே



"கோவில்பட்டியில் கர்த்தருக்கென்று ஒரு ஆலயம் கட்ட வேண்டும். அதற்காக எல்லோரும் ஜெபிக்கவும். ஏவப்படுகிறவர்கள் தங்கள் அன்பின் காணிக்கையை Pastor S. Sundarraj, New Jerusalem Church, 22, South Car Street, Vallioor, Tamilnadu-627117 என்ற முகவரிக்கு அனுப்ப வேண்டுகிறோம்"

# ஆசிரியர் உரை

இக்காலங்களில் எல்லோரும் கூட்டம் கூடவும், ஆட்சேர்க்கவும், ஒற்றுமையாயிருக்கவேண்டும் அப்பொழுதுதான் எதிரிகளை மேற்கொள்ளமுடியும், பல காரியங்களை சாதிக்க முடியும் என்று அறிந்துள்ளனர். அப்படியே வெவ்வேறு மதக்காரர்களும் கூட ஆரம்பித்துள்ளனர். பல சிறு பிரிவுகளை ஒன்ருக்கி பெரிய கூட்டமாக செயல்பட துவங்கியுள்ளனர். அவ்வாறே கிறிஸ்தவர்கள் என்று சொல்லிக் கொள்ளுகிறவர்களும்கூட (Spiritual Politicians) முயற்சி செய்கின்றனர். முயற்சி நல்ல முயற்சிதான். ஆனால் செயல்முறைதான் மனுஷிகயுக்தியாயிருக்கிறது. இதனல் தோல்வியடைவர். கிறிஸ்தவர்கள் ஒன்ருயிருக்க வேண்டும் அது கிறிஸ்துவின் நோக்கமும், ஜெபமுமாயிருக்கிறது (யோவான் 17: 21- 23). அந்த ஜெபம் நிறைவேற நாம் எல்லோருமே ஜெபிக்க வேண்டும்; முயற்சிக்க வேண்டும். கிறிஸ்தவர்கள் முதலாவது வசனத்தின்படி ஜீவிக்க ஒப்புக்கொள்ள வேண்டும் (எபே 4: 1). அடுத்தபடி கர்த்தருடைய வசனத்துக்குக் கீழ்ப்படிய வேண்டும் (பிலிப் 2: 14, 12). இப்படி செய்து ஜெபித்து, முயற்சிக்கும் போது ஆவியில் ஒன்ருவோம், வெளிப்படையாயும் ஒன்ருவோம். அப்படியில்லாதபடி கிறிஸ்தவர்கள் என்று சொல்லிக் கொள்ளுகிறவர்கள் எதுவும், எப்படியும் இருக்கட்டும், கிறிஸ்தவ மதம் என்ற அடிப்படையில் ஒன்ருகலாம் என்பது ஒருபோதும் ஆகாது; முடியாது. தேவ வசனத்தின்படி ஜீவிக்க ஒப்புக்கொண்டு கீழ்ப்படிகிற எல்லாரும் ஒன்ருவார்கள், ஒரே சரீரமாவார்கள் (சபை). கிறிஸ்து அதன் தலையாயிருப்பார். இந்த கிறிஸ்தவர்களுக்கு எல்லாம் நன்மையாக முடியும். ஒரே சரீரமாகுவோமாக. தேவ கிருபை நம்மோடிருக்கும்.

கிறிஸ்துவுக்குள்,

N. Lazar

Chief Pastor N. LAZAR

# இந்த ஜாதிப் பிசாசு

**"இந்த ஜாதிப் பிசாசு, ஜெபத்தினாலும், உபவாசத்தினாலுமேயன்றி வேறு எவ்விதத்தினாலும் போகாது"-மத். 17:21**

இயேசு இரட்சகருடைய ஊழிய நாட்களில் தாம் உலகத்தில் நிறைவேற்ற வந்த இரட்சிப்பின் ஊழியத்திற்காக தாம் தெரிந்து கொண்ட சீஷர்களுக்கு உபதேசம் பண்ணவும், சகல வியாதிகளையும், சகல பிசாசுகளை துரத்தவும் அதிகாரம் கொடுத்திருந்தார். அவர்கள் அப்படியே செய்தும் ஆண்டவரிடத்தில் வந்து: ஆண்டவரே, உம்முடைய நாமத்தினாலே பிசாசுகளும் எங்களுக்கு கீழ்ப்படிகிறதே என்று சந்தோஷப்பட்டார்கள். அப்படியிருக்க, இந்த ஜாதிப் பிசாசு பிடித்திருந்த ஒரு பையனுடைய தகப்பன், அவனை சுகப்படுத்த சீஷர்களிடம் கொண்டு வந்தான். சீஷர்கள் அந்த ஜாதிப் பிசாசைத் துரத்த எவ்வளவோ பிரயாசப்பட்டும் முடியாமல் அவனை இயேசுவிடம் கொண்டு வந்து, அந்த மனுஷன் "ஆண்டவரே, இந்த பிசாசைத் துரத்த உம்முடைய சீஷர்களால் முடியவில்லை; நீர் இரங்கி இவனை சுகப்படுத்தி அனுப்பும்" என்று பணிந்துக் கொண்டான். இயேசு சீஷர்களை கடிந்து கொண்டு: 'விசுவாசமில்லாத மாறுபாடான சந்ததியே! நான் எதுவரைக்கும் உங்களோடு பொறுமையாயிருப்பேன்' என்று சொல்லி, அந்த பிசாசை அதட்டித் துரத்தினார். உடனே அந்த பிசாசு அவனை விட்டு நீங்கவே அவன் சொஸ்தமானான்.

அருமையானவர்களே! இந்த சத்தியத்திலிருந்து நாம் அறியக்கூடிய மறைவான ஆவிக்குரிய சத்தியம் இதில் அடங்கியிருக்கிறது. என்னவெனில், இயேசு இரட்சகர் தமது சீஷர்களுக்கு எல்லா பிசாசுகளையும் துரத்த அதிகாரம் கொடுத்திருந்தார். அதன்படி எல்லா பிசாசுகளும் புறப்பட்டு போயின. ஆனால் இந்த ஜாதிப் பிசாசைத் துரத்த அவர்களால் கூடாமல் போயிற்று. காரணம் என்ன? இந்த ஜாதிப் பிசாசு எல்லா பிசாசுகளை விட கொடியதும், நான் என்கிற அகங்காரமும், பெருமையும், மேட்டிமையும் நிறைந்த பிசாசு. இந்த ஜாதிப் பிசாசு உலகமெங்கும் வெளியரங்கமாய் கிரியை நடப்பித்துக்கொண்டு வருகிறது. இந்த ஜாதிப் பிசாசை துரத்தி முறியடிக்க பெரிய பெரிய சீர்திருத்த வாதிகள் எழும்பி வாதித்தும் முடியாமல் அது அகங்கரித்து சீறிக் கொண்டே நிற்கிறது. மேலும் மனுஷ ஜாதிகளான நம் எல்லாரையும் தேவன் ஒரே இரத்தத்தால் தோன்றப் பண்ணி பூமியின் மீதெங்கும் குடியிருக்கச் செய்தார். அப்படியிருக்க பரலோகத்திலிருந்து தள்ளப்பட்ட பிசாசானவன் ஜாதி பேதங்களையும், மார்க்க பேதங்களையும் உலக மக்களைக்கொண்டு நடப்பித்து, ஒரே இரத்தத்தால் தோன்றப் பண்ணின மனுஷ ஜாதியை சின்னபின்னமாக்கிக் கொண்டு வருகிறான். பரலோகத்தின் தேவன் இந்த பெருமை நிறைந்ததும், தமது சீஷர்களால் துரத்த முடியாததுமான இந்த ஜாதிப்பிசாசை துரத்தி நிர்மூலமாக்க தம்மை தாமே தாழ்த்தி, பிள்ளைகள் மாம்சத்தையும், இரத்தத்தையும் உடையவர்களான தால் நம்மைப்போல் ஒரு சரீரமெடுத்து மனுஷகுமாரன் என்னும் நாமமுடையவராய், அதாவது மனுமகனாய் மனுஷ குலமனைத்தையும் ஒன்றாய் இணைக்கும்படி இந்த உலகத்தில் தோன்றினார். இந்த ஜாதிப் பெருமை குலப்பெருமை, பணப்பெருமை, உத்தியோகப் பெருமை யாவையும் நிர்மூலமாக்கி தகர்க்க, ஆண்டவர் அடிமையின் ரூபமாகப் பிறந்து ஈனச் சிலுவை வரை தன்னை தான் தாழ்த்தினார். அவரது ஊழிய நாட்களில் யூதஜாதிகளிலிருந்த ஜாதிப் பிசாசை துரத்தி அடிக்க, தாழ்த்தப்பட்ட சமாரியா ஸ்திரீயிடம் தண்ணீர் கூட வாங்கி குடிக்காத யூதரை கண்டிக்க, தண்ணீர் கேட்டு சமாரியருக்கு தம்மை வெளிப்படுத்தினார். அங்கே இரண்டு நாள் தங்கி சாப்பிட்டு யூதராலே போஜன பிரியனென்றும், சமாரியனென்றும் தீட்டாகச் சொல்லக்கூடிய அவமான பெயரை வாங்கிக் கொண்டார். காரணம், இந்த ஜாதிப் பிசாசைத் துரத்தவே! உங்களுக்கு இந்த அவமான பெயரைப் பெற்றுக் கொள்ள மனமா? மனம் இல்லாவிட்டால்

கிறிஸ்தவன் என்ற பெயர் உனக்கு எதற்கு? விசுவாசி என்ற பட்டபெயரும் எதற்கு? "கிறிஸ்துவின் சிந்தையில்லாதவன் கிறிஸ்தவனல்ல". கிறிஸ்து உனக்குள் இருந்தால் இந்த ஜாதிப் பிசாசு உன்னிலிருந்து நீங்கி இருக்கும். உனக்குள் ஜாதி வித்தியாசமாகிய பிசாசு இருக்கிறதே, காரணம் கிறிஸ்து உனக்குள் இல்லையாதலால் தான். அனேக பிசாசுகள் சீஷர்களால் துரத்தப்பட்டன. அனேக பிசாசுகள் என்று சொல்லும் போது, அனேக பாவ கிரியைகள்தான். அனேக பாவ கிரியைகள் உன்னிலிருந்து நீங்கின. ஆனால் இந்த ஜாதிப் பிசாசு உன்னை விட்டு நீங்காமல் எத்தனை கன்வென்ஷன் நடத்தியும், எத்தனை பேரை ஸ்நானப்படுத்தியும், எத்தனை ஆண்டுகளாக இந்த ஜாதிப் பிசாசு உன்னிலிருக்கிறதை உணராமல், மற்றவர்கள் கண்ணிலிருக்கும் துரும்பை ஊதி பறத்துகிறாய் உன் கண்ணிலே பெரிய உத்தரமாகிய இந்த ஜாதிப் பிசாசு பலமாய் வெளியரங்கமாயும், அந்தரங்கமாயும், கிரியை நடப்பிக்கிறான். மேலும் எத்தனை சபைகள் எழும்பிக் கொண்டேயிருக்கிறது. வீட்டுக்கு வீடு கூட்டம், தெருவிற்கு தெரு கூட்டம், மாதிரி கன்வென்ஷன்கள், உலகப் பட்டம் பெற்ற பேர்போன பிரசங்கிமாருடைய சிலுவையில்லா பிரசங்கம் எழும்பிக்கொண்டேயிருந்தும், இந்த ஜாதிப் பிசாசு உலகத்தை மாத்திரமல்ல, விசுவாச கூட்டந்தாரையும், விசேஷமாக ஊழியர்களையும் கைவசமாக்கிக் கொண்டான். இந்த கூட்டங்கள் எசேக்கியேல் பள்ளத்தாக்கில் கண்ட ஆவியில்லாத எலும்புக் கூட்டமே தவிர ஜீவன் பெற்ற சபை கூட்டமல்ல. ஆண்டவர் ஒரு சமயம் பேதுருவிலிருந்த ஜாதிப் பிசாசைத் துரத்த தாழ்ந்த ஜாதிக்காரனை கொர்னெலியுடனே ஐக்கியமாகும்படி தரிசனம் மூலம் வெளிப்படுத்தினார்.

எப்படியெனில், வானத்திலிருந்து ஒரு கூடு தன்னிடத்தில் இறங்கி வந்ததாகவும், அதில் பூமியிலுள்ள மிருகங்களும், ஊரும் பிராணிகளும், பறவைகளும் அந்தக் கூண்டில் இருந்ததாகவும் அதை அடித்துப் புசி என்று மூன்று முறை பேதுருவோடு சொல்லும் சத்தமும் உண்டானது. வானத்திலிருந்து பிறந்த சத்தத்தைக் கேட்டும் பேதுரு அதை மறுத்து, அருவருப்பானதொன்றையும் இதுவரையிலும் புசித்ததே இல்லை என்று சொல்லவே, மறுபடியும் "நான் பரிசுத்தமாக்கினதை நீ தீட்டாக எண்ணாதே!" என்று மூன்றும்முறையும் வெளிப்படுத்தி, பிறகு அது வானத்திற்கு எடுத்துக் கொள்ளப் பட்டது.

*பிரியமானவர்களே!* இந்த தரிசனத்தில் அடங்கிய கருத்தென்ன? கூடு என்பது கர்த்தருடைய சரீரமாகிய சபையல்லவா. அந்த கர்த்தருடைய சபையில் தான் இரட்சிக்கப்படுகிறவர்களை கர்த்தர் அநுதினமும் சேர்த்துக் கொண்டு வந்தார். அந்த சபையிலே கிரேக்கன் என்றுமில்லை, யூதன் என்றுமில்லை, பிறதேசத்தான் என்றுமில்லை, பிற ஜாதியான் என்றுமில்லை, கிறிஸ்துவுக்குள் நீங்கள் ஒன்றாய் இருக்கிறீர்கள் என்று ஆவியானவர் சபைக்கு சொல்லி இருக்க, இந்த ஜாதி வித்தியாசம் உலகத்தில் இருக்கத்தான் செய்யும் என்று உலகத்தைக் கொண்டு சத்தியத்தை அவமதிக்கிறாயே! பிறனை அவமதிக்கிறது பாவமல்லவா? தன்னைப்போல் பிறரிடம் அன்பு கூறுவது ஆவியானவர் சபைக்கு சொன்ன உபதேசமல்லவா. கர்த்தருடைய பரிசுத்த இரத்தத்தால் மீட்கப்பட்டு, அவருக்குள் ஞானஸ்நானப்பட்டு, அவருக்குள் முத்தரிக்கப்பட்டு அவருடைய சரீரமாகிய சபையில் அவயங்களாக அமைக்கப்பட்டு இராபோஜனத்தினால் ஒரே அப்பத்தை புசித்து, ஒரே பாத்திரத்தில் பானம் பண்ணி ஒரே பரிசுத்தஜாதி என்று தேவ சமூகத்தில் புதிய உடன்படிக்கையின் மத்தியஸ்தராகிய கிறிஸ்துவனிடம் உடன்படிக்கை பண்ணி விட்டு, வெளியே வந்தவுடன் உன்கிரியைகளினாலே இன்ப, துன்பகாரியங்களிலும், கொடுக்கல், வாங்கல் சம்பந்தம் முதலிய அன்னியோன்னியத்திலும், பாகுபாடு படுத்தி உயர்ந்த ஜாதி, தாழ்ந்த ஜாதி; கருப்பன், வெள்ளையன், தன் பாஷைக்காரன், வேறு பாஷைக்காரன் என்று உங்கள் மாம்சத்துக்கு ஏதுவாக அநுசரித்து உலக வழிபாடுகளை அநுசரிக்கிற ஊழியரே, விசுவாசிகளே, சுவிசேஷத்திற்கு நீங்கள் சரியாய் கீழ்ப்படிய மனமில்லாவிட்டால் இந்த மகிமையான ஊழியம் உங்களுக்கு எதற்கு?

வயிற்று பிழைப்பிற்கு மாத்திரம் தேவ ஊழியம் செய்கிறதை விட வேறு வேலையில்லையா? குடிக்கக்கூடாது என்கிற நீ கள்ளுக்கடையில் வேலை பார்க்கலாமா? இவைகளெல்லாம் விசுவாசத் துரோகமல்லவா. இன்றையத் தினம் விசுவாச சபைக்குள் உலகம் ஏறி ஆவியானவரை வெளியே தள்ளி, கதவை அடைத்து சுய இஷ்டமான ஆராதனைகள் நடந்தேறிக் கொண்டே வருகிறது. ஆவியானவர் வெளியே நின்று கதவைத் தட்டிக் கொண்டே நிற்கிறார். நீ உணர்வடைந்து கதவை திறவாவிட்டால் உன்னை விட்டுப்போய்விடுவார். அவர் உன்னை விட்டு போய் விட்டாலும் அவர் தன் தீர்மானத்தை விடார். அந்த தீர்மானம் என்ன? "பேதைகளைக் கொண்டும், கல்வியற்றவர்களைக் கொண்டும், எளியவர்களைக் கொண்டும், தரித்திரரைக் கொண்டும், உங்களை வெட்கப்படுத்தி, புத்தியீனமான ஜனங்களைக் கொண்டு உங்களுக்கு எரிச்சலை மூட்டுவார். நீங்கள் ஆகாதென்று தள்ளின கற்களைக் கொண்டே தேவன் தமது சபையை கட்டுவார்" என்பது சத்தியம். விருந்துக்கு அழைக்கப்பட்டவர்கள் விருந்தை அசட்டைப் பண்ணி, சாக்கு போக்கு சொன்னது போல நீங்களும் சாக்கு போக்கு சொல்லி விருந்தை அசட்டை பண்ணினால், தெருக்களிலும், வீதிகளிலும், வேலியருகிலேயும் கிடக்கும் ஏழை ஜனங்களை கர்த்தர் வருந்தி அழைத்து தமது விருந்தில் பங்கடைய செய்வார் என்பது திட்டம். "இது எப்படி ஆயிற்று! கர்த்தரால் ஆயிற்று" என்கிற வசனம் நிறைவேறும். ஆகையால் கர்த்தர் பரிசுத்தமாக்கின ஜனத்தின் எளியவர்களை நீ தீட்டாக எண்ணாதே. ஆகையால் சபைகளில் பதுங்கி மாயம் பண்ணுகிற ஜாதிப் பிசாசை இயேசுவின் நாமத்தினாலே விரட்டித் துரத்தி அடிப்போமாக!

அந்த மறுரூபமாக்கப்பட்ட பரிசுத்த ஜாதியே விசுவாசிகளின் தகப்பனாகிய ஆபிரகாமுக்கு கர்த்தரின் வாக்குத் தத்தத்தின்படி பிறந்த ஈசாக்கு என்னும் பரிசுத்த ஜாதி, மற்ற சந்ததிகளெல்லாம் அடிமையானவளிடத்தில் பிறந்த இஸ்மவேலின் சந்ததிகள். இவர்கள் தங்கள் தாயாரோடு அடிமைப்பட்டிருக்கிறார்கள். அந்த அடிமைத் தனம் "உலகத்துக்கு அடிமை, நிறத்துக்கு அடிமை, பாஷைக்கு அடிமை, பணத்திற்கு அடிமை, ஜாதிக்கும் அடிமை, உத்தியோகத்திற்கு அடிமை, உலக வழிபாட்டிற்கு அடிமையாயிருந்து பிள்ளை பெறுகிறாள். அதாவது விசுவாசிகள் என்ற பெயரைத் தரித்து கூட்டம் நடத்துகிற அடிமையின் சந்ததி அதாவது கலப்பு ஜாதி".

உனக்குள் ஜாதி பிசாசு உண்டானால் நீ மெய் கிறிஸ்தவனல்ல, சத்தியத்திற்கு விரோதமாய் பெருமை பாராட்டாதே: மேட்டிமையானவைகளெல்லாம் தாழ்த்தப்படும்—ஏசாயா. 13:11.

(This caste devil: Tamil tract No. NJC/6-13-10-1979)

---

"எங்கே சபை உண்டோ அங்கே ஜாதி இல்லை; எங்கே ஜாதி உண்டோ அங்கே சபை இல்லை."

---

# உன் பாதரட்சைகளை கழற்றிப் போடு

கர்த்தராகிய இயேசு கிறிஸ்து பேதுரு. யாக்கோபு, யோவான் ஆகியோரை ஒரு மலைக்கு அழைத்துக் கொண்டுபோய் அவர்கள் முன்பாக மறுரூபமானார். அல்லாமலும் ஒரு ஒளியுள்ள மேகம் அவர்கள் மேல் நிழலிட்டு: இவர் என்னுடைய நேச குமாரன் இவருக்கு செவி கொடுங்கள் என்ற சத்தமும் உண்டாயிற்று (மத். 17 : 1—5).

தேவ பிரசன்னம் உண்டான இந்த இடத்தை (மலையை) பரிசுத்த பர்வதம் என்று பேதுருவானவர் சொல்கிறார் (I பேது 1 : 17, 18).

ஒரேப் மலைக்கு மோசே ஆடுகளை மேய்க்க வந்தார். அங்கே கர்த்தருடைய தூதனானவர் பிரசன்னமாகி முட்செடியின்

நடுவிலே உண்டான அக்கினியினின்று அவருக்கு தரிசனமாகி அவரோடே பேசினர். அந்த பர்வதம் (மலே) தேவ பர்வதம் (யாத். 3 : 1), அல்லது அந்த பூமி பரிசுத்த பூமி என்றும் (யாத். 3 : 5) சொல்லப்படுகிறது.

யோசுவா எரிகோவின் வெளியில் நிற்கையில் கர்த்தருடைய சேனையின் அதிபதி அவருக்கு பிரசன்னமாகி அவரோடே பேசினர். அந்த ஸ்தலம் பரிசுத்த ஸ்தலம் எனப்படுகிறது (யோசு. 5 : 13—15).

இவைகளை கவனிக்கையில் தேவன் மனிதனை சந்திக்கும்படி எங்கே, எந்த இடத்தில் பிரசன்னமாகிருரோ அந்த ஸ்தலம் பரிசுத்த ஸ்தலம் என்று அறிய முடிகிறது.

இந்த ஸ்தலத்தில் மனிதன் பாதரட்சைகளைப் போட்டுக் கொண்டு அவருக்கு முன்பாக நிற்கக் கூடாது என்பது கர்த்தருடைய கட்டளை. மோசேயிடம் கர்த்தர்: நீ நிற்கிற இடம் பரிசுத்த பூமி, உன் கால்களிலிருக்கிற பாதரட்சைகளை கழற்றிப் போடு என்று முதலாவது சொன்னர். பின்பே மற்ற காரியங்களைக் குறித்து சொன்னர் (யாத். 3 : 5).

யோசுவா கர்த்தருடைய சேனையின் அதிபதியை நோக்கி: என் ஆண்டவன் எனக்கு சொல்கிற செய்தி என்னவென்று கேட்டார். அவரோ மாறுத்தரமாக: நீ உன் கால்களிலிருக்கிற பாதரட்சைகளை கழற்றிப் போடு, நீ நிற்கிற இடம் பரிசுத்தமானது என்ருர் (யோசு. 5 : 14, 15). இதைத் தவிர அவர் வேறு எதையும் சொன்னதாக எழுதப் படவில்லை.

இந்த பூமியிலே இரண்டு பேராவது, மூன்று பேராவது எந்தக் காரியத்தைக் குறித்தாகிலும் வேண்டிக் கொள்ள (ஜெபிக்க) ஒருமனப் பட்டவர்களாய் எந்த இடத்தில் கூடி வருகிருர்களோ, அங்கே அவர்கள் நடுவிலே நான் இருப்பேன் (அவர்கள் ஜெபத்தை அங்கிகரிக்க நான் எழுந்தருள்வேன்) என்று தேவனுகிய இயேசுகிறிஸ்து வாக்கருளியிருக்கிருர் (மத். 18 : 19, 20) அப்படிப்பட்ட இடமும் பரிசுத்த ஸ்தலமே.

"நான் என் பரிசுத்த பர்வதத்துக்கு கொண்டு வந்து : என் ஜெப வீட்டிலே அவர்களை மகிழப் பண்ணுவேன்" (ஏசா. 56 : 7).

"...எருசலேமிலுள்ள பரிசுத்த பர்வதத்திலே கர்த்தரைப் பணிந்து கொள்வார்கள்" (ஏசா. 27 : 13) என்றதீர்க்கதரிசன வாக்கியங்களும், ஜெபம் பண்ணுகிற இடமும், கர்த்தரை பணிந்து கொள்கிற இடமும் பரிசுத்த பர்வதம் என்று அழைக்கப்படுகிறது ஆகையால் பரிசுத்த ஸ்தலத்தில் நாம் பாதரட்சைகளோடே இருக்கக் கூடாது.

இன்றையக் கிறிஸ்தவ மண்டலம் அந்தகாரப்பட்டு, தேவ பிரசன்னத்தை மதியாமல் அசட்டை பண்ணி, இஸ்ரவேலின் பயபக்திக்குரியவரை மட்டுப்படுத்தி போடுகிருர்கள். ஆவியைப் பெற்றவர்களும், நாம் பரிசுத்தாவியை பெற்றிருக்கிறோம், இறைவன் நமக்குள் இருக்கிருர், ஆகையால் பாதரட்சைகளை போட்டுக் கொண்டே தேவாலயத்தில் பிரவேசிக்கலாம், ஜெபம் பண்ணலாம், எதை வேண்டுமானாலும் செய்யலாம் என போதித்து, பக்தியுள்ள பிற மதத்தார்கள் முன் இடறுதற்கேதுவான கல்லைப் போட்டு, தங்களின் சோம்பேறித்தனத்தினாலும், அகம்பாவத்தினாலும் தேவனுடைய வழிகளைக் கெடுத்து, தேவன் மனிதனோடு ஜெபத்திலே பேசும் தொடர்பை இழந்து போகிருர்கள். இவர்கள் மாத்திரம்தான ஆவியைப் பெற்றிருக்கிருர்கள்? யோசுவா பக்தனும் தான் ஆவியைப் பெற்றிருந்தார் (எண். 27 : 18; உபா. 34 : 9).

நாம் ஏன் தேவ சமுகத்தில் பாதரட்சைகளை கழற்றி விட்டு பிரவேசிக்க வேண்டுமென்று தேவன் தரிசனம் கொடுத்து விளக்கம் கொடுத்தார். கர்த்தர் காண்பித்ததாவது: ஒரு தேவாலயத்தில் நவ நாகரீகமான பலர் ஆராதனையில் கலந்து கொள்ளும்படி உள்ளே வந்து ஆண்களும், பெண்களும் பாதரட்சைகளை அணிந்த வண்ணமாய் நடனம் பண்ணுகின்றனர். அச்சமயம் அவர்களின் பாதரட்சைகளில் ஒட்டி இருந்த அசுத்தங்கள், தூசிகள் ஆலயத்துக்குள் விழுந்து அந்த பரிசுத்த ஸ்தலத்தை அசிங்கமாக்குகிறது. இந்த இடத்தில் தேவன் எழுந்தருளி வாசஞ் செய்வாரா? என்ற கேள்வி

ஒன்று கேட்கப்பட்டு தரிசனம் முடிவு பெற்றது.

நாம் பாதரட்சைகளை போடும் முக்கிய நோக்கம் இந்த பூமியிலுள்ள அசுத்தங்கள் நம் கால்களில் படாமல் இருக்கும் படிக்கே. அசுசி படிந்த பாதரட்சைகளால் நாம் நடமாடும் இடமும் அசுசிப் படும்.

''கர்த்தர் நம்முடைய பாளையத்திற்குள் உலாவுகையில், பாளையத்தில் அசுசியான (unclean things) காரியத்தை காண்பாரானல் நம்மை விட்டு கடந்து போய் விடுவார். ஆகையால் நம்முடைய பாளையம் சுத்தமாக இருக்க வேண்டும் என்று ஆவியானவர் ஆலோசனை சொல்கிறார்'' (உபா. 23 : 14).

உன்னுடைய பாதரட்சைகளிலுள்ள அசுத்தத்தால் (unclean things) பரிசுத்த ஸ்தலத்தை அசுசிப் படுத்தாதே நீ ஜெபம் பண்ண, தொழுது கொள்ள வருகிற இடத்திலே தானே கர்த்தர் உன்னை சந்திக்கிறார். அதை சுத்தமாய் காத்துக் கொள்வாயாக.

''உன் கால்களிலிருக்கிற பாதரட்சையைக் கழற்றிப் போடு. நீ நிற்கிற இடம் பரிசுத்த பூமி'' (யோசுவா 5 : 15).

''...ஆண்டவர் உயரமும் உன்னதமுமான சிங்காசனத்தின் மேல் வீற்றிருக்கக் கண்டேன்...''

—ஏசா. 6 : 1

# மோட்ச வழி

## குரு–சிஷ்ய உரையாடல்

(தொடர்ச்சி)

சிஷ்யன் : குருவே! கிறிஸ்தவ மார்க்கத்தின் மேன்மை என்ன?

குரு : I. மெய் இறைவனைப் பற்றி நமக்குப் போதிக்கிறது.

II. சன்மார்க்கப் பிரமாணமாகிய நீதிப் பிரமாணத்தின் (நியாயப் பிரமாணத்தின் பத்து கற்பனைகள்) தொகுப்பாகும்.

சிஷ்யன் : அதன் பிரமாணங்கள் எவை, எவைகள்?

குரு :

1. உன்னை மீட்ட தேவன் ஒருவரே. அவரையன்றி வேறே தேவர்கள் இல்லை. ஒரே தேவன் உண்டு.
2. உருவ வழிபாடு தவறு. தேவனைக் குறிக்கும் எவ்வகை உருவ வழிபாடும் பாவம்.
3. தேவனுடைய நாமத்தை அவசங்கை படுத்தக்கூடாது (கடவுளுடைய பெயரை வீணுய்ச் சொல்லக்கூடாது).
4. வாரத்தில் ஒரு நாளை பரிசுத்தமாய் ஆசரிக்க வேண்டும். உலக வேலையை விட்டு ஓய்ந்திருக்க வேண்டும். (இறை வழிபாடு செய்ய வேண்டும்). மீட்பிற்காய் நன்றி செலுத்த வேண்டும்.
5. பெற்றோர்களைக் கனம் பண்ண வேண்டும். வாழ்நாள் நீடித்திருப்பதற்கும் நன்ருயிருப்பதற்கும் இது அவசியம்.
6. கொலை செய்யாதே.
7. விபசாரம் செய்யாதிருப்பாயாக.
8. திருடாதே.

9. பிறனுக்கு விரோதமாய் பொய் சாட்சி சொல்லாதே.

10. பிறனுக்குரிய யாதொன்றையும் இச்சியாதே.

## இவைகளின் தொகுப்பு

1. தேவன் மேல் முழு இருதயத்தோடும், முழு ஆத்துமாவோடும், முழு பலத்தோடும் அன்பு கூற வேண்டும்.

2. தன்னை நேசிப்பது போல் பிறனையும் நேசிக்க வேண்டும் என்பதாம். இதற்கொப்பான சன்மார்க்க பிரமாணத் தொகுப்பு வேறெங்கும் இல்லை.

சிஷ்யன் : மற்ற மதங்கள் தெய்வத்தைப் பற்றிப் போதிக்கவில்லையா?

குரு : தெளிவாக போதிப்பதில்லை. பற்பல விதமாய்ப் பொய் பேசி மக்களை தவறான வழியில் நடத்துகின்றன. மற்ற மதங்களில் மக்களுக்கு மெய்வழி காட்டும் உயிருள்ள ஆள் இல்லை. கிறிஸ்தவ மார்க்கத்தின் உயிர் இயேசு கிறிஸ்துவே. இந்த மெய் இறைவனால் மக்களுக்கு பாவத்திலிருந்தும், அஞ்ஞானத்திலிருந்தும் விடுதலை கிடைக்கின்றது. மக்களுக்கு மோட்ச பாதை திறக்கப்படுகிறது. தேவ சமாதானம், இளைப்பாறுதல், ஆத்மீக வல்லமை, தெய்வீக தொடர்பு முடிவில் மோட்சமும் கிடைக்கிறது.

சிஷ்யன் : மற்ற மதஸ்தர்களும் தங்கள் மதமே சரியான மதம் என்கின்றனரே?

குரு : இல்லை. கிறிஸ்து மார்க்கத்தை தவிர மற்ற மதங்களெல்லாம் மனுஷனுடைய தந்திரங்களினாலும், யோசனைகளினாலும், பேயின் துர்ப் போதனைகளினாலும் உண்டானவைகள். நன்றாய் விசாரணை செய்தால் (ஆராய்ச்சி) தெரிய வரும். கிறிஸ்து மார்க்கமோ மானிடர் ஈடேற இறைவன் காண்பித்த வழியாகும். இதற்கு நிகரில்லை.

சிஷ்யன் : கிறிஸ்து மார்க்கமே மெய் மார்க்கம் இறைமார்க்கமென்பதற்கு ருபாகாரங்கள் உண்டா?

குரு : கிறிஸ்து மார்க்கமே ஜீவனுள்ள மார்க்கம் என்பதற்கு பல ருபாகாரங்கள் உண்டு.

சிஷ்யன் : குருவே, கிறிஸ்து மார்க்கமே உண்மையான மார்க்கமென்பதற்கு சில ருபாகாரங்களைக் கூறும்படி பணிவன்புடன் வேண்டுகிறேன்.

(தொடரும்)

"நானே வழியும், சத்தியமும், ஜீவனுமாயிருக்கிறேன்;
என்னாலேயல்லாமல் ஒருவனும் பிதாவினிடத்தில் வரான்"
—யோவா. 14:6.

ஏழைகளில் அநேகர் தங்களுக்கு சந்தா செலுத்த முடியவில்லை என்றும் தங்களுக்கும் பத்திரிக்கை அனுப்பும்படியும் கேட்டு எழுதியுள்ளார்கள். அவர்களுக்கும் பத்திரிக்கை தவறாமல் அனுப்பும்படி கர்த்தர் உதவி செய்யும்படி எல்லாரும் ஜெபிக்கும்படி வேண்டுகிறோம்.

# வேத பாடம்

ஆதி. 19:1-3 தேவ தூதர்கள் சோதோமுக்குள் போனதும் லோத்து அவர்களை விருந்தினர்களாக ஏற்றுக் கொள்கிறார். இதில் லோத்தின் விருந்தோம்பல் தன்மையைக் காண்கிறோம்.

ஆதி. 19:6-9 சோதோமின் அக்கிரமம் : அக்கிரமக்காரர்களின் கூப்பாடும் பலாத்காரத்தையும், ஆணோடு ஆண் அவலட்சணமானதை நடப்பிக்க நெருக்குகிறதையும் பார்க்கிறோம். விருந்தினரை தப்பிக்க லோத்து பிரயாசப்படுகிறார், முடியாமல் போகிறது. லோத்துக்கு இரண்டு குமாரத்திகள் உண்டு.

ஆதி. 19:10-11 தேவ தூதர்கள் கதவை அடைத்தது மட்டுமல்ல, சோதோமின் பாவிகளுக்கு குருட்டாட்டம் பிடிக்கச் செய்ததினால் அவர்கள் வாசலைத் தேடி, தேடி அலுத்துப் போனார்கள்.

ஆதி. 19:12-14 பின்பு தூதர்கள் நாங்கள் சோதோமை அழிக்கப் போகிறோம். சோதோமை அழிக்க கர்த்தர் எங்களை அனுப்பியிருக்கிறார். ஆகையால் உன்னுடையவர்கள் யாராவது இருந்தால் அழைத்துக் கொண்டு பட்டணத்தை விட்டு வெளியேறு என்றார்கள். லோத்தின் இரண்டு குமாரத்திகளையும் விவாகம் முடிக்கிற மருமக்கள்மாருக்கு எச்சரிப்பும், அழைப்பும் கொடுக்கிறார். சோதோம் அழியப் போகிறது வெளியேறிவிடுவோம் என்று; ஆனால் அவர்களுக்கு அந்த எச்சரிப்பு பரியாசமாய்க் காணப்பட்டது. அப்படிப்போல இவ்வுலகம் அழியப் போகிறது என்று தேவபக்தியுள்ளவர்கள் சொல்வது உலக நேசம் உடைய மக்களுக்கு பரியாசமாய்த் தோன்றும்.

ஆதி. 19:15-29 கிழக்கு வெளுக்கும் போது தூதர்கள் தாமதித்துக் கொண்டிருந்த லோத்தையும், லோத்தின் குடும்பத்தையும் வற்புறுத்தி கையைப் பிடித்து பட்டணத்துக்கு வெளியே கொண்டு போய் விட்டு ஜீவன் தப்ப ஓடிப்போ, பின்னிட்டுப் பாராதே என்று துரிதப்படுத்தினார்கள். லோத்து, அவர் மனைவி, இரண்டு குமாரத்திகள் ஆக நால்வரும் உயிர் தப்ப தீவிரித்தனர். ஆனால் பொருளாசையுடைய லோத்தின் மனைவி பின்னிட்டுப் பார்த்து உப்புத்தூண் ஆனாள். கிறிஸ்தவ ஜீவியம் பரலோக பிரயாணமாகும். இதில் உலக நேசத்தால், பொருளாசையால் திரும்பிப் பார்க்கிறவர்கள் ஜீவனை (ஆத்மீக ஜீவனை) இழப்பார்கள். நமது கர்த்தரும் லோத்தின் மனைவியை நினைத்து கொள்ளுங்கள் என்று எச்சரித்தாரே (லூக். 17:32). லோத்து சோவாருக்குப் போன போது சூரியன் உதித்தது. சோதோம் கொமாரா பட்டணங்களின் மேல் தேவன் அக்கினியையும், கந்தகத்தையும் வருஷிக்கப் பண்ணி பட்டணத்தையும் அதின் எல்லாக்குடிகளையும், பொருட்களையும் எரித்து அழித்துப் போட்டார். ஆபிரகாமினிமித்தம் தேவன் லோத்தை அந்த அழிவினின்று தப்பிப் போகப் பண்ணினார். ஆம், தேவன் நீதிமான்களை, தேவ பக்தியுள்ளவர்களை சோதனையினின்று இரட்சிப்பார் (II பேது. 2:5-9).

ஆதி. 19:30-38 லோத்து சோதோமின் பெரிய மனிதனாயிருந்தும், தேவ பக்தியுள்ள நீதிமானாயிருந்தும் அவன் குமாரத்திகள் சோதோமின் பாவத்தை ஒப்புக் கொண்டவர்களாயிருந்தனர். சோதோமின் சகவாசக் கேடு சோதோமின் மக்களின் வழக்கப்படி லோத்தின் குமாரத்திகள் தகப்பனால் தாங்கள் சந்த

தியைப் பெற தகப்பனை வஞ்சித்து தகப்பனால் பிள்ளைகளைப் பெற்றனர். மூத்தவள் மோவாப் என்னும் குமாரனையும், இளையவள் பென்னம்மி என்ற பெயரையுடைய ஒரு குமாரனையும் பெற்றனர். மோவாபின் மூலம் மோவாபியரும், பென்னம்மி மூலம் அம்மோன் புத்திரரும் தோன்றினர். தேவபக்தியுள்ளவர்களே! நீங்களும், உங்கள் குடும்பமும் தங்கியிருக்கும் இடம் தீட்டானால் இடம் மாறி விடுங்கள். இல்லை என்றால் உங்கள் குடும்பம் கெட்டுப் போகும்.

(தொடரும்)

"பாரமான யாவற்றையும், நம்மைச் சுற்றி நெருங்கி நிற்கிற பாவத்தையும் தள்ளிவிட்டு இயேசுவை நோக்கி, நமக்கு நியமித்திருக்கிற ஓட்டத்தில் பொறுமையோடு ஓடக்கடவோம்" —எபி. 12:1.

நமது புதிய எருசலேம் செய்தி பத்திரிக்கை பெற்று தேவ ஆசீர்வாதம் பெறுகிறவர்கள் ஆயிரக் கணக்கானோர். இவர்களில் சந்தா செலுத்துபவர்கள் நூற்றுக்கு இருபத்தைந்து பேர்களே. ஆனபடியினால் எல்லாரும் சந்தா செலுத்தவும் இந்த தெய்வீக இலக்கியப் பணி வெற்றிகரமாக நடக்கவும், பத்திரிக்கையின் நோக்கம் நிறைவேறும்படியும் எல்லாரும் கிறிஸ்துவிற்குள் ஜெபிக்கும்படி வேண்டுகிறோம்.

பாலர் பகுதி

## கடவுளுடைய அன்பு

ஒரு தேசத்தில் ஒரு தேவபக்தியுள்ள மந்திரியிருந்தார். அவர் மிகவும் நல்லவர். அவர் வேளா வேளைகளில் இயேசு கிறிஸ்துவின் கல்வாரியைப் பற்றி அறிவிப்பார். ஒருநாள் அரசன் அரசவையில் வீற்றிருக்கும் போது மந்திரியிடம் தேவனைப்பற்றி சில கேள்விகளைக் கேட்டுக் கொண்டிருந்தார். அதற்கெல்லாம் மந்திரி பதில் சொல்லிக் கொண்டிருந்தார். அப்பொழுது அரசன் "தேவன் மனிதனை மீட்கும்படி ஏன் வர வேண்டும்? தேவ தூதர்களில் ஒருவரையாவது பரிசுத்தவான்களில் யாதாமொருவரையாவது ஏன் அனுப்பக்கூடாது?" என்று கேட்டார். அதற்கு மந்திரி "அது தேவனுடைய அன்பு. தேவன் நம்முடைய பிதா. பிள்ளைகளாகிய நம்முடைய மரணத்தையும் அழிவையும் கண்டு மனந்தாளாமல், அவருடைய அன்பினால் அவரே கல்வாரிக்கு வந்து தம் உயிரைக் கொடுத்து நம்மை மீட்டார்" என்க இராஜா அதை ஒப்புக் கொள்ளாமல், "இப்போது ஏதாவது ஒருவருக்கு உதவி செய்யவோ, தண்டிக்கவோ, எதையாவது செய்யவோ, நான் மந்திரியாகிய உம்மையாவது சேனாதிபதியையாவது அல்லது வேறு யாரையாவது அனுப்பி செய்விக்கிறேன். தேவனும் மானிடரை மீட்க அவரே வர அவசியமில்லை. ஒரு தேவ தூதனுக்கு கட்டளையிட்டு 'நீ போய் மனுமக்களை மீட்

படையச் செய்' என்று பணிக்கலாமே" என்றார். மந்திரி சீக்கிரமாய் இதற்கு பதில் கொடுக்கிறேன் என்று கூற அரசவைக் கூட்டம் முடிந்தது.

சிலநாள் சென்ற பின்பு அரசன் நதியில் உலாவச் சென்றார். இராஜனின் அலங்காரப் படகில் இராஜாவும் மந்திரியும் சேனாதிபதியும் இருந்தனர். தூரத்தில் சில படகுகளில் போர் வீரர்களும் இராஜாவுக்கு பாதுகாவலுக்கு பின் சென்றனர். கரையில் பொது ஜனங்களும் சில போர் வீரர்களும் நின்று இராஜாவை வாழ்த்திக் கொண்டிருந்தனர். இப்படியிருக்க இராஜாவுடைய ஒரே குமாரனை வளர்க்கும் தாதி இளவரசனை இடுப்பில் தூக்கிக் கொண்டு சில தாதிகளுடன் கரையில் தோன்றினாள். இராஜாவும் பிள்ளையைப் பார்த்து சந்தோஷத்தினால் கையசைத்தார். தாதி குழந்தை கையைத் தூக்கி ஆட்டுவித்து, படகில் அரசன் இருப்பதை குழந்தைக்கு காண்பித்து வேடிக்கைக் காட்டிக் கொண்டிருந்தாள். இப்படி இருக்கும் போது அத்தாதி திடீரென்று குழந்தையை நதியின் தண்ணீரில் தூக்கி போட்டு விட்டாள். அவ்வளவுதான் அரசன் படகிலிருந்து தண்ணீருக்குள் பாய்ந்து நீந்திச் சென்று குழந்தையைத்தூக்கினார். பின்னாலே சேனாபதியும், மந்திரியும் நீரில் குதித்து அவ்விடத்துக்கு விரைந்தனர். பெரிய கூட்டமே அங்கே கூடிவிட்டது. இராஜா குழந்தையை தூக்கிப் பார்த்ததும் அதுவோ இளவரசனைப் போல செய்யப்பட்ட பொம்மை எனக் கண்டு திகைத்தார். அதற்குள் சமீபமாய் வந்த மந்திரி "இராஜாவே நீங்கள் ஏன் தண்ணீரில் குதித்தீர்கள்? என்னிடமாவது, பராக்கிரமசாலியான நம் சேனாபதியினிடமாவது குழந்தையைக் காப்பாற்றுங்கள், தூக்குங்கள் என்று கட்டளையிட்டிருக்கலாமே" என்று கேட்க, அதற்கு இராஜா: 'அது என் குழந்தை' அதனால் அதன் மேலுள்ள பாசத்தால் நீருக்குள் பாய்ந்தேன். கடைசியில் நீர்என்னை ஏமாற்றி போட்டீரே? என்க, அதற்கு மந்திரி "நாம் கடவுளுடைய பிள்ளைகள். ஆதலால் கடவுள் நம்மேல் உள்ள அன்பினால் நம்மை மீட்க தாமே வந்தார். கடவுளுடைய அன்புதான் அவரை பூவுலகத்திற்கு கொண்டு வந்தது" என்றார். தன்னுடைய கேள்விக்கு பதிலைக் கண்ட அரசன் மனம் மாறி கிறிஸ்தவர் ஆனார். அருமையான சிறு பிள்ளைகளே! நீங்கள் கடவுளுடைய பிள்ளைகள். உங்களுக்காக இயேசு கிறிஸ்து இவ்வுலகத்திற்கு வந்து உங்களுக்காக கல்வாரி சிலுவையில் உயிர் நீத்தார். உங்களை நரகத்திலிருந்து தப்புவிக்க மரித்தார், அடக்கம் பண்ணப்பட்டார், மூன்றும் நாள் உயிர்த்தெழுந்தார். நீங்கள் இயேசு கிறிஸ்துவை நேசியுங்கள். அவருக்கு உங்களை ஒப்புக் கொடுங்கள். அவருடைய பிள்ளைகளாய் நடந்து கொள்ளுங்கள். நீங்கள் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசித்து உங்கள் இருதயத்தில் ஏற்றுக் கொண்டீர்களா? அப்படி இல்லை என்றால் இன்றே செய்யுங்கள். கடவுள் உங்களை நேசிக்கிறார்.

"தேவன் நம்மேல் வைத்த அன்பு பட்டது."

— I யோவா. 4: 9

(தொடர்ச்சி)

மாதர் பகுதி

## ஸ்திரீகள்

அறிவுத் திறனில் ஆண் பெண் இரு பாலரும் சமமாக இருக்கலாம். இருப்பினும் முற்றிலும் அவ்வாறு சமமாக இல்லை. ஆண்களுக்கிடையில் அறிவுத்திறன் சிறந்து விளங்குவதையும் பெண்களுக்கிடையில் உணர்ச்சி இயல்பு மிகுந்து விளங்குவதையும் காண்கிறோம். எனவே அமைதியாக திறனாய்ந்து நடுநிலை தவறாது தீர்ப்பு வழங்குவதற்கு ஆண்கள் தகுதி வாய்ந்தவர்களாக விளங்குகிறார்கள். மனித சமுதாயத்திற்கு இரக்கம் காட்ட வேண்டிய இடங்களில் பெண்கள் தகுதி வாய்ந்தவர்களாகக் காணப்படுகின்றனர். நீதி வழங்குவதில் பெண்களைவிட ஆண்கள் தகுதி வாய்ந்தவர்கள். நோயாளி

களுக்கும், துன்பப்படுகிறவர்களுக்கும் ஊழியம் செய்வதற்கு இயற்கையாகவே ஆண்களைவிட பெண்கள் பண்புப் பொருத்தம் பெற்றவர்களாகக் காணப்படுகின்றனர்.

சமுதாய ரீதியில் ஆண்களும் பெண்களும் சமமானவர்களே. பிறமதத்தினர் பெண்களை அடிமை நிலையில் நடத்தினர். இப்பொழுது அந்த நிலை மாறி வருகிறது. கிறிஸ்தவம் பெண்களை அவர்களுடைய இடத்தில் ஆணுடன் சரிசமமாக வைக்கிறது. சமுதாய அமைப்பையும் உரிமைகளையும் பற்றிப் பேசும்போதுதான் யூதனென்றும் கிரேக்கன் என்றும் இல்லை; அடிமையென்றும், சுயாதீனன் என்றுமில்லை; ஆணென்றும் பெண்ணென்றும் இல்லை. நீங்கள் எல்லாரும் கிறிஸ்து இயேசுவுக்குள் ஒன்றாயிருக்கிறீர்கள் (கலா 3:28) என்கிறது வேதம். சமுதாயத்தின் மையமாகவும், அழகாகவும் பெண் காணப்படுகிறாள். இது பெண்களுக்குரிய இடமாக ஒப்புக் கொள்ளப்பட்டுள்ளது. இது அவர்களுடைய செல்வாக்கு எல்லை இங்கே அவர்களின் ஆற்றல் சுடர்விட்டுப் பிரகாசிக்கின்றன.

ஒழுக்கப்பண்பில் ஆண்களைவிட பெண்கள் எளிதாக பாதிக்கப்படக்கூடியவர்களாக உள்ளனர். அவர்களால் சிறந்த ஒழுக்க நிலைக்கும் தூய்மைக்கும் உயர முடியும். அல்லது மிகக் கீழான நிலையில் ஒழுக்க சீர்கேட்டிற்கும் கொடுமைக்கும் அமிழ்ந்துவிட முடியும். இதை வரலாறு நமக்கு நிரூபித்துக் காட்டுகிறது. பெண்கள் தங்கள் இயல்பு குணங்களை வளர்த்துக் கொள்வார்களானால் அவர்கள் இன்னொரு சாராளாகவும், அன்னாளாகவும், எலிசபெத்தாகவும், மரியாளாகவும் விளங்கலாம். அல்லது அவர்கள் ஒரு தெலிலாளாகவும், யேசபேலாகவும், அத்தாலியாளாகவும், ஏரோதியாளாகவும் விளங்கலாம்.

ஆண்களைவிட பெண்கள் பக்திமிக்கவர்கள். அவர்களுடைய இயற்கையிலுள்ள உணர்ச்சிகூறு இதற்கு காரணமாக அமைகிறது. பொதுவாக பெண்களுக்குச் கூறப்படும் நாணம், அச்சம், மடம், பயிர்ப்பு முதலிய குணங்கள் தேவபக்திக்கு இவர்களுக்கு உதவுகின்றன. ஆகையால் ஆண்களைவிட பெண்கள் பயபக்தி, மரியாதை, தொழுது கொள்ளுதல் இவைகளை வெளிப்படுத்தும் இயல்பில் சிறந்தவர்களாய்க் காணப்படுகின்றனர்.

அதிகாரத்திலும், ஆளுகையிலும் பெண் ஆணுக்குக் கீழ்ப்பட்டு இருக்க வேண்டும். இது தாழ்வு மனப்பான்மையில்லை. ஆனால் ஒழுங்கிற்கும் நல்ல ஆளுகைக்கும் இது அவசியமானதாகும். இறைவன் ஏவாளிடம் "உன் ஆசை உன் புருஷனைப் பற்றியிருக்கும் அவன் உன்னை ஆண்டு கொள்ளுவான் என்றார்" (ஆதி 3: 16) இதின் அர்த்தம் ஆண் தன் விருப்பப்படி பெண்ணை அநியாயமாகவும், கொடுமையாகவும் நடத்த வேண்டும் என்பது பொருளாகாது. ஆனால் கணவனுடைய கடமையின் எல்லை ஆளுதலாகும். துணைவி தன் கணவனுக்கு அடங்கியிருக்க வேண்டும் ஆபிரகாம் தன் துணைவியையும் தன் வீட்டாரையும் நீதியாக ஆண்டார். சாராளும் தன் கணவனை ஆண்டவன் என்று சொல்லி கீழ்ப்படிந்திருந்ததாகப் பார்க்கிறோம் அப்படி அடங்கி கனம் பண்ணி நடக்கிற பெண்களை வேதம் சாராளின் பிள்ளைகள் என அழைக்கிறது —1 பேது 3:6.

(தொடரும்)

"...சபையானது கிறிஸ்துவுக் கீழ்ப்படிகிறது போல மனைவிகளும் தங்கள் சொந்த புருஷர்களுக்கு எந்தக் காரியத்திலேயும் கீழ்ப்படிந்திருக்க வேண்டும்"

—எபே. 5:24

# புதிய எருசலேம் சபையின் நடபடிகளில் சில

இப்படி நடக்கவே தூரத்தில் காணப்பட்ட கூட்டத்திலிருந்து இரண்டு வாட்டசாட்டமான மனிதர்கள் ஓடி வந்தார்கள். வந்ததும் ஏற்கனவே எங்களோடு வாதாடிக் கொண்டிருந்த இரண்டு வாலிபர்களுக்கும் உரத்த குரலில் ஏண்டா நோக்கிக் கொண்டு நிக்கேள் தூக்கிக் கொண்டு அவ்விடே வரட்டே என்று கூறினதும் எங்கள் கரங்களிலிருந்த குடைகள், கைப்பைகள் ஆகிய பொருள்களை முதலாவது பறித்து எடுத்து

அந்த குண்டர்களிடம் கொடுத்து விட்டு முந்திய இரு வாலிபர்களும் எங்கள் இருவரையும் ஆவிச்சேத்து தூக்கினுர்கள். எங்களைப் போல நான்கு பேர்களை வேண்டுமானுலும் அவர்கள் தூக்கிக் கொண்டு போக முடியும். ஆனுல் அவர்களால் எங்களைத் தூக்க முடியவில்லை. நாங்கள் கண்களை மூடிக் கொண்டு இருவரும் கர்த்தரை ஸ்தோத்தரித்துக் கொண்டே நின்ரேம். எங்கள் வாயிலிருந்து கர்த்தர் பேசினுர். என்ன பேசினுர் என்பதை நாங்கள் அறியோம்.

அடுத்து என்ன சம்பவிக்குமோ என எண்ணி உள்ளம் ஒரு வகையில் கலங்கின போதிலும், கர்த்தருடைய ஆவியானவர் எங்களுக்குள்ளிருந்து பேசி எங்களைத் தைரியப்படுத்திக் கொண்டிருந்தார். "நான் உன்னை விட்டு விலகுவதுமில்லை, உன்னைக் கைவிடுவதுமில்லை" என்கிற ஆறுதலான வார்த்தைகள் எங்கள் உள்ளத்தை தேற்றிக் கொண்டே இருந்தது. இதற்கிடையில் குண்டர்களின் கூட்டம் அதிகமாகி விட்டது.

தூக்கினவர்கள் எங்களைத் தரையை விட்டு மேலே தூக்குவதற்கு எங்களை அங்குமிங்கும் நன்ருக அசைத்தார்கள். பரிசுத்த ஆவியானவர் எங்களை வல்லமையாய் ஆட்கொண்டிருந்தார். எங்கள் கால் தரையிலிருந்து ஒரு இஞ்சு உயரங்கூட மேலே எழும்பவில்லை. தூக்கினவர்கள் களைத்துப் போனுர்கள். யாவரும் எங்கள் முகங்களையே பார்த்துக் கொண்டிருந்தார்கள். திடீரென்று அவர்களில் ஒருவன் முன்னுக்கு வந்து டேய், இனி அவர்களை ஒன்னும் செய்யாதே! நிறுத்துங்கள் என்று கூறினதும் எங்களைத் தூக்கப் பிரயாசப்பட்டவர்கள் நிறுத்தி விட்டார்கள். எங்களிடமிருந்து பறித்துக் கொண்ட பொருட்களையெல்லாம் எங்களிடம் தந்து தயவு செய்து எங்களை மன்னித்து விடுங்கள்; எங்கள் ஏரியாவை விட்டு நீங்கள் போய் விட வேண்டும். ஏதோ தெரியாமல் இப்படி செய்து விட்டோம். இப்படி நடந்ததாக நீங்கள் போலீஸில் தெரியப்படுத்தக் கூடாது என்று எல்லோரும் கைகூப்பி வேண்டிக் கொண்டார்கள். கர்த்தர் உங்களை மன்னிப்பார் என்று கூறி நாங்கள் திரும்பி வந்தோம். அவர்கள் எல்லையை விட்டு நாங்கள் கடந்து வரும் வரையில் எங்கள் பின்னுலேயே வந்தார்கள். நாங்கள் மீண்டும் திருவனந்தபுரம் வருவதற்காக ஒரு பஸ் ஸ்டாப்பில் நிற்கும் பொழுது நேரம் இருட்டி விட்டது. அங்கே ஒரு பெரியவர் எங்களைப் பார்த்ததும் நாங்கள் வேறு இடத்தை சேர்ந்தவர்கள் என்பதை கண்டதும் அவர் மிகவும் பதட்டத்துடன் கூறினுர். நீங்கள் ஏன் இந்த இடத்தில் இவ்வளவு நேரத்துக்குப் பின் நிற்கிறீர்கள்? இந்த இடம் ரொம்ப பயங்கரமான இடமாகும். உங்களிடம் 25 பைசா இருப்பதைக் கண்டால் அதை எடுத்துக் கொள்வதற்காக உங்கள் தலையையே அறுத்து விடுவார்களே சீக்கிரமாய் திருவனந்தபுரம் சென்று விடுங்கள் என்று அவர் கூறினுர். இந்த இடத்தில் இருப்பவர்கள் அரசாங்கத்தால் தண்டித்து திருத்த முடியாத ஒரு கூட்டத்தார் இவர்கள் இரவிலே கொலை, கொள்ளை இதையே செய்வார்கள். இதுவே இவர்கள் தொழில் என்று அந்தப் பெரியவர் கூறினுர். கர்த்தர் எங்களைப் பாதுகாப்பதற்காக செய்த மகத்துவ கிரியைகளை அறிந்து கர்த்தரை ஸ்துதிக்கிறேன்.

"இஸ்ரேவேலைப் பாரமான கல்லாக்குவேன்" என்ற கன்மலையாகிய கிறிஸ்து எங்களோடிருந்து எங்களையும் அன்றைய தனம் பாரமான கற்களாக மாற்றினுர்; அவருக்கே மகிமையுண்டாவதாக!

—(தொடரும்)

Pastor S. Sundarraj
Vallioor.

---

"...காண்டாமிருகத்துக் கொத்தபெலன் அவர்களுக்கு உண்டு"

என். 23 : 22

---

# சாட்சி

என்னுடைய பெயர் D. M. டேவிட் சாமுவேல் (D. M. David Samuel) அடியேன் ஒரு பக்தியுள்ள கிறிஸ்தவ குடும்பத்திலே பிறந்து வளர்க்கப்பட்டேன். அடியேனுடைய தந்தை சி. எம். எஸ். (C. M. S.) சபையில் ஒரு குருவானவர் (ஐயரவர்கள்). அடியேனுடைய பெற்றோரால் சிறுவயதிலிருந்தே ஒவ்வொரு நாளும் வேதம் வாசிக்கப் போதிக்கப்பட்டேன். கட்டாயப் படுத்தப் பட்டேன். ஒழுங்காக தினமும் ஆலயம் செல்வேன். இவ்வாறாக வளர்க்கப்பட்டு வருகிற வேளையிலே அடியேன் எட்டாவது வகுப்பு படிக்கும் சமயத்தில் நன்மை தீமையைப் பற்றி அறிவில்லாதவனாகக் காணப்பட்டேன். சூது, வாது அறியாதவனாக இருந்தேன். திடீரென்று அப்பொழுது அம்மையால் (Small Pox)மிகவும் பாதிக்கப்பட்டேன். கட்டில் கிடையாய்க் கிடந்தேன். எந்த ஒரு சிகிச்சையினாலும் என்னைக் குணப்படுத்த முடியவில்லை திடீரென்று ஒரு நாள் மரித்துப் போனேன். அடியேனுடைய படுக்கையருகிலே தாயாரும், தகப்பனாரும், சகோதரிகளும், உறவினர்களும் மற்றும் சிலரும் நின்று கொண்டிருந்தனர். பெற்றோரும், சகோதரிகளும், உறவினரும் மிகவும் அழுது கொண்டிருந்தனர். எனக்கு அப்பொழுது மூன்று சகோதரிகள். இப்பொழுது நான்கு சகோதரிகள். அடியேனுடைய வீட்டிலே யாவரும் மிகவும் துக்கத்துடன் பையன் மரித்துப் போய்விட்டானே என்றிருந்தார்கள். அடியேன் அநேக தேவதூதர்களால் படைசூழ சிலர் என்னை மோட்சத்துக்கு அழைத்துச் சென்றனர். மோட்சத்துக்கு வெளியே ஒரு சிறிய காவல் அறை (Room) போல் காணப்பட்டது. அதன் பக்கத்திலே ஒருவர் எனக்காக காத்திருக்கிறவர் போல் காணப்பட்டார். அவர் ஓடி வந்து என்னை வரவேற்று உள்ளே அழைத்துச் சென்றார். அவர் பேதுரு அப்போஸ்தலன் என்று உணர்த்தப் பட்டேன். அடியேன் பொன்தளம் போட்ட வீதியிலே நடந்து சென்றேன். எங்கு பார்த்தாலும் சுத்தப் பொன்னாகக் காணப்பட்டது. அங்கு மோட்சத்திலே பலதரப்பட்டவர்களைப் பார்த்தேன். வாலிபர் வயோதிபர் என்று பலவிதமானவர்களைப் பார்த்தேன். அவர்கள் மிகவும் மகிழ்ச்சியுடன் ஆரவாரித்துப் பாடி தேவனைத் துதித்து மகிமைப்படுத்திக் கொண்டிருந்தனர். அடியேன் ஒரு சில விருட்சங்களைப் பார்த்தேன். அநேக வாசஸ்தலங்களைக் கண்டேன். கடைசியாக தேவனுடைய சிங்காசனத்திற்கு நேராக அழைத்துச் செல்லப்பட்டேன். தேவன் தம்முடைய மகத்தான சிங்காசனத்திலிருந்து எழும்பி வந்து அடியேனை ஆசீர்வதித்து "இப்பொழுது நீ போகலாம், இங்கிருக்கக் கூடாது, நீ உலகத்திலே செய்து முடிக்க வேண்டிய வேலைகள் அதிகம். அவைகள் முடிந்தவுடனே நான் வந்து உன்னை என்னிடத்திலே சேர்த்துக் கொள்வேன் என்றார். நான் உடனே அவருடைய பாதத்தில் விழுந்து அவரை தொழுது கொண்டேன். இவ்வாறாக மோட்சத்திலே நான்கு மணி நேரம் கழிக்க தேவன் எனக்கு கிருபையும் இரக்கமும் செய்தார். உடனே அடியேன் மறுபடியுமாக தேவதூதர்களால் சூழப்பட்டு அடியேனுடைய வீட்டுக்கு வந்து சேர்ந்தேன். வீட்டில் கூடியிருந்த யாவருக்கும் மிகவும் ஆச்சரியம்! சந்தோஷம்.

இதற்குப் பின்பு சாத்தான் என்னை வஞ்சிக்கத் தொடங்கி விட்டான். பெற்றோருடைய கண்டிப்பு எனக்கு கசந்தது. அடியேனில் துர்க் குணங்கள் உருவாக ஆரம்பித்து விட்டது. மிகவும் கோபம், எரிச்சல் உள்ளவனாக வளர்ந்து வந்தேன. உதாரணமாக சாப்பாட்டில் கொஞ்சம் உப்பு கூடிவிட்டால் போதும் சாப்பாட்டோடு தட்டைத் (Plate) தூக்கி எறிந்து விடுவேன். இவ்வாறாக ஒரு சில சில்லறை சேஷ்டைகள் பண்ண ஆரம்பித்தேன். இந்த நாட்களிலே என்னிலே ஒரு கேள்வி அடிக்கடிக் கேட்கப்பட்டது, அதென்னவென்றால் 'டேவிட் சாமுவேலே! உனக்காக நான்மரித்தேனே. எனக்காக நீ என்ன செய்வாய்? என்பதே. நாளுக்கு நாள் வளர வளர என் சேஷ்டைகளும் வளர ஆரம்

பித்தது. இவ்வாறாக இருக்கும் போது அடியேன் 19-3-74ல் S. S. L. C (பதினோரா வது) படித்துக் கொண்டிருந்தேன். அடியே னுடைய பெற்றோர் பள்ளிப் பையன்க ளோடு சேர்ந்துதான் கதைப் பேசிப் பேசிக் கெட்டுப் போகிறான் என்று சொல்லி பள்ளிக்கூடத்துக்கு (School) முதல் மணி (First bell) அடித்த பின்புதான் செல்ல வேண்டும் என்று கண்டித்தார்கள் என்ற போதிலும் இப்படியான துர்க் குணங்கள் என்னை விட்டு நீங்கவில்லை. வெளியே கேட் டால் நல்ல பையன். ஆனால் வீட்டிலோ கெட்டப் பையன். இப்படியாக இரட்டை வேடம் போட்டு வந்தேன். அடியேனைத் திருத்துவதற்காக அடியேனுடைய தகப்பனா ரும் தாயாரும் அநேக நாட்கள் உபவாச மிருந்ததுண்டு. அடியேனுடைய அம்மா உபவாசத்தோடும் கண்ணீரோடும் அநேக தடவைகள் ஜெபித்ததை நான் என்னுடைய கண்ணால் கண்டிருக்கிறேன் என்ற போதி லும் ஒரு பிரயோஜனமுமில்லை. இந்த நாட் களிலே ஒரு நாள் இரவு நான் வீட்டுக்கு வெளியே (Urine pass) ஒ ன் னு க் கு இருப்பதற்காக தென்னை மரத்துக்கு அடி யிலே சென்றிருந்தேன். அடியேனுடைய காலின் அடியிலே ஒரு பொருள் வழுக்க ஆரம்பித்தது. உடனே ஓடிச் சென்று எங்கள் அப்பாவிடம் சொன்னேன். அவர் கள் உடனே ஒரு விளக்கை எடுத்துக் கொண்டு சென்றார்கள். நாங்கள் கண்ட காட்சியினால் சிலிர்த்து விட்டேன். ஒரு பெரிய நாகப் பாம்பு அங்கே காணப்பட் டது. உடனே எங்கள் அப்பா ஓடிச் சென்று மிகவும் சிரமப்பட்டு அந்த பாம் பைக் கொன்று விட்டார்கள். அதன் படத் தின் அகலமும், பாம்பின் நீளமும் பரும னும் அதிகம். கர்த்தர் அந்த நேரத்திலே அடியேனைக் காத்துக் கொண்டார். கர்த்த ருக்கு ஸ்தோத்ரம்.

அடியேன் பள்ளியிறுதித்தேர்விலே தேர்ச்சிப் பெற்று பாளையங்கோட்டையில் கல்லூரியில் P. U. C. சேர்ந்தேன். எதிர் பாராத விதமாக தேர்வில் தோல்வியுற் றேன். அது தேவசித்தம் என்றே சொல்ல வேண்டும். தேர்வில் தோல்வியுற்றதின் காரணமாக நாகர் கோவில் சென்று ஒரு Tutorial Collegeல் மூன்று மாதம் படித்தேன். அந்த நாட்களிலே ஒரு நாள் நான் ரூமிலே தனியாக இருந்த வேளையிலே மிகவும் பிரகாசமான ஒரு ஒளி என்னைச் சுற்றிலும் பிரகாசித்தது. அதன் பின்பாக இயேசு கிறிஸ்துதாமே சிலுவையில் தொங்கிக் கொண்டிருக்கிறவராக பிரத்தியட்சமாக எனக்குக்காட்சியளித்தார். என்னை நோக்கி: "உனக்காக நான் மரித்தேனே, எனக்காக நீ என்ன செய்வாய்? என்று கேட்டார்." நான் இயேசுவே! உம்முடைய சித்தம்என்று என்னை அர்ப்பணித்து விட்டேன். பின்பு P. U. Cயில் பாஸ் ஆகி விட்டேன். அதன் பின்பாக 1976 முதல் 79முடிய பாளையங் கோட்டையில் B. Sc. படித்தேன். அடியேன் பீடி, சிகரெட் இதுவரைக்கும் குடித்தது கிடையாது. ஒரு சினிமா கூட அடியேனு டைய வாழ்க்கையில் பார்த்ததில்லை என்ற போதிலும் அடியேனில் சில இரகசிய பாவங் கள் வந்து விட்டது அதாவது மோசமான பாவசிந்தனைகள், பெண்களை இச்சையோடு பார்த்தல், பெருமை, பொறாமை, ஜாதிவெறி, மத வெறி என்று காணப்பட்டது. அடியேன் 1979ல் எனது கல்லூரிப் படிப்பை முடித் தேன். அடியேனுடைய பெற்றோர் என்னை மேற்படிப்பு படிக்கக் கட்டாயப் படுத்தினார் கள். ஆனால் நான் மறுத்து விட்டு வேலை தேடிச் சென்னை சென்று விட்டேன். இது வும் தேவசித்தமே. (தொடரும்)

Eld. Bro. D. M. David Samuel
Bombay.

---

## ஜெபம்

(சென்ற இதழ் தொடர்ச்சி)

ஆகையால் தனித் தனியாகவும் ஜெபிப் போம். சபையாராய் கூடியும் ஜெபம் பண்ணுவோம்.

சத்தமிட்டு ஜெபம் பண்ணலாம்; மெது வாக மனதுக்குள் கர்த்தரை நோக்கியும் ஜெபிக்கலாம். தூக்கம் வருவது போல் இருந் தால் வாய் திறந்து சத்தமிட்டு ஜெபிக்க

வேண்டும். மேலும் ஆபத்து நேரங்களிலும், தாக்க நேரங்களிலும் நம் சத்தத்தை உயர்த்தி இறைவனிடம் விண்ணப்பம் செய்ய வேண்டும். அதே போன்று ஜெபத்தின் ஆரம்பத்தில் ஒருமனம் இல்லை என்றால் சிறிது நேரம் சத்தமிட்டு ஜெபித்து விட்டு பின்பு ஒரு மனம் வந்தவுடன் மெதுவாக ஜெபிக்கலாம். யெசுவா, செப்பனியா, புன்னி மற்றும் சிலர் தாங்கள் தேவனாகிய கர்த்தரை நோக்கி மகா சத்தமாய் ஓலமிட்டார்கள் (நெகே 9 : 4); சங்கீதக்காரன் "நான் கர்த்தரை நோக்கிச் சத்தமிட்டுக் கூப்பிட்டேன்" என்றும் (சங். 3 : 4); "நான் தேவனை நோக்கி என் சத்தத்தை உயர்த்திக் கெஞ்சினேன், என் சத்தத்தைத் தேவனிடத்தில் உயர்த்தினேன்" என்றும் சொல்கிறார் (சங். 77 : 1). இயேசுவும் "ஏலீ! ஏலீ! லாமா சபக்தானி என்று மிகுந்த சத்தமிட்டுக் கூப்பிட்டார்" (மத். 27 : 46) "மறுபடியும் மகா சத்தமாய் கூப்பிட்டு ஆவியை விட்டார்" (மத். 27 : 50) என்று எழுதப்பட்டிருக்கிறது.

ஆனால் அன்னாள் ஜெபம் பண்ணும் போது தன் இருதயத்திலே பேசினாள். அவளுடைய உதடுகள் மாத்திரம் அசைந்தது. அவள் சத்தமோ கேட்கப்படவில்லை. (I சாமு. 1 : 13)

கர்த்தருடைய நாளில், சபையின் ஆராதனை வேளைகளிலும் தவிர மற்ற நாட்களில் வீட்டில் இருந்து ஜெபம் செய்யலாம். ஆனால் தேவாலயத்தில் போய் ஜெபிப்பது மிகவும் நல்லது. ஏனெனில் கர்த்தர் சாலொமோனிடம் "நீ கட்டின இந்த ஆலயத்தில் என் நாமம் என்றென்றைக்கும் விளங்கத் தக்கதாக, அதைப் பரிசுத்தமாக்கினேன். என் கண்களும் என் இருதயமும் எந் நாளும் அங்கே இருக்கும்" (I இராஜா. 9 : 3) என்றார். சங்கீதக்காரனோ "தேவசபையிலே தேவன் எழுந்தருளியிருக்கிறார்" (சங். 82 : 1) என்கிறார். மேலும் அவர் "கர்த்தருடைய ஆலயத்துக்குப் போவோம் வாருங்கள் என்று எனக்கு அவர்கள் சொன்ன போது மகிழ்ச்சியாயிருந்தேன்" (சங். 122 : 1) என்றும், "கர்த்தர் தம்முடைய பரிசுத்த ஆலயத்தில் இருக்கிறார்" (சங் 11 : 4) என்றும்; நான் ஜீவனுள்ள நாளெல்லாம் கர்த்தருடைய ஆலயத்தில் தங்கிருப்பதையே நாடுவேன் (சங் 27 : 4) என்றும் கூறுகிறார். ஆனபடியால் தேவன் இருக்கும், எழுந்தருளும் ஸ்தலத்திற்கு சென்று அவரிடம் காரியத்தைச் சொல்லி ஜெபிப்பதே விரும்பத் தக்கது.

"சோதனைக்குட்படாதபடி விழித்திருந்து ஜெபிக்க வேண்டும்" (மாற் 14 : 38; லூக். 22 : 40) ஜெபிக்கிறவர்கள் பாவம் செய்ய மாட்டார்கள்; பாவம் செய்கிறவர்கள் ஜெபிக்க மாட்டார்கள் என்று பக்தர்கள் சொல்வது போல் விழித்திருந்து ஜெபிக்கிறவர்கள் பாவ சோதனைக்குத் தப்ப தேவனால் வல்லமை பெற்றுக் கொள்கிறார்கள். ஜெபிக்காதவர்கள் சோதனைக்குட்பட்டு பாவம் செய்கிறார்கள். விழித்திருந்து ஜெபிக்கும் போது வர இருக்கும் பாவ சோதனைக்குத் தப்பும் படியாகவும், எச்சரிக்கையாக இருக்கும்படியாகவும் அதை முன்பே தேவன் தரிசனத்தின் மூலமாகவோ அறிவிப்பார். மேலும் விழித்து இருந்து ஜெபிக்கும் போது வரும் காரியங்களை, தேவ இரகசியங்களை அறிந்து கொள்ளலாம்.

ஜெபம் செய்யப் போகின்ற ஒவ்வொரு சமயமும் முதலில் 10 அல்லது 15 நிமிடம் கர்த்தரை ஸ்தோத்தரித்து பரிசுத்த ஆவியினால் நிறைய வேண்டும். பின்பு விண்ணப்பங்களையும், வேண்டுதல்களையும் தேவனுக்குத் தெரியப் படுத்தலாம். நாம் பெற்ற பரிசுத்த அக்கினியை அணைக்காது அல்லது அவிக்காது தினமும் அனல் மூட்டி பாதுகாக்க வேண்டியது நம்முடைய பிரதான கடமையாகும். ஏன் ஆவியில் நிறைந்து ஜெபிக்க வேண்டும் என்றால் இந்த ஆவியானவரே இயேசுவின் மேல் தங்கி இருந்தவர். இந்த ஆவியானவரைப் பற்றி ஏசாயா தீர்க்கன் இவ்விதமாய் சொல்கிறார்: "ஞானத்தையும், உணர்வையும் அருளும் ஆவியும்; அறிவையும், கர்த்தருக்குப் பயப்படுகிற பயத்தையும் அருளும் ஆவியுமாகிய கர்த்தருடைய ஆவியானவர், அவர் மேல் தங்கியிருப்பார்" (ஏசாயா 11 : 1, 2) என்று சொல்கிறார். ஆனபடியினால் இந்த ஆவியானவரே ஞானம், உணர்வு, ஆலோசனை, பெலன், அறிவு, கர்த்தருக்குப் பயப்படும் பயம் முதலியவற்றை நமக்குத் தருகிறார்.

(தொடரும்)

# 'THIS CASTE' (SECT OF) DEVIL

**Howbiet this kind (of devil) goeth not out but by prayer and fasting.**
**—Mt. 17: 21.**

During the days of the ministry of our Saviour Jesus, authority had been given to His disciples, whom He had chosen to fulfil the ministry of salvation on earth, to teach, to heal the sick, and to cast away all kinds of devils. They did accordingly and came to our Lord saying, "Lord, in your name even devils obey us." At this time a man brought his son, who was possessed by this caste (a sect of) devil to be healed by the disciples. The disciples tried their level best to cast it out and failed. Finally the boy was brought to Jesus to whom the father humbly said, "Lord, your disciples were unable to cast away this sect (of) devil, have mercy and heal him." Then Jesus rebuked His disciples and said, "O, faithless and perverse generation how long shall I suffer you?" And Jesus rebuked the devil and it came out of the boy at once and he was healed.

Beloved, there is a hidden spiritual truth in the above mentioned passage: Lord Jesus, the Saviour had given the authority to His disciples to cast out all kinds of devils. Accordingly all devils went away, but they failed in casting out this caste (sect of) devil. What was the reason? This caste (sect of) devil is cruel than any other devils working in the self-ego of 'I' and it is so proud and haughty. This SECT (of) devil is working openly through out the world. Even though mighty social reformers have tried to eradicate this castism, it is still persisting proudly. GOD created us, the mankind from one blood and made us to inhabit the whole earth. When this is so, the devil who was thrown out of heaven is using men against mankind which is of one blood, to segregate into different castes and heretics. In order to drive out and destroy this proud caste (sect of) devil, which even the disciples were unable to drive out. The GOD of heaven humbled himself and took the form of man, and came to the world, because His children are with flesh and blood, bearing the name "Son of Man" to unite the whole human race into one. He took the form of a servant and He humbled himself unto the cross so that he may destroy the pride of community, the pride of sects, the pride of money and the pride of status. To cast out this caste (sect of) devil which were in the Jews and to rebuke the Jews who would not drink water from the hands of the Samaritan, Jesus, in the days of His ministry, asked for water from a woman of Samaria, who was counted as a low caste woman. Thus He revealed himself to the Samaritans. He stayed with them and ate with them and received the socalled defiled and shameful names of gluttonous man and Samaritan. What for? To cast out this caste (sect of) devil. Do you have mind to get this shameful name? If not, what for you bear the banner as Christian? Why do you claim yourself as believer? **If any man has not the mind of Christ, he is not of Christ.** If Christ is within you, this caste (sect of) devil would have left you. But, the devil which differentiates castes is in you, because you do not have Christ in you. Many devils were driven out by the disciples. Many devils means many sinful deeds. Many sinful deeds have left you, but this caste (sect of) devil is still with you, even though you are conducting many conventions, and baptising so many people. For how many years, you are very particular to take out the mote in other's eye, having not realised this caste (sect of) devil is in you. This caste (sect of) devil is in your eye like a beam and works mightly in open and in secret. Moreover how many Churches are coming up: House to house gathering, Street to street gathering. The crossless sermons of world famous preachers with world's graduation degrees. Even then this caste (sect of) devil has conquered not only the world, but also the believers and specially the servants of GOD. These people are not the members of the lively Church, but are the collection of lifeless bones seen by Ezekiel in the valley. To cast out the 'sect' devil which was in Peter, Lord revealed to him by a vision that he may have fellowship with Cornelius, a man from lower caste.

This was the vision: Peter saw a vessel descending from heaven which contained all kinds of beasts on earth, creeping things and birds and thrice there came a voice from heaven saying, "Kill and eat." Peter refused to give heed to this voice saying "I have never eaten anything that is uncommon and unclean," to which came the reply, "What GOD hath cleansed, that call not thou uncommon." This was done thrice and the vessel was received up again unto heaven.

Beloved, What we infer from this vision? Isn't the vessel, the church which is the body of Christ. All those who were saved were added to the church by GOD. When Holy Spirit has said unto the church "In this church, there is neither Greek nor Jew, there is neither foreigner nor of strange community, for ye are all one in Christ Jesus." You are looking the world and dishonouring the truth saying, "This caste differentiation will be persisting in the world." Isn't dishonouring others a sin? Isn't "Love others as you love yourself," the Spirit's doctrine to the church?

O' ye servants of GOD, believers who were redeemed by the Lord's holy blood, baptised in him, sealed in him, made members of His church which is His body and break one bread and drink the same blood in Lord's Table, making covenant with christ who is the mediator of the new covenant, in the presence of GOD that we are all one community but after coming out you are practicing the worldliness in the things of joy and sorrow, in giving and taking, and in marriage alliance by differentiating as high caste and low caste, black and white and of our tongue and other tongue. If you are not willing to obey to Gospel, why do you possess this glorious ministry? Don't you have any business other than the ministry of God which you are doing only for your belly. You who say that man must not drink liquor, can you work in a liquor shop? Are not all these betrayal of faith? Nowadays world has entered into the church of faith and pushed out the Spirit and shut the door. The members worship according to their will and wish. The Spirit of GOD is standing out and knocking the door. If you don't repent and open the door, the Spirit of God will leave you, Though He leaves you, He will not give up His plan. What is His Plan? He will confound you with simple, uneducated, afflicted and poor. He will irritate you with the foolish people. GOD will build His church by the stones which you have rejected. If you despise the great supper as the people who were called, despised the marriage supper giving excuses, then it is certain that the Lord will compel and call the poor who are in the streets, lanes and hedges and will make them to take part in His Supper. The verse "How did it come to pass; it came to pass of the Lord" will be fulfilled. Therefore, call not thou common to thesimple people whom GOD cleansed. In the name of Jesus let us cast out the caste (sect of) Devil which still lurks and works in the churches.

## LET US BE TRANSFIGURED AS ONE HOLY NATION

That Holy nation is the Holy nation called Isaac who was born of Abraham, the father of all believers, by the promise of God. All the others are of the generation of Ishmael, who was born to the bond woman. They are still in bondage with their mother That bondage is the slaves to world, slaves to the colour, slaves to the tongue, slaves to the money, slaves to the caste and slaves to the job. She brings forth children, being a slave to worldliness. These are the generation under bondage, who conduct meetings bearing the banner of believers. These are the mixed nation.

**You are not a true christian if you possess this caste (sect of) Devil in you. Do not boast against the truth. All haughtiness will be laid low. (Isa. 13:11)**

(This Caste Devil : Tamil tract No. NJC/6—13-10-1979)

| |
|---|
| Where there is castism there is no church; Where there is church there is no castism. |

# புதிய எருசலேம் செய்தி

எக்காளசத்தம் - 12 * டிசம்பர் '84

"புதிய எருசலேம் சபை"

"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ, நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள்.... விழித்திருங்கள்...உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லோருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்..."

மாற்கு 13 : 35-37

**EDITOR: CHIEF PASTOR N. LAZAR**

BOMBAY, INDIA

## பத்திரிக்கையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லோரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒருமனப்பட்டு கிறிஸ்துவுக்கொப்பான பூரண வளர்ச்சியடையும் படியாகவும் தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய்க் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும்; சபையானது வஞ்சக போதனைகளுக்குத் தப்பி ஒரே சீராய் பூரண வளர்ச்சியடையும் படியாகவும் இப்பத்திரிக்கை வெளியிடப்படுகிறது.

(எபே.4:11-16)

## இதழின் உள்ளே



"கிறிஸ்மஸ், 1985-ம் நவ வருட வாழ்த்துகளை கர்த்தராகிய இயேசுவின் நாமத்தினால் வாசகர்களுக்கு கூறிக்கொள்கிறோம்: கர்த்தர் உங்களை நித்தமும் காத்து, போஷித்து, தமது பரம ராஜ்ஜியத்திற்கு பங்கு உள்ளவர்களாக ஆக்குவாராக"

# ஆசிரியர் உரை

எபனேசர்—இம்மட்டும் கர்த்தர் உதவி செய்தார்.

1984-ம் ஆண்டு இறுதியை நெருங்கியுள்ளோம். தீயையும் தண்ணீரையும் கடந்துவந்தோம். தீயைப் போன்ற பாடுகளையும், துன்பதுக்கங்களாகிய தண்ணீர்களையும் கடந்து வந்துள்ளோம். சேனைகளின் கர்த்தர் நம்மோடிராவிட்டால் அவர்கள் கோபம் நம்மேல் எரிகையில் ! நம்மை உயிரோடே விழுங்கியிருப்பார்கள் என்று சொல்லத்தக்க சம்பவங்களிலும் கர்த்தர் நம்மோடிருந்து உதவி செய்தார் அதற்காய் நாம் கர்த்தரை ஸ்தோத்தரிப்போம். அசுத்த ஆவிகள் கூட்டங் கூட்டமாய் ஆகாய மண்டலத்திலிருந்து இறங்கி மனுமக்களை தாக்குகின்றன. எந்த ஒரு அசுத்த ஆவியும் தனித்து கிரியை செய்வதில்லை அவைகளிலும் ஒரு ஒழுங்கு காணப்படுகிறது. கூட்டங் கூட்டமாய், பவுஞ்சு பவுஞ்சாய் இறங்கி மனிதர்களைக் கெடுக்கின்றன. ஆனபடியால் தேவனுடைய பிள்ளைகளும் கூட்டங் கூட்டமாய் அணிவகுத்து நிற்போமாக. ஜெபித்து திட்டமிட்டு பிசாசை பேய்க் கூட்டங்களை எதிர்ப்போமாக. இந்த ஆவிக்குரிய யுத்தத்தில் தனித்து நீ ஜெயம் பெறமுடியாது பரிசுத்தவான்களின் ஜெப உதவி உனக்குத் தேவை. பாவிகளுக்குத் தேவன் செவிகொடுப்பதில்லை ஒருவன் தேவபக்தியுள்ளவனாயிருந்து அவருக்குச் சித்தமானதை செய்தால் அவனுக்கு செவி கொடுப்பார். தனித்து நிற்பவர்களையும், பிரிந்துபோகிறவர்களையும். பெலஹீனமானவர்களையும் அசுத்த ஆவிகள் தாக்கி முறியடிக்கும். நீ அவைகளில் சிக்கிக் கொள்ளாமல் பரிசுத்தவான்களின் ஐக்யத்துக்குள் வா, நீதிமானுடைய ஊக்கமான வேண்டுதல் மிகவும் பெலனுள்ளதாயிருக்கிறது. இம்மட்டும் நமக்கு உதவி செய்த கர்த்தர் இனிமேலும் உதவி செய்வாராக. வருஷத்தின் இறுதியிலும் கர்த்தருடைய கிருபை உங்கள் மேல் இருக்க ஜெபிக்கிறோம்.

கிறிஸ்துவுக்குள்,

N. Lazar

Chief Pastor N. LAZAR

# இயேசு கிறிஸ்துவின் பாவமன்னிப்பின் அதிகாரமும் கட்டளையும்

இயேசுவானவர் தாம் உயிர்த்தெழுந்த பின் பரிசுத்த ஆவியினலே அப்போஸ் தலருக்கு கட்டளையிட்டார்—அப். 1 : 1.

இயேசுகிறிஸ்து உயிர்த்தெழுந்த அன்று முதலாவது அப்போஸ்தலர்களுக்கு கட்டளையிட்ட கட்டளை பாவமன்னிப்பின் அதிகாரமாகும் (யோ. 20 : 23). கர்த்தர் தாம் உயிர்த்தெழுந்த அன்றைய தினம் மாலையிலே யூதர்களுக்குப் பயந்ததினல் சீஷர்கள் அறைக்கதவைப் பூட்டிக் கொண்டு உள்ளேயிருந்தனர். அடைக்கப்பட்ட வீட்டிலே திடீரென்று இயேசு பிரசன்னமாகி உங்களுக்கு சமாதானம் என்ருர். பின் அவர்கள் மேல் ஊதி பரிசுத்த ஆவியைப் பெற்றுக் கொள்ளுங்கள்; எவர்களுடைய பாவங்களை நீங்கள் மன்னிக்கிறீர்களோ அவைகள் அவர்களுக்கு மன்னிக்கப்படும்; எவர்களுக்கு நீங்கள் மன்னியாதிருக்கிறீர்களோ அவைகள் அவர்களுக்கு மன்னிக்கப்படாதிருக்கும் என்ருர்.

"அவர் இப்படிச் சொல்லித் தம்முடைய கைகளையும், விலாவையும் அவர்களுக்குக் காண்பித்தார். சீஷர்கள் கர்த்தரைக் கண்டு சந்தோஷப்பட்டார்கள்.

இயேசு மறுபடியும் அவர்களை நோக்கி: உங்களுக்குச் சமாதான முண்டாவதாக; பிதா என்னை அனுப்பினது போல நானும் உங்களை அனுப்புகிறேன் என்று சொல்லி, அவர்கள் மேல் ஊதி: பரிசுத்த ஆவியைப் பெற்றுக் கொள்ளுங்கள்; எவர்களுடைய பாவங்களை மன்னிக்கிறீர்களோ அவைகள் அவர்களுக்கு மன்னிக்கப்படும், எவர்களுடைய பாவங்களை மன்னியாதிருக்கிறீர்களோ அவைகள் அவர்களுக்கு மன்னிக்கப்படாதிருக்கும் என்ருர்" (யோ. 20 : 20 - 23). இந்த முதலாம் கட்டளையையும், உபதேசத்தையும் விளங்கிக் கொள்வதில் கிறிஸ்தவ உலகம் தடுமாறுகிறது. அதற்கு தங்கள் தங்கள் இஷ்டம் போல் விளக்கம் கொடுத்து நடக்கின்றனர். ரோமன் மார்க்கத்தாரோ குரு எப்படி இருந்தாலும் சரி அவர் தன்னிடத்தில் பாவ வசனத்தின்படி அறிக்கை செய்கிறவர்களுக்கு மன்னிப்பருள அதிகாரம் பெற்றிருக்கிருர் என்கிறது. அது எப்படியிருக்கிறது என்ருல் ஒரு பெரிய குரு (அத்தியட்சகர்) கடற்கரையில் உலாவ சென்ருர். சிறுவர்கள் சிலர் கூடி விளையாடிக் கொண்டிருந்தனர். அதில் ஒரு சிறுவன் குருவாக நடித்து பிற சிறுவர்களுக்கு பிதா, குமாரன், பரிசுத்த ஆவியின் நாமத்தில் தண்ணீர் தெளித்து ஞானஸ்நானம் கொடுத்து கொண்டிருந்தான். சிறுவர்கள் விளையாட்டு முடிந்தது. அத்தியட்சகர் அச் சிறுவர்கள் நடத்திய ஞானஸ்நான ஆராதனை முறைப்படி நடத்தப்பட்டதால் அந்த ஞானஸ்நானம் செல்லும் என அறிவித்தார். இங்கே ஞானஸ்நானம் பெற்ற சிறுவர்கள் மனந்திரும்பவோ, தங்கள் பாவங்களை அறிக்கை செய்து விட்டு விடவோ வேண்டியதில்லை. குருவாய் நடித்த சிறுவனும் குருவாய் இருந்திருக்க வேண்டிய அவசியமுமில்லை, சடங்கு முறையாய் நடந்தது ஆனபடியால் செல்லும் என்று நினைக்கின்றனர்.

பிராட்டஸ்டண்டுகாரர்கள் யோ. 20 : 23க்கு பலவித விளக்கம் சொல்லி நடக்கின்றனர். பெந்தெகோஸ்துகாரர்களோ வேளா வேளையில் பாவ உணர்ச்சியடைந்து அழுது ஜெபிப்பதும், வேளா வேளைகளில் சபையின் மத்தியில் எழுந்து அறிக்கை செய்தாலும் யோ. 20 : 23ன் அதிகாரத்தை அறியாதிருக்கிருர்கள். பிரதரன், பாப்டிஸ்ட் போன்ற மூப்பர் ஆளுகை சபையாரோ இரட்சிப்புக்கு ஞானஸ்நானம் முக்கியமல்ல, இரட்சிப்பு இயேசுகிறிஸ்துவை விசுவாசித்தவுடன் உண்டாகிறது, பின்பு முழுகி ஞானஸ்நானம் பெற்றுக் கொள்ள வேண்டும் என்று கூறுகிறவர்களாகும். இவர்கள் தேவனுக்கு அதிக கனம் கொடுக்

கிறதாக அபிநயத்து தேவனுடைய வார்த்தைகளை புறம்பே தள்ளி விட்டு சுய வியாக்கியானம் செய்கிறவர்களாய் யோ. 20 : 23 ஐ மனுஷனுக்கு அதிகாரம் கிடையாது என்று கூறித்திரிவர்.

சுயாதீன ஊழியர்களோ சுய ஆவியால் தூண்டப்பட்டு எந்த அடிப்படையும் இல்லாதவர்களாய் எல்லா காரியங்களிலும் வேதவசனங்களுக்கு கீழ்ப்படியாமல் சுயமாய் நடந்து அப்படி வசனங்கள் எல்லாவற்றிற்கும் இடங்கண்டு சுய வியாக்கியானம் செய்து நடப்பர்.

இதில் ஆச்சரியப்படுவதற்கொன்றுமில்லை. ஆதி அப்போஸ்தலர்களே, நேரடி கட்டளைப் பெற்றவர்களே தேவனுடைய கட்டளைகளை விளங்கிக் கொள்ள பல ஆண்டுகள் ஆயிற்று என்றால் அவர்களை தேவன் கட்டாயமாய் நடத்த வேண்டியதாயிற்று என்றால் இப்போது உள்ளவர்களுக்கு கேட்கவா வேண்டும். இயேசு அப்போஸ்தலர்களைப் பார்த்து உலகமெங்கும் புறப்பட்டு போய் சகல ஜாதிகளுக்கும், சிருஷ்டிகளுக்கும் மனந்திரும்புதலின் சுவிசேஷத்தை பிரசங்கியுங்கள், சீஷராக்குங்கள் என்று கட்டளையிட்டிருந்தார் —மத். 28 : 19; மாற். 16 : 15. அப்படியிருந்தும் அவர்கள் இரட்சிப்பு யூதர்களுக்கு மட்டுமே உரியது என்று யூதர்களுக்கேயன்றி வேறொருவர்களுக்கும் சுவிசேஷத்தைப் பிரசங்கிக்கவில்லை எருசலேமைவிட்டுவேறெங்கும்போகவில்லை. பரி.ஸ்தேவானின் இரத்தசாட்சியான மரணத்துக்குப் பின் உண்டான உபத்திரவத்தினால் எருசலேம் சபையார் வெவ்வேறு இடங்களுக்கு சிதறப்பட்டுப் போனார்கள். அப்படி சிதறிப் போனவர்கள் யூதர்களுக்கே சுவிசேஷத்தை அறிவித்தனர். வேறொருவருக்கும் அறிவிக்கவில்லை. சிலர் சமாரியாவுக்குப் போய் சமாரியர்களுக்கு சுவிசேஷத்தை அறிவித்தனர். சமாரியர் அசீரியரும், யூதரும் கலந்த கலப்பு இனமாகும். அங்கே பிலிப்பு சுவிசேஷகரும் சென்று இயேசு கிறிஸ்துவைப்பிரசங்கித்து சமாரியர்களில் அநேகரை விசுவாசிகளாக்கினார்—அப். 8 : 1—12. ஆனால் இன்னும் புறஜாதியாரிடம் சுவிசேஷம் கொண்டு செல்லப்படவில்லை. ஆண்டுகள் பத்துக்கு மேல் கடந்து விட்டன. சீஷர்களோ இறைவனின் கட்டளைகளைப் புரிந்துக் கொள்ளவில்லை. —அப். 10 அதி. அப் : பேதுரு ஒரு நாள் யோப்பா பட்டணத்தில் தோல் பதனிடுகிறவனாகிய சீமோன் வீட்டில் நடுப்பகல் 12 மணிக்கு ஜெபம் பண்ணும் படி மேல் வீட்டில் ஏறி ஜெபம் பண்ண ஆரம்பித்தார். பரமதரிசனம் ஒன்றை கண்டார். தேவன் சுத்தமாக்கினதை தீட்டுள்ளது என்று சொல்லக் கூடாது என்று தேவன் பேதுருவுக்கு காண்பித்தார். இதே சமயத்தில் அவரைத் தேடி வந்த மனிதர்களுடன் சந்தேகப் படாமல் போகும்படி பரிசுத்த ஆவியானவரால் கட்டளையுண்டாயிற்று—அப். 10 : 9-20.

அப்படியே அவர் சென்று புறஜாதியான கொர்நேலியு வீட்டாருக்கு சுவிசேஷத்தை அறிவித்து திருச்சபையில் சேர்க்கும் அனுசாரமாகிய ஞானஸ்நானத்தைக் கொடுத்து அவர்களுடன் சில நாள் தங்கியிருந்து விட்டு எருசலேமுக்கு திரும்பி வந்தார் அப். 10 : 21; 11 : 2. அவ்வளவுதான் எருசலேமிலுள்ள திருச்சபையார் பேதுரு அப்போஸ்தலனோடு வாக்குவாதம் பண்ணத் தொடங்கினார்கள். பேதுரு எல்லாவற்றையும் விவரித்து சொல்லி தேவன் புறஜாதிகளை இரட்சிக்கிறார். என்னை நடத்தினார் தேவனைத் தடுக்க நான் எம்மாத்திரம் என்றார்— அப். 11 : 1-18. அப்பொழுது கூடியிருந்தவர்கள் (தேவ ஆவி பெற்ற திருச்சபையார்) அப்படியானால் ஜீவனுக்கேதுவான மனந்திரும்புதலை தேவன் புறஜாதியாருக்கும்கட்டளையிட்டிருக்கிறார்என்றுசொல்லி அமர்ந்திருந்தனர். சுவிசேஷம் உலகமெங்கும் பரவ ஆரம்பித்தது—அப். 11 : 18. ஆம், நேரடி கட்டளை பெற்ற அப்போஸ்தலர்களே ஒரு பிரதான கட்டளையை விளங்கிக் கொள்ள பத்து ஆண்டுகளுக்கு மேலாயிற்று என்றால் இந்நாளில் கட்டளையோ, அதிகாரமோ பெறாத விழுந்து போன கிறிஸ்தவர்களுக்கு, திருச்சபை யல்லாதவர்களுக்கு இயேசு கிறிஸ்து உயிர்த்

தெழுந்த அன்று கட்டளையிட்ட முதலாம் கட்டளை விளங்குவது எப்படி? தேவன் இவர்களுக்கு விளக்கி காட்ட இவர்களில் அப்போஸ்தலன் இல்லையே. அப்போஸ் தலன் விளக்கினாலல்லவா விளங்கும். பரிசுத்த ஆவி பெற்றவர்களல்லவா விளங்கிக் கொள்ள முடியும். பரிசுத்த ஆவி உங்களிடத்தில் வரும் போது அவர் வந்து நான் உங்களுக்கு சொன்ன எல்லாவற்றையும் உங்களுக்கு ஞாபக மூட்டுவார் என்ற வேத வாக்கும் பரிசுத்த ஆவி பெற்றவர்களுக்கு மாத்திரம் தானே விளங்கும், ஞாபக மூட்டப்படும் (கேட்டவர்களுக்கே ஞாபக மூட்டப்படும்) யோ. 14 : 26.

ஆகையால் யோ. 20 : 23ன் படி பாவ மன்னிப்பு அருள மெய்யான திருச்சபைக்கு, மெய்யான அப்போஸ்தலனுக்கு அதிகார முண்டு. அப்போஸ்தல உபதேசமில்லாத வர்களுக்கு, திருச் சபையில்லாதவர்களுக்கு இந்த உபதேசம் விளங்காமலிருக்கிறதைக் குறித்து நாங்கள் ஆச்சரியப்படுகிறதில்லை. எல்லோரும் எதிர்க்கிறபடியினால் சந்தோஷப் படுகிறோம். எல்லோரும் தவறு என்பதை அறிந்து கொள்கிறோம். தேவன் எங்களுக்கு அருளிய வெளிப்படுத்துதலுக்காகவும், கட்டளைகளுக்காகவும் தேவனை ஸ்தோத்தரிக்கிறோம். ஆதி சபை விழுந்த பின் சபையின் அஸ்திபாரங்கள் எங்களுக்கே கையளிக்கப்பட்டிருக்கிறது, சபை கட்ட கட்டளை உண்டாயிருக்கிறது என்று நம்புகிறோம். இரண்டாம் விசை, மறுபடியும் சுத்த சுவிசேஷம்—பூரணமான சுவிசேஷம், ஒப்புரவாக்குதலின் உபதேசம் புதிய எருசலேமிலிருந்து பிரசங்கிக்கப்படுகிறது. "காதுள்ளவன் கேட்கக்கடவன்" விருப்பமுள்ளவன் ஜீவதண்ணீருற்றில் இலவசமாய் வந்து பானம் பண்ணக் கடவன்.

"அப்பொழுது அவன் என்னை நோக்கி :

நீ மறுபடியும் அநேக ஜனங்களையும், ஜாதிகளையும், பாஷைக்காரரையும், ராஜாக்களையுங் குறித்துத் (சுவிசேஷம்) தீர்க்க தரிசனஞ் சொல்ல வேண்டும் என்றான்.
—வெளி. 10 : 11.

"கேட்கிறதற்குக் காதுள்ளவன் கேட்கக் கடவன் என்று அவர்களுக்குச் சொன்னார்.
—மாற்கு 4 : 9.

"ஆவியும் மணவாட்டியும் வா என்கிறார்கள்; கேட்கிறவனும் வா என்பானாக! தாகமாயிருக்கிறவன் வரக் கடவன் ஜீவத் தண்ணீரை இலவசமாய் வாங்கிக் கொள்ளக் கடவன்" —வெளி. 22 : 17.

---

"மனுஷருக்கு இப்படிப்பட்ட அதிகாரத்தைக் கொடுத்தவராகிய தேவனை மகிமைப் படுத்தினார்கள்" —மத். 9 : 8.

---

# காலம் நிறைவேற்று

"காலம் நிறைவேறினபோது ஸ்திரீயினிடத்தில் பிறந்தவராகிய தம்முடைய குமாரனை தேவன் அனுப்பினார்"
—கலா. 4 : 5

காலம் என்றால் என்ன? காலத்தை இறந்த காலம், அல்லது கடந்த காலம், நிகழ் காலம், வருங்காலம் என்று கூறுகிறோம். காலத்தைக் கணிக்க சூரிய, சந்திரனின் சுழற்சியைக் கொண்டு நாள், வாரம், மாதம், வருடம் என்று கணிக்கிறோம். ஆனால் யோசுவாவின் காலத்தில் சூரியன் ஒரு பகல் நின்றதாக வாசிக்கிறோம். அப்போ காலம் செல்லவில்லையா? காலம் கடந்து சென்று கொண்டுதான் இருந்தது. இவைகளோ இந்துக்கள் குறிப்பிடும் சதுர் யுகங்களோ (கிரேதாயுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம்) காலத்தை யுண்டு பண்ணவில்லை. காலத்தை கணிக்கவே அவைகளை உபயோகிக்கின்றனர். காலத்தை இந்துக்கள் அர்த்த மற்றவை என்கின்றனர்.

ஒரு சக்கரத்தின் அரைக் கால்கள் சுழல்வது போல் காலம் தானாய் மாறி மாறி வரும், நாலுயுகங்களும் முடிந்ததும் பிரளயம் உண்

டாகும். மறுபடியும் சதுர்யுகங்கள் ஆரம்ப மாகும் முன் நடந்தவைகளே மறுபடியும் நடக்கும், காலம் தானாய் இயங்குகிறது என்று இந்து நூல்கள் கூறுகின்றன. ஆனால் இஸ்ரவேலரும் கிறிஸ்தவர்களும் அப்படி ஒப்புக் கொள்வதில்லை. காலம் தானாய்ச் செயல்படும் தன்மையற்றது. மக்கள் செயல்களும் உலக வரலாறும் காலத்தில் நடை பெறுகின்றன. செயல்கள் தற்செயலாய் அல்ல, பல்வேறு ஆட்களின் விருப்பத்தினால் நடை பெறுகிறது. கடவுள் காலத்திற்குட்பட்டவரல்லர் II பேதுரு 3 : 8 மக்கள் வாழ்க்கையோ காலத்துக்குட்பட்டது. மக்கள் காலத்தின் நிமிடங்களுக்கு கட்டுப்பட்டு நடக்க வேண்டும். கடவுள் காலத்துக்குள் தலையிட்டு செயல் புரிகிறார் காலத்தின் சம்பவங்களை தமது சித்தத்தை நிறைவேற்றும் கருவியாக மாற்றிப் போடுகிறார். காலத்தை அதில் நடந்த சம்பவங்களினால் கணிக்கிறோம் காலை, மாலை, பிறப்பு, இறப்பு, உணவு, திருமணம், விதைப்பு, அறுப்பு, மழை, போர் முதலியவற்றால் காலம் சிறப்புற்றது. உலக சரித்திர ஆசிரியர்கள்-சரித்திரம் எழுதுகிறவர்கள் இன்ன காலத்தில் இன்னின்ன போர் (யுத்தம்) நடந்தது என்று யுத்தத்தை ஆதாரமாக வைத்து சரித்திரம் எழுதுகின்றனர் ஆகவே, சம்பவங்கள் நடைபெறு காலம் வெறுங்காலம். சம்பவங்கள் குறித்த நேரங்களில் நடைபெறும் பொழுது அக் குறித்த காலம் நிறைவேற்றப் பட்டதாகப் பாராட்டப்பட்டது-காண்: லூக். 4 : 16-21. காலம் வருமுன் எங்களைவேதனைப்படுத்தவா இங்கே வந்தீர் என்று பிசாசுபிடித்தவர்கள் சத்தமிட்டார்கள் (மத். 8 : 29) என்பது கவனிக்கதக்கது. பிசாசுகளுக்கு இன்னும் கொஞ்ச காலம் தான் உண்டு (வெளி. 12 : 12). இந்த பழைய கால(யுக)ம் ஆதாம் முதல் ஆரம்பமாயிற்று. அது நிறைவேறி முடியப் போகிறதற்குள்ளே கடவுள் காலத்துக்குள் தலையிட்டு புதிய காலத்தை (யுகம்) ஆரம்பித்துள்ளார். கிறிஸ்துவின் பிறப்பு, வாழ்க்கை, மரணம், உயிர்த்தெழுதலினால் கடவுள் சரித்திரத்தில் (காலத்தில்) பிரவேசித்து, முடித்த முக்கியமான செயலினால் அதற்கு முன் இருந்த காலத்திற்கும், அதற்குப் பின்னுள்ள காலத்திற்கும் பெரிய வேறுபாடு உண்டாக்கியுள்ளார். இதைக் காட்டுவதற்கு புதிய ஏற்பாட்டில் (சத்திய வேதாகமப் பகுதி) 'இது முதல்', 'இனி மேல்', 'இனி', 'இது முதற் கொண்டு' என்ற சொற்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன— காண் : II கொரி. 5 : 15,16. ஆகையால் காலத்திற்குள் புதிய குணதிசயமுள்ள ஓர் புதிய ஒழுங்கு பிரவேசித்துள்ளது. இது சாதாரண காலத்தில் கிரியை செய்த போதிலும் இது இக்காலத்திற்குரியதன்று. எல்லாம் (முழுவதும்) கடவுளுடைய சித்தத்தின்படி நடக்கும் புது யுகத்திற்குரியது. இறை ஆட்சி தேவனுடைய இராஜ்யம் ஆரம்பமாயிற்று (ஆவியின் படி). ஆரம்பமானாலும் இறை ஆட்சிக்கு எதிர்ப்பு உண்டு. ஆகையினால் புதிய யுகம் நிறைவேறுதலை நாம் எதிர் பார்க்கிறோம் பழைய யுகம் (காலம்) நிறைவேறின போது கிறிஸ்து பிறந்தார். புதிய யுகம் ஆரம்பமாயிற்று. ஆரம்பம் வேறு, அந்தம் வேறு. அந்தமும் வரவிருக்கின்றது. கிறிஸ்து முதல் பழைய யுகத்திற்கு கடைசி காலம். பழைய யுகம் முற்றிலும் முடிவடைந்து புதிய யுகம் நிறைவேறப் போகிறது. அல்லேலூயா! 'இன்று கர்த்தராகிய கிறிஸ்து எனும் இரட்சகர் உங்களுக்காக பிறந்திருக்கிறார், அவரை விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுங்கள். புதிய யுகத்தின் ஆளுகைக்குள் வாருங்கள். பழைய யுகம் ஒழிந்து அதின் கிரியைகளெல்லாம் நியாயத் தீர்ப்படைந்து தண்டிக்கப்படப் போகின்றன. கிறிஸ்து இயேசுவை விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுங்கள். இதுவே கிறிஸ்துவின் பிறப்பு பண்டிகையின் உண்மை நோக்கம் அல்லேலூயா!

---

"நீங்கள் ஞானமுள்ளவர்களாய்... காலத்தைப் பிரயோஜனப்படுத்திக் கொள்ளுங்கள்" —எபே. 5 : 15,16

---

# மோட்ச வழி

## குரு–சிஷ்ய உரையாடல்

(தொடர்ச்சி)

குரு : கிறிஸ்து மார்க்க ருபா காரங்களில் சில.

1. பொதுவாக எல்லா மதங்களிலும் தேவன் அவதரித்து வருவார் என்ற நம்பிக்கை அவதார கொள்கை உண்டு. இவைகளை ஆராய்ந்தால் இயேசு கிறிஸ்து ஒருவரே மெய்யான அவதாரம் என்பது நிருபணமாகும். தேவன் ஒருவரே, அவதாரமும் ஒன்றே.

2. மற்ற மத நூல்களைக் கொண்டு அவைகளில் சுட்டி காட்டப் பட்டுள்ள இலட்ஷண புருஷர் இயேசு கிறிஸ்துவே என்று நிருபிக்க முடியும்.

3. கிறிஸ்து பிறப்பதற்கு 2000 வருடங்களுக்கு முன்பிருந்தே இயேசுகிறிஸ்து பிறந்த தேசத்தாரின் வம்சாவழி எழுதப்பட்டுள்ளது. அதில் தோன்றிய தீர்க்கதரிசிகள் வரப்போகும் இரட்சகரைப்பற்றி துல்லியமாய் அறிவித்து வந்திருக்கின்றனர். அவைகள் எழுத்து பிரகாரம் நடந்தேறின.

4. இயேசு கிறிஸ்துவின் மனிதாவதார சரித்திரம் நிச்சயமானது காலவிபரங்களோடு உள்ளது. அச்சத்திய அவதார மூர்த்தியைக் கண்ணாரக் கண்டவர்கள் எழுதியதே புதிய ஏற்பாடு என்னும் வேதாகம நூலாகும். இது கர்ண பாரம்பரியமாய் வந்த கட்டுக் கதையோ தத்துவமோ அல்ல.

5. இயேசுவானவருடைய சுபாவ லட்ஷணங்கள் தேவ சம்பந்தமானவைகள். அவருக்கு நிகரானவர்கள் பூமியில் தோன்றினதில்லை.

6. இயேசுவானவர் தம்மைக் குறித்து கொடுத்த சாட்சியும், மனுஷர்மேலும், எல்லா சிருஷ்டியின் மேலும் அவர் காண்பித்த அதிகாரமும் மனிதரை இரட்சிக்க நரவேடம் பூண்டுவந்த இரட்சகர் தாம் என்று அவர் அறிவித்ததும் இவரே அவதார மெடுத்து வந்த தேவன் என்று திட்டமாய் அறிய முடிகிறது.

7. இயேசுவானவர் தமது வாக்கின் திவ்விய மகிமையால் சத்திய மார்க்கத்தை காண்பித்ததும், மனிதர்களை மாற்றி நற்குணமுள்ளவர்களாக்கினதும், அற்புத கிரியைகளை செய்ததும், மக்களை விடுவித்ததும், தமது பாடு, மரணம், உயிர்த் தெழுதலைக் குறித்து அறிவித்ததும் அப்படியே சம்பவித்ததும் இவரே இரட்சகர் என நிருபிக்கிறது.

8. கிறிஸ்துவானவர் மரித்துயிர்த்து பரலோகம் சென்ற போதிலும் அவரே லோக பரிபாலனம் செய்யப் போகின்றார் என்பதற்கு ஆதாரமாக மனிதர்களை வலுக்கட்டாயம் பண்ணுதபடி தம்மடியார்களாய் ஆக்கி வருவதும் கிறிஸ்து மார்க்கம் பரவுகிறதையும் கிறிஸ்து மார்க்கம் மெய்யாய் பரவுகிற இடத்தில் இருள், மூட பழக்க வழக்கங்கள் அகன்று வருவதையும் கல்வி, அறிவு சிறப்பதையும் நற்கிரியைகள் பெருகுவதையும் பார்க்கிறோம். இவை போன்ற காரியங்களினால் கிறிஸ்துவே உலகத்தின் அரசர், வரப் போகிறார் என்று அறியலாம்.

9. அநுபவரீதியாக கிறிஸ்துவானவர் சர்வபாவங்களையும் நீக்கி இரட்சித்து சமயோசித ஆலோசனை தந்து நடத்தி சிந்தனைக்கும் எட்டாத தெய்வீக வரங்களை ஈந்து நடத்தி வருகிறதினாலும் கிறிஸ்து மார்க்கமே மெய்மார்க்கம், சத்திய மார்க்கம் என்று அறிவிக்கிறோம்,

10. இயேசுவானவரின் மனிதாவதார புண்ணியங்களைக் கொண்டு இயேசுவானவரின் தெய்வீகத்தையுணர்ந்து கண்டுகொண்டு இறைவனோடு உறவாயிருந்து களிகூருகிறவர்கள் எப்பாடுகளையும் பொறுமையாய் சகிக்க பெலனடைகின்றனர். தங்கள் பாடுகளினால் பிறர்க்கு நன்மையுண்டாகு மென்றறிந்து பாடுபடவும், தியாகம் செய்யவும் முன் வருகின்றனர். இதனால் உலகத்தில் பெரிய நன்மையுண்டாகிறது. இக்காரணங்களால் கிறிஸ்து மார்க்கமே ஜீவனுள்ள மெய்மார்க்கம் என்பது நிருபணமாகிறது.

(—தொடரும்)

"...என்னாலேயல்லாமல் ஒருவனும் பிதாவினிடத்தில் வரான்"–யோவான் 14 : 6.

# வேத பாடம்

(தொடர்ச்சி)

ஆதி. 20 : 1-2 ஆபிரகாம் கேராரில் குடியேறுகிறார் தன்மனைவியை சகோதரி என்று சொல்லி அதே தவறை மறுபடியும் செய்கிறார். தவறை பாவம் என்று அறிக்கை செய்து விட்டுவிடாதவரை மறுபடியும் செய்ய நேரிடும். அதினால் சாராளை இழக்க நேரிட்டது. கேராரின் இராஜா அவளை (சாராளை) அரண்மனைக்கு அழைப்பித்தான்.

ஆதி. 20 : 3-7 கடவுள் தன் பக்தனுடைய சொத்தை உடைமையை பாதுகாக்கிறார். அன்று இரவே தேவன் சொப்பனத்தில் கேராரின் இராஜாவாகிய அபிமெலேக்கை எச்சரித்தார். அவன் பாவம் செய்யாதபடி தடுத்தார்.

ஆதி. 20 : 8-16 அதிகாலமே அபிமெலேக்கு ஆபிரகாமை அழைத்து கடிந்து கொண்டு, சாராளை திருப்பி அனுப்பிவிட்டான். சாராளையும் கடிந்துகொண்டு அவள் முக்காட்டுக் கான ஏற்பாட்டைச் செய்தான்.

ஆதி. 20 : 17-18 சாராளினிமித்தம் தேவன் அபிமெலேக்கின் வீட்டாரின் கர்ப்பங்களை யெல்லாம் அடைத்திருந்தார். நோய் உண்டாயிருந்தது. ஆபிரகாம் தேவனிடம் வேண்டிக் கொண்ட போது கர்த்தர் அபிமெலேக்கையும் குணமாக்கினார்.

ஆதி. 21 : 1-7 தேவன் வாக்கருளியிருந்தபடி ஆபிரகாமுக்கு சாராளிடம் ஈசாக்கு பிறக்கிறான். இது அற்புத பிறப்பு இப்பொழுது ஆபிரகாமுக்கு வயது 100, சாராளுக்கு வயது 90.

ஆதி. 21 : 8-13 ஆகாருக்கு பிறந்த இஸ்மவேல் ஈசாக்கை பரியாசம் பண்ணுகிறான், இதினிமித்தம் அவனைக் குறித்த தேவ தீர்ப்பு வெளிப்படுகிறது. சாராள் ஆபிரகாமை நோக்கி அடிமைப் பெண்ணையும் அவள் குமாரனையும் புறம்பே தள்ளும் அடிமைப் பெண்ணின் மகன் என் குமாரனோடு சுதந்தரவாளியாய் இருப்பதில்லை என்றாள். தேவன் ஆபிரகாமை நோக்கி சாராள் உனக்கு சொல்வதெல்லாவற்றையும் செய் என்கிறார். மேலும் இஸ்மவேலும் உன் வித்தாயிருக்கிறபடியால் அவனையும்

ஆசீர்வதிப்பேன் என்கிறார். மாம்சத்தின்படி பிறந்தவன் வாக்குத்தத்தத்தின்படி பிறந்தவனை பரியாசம் பண்ணுகிறான். இது இன்றும் நடக்கிறது. இதினிமித்தம் அடிமைப் பெண்ணாகிய ஆகாரும் அவள் மகனும் புறம்பாக்கப்படுகிறார்கள்.

**ஆதி. 21 : 14-21** மறு நாள் அதிகாலமே ஆபிரகாம் எழுந்து ஆகாரிடம் இஸ்மவேலை ஒப்படைத்து வழிக்கு ஆகாரமும் தண்ணீரும் கொடுத்து வழியனுப்பி வெளியேற்றி விடுகிறார். வழியில் தண்ணீர் தீர்ந்து போனபடியால் ஆகார் சத்தமிட்டு அழுகிறாள். தேவன் ஆகாரின் கண்ணைத் திறக்கிறார். தேற்றுகிறார். அப்பொழுது ஆகார் தண்ணீர் துரவைக் கண்டு அதின் தண்ணீரைப்பருகி அவளும் அவள் குமாரனும் பிழைத்துக் கொள்ளுகிறார்கள். இஸ்மவேல் பாரான் வனாந்திரத்தில் குடியிருந்தான். ஆகார் இஸ்மவேலுக்கு எகிப்திய பெண்ணொருத்தியை விவாகம் பண்ணுவித்தாள்.

**ஆதி. 21 : 22-34** ஆபிரகாம் பெயர்சபாவில் குடியிருக்கும்போது பெலிஸ்தரின் ராஜா அபிமெலேக்கும் அவன் சேனாதிபதியாகிய பிகோலும் ஆபிரகாமிடம் வந்து ஆபிரகாமிடம் சமாதான உடன்படிக்கை செய்து கொண்டனர். கர்த்தர் ஆபிரகாமை உயர்த்தினார். ஆபிரகாமைப்பற்றிய பயம் ராஜாக்களுக்கும் உண்டாயிற்று. ஆபிரகாம் பெயர்சபாவில் ஒரு தண்ணீர் துரவை தோண்டினார். பெலிஸ்தரின் ராஜாவும் சேனாதிபதியும் அதை உறுதி செய்தனர்.

(தொடரும்)

> "...அவன் ஒரு தீர்க்கதரிசி... அவன் உனக்காக வேண்டுதல் செய்வான்...
> —ஆதி. 20 : 7.

பாலர் பகுதி

## நல்ல கிறிஸ்துமஸ்

கிறிஸ்டியன் நகரத்தில் ஸ்டீபன், மரியாள் என்ற கிறிஸ்தவ தம்பதிகளுக்கு மோசஸ், யாகேல் என்ற இரண்டு குழந்தைகள் இருந்தன. மோசஸ் என்ற பையன் தனது எட்டாவது வகுப்பு படித்துக் கொண்டிருந்தான். யாகேல் ஆறாவது வகுப்பு படித்துக் கொண்டிருந்தாள்.

மோசஸ் தனது இஷ்டப்படி நடப்பவனாகவும் பிறர் சொல் கேளாதவனாகவும் நடந்து வந்தான். வீட்டிலோ எந்தக் காரியத்திற்கும் அடம்பிடித்து தான் நினைப்பவைகளை செய்து முடிக்க வேண்டும் என்ற எண்ணமுள்ளவன். அவனது பெற்றோர்களும், மூத்தப் பையன் என்ற காரணத்தால் செல்லமாக வளர்த்து அவனது குணங்களை பற்றி பெரிது படுத்தவில்லை. Sunday Class-களும் போக முடியாது என்று சொல்லி வளர்ந்து வந்தான்.

ஆனால் யாகேல் அப்படியல்லாது, தேவனைத் துதிப்பதிலும், வேதம் வாசிப்பதிலும், ஜெபம் பண்ணுவதிலும் Sunday Class-ல் முதல் மாணவியாக திகழ்ந்தாள். அது மட்டுமின்றி, இரக்க சிந்தை உடையவளாகவும் வளர்ந்து வந்தாள். தேவ

னுடைய காரியங்களில் முதலாவது பெண்ணாகத் திகழ்ந்தாள்.

கிறிஸ்துமஸ் நெருங்கி விட்டதால் பெற்றோர்கள் குழந்தைகளுக்கு புத்தாடைகள் வாங்க வேண்டும் என்று திட்டமிட்டு முதலாவது மோசஸிடம் கேட்டார்கள், உனக்கு எப்படித் துணி வேண்டும், வேறு என்ன வேண்டும் கிறிஸ்துமஸுக்கு என்று. அதற்கு மோசஸ் எனக்கு நல்ல விலையுயர்ந்த Pant, Shirt வேண்டும் என்றும், அது மட்டுமின்றி எனக்கு ஒரு வாட்ச் ஒன்று வேண்டும் எனவும் கேட்டான். அடுத்து யாகேலிடம் தகப்பனர் கேட்டார். அதற்கு யாகேல் அப்பா! எனக்கு இந்த ஆண்டு புத்தாடை ஒன்றும் வேண்டாம். இருக்கின்ற உடைகளை நான் கிறிஸ்துமஸ் அன்று உடுத்திக் கொள்கிறேன். ஆனல் அப்பா நீங்கள் எனக்கு ஒரு காரியம் செய்ய வேண்டும் என்று கேட்டாள். அதற்கு தகப்பனர் எதுவும் உனக்கு கொடுக்கிறேன் கேள் என்ருர். யாகேல் மீது அப்பாவுக்கு அதிகமான அன்பு உண்டு. யாகேல் சொல்கிருள், அப்பா நீங்கள் எனக்கு எடுத்து கொடுக்கப் போகின்ற புது துணி மணிகளுக்குப் பதிலாக அந்தப் பணத்தை எனக்கு கொடுங்கள். நான் அதோடு நீங்கள் எனக்கு பள்ளிக்குப் போகும் போது கொடுத்த பைசாக்களையும் சேர்த்து வைத்திருக்கிறேன். இந்த இரண்டு பணங்களையும் நான் சேர்த்து நமது நகரத்தில் உள்ள அனாதை ஆ சி ர ம குழந்தைகளுக்கு கொடுக்க விரும்புகின்றேன். ஏனென்ருல் நீங்கள் நான் விரும்புவதை வாங்கிக் கொடுக்கின்றீர்கள். ஆனல் அவர்களுக்கு வாங்கிக் கொடுப்பார் ஒருவரும் இல்லை அல்லவா என்று சொல்ல, யாகேலின் அப்பா மிகவும் ஆச்சரியத்துடன் தன் மகளை அன்போடு நோக்கினர். பின்னர் அவளது விருப்பப்படியே அவர் அவளிடத்தில் பணம் கொடுப்பதாக ஒப்புக் கொண்டார். யாகேல் மிகவும் சந்தோஷம் உண்டான உடனே தேவனை துதிக்க ஆரம்பித்தாள், பணம் கிடைக்கப் போகின்றதற்காக. இவை எல்லாவற்றிற்கும் காரணம் அவள் Sunday Class-ல் அவளுக்கு திக்கற்றப்பிள்ளைகளைப் பற்றி உபதேசிக்கப்பட்ட தேவ வசனங்களே காரணம். (யாக். 1 : 27)

யாகேல் விருப்பப்படி அங்குள்ள அனாதை ஆசிரமத்திலுள்ள 15 குழந்தைகளுக்கும், அவளது அப்பா துணிமணிகள் வாங்கி வந்தார். அவள் சேர்த்து வைத்திருந்த பணத்திற்கு இனிப்புகள் வாங்கினள். யாகேல் தனது பெற்ரோருடனும், அண்ணனுடனும் கிறிஸ்து பிறப்பு பண்டிகை நாள் அதிகால வேளை ஆசிரமத்திற்குச் சென்று அங்குள்ள குழந்தைகளுக்கு தனது கையால் துணிகளையும், இனிப்புகளையும் கொடுத்து மகிழ்ந்தாள்.

ஒரே வேளையில் அங்குள்ள குழந்தைகள் உள்ளத்துடன் சேர்ந்து யாகேல் உள்ளமும் மிகவும் சந்தோஷப்பட்டது. மோசஸும் அந்நேரத்தில் தங்கையைப் போல நாமும் மாற வேண்டும் என திட்ட மிட்டான். பெற்ரோர்கள் இப்படியான ஒரு குழந்தையை பெற்றெடுத்தற்காக மகிழ்ந்தார்கள். அதே வேளையில் பரலோகத்தில் உள்ள நமது கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவும் அக மகிழ்ந்திருப்பார் என்பதற்கு என்ன சந்தேகம்!

குழந்தைகளே! நாமும் யாகேலைப் போல, கிறிஸ்து பிறப்பு பண்டிகையை ஏழைகளுக்கும்,திக்கற்றவர்களுக்கும் உதவி செய்து கொண்டாடுவோமாக.

"இந்தச் சிறியரில் ஒருவனுக்கு எதை செய்தீர்களோ அதை எனக்கே செய்தீர்கள்" —மத். 25 : 40

மாதர் பகுதி

# ஒரு தாயின் வாஞ்சை

ஒரு தாய் தன் பிள்ளைகள் தேவனுடைய வலது பாரிசத்தில் ஒருவனும் தன் இடது பாரிசத்தில் ஒருவனுமாக இருக்க வேண்டும் என்று தேவனிடம் வேண்டிக் கொண்டாள். இது ஒரு உன்னதமான நோக்கம் என்பதை தேவனுடைய பிள்ளைகளே அறிந்து கொள்ளலாம். சில தாய்மார்கள் தன் பிள்ளைகள் படித்து பட்டதாரியாக வரவேண்டும், இன்னும் இந்தஉலகத்தின் உயர்ந்த உத்தியோகத்தில் வரவேண்டும் என்றெல்லாம் எண்ணு கிறார்கள். ஆனால் தேவனுடைய சமூகத்தில் ஒரு பெரியவனாக வேண்டுமென்ற எண்ணம் இல்லாமல் இருக்கிறதை பார்க் கிறோம். சில தாய்மார் தன் பிள்ளைகள் இரட்சிக்கப்பட விருப்பம் இல்லாத தாய மார்கள் உண்டு. ஒரு தாயைப்பற்றி எனக்குத் தெரியும் தன் மகன் சபைக்கு வருவதை தடுக்க எத்தனை விதமான முயற்சிகள் செய்து தடுத்து போட்டது. வேறு எங்கே போனாலும் இங்கே போகாதே என்று தடுத்து விட்டார்கள். அந்த சகோ தரன் உலகத்துக்கும் ஆகாதவனாக காணப் படுகிறான். இப்படி அனேக தாய்மார்கள் காணப்படுகிறார்கள்.

தாயே! உன்னுடைய வாஞ்சை எப்படி இருக்கிறது? உன் பிள்ளைகள் தேவ சமூகத்தில் காணப்பட வேண்டும் என்ற விருப்பம் இருக்கிறதா? அல்லது உலகத் திலே இருக்க வேண்டும் என்ற விருப்பம் இருக்கிறதா? சிந்தித்து பார். உலகில் பெரியவர்களாக இருந்தாலும், ஒரு நாள் உலகம் அவர்களை விடும் அல்லது அவர்கள் உலகத்தை விடுவார்கள். அந்த சமயம் எப்படியிருக்கும்? ஆகையால் யோவா னுடைய தாயைப் போல காணப்படுகிறாயா? என் பிள்ளை தேவனுடைய வலது பாரிசத்தில் இருக்க வேண்டும் என்ற வாஞ்சை உனக்கு இருக்கிறதா? ஆண்டவரிடம் துணிந்து வெளியரங்கமாய் என்னுடைய பிள்ளை களுக்கு இந்த உன்னத ஸ்தானத்தை கேட்டத் தாயின் உள்ளத்தில் எவ்வளவு வாஞ்சை இருந்திருக்கும் என்று நாம் யோசித்துப் பார்க்க வேண்டும். தன் பிள்ளை களுக்காக எவ்வளவு ஜெபித்திருப்பாள்! எத்தனை நாள் இராக்காலத்தில் மறைவாக விண்ணப்பித்திருப்பாள்! ஆண்டவரே, இந்த நல்ல பாக்கியத்தை என் பிள்ளைகளுக்கு கொடுக்கவேண்டும்என்றுஜெபித்திருப்பாள். தன் பிள்ளைகளுக்கும்எவ்வளவு போதித்திருப் பாள்."பிள்ளைகளே! நீங்கள் ஆண்டவருக்கு உகந்த பிள்ளைகளாக இருக்க வேண்டும். ஆண்டவருக்கு கீழ்ப்படிய வேண்டும். இதில் கொஞ்சமும் தவறிவிடக் கூடாது என்று தன் பிள்ளைகளுக்குப் போதித்திருப் பாள். தன் பிள்ளைகளுக்காக முழங்காலில் நின்று எவ்வளவு நேரமோ விண்ணப்பித் திருக்கலாம்' எப்பொழுதும் அவளுடைய வாஞ்சை என் பிள்ளைகள் உம்முடைய வலது பாரிசத்தில் இருக்க வேண்டும் என்று நடக்கும் போதும், இருக்கும் போதும் அலப்பிக் கொண்டே இருந்திருக்கலாம். இப்படி சொல்லிக் கொண்டிருந்தால் போதாது ஒரு நாள் நேரடியாக போய் கேட்க வேண்டும் என்று தன் பிள்ளை களுடன் ஆலோசித்து பிள்ளைகளே, என் வாஞ்சை இப்படி இருக்கிறது. ஆகையால் வாருங்கள். நாம் ஆண்டவரிடம் நேரிலே கேட்டால் தான் என் மனதுக்கு சமாதானம் உண்டாகும். நாம் போய் கேட்போம். நீங்களும் கூட வாருங்கள் ஆண்டவர் எது கேட்டாலும் அதற்கு சரி என்று சொல்ல வேண்டும், முடியாது என்று சொல்லக் கூடாது. இந்த நல்ல பாக்கியத்துக்கு ஆண்டவர் ஏதாவது கேள்வி கேட்பார். நீங்கள் அதற்கு சம்மதிக்க வேண்டும், எதைக் கேட்டாலும் சரிதான். உங்களின் உயிரை தேவன் கேட்டாலும் சரிதான் அதற்கு நீங்கள் சம்மதிக்க வேண்டும் என்று போதித்து தன் பிள்ளைகளைக் கூட்டிக் கொண்டு போனாள். 'நீங்கள் கேட்க வேண்டாம். நானே கேட்கிறேன்.

நான் கேட்கும் போது ஆண்டவர் உங்க ளிடம் கேள்வி கேட்பார் உங்களுக்கு மேலான இடத்தைக் கேட்கிறீர்களே! என்னைப் போல நடந்து கொள்வீர்களா என்றும் நான் சொல்வது போல கேட்பீர் களா என்றும் கேட்கும் போது நீங்கள் சம்மதிக்க வேண்டும்' என்று கூறி தன் இரண்டு பிள்ளைகளையும் கூட்டிக் கொண்டு தேவனிடம் போனாள். அப்பொழுது செப தேயுவின் குமாரருடைய தாய் தன் குமாரரோடு கூட அவரிடத்தில் வந்து, அவரைப் பணிந்து கொண்டு: உம்மி டத்தில் ஒரு விண்ணப்பம் பண்ண வேண்டும் என்றாள். அவர் அவளை நோக்கி: உனக்கு என்ன வேண்டும்? என்று கேட்டார் அதற்கு அவள்: உம்முடைய ராஜ்யத்திலே என் குமாரராகிய இவ்விரண்டு பேரில் ஒருவன் உமது வலது பாரிசத்திலும் ஒருவன் உமது இடது பாரிசத்திலும் உட்கார்ந்திருக்கும்படி அருள் செய்ய வேண்டும் என்றாள். இயேசு பிரதியுத்தரமாக நீங்கள் கேட்டுக் கொள்கிறது இன்ன தென்று உங்களுக்குத் தெரியவில்லை நான் குடிக்கும் பாத்திரத்தில் நீங்கள் குடிக்கவும் நான் பெறும் ஸ்நானத்தை நீங்கள் பெறவும் உங்களால் கூடுமா என்றார். அதற்கு அவர்கள்: கூடும் என்றார்கள்மத்.-20 : 20-22. அந்த தாய் தன் பிள்ளைகளுக்கு எவ்வளவு போதித்து கூட்டிக் கொண்டு வந்திருக்கிறாள் என்று பார்க்கிறோம். இந்த உன்னத ஸ்தானத்தை அடைந்து கொள்ள லேசாக முடியாது என்பது அவளுக்கும் தெரிந்திருக் கிறது. ஆகையால் ஆண்டவர் எதைக் கேட்டாலும் உடன் சரி என்று சொல் லுங்கள். எப்படியாவது அந்த ஸ்தானத் தை என் பிள்ளைகளே பெற வேண்டும் என்று எண்ணுகிறாள். ஆண்டவர் ஒரு பயங்கரமான கேள்வியைக் கேட்டார். நான் குடிக்கும் பாத்திரத்தில் குடிக்க-நான் பெறும் ஸ்நானத்தைப் பெறக்கூடுமா? என் றார். அவர் குடிக்கும் பாத்திரம் என்ன? மத். 26-39 தேவன் கெத்சமனே தோட்டத்தில் இராமுழுதும் தன்னுடைய பாடுகளுக் காகஜெபித்தார். 'பிதாவே, இந்த பாத்திரம் என்னை விட்டு நீங்க கூடுமானால் நீங்கட்டும்' என்றார். ஜெபிக்கும் போது பாடுகளுக்குப் போக வேண்டும். பாடாகிய பாத்திரம் அவருக்கு முன்பாக வந்தது. ஆகையால் தனக்கு இருக்கும் பாடுகளைக் குறித்தே பாத்திரம் என்று சொல்லியிருக்கிறார் லூக்கா 12 : 50 'நான் முழுக வேண்டிய ஒரு ஸ்நானமுண்டு. அது முடியுமளவும் எவ் வளவோ நெருக்கப்படுகிறேன்' என்றார். பாடுகளைத்தான்—நான் குடிக்கும் பாத்திரத் தில் பானம் பண்ணவும், நான் பெறும் ஸ்நா னத்தில் பானம் பண்ணவும் கூடுமா என்றார். உடனே மறுக்காமல் அவர்கள் கூடும் என்றார்கள். அது அந்த தாயின் உபதேசம் என்று பார்க்கிறோம். தன் பிள்ளைகள் இவ் வளவு பாடு அனுபவிக்க வேண்டும் என்பது கூட தெரிந்திருந்தும் அதை மறுக் காமல் போதித்திருக்கிறதைப் பார்க்கிறோம். அப்படியானால் தேவனுடைய வலது பாரிசத்தின் நம்பிக்கை அந்த தாய்க்கு எவ்வளவு தெரிந்திருக்கிறது. தேவ னுடைய ராஜ்ஜியத்தைப் பற்றி எவ்வளவு தெரிந்திருக்கிறாள்! எவ்வளவு விசுவாசம் இருந்திருக்கிறது! ஆண்டவர் முக்கியமான இடங்களுக்கெல்லாம் அந்த பையன்களைக் கூட்டிக் கொண்டு போயிருக்கிறார்- மத். 17 : 1; 26 : 37; மாற்கு 5 : 37. தன் தாய் அந்த இரண்டு பிள்ளைகளுக்கும் எவ்வளவாக போதித்திருக்கிறாள். தேவனுக்கு உண்மை யானவர்களாக நடந்து கொள்ள வேண்டும் என்று அதிகமாக போதித்திருக்கலாம். ஆகையால் இயேசு, முக்கியமான காரியங் களுக்கு அவர்கள் இருவரையும் கூட்டிக் கொண்டு போகும்படியாக அதற்கு தகுதி உள்ள பிள்ளைகளாகும்படி போதித்திருக் கலாம் என்று பார்க்கிறோம். தேவனுடைய வலது பாரிசத்தை அவள் கேட்டாள் என்றாள் தன் பிள்ளைகளை தேவனுக்கு உண்மையானவர்களாக காணப்பட போதித்திருக்கலாம். தன் பிள்ளைகளுக்கு நல்ல ஸ்தானத்தை தேடுவது மாத்திரமல்ல அந்த நல்ல இடத்துக்கு தகுதி உள்ள பிள்ளைகளாக மாறுவதற்கு அந்த தாய் அதிகமாக பிரயாசப்பட்டிருக்கலாம் என்றும் எண்ண முடிகிறது.

அன்புள்ள தாய்மார்களே! உங்க ளுடைய பிள்ளைகளுக்கு எதை தேடுகிறீர்

கள்? எதை விரும்புகிறீர்கள்? எதற்காக பக்குவப்படுத்தி வருகிறீர்கள்? அந்த நல்ல நிலைக்கு போதிக்கிறீர்களா? அதற்காக ஜெபிக்கிறீர்களா? நீங்கள் உங்கள் பிள்ளை களுக்காக என்ன செய்கிறீர்கள்? அதற்காக பிரயாசப்படுகிறீர்களா? உங்களை நீங்களே சிந்தித்துப் பாருங்கள். அந்த தாய் தன் பிள்ளைகளின் எதிர் காலத்துக்காக ஒரு பெரிய பதவி எடுப்பதற்கு எவ்வளவு பிரயாசம் எடுத்திருக்கிறாள் என்று பார்க்கிறோம். அநேக தாய்கள் தன் பிள்ளை களின் எதிர் காலத்துக்காக ஜெபிப்பது கிடையாது. போதிப்பது கிடையாது. ஆகையால் அநேக பிள்ளைகள் கீழ்ப்படி யாமை காட்டுகிறது. அந்த பிள்ளைகள் கீழ்ப்படியாமை ஆகும் போது அவைகளை சபிக்கவும், முறுமுறுக்கவும், கோபாவேசம் கொள்ளவும், பிள்ளைகளை பகைக்கவும், வெறுக்கவும் செய்கிறீர்கள். பிள்ளைகளுக்காக கொஞ்சமும் பிரயாசம் எடுக்கிறதில்லை. ஆகையால் தாய்மார்களே, நீங்கள் யோவானுடைய தாயைப் போல, தன் பிள்ளைகளுக்கு நல்ல இடத்தை வாஞ்சித்து அதற்காக பிரயாசப்பட்டது போல நீங்களும் வாஞ்சிக்கவும், அதற்காக பிரயாசப்படவும் செய்யுங்கள்.

'பூமியிலுள்ளவைகளையல்ல,
மேலானவைகளையே நாடுங்கள்'
— கொலோ. 3 : 1,2.

..."அவன் உயிரோடிருக்கும் சகல நாளும் அவனைக் கர்த்தருக்கே ஒப்புக் கொடுக்கிறேன்"... —Iசாமு 1 : 28.

# புதிய எருசலேம் சபை நடபடிகளில் சில

(தொடர்ச்சி)

கிறிஸ்துவுக்குள் பிரியமானவர்களே! நம்முடைய தேவன், நித்தமும் நம்மைப் போதிக்கிறவர். ஆம், "நான் உனக்குப் போதித்து நீ நடக்க வேண்டிய வழியை உனக்கு காட்டுவேன், உன் மேல் என் கண்ணை வைத்து உனக்கு ஆலோசனை சொல்லுவேன்" என்று சொன்னவர் தொடர்ந்து ஆலோசனைக்காரராகவேஇருந்து வருகிறார். அவருக்கே கனமும் மகிமையும் உண்டாவதாக.

நம்முடைய சகோதரர் ஒருவர் பெயர் பால்மணி. இவருடைய சொந்த ஊர் குமரி மாவட்டத்தில் உள்ள ஆலங்கோட்டை. இவர் இந்திய இராணுவத்தில் பணி புரிந்து வந்தார். இவர் இமயத்தின் அடிவாரத்தில் டேராடூன் என்ற இடத்தில் பணி புரிந்து கொண்டிருந்த சமயம் இவரோடு சேர்ந்து இராணுவத்திலுள்ள சில கிறிஸ்தவர்கள் பல மாநிலத்திலுமிருந்து அங்கு வந்தவர்கள் கூடி இறைவனை ஆராதித்து வந்தார்கள். இவர்களுக்கு வேளாவேளைகளில் ஒரு போதகர் வந்து வேத வசனங்களைப் போதிப்பது வழக்கம். ஒரு நாள் அந்தப் போதகர் வந்து வேத வசனங்களைப் புரட்டி போதிப்பதைக் கண்ட நமது சகோதரர் ஆராதனை முடிந்ததும், அந்த போதகரிடம் "ஐயா, தாங்கள் போதித்த வேத வாக்கியத்தின் கருத்து இப்படியல்லவா? நீங்கள் அதை மாற்றிப் போதித்தீர்களே" என்று கேட்டிருக்கிறார். அவர் உடனே ஆத்திரம் அடைந்து "உங்களுக்கு தான் வேதம் தெரியுமே, நான் இனி உங்களுக்குப் போதிக்க வர வேண்டியதென்ன? நான் இனி இங்கே வரமாட்டேன்" என்று கூறி விட்டு போய் விட்டார்.

இதைக் கண்ட அங்குள்ள மக்கள் "சகோதரனே, நீர் எங்களுக்குப் போதகராயிருந்து நீர் அறிந்த சத்தியத்தை எங்களுக்கு போதிக்க வேண்டும்" என்று கேட்டுக் கொண்டார்கள். நான் ஒரு விசுவாசிதான். நான் போதகன் அல்ல, ஆகையால் நான் போதகருடைய வேலையைச் செய்யக் கூடாது. நீங்கள் விரும்பினால் எங்கள் போதகர் தமிழ்

நாட்டில் இருக்கிறார்கள். அவர்களுக்கு நாம் கடிதம் எழுதினால் அவர்கள் வந்து நமக்கு ஆலோசனை தந்து நம்மை தொடர்ந்து கிறிஸ்துவுக்குள் வழி நடத்த தகுந்த வழி காட்டுவார்கள் என்பதாக சகோதரர் பால்மணி கூறியிருக்கிறார். இந்த ஆலோசனை எல்லாருக்கும் நலமாய் தோன்றினபடியால் "சரி, சகோதரரே, அப்படியானால் நீங்கள் உடனே அவர்களுக்கு கடிதம் எழுதுங்கள்" என்று கூறியுள்ளார்கள்.

அதே நாள் இரவில் நாங்கள் வள்ளியூரில் கூடி ஜெபித்துக் கொண்டிருந்த வேளையில்: சகோதரன் பால்மணியுடன் சிலர் கூடி எனக்குஆராதனை செய்கிறார்கள். அவர்கள் என்னுடைய சத்தியத்தை விரிவாய் அறிந்து கொள்வதற்காக உங்களை அழைக்க வேண்டும் என்று விரும்புகிறார்கள். சீக்கிரமாய் அங்கு வரப்போகிறோம் என்று அவர்களுக்கு கடிதம் எழுதுங்கள். நான் உங்களை அங்கே அழைத்துப் போய் என்னுடைய நாமத்தை மகிமைப்படுத்துவேன்" என்று தேவனாகிய கர்த்தர் எங்களோடு பேசினார். மறுநாள் காலையில் சகோதரர் பால்மணிக்கு கர்த்தருடைய ஆவியானவர் வெளிப்படுத்தின செய்தியை நாங்கள் அவருக்கு எழுதினோம். இந்தக் கடிதத்தை அங்குள்ள விசுவாசிகள் எல்லோரும் பார்த்து மிகவும் ஆச்சரியப்பட்டு நாம் இங்கே பேசிக் கொண்ட காரியங்களைக் கர்த்தர் அவர்களுக்கு வெளிப்படுத்தி விட்டாரே, அன்று கொர் நெலியு வீட்டிற்குப் போக வேண்டும் என்று பேதுருவோடு பேசினதுபோல் இந்நாட்களிலும் கர்த்தர் பேசுகிறாரே. அப்படியானால் உங்கள் ஊழியர்களை உடனே இங்கு வரும்படி பிரயாண செலவுக்குப் பணம் அனுப்புவோம் என்று விசுவாசிகள் எல்லோரும் சேர்ந்து நாங்கள் டேராடுன் செல்வதற்காகப் பயணச் செலவுக்கான பணத்தை மணியார்டர் மூலம் அனுப்பிக் கொடுத்தார்கள். கர்த்தருக்கே மகிமையுண்டாவதாக!

அவர்கள் பணம் அனுப்பி தந்தவுடன் நாங்கள் பிரயாணப் படவில்லை. காரணம் நாங்கள் புறப்பட வேண்டிய தேதியைக் கர்த்தர் குறிப்பிடவில்லை கர்த்தர் அனுப்பும் நாளில் உங்களிடம் வருகிறோம் என்று அவர்களுக்கு மடல் வரைந்து விட்டோம். சுமார் மூன்று மாதங்களுக்குப் பின்புதான் கர்த்தர் எங்களை டேராடுனுக்குப் புறப்பட அனுமதித்தார். இதிலும் ஒரு அற்புதம் நடப்பிக்க தேவன் விரும்பி எங்களை தாமதமாக அனுப்பியுள்ளார் என்பதை அங்கு போன பிறகு நாங்கள் அறிந்து கொண்டோம். அங்குள்ள விசுவாசிகள் கூடிப் பேசிக் கொண்ட காரியங்களை நெல்லை மாவட்டத்திலிருந்த எங்களுக்குத் தேவன் வெளிப்படுத்தியுள்ளார் என்கிற செய்தியானது அங்குள்ள இராணுவ அதிகாரிகளுக்கும் தெரியவரவே, எங்களுடைய வரவை எதிர் பார்த்து எங்களை வரவேற்பதற்காக சகோதரர் பால்மணியுடன் சில ராணுவ வீரர்களும் இராணுவ உடையுடன், இராணுவ வாகனத்தில் கிளமண்ட் டவுனிலிருந்து டேராடுன் புகைவண்டி நிலையத்துக்கு வந்திருந்தார்கள். நாங்கள் இறைவன் இயேசுவின் திருத்தொண்டர்கள் என்பதை அறிந்து கொண்ட அவர்கள் எங்களுக்கு இறை மரியாதை செய்து அழைத்துச் சென்றார்கள்.

நாங்கள் சேர வேண்டிய இடத்திற்குப் போய் சேர்ந்த பின்பு சகோதரர் பால்மணி கூறினார், போன மாதம் வந்திருந்தால் எல்லா விசுவாசிகளையும் சந்தித்திருக்கலாம். இப்போது இராணுவத்தினர் உடற்பயிற்சிக்காக (Exercise) வெளியிடம் சென்று விட்டார்கள். திரும்பி வருவதற்கு இன்னும் ஒரு மாத காலமாகும் என்பதாகக் கூறினார். எங்களுக்கு சிறிது கவலையாகத் தோன்றினாலும், கர்த்தர் எங்களை இந்த நாட்களில் தான் அனுப்பினார். அவருடைய சித்தம் செய்து விட்டு நாங்கள் செல்லுவோம் என்பதாகக் கூறினோம். சில இராணுவ அதிகாரிகளும், இராணுவ வீரர்களும் முகாமில் தங்கியிருந்தார்கள். இராணுவ அதிகாரிகள் எங்களைப் பார்க்க வேண்டும் என்று விரும்பி எங்களை முகாமிற்குள் அழைத்திருந்தார்கள். நாங்கள்

அதிகாரிகளுடைய அறைக்குள் சென்றதும் அதிகாரிகள் யாவரும் எழுந்து நின்று எங்களுக்கு மரியாதை செய்த காட்சியை நினைக்கும் பொழுது, அன்று கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை சுமந்து சென்ற கழுதையின் பாதங்கள் தரையில் படாதபடி தங்கள் வஸ்திரங்களை எல்லாம் வழியில் விரித்தார்கள் என்ற சம்பவமே எனக்கு ஞாபகத்திற்கு வருகிறது.

அந்த அதிகாரிகள் எங்களுடைய அழைப்பு பற்றியும், இறைவனிடம் நாங்கள் எப்படி உறவாடுகிறோம் என்பது பற்றியும் எங்களிடம் கேட்டார்கள். நாங்கள் அவர்களுக்கு தேவ அழைப்பைப் பற்றி விளக்கமாய் கூறினோம். நீங்கள் எவ்வளவு நாட்கள் இருப்பீர்கள் என்று கேட்டார்கள். எத்தனை நாட்களென்று எங்களால் சொல்ல இயலாது. கர்த்தர் அனுப்பும் பொழுது நாங்கள் போய் விடுவோம், என்பதாகக் கூறினோம். "நீங்கள் கொஞ்ச நாட்களுக்கு முன்பு வந்திருந்தால் உங்கள் பிரயாணம் பிரயோஜனமாயிருந்திருக்கும்" என்று மற்றொரு அதிகாரி கூறினார். நாங்கள் சுயமாய் எங்கும் செல்லமாட்டோம் என்பதை அவர்கள் புரிந்து கொண்டார்கள். அவர்களுக்காக வேண்டுதல் செய்து விட்டு நாங்கள் இரவில் தங்கும் விடுதிக்குச் சென்று விட்டோம்.

நாங்கள் அதிகாரிகளுடைய அறையை விட்டு வெளியே வந்த சில வினாடிகளுக்குள்ளாக உடற்பயிற்சிக்காகச் (Exercise) சென்றிருந்த இராணுவ வீரர்களிடமிருந்து தொலைபேசி மூலமாக செய்தி வந்திருக்கின்றது. "நாங்கள் தங்கியிருக்கும் இடத்தில் பயங்கரமான குளிராய் இருப்பதால் தொடர்ந்து பயிற்சி எடுக்க முடியாது. எனவே நாளை மாலைக்குள்ளாக இராணுவம் கிளைமண்ட் டவுனுக்கு வந்துவிடும்" என்பதாகச் செய்தி வந்துள்ளது! இந்தச் செய்தியைக் கேட்டதும் அங்கிருந்த அதிகாரிகளுக்கு மிகுந்த ஆச்சரியம்! ஒரு தடவையும் பயிற்சி காலத்தைப் பாதியில் நிறுத்தி விட்டு இராணுவத்தினர் வந்தது கிடையாது. இந்த ஆண்டில் இது விசேஷமாய்க் காணப்படுகிறது. இங்கே தேவனுடைய ஊழியர்கள் வந்திருப்பதால் அந்த தேவனே இராணுவ வீரர்களை நாளைக்கு அழைத்து வருகிறார்; இது மிகவும் ஆச்சரியமாய் இருக்கிறதே என்று ஒருவரோடொருவர் பேசியிருக்கிறார்கள். மறுநாள் அதிகாலையில் ஒரு அதிகாரி சகோதரர் பால்மணியை அழைத்து உண்மையாகவே நம் மத்தியில் வந்திருப்பவர்கள் தேவனுடைய மனிதர்கள். அவர்களை தேவனே நமது மத்தியில் அனுப்பியிருக்கிறார் என்பதை அதிகாரிகள் எல்லோரும் நம்புகிறார்கள் என்பதாகக் கூறினார்கள். கர்த்தருக்கே மகிமையுண்டாவதாக. நாங்கள் வெள்ளிக்கிழமை மாலையில் அங்கு போய் சேர்ந்தோம். மறுநாள் சனிக்கிழமை மாலைக்குள்ளாக எல்லா ராணுவத்தினரும் வந்து சேர்ந்து விட்டார்கள். கர்த்தருக்கே மகிமையுண்டாவதாக!

(தொடரும்)

Pastor S. Sundarraj
Vallioor.

---

"ஒருவனும் என் ஆடுகளை என் கையிலிருந்து பறித்துக் கொள்வதுமில்லை"
(யோவான் 10 : 28)

---

# சாட்சி

(சென்ற இதழ் தொடர்ச்சி)

சென்னை சென்று ஒரிரு மாதங்களுக்குள்ளாக அடியேனுக்கு தேவன் சென்னையிலிருந்து 37 கி.மீ தூரத்தில் ஒரு வேலையைக் கட்டளையிட்டார். இவ்வாறாக வேலை செய்து கொண்டிருந்த சமயத்திலே தேவனுடைய சபையாகிய 'புதிய எருசலேம் சபை' யைப் பற்றிக் கேள்விப் பட்டேன். அங்கு செல்ல வேண்டும் என்ற அவா நீண்ட நாட்களாகவே என்னையறியாமலே காணப்பட்டது. முதன் முதலாக 'புதிய எருசலேம் சபை'

சென்னை கிளையிலே 13-4-80 பரிசுத்த ஆராதனையில் கலந்து கொள்ள அடியேனுக்குத் தேவன் கிருபை செய்தார். சகோதர ஐக்யமும் அன்பும் அடியேனை மிகவும் கவர்ந்தது ஆத்துமாவுக்கு மிகவும் பிடித்திருந்தது. ஒழுங்காக ஆராதனைக்குச் சென்றேன். ஒரு மாதத்திற்குப் பின்பாக முதன் முதலாக 'புதிய எருசலேம் சபை' தமிழ் நாடு அப்போஸ்தலர் ஐயாவையும், தீர்க்கதரிசி ஐயாவையும் சந்திக்க தேவன் ஒரு நல்ல தருணத்தை அருளினர். அவர்கள் இருவரும் சென்னை வந்திருந்தனர். அவர்களின் அன்பும், விசாரிப்பும் அடியேனை அதிகமாகக் கவர்ந்தது. அடியேன் அப்போஸ்தலர் ஐயாவிடம் ஜெபிப்பதற்காகச் சென்றிருந்தேன். அடியேன் முழங்கால் படியிட்டவுடனேயே பாவங்களை அறிக்கையிடும்படி கூறினர்கள். நான்தான் தேவனிடத்தில் அறிக்கை செய்து விட்டேன் என்று கோபத்தில் எழும்பி விட்டேன். வேத வசனத்தின் மூலமாக எப்படி அறிக்கை செய்ய வேண்டும் என்றும், யாரிடத்தில் அறிக்கை செய்ய வேண்டும் என்றும் அவர்கள் எனக்கு போதித்தார்கள். வேதம் அவ்வாறு கூறுவதினல் அரைகுறை மனதோடு பாவங்களை அறிக்கையிட்டேன். அடியேனை தேவன் பரிசுத்த ஆவியால் அபிஷேகித்தார். சபை எனக்கு மிகவும் ஆத்துமாவுக்குப் பிடித்தது. ஆனல் பாவ மன்னிப்பின் உபதேசத்தைப் பற்றி சரியாகப் புரியாதவனுக இருந்தேன். ஒரு நாள் திடீரென்று இரவிலே ஒரு தரிசனம் கண்டேன். ஒருவர் தாடி வைத்துக் கொண்டு ஒட்டக மயிர் உடை தரித்து காணப் பட்டார். அதன் பின்பாக வேறொருவர் தாடி வைத்துக் கொண்டு வெள்ளை உடை அணிந்து காணப்பட்டார். பின் அந்த தரிசனம் மறைந்து விட்டது. சிறிது நாட்களுக்குப் பின்பாக அதே தரிசனத்தை மறுபடியுமாக கண்டேன். ஆனல் ஒரு சத்தம் பின் வருமாறு தொனித்தது: ஒட்டக மயிர் உடை தரித்து காணப்பட்டவர் யோவான் ஸ்நானன் என்றும் அவர் பாவமன்னிப்பின் அதிகாரம் பெற்று இயேசுகிறிஸ்துவின் முதலாம் வருகைக்கென்று ஒரு சிலரை ஆயத்தப் படுத்தும் படி அனுப்பப்பட்டு வந்தாரென்றும், வெள்ளை உடை அணிந்து காணப்பட்டவர் உலகத்திலே தற்பொழுது உள்ளவர் என்றும் இவரும் பாவமன்னிப்பின் அதிகாரம் பெற்று இயேசுகிறிஸ்துவின் இரண்டாம் வருகைக்கென்று ஒரு கூட்ட மக்களை ஆயத்தப் படுத்தும்படி அனுப்பப்பட்டு வந்துள்ளார் என்றும் அறிவித்தது உணர்ந்து கொண்டேன். சபையின் தலைமையைப் பற்றி எனக்கு ஒன்றும் அந் நாட்களில் தெரியாதிருந்தது. இத் தரிசனத்துக்குப் பின்பாக அடியேன் பாவமன்னிப்பின் உபதேசத்தை முழுமனதோடு ஏற்றுக் கொண்டு என்னுடைய பாவங்களை அறிக்கையிட்டேன். என்னுடைய பாவங்கள் என்னை விட்டு ஒவ்வொன்ருக ஓட ஆரம்பித்தது. 1980 செப்டம்பரிலே சென்னை பட்டணத்திலே வேலைக்குச் சேர்ந்தேன்.

அடியேன் துரைசாமியாபுரத்தில் நடந்த ஞானஸ்நான கூட்டத்தில் 25-4-1981 ல் பேதுரு 3 : 21 ல் சொல்லப்பட்டபடி தேவனேடு உடன்படிக்கை செய்து கொண்டேன். அதன் பின்பாக தேவனுக்கு ஊழியம் செய்ய வேண்டும் என்று அநேக முறை தேவ அழைப்புப் பெற்றேன். அடியேன் அதை அல்லத் தட்டிக் கழிக்கிறவனுகக் காணப்பட்டேன். இதினிமித்தமாக அடியேனுக்கு அநேக கஷ்டங்களும், நஷ்டங்களும் ஏற்பட்டது. உலக வேலையில் அடியேனுக்கு ஆசீர்வாதங்கள் கிட்டவில்லை. இந்த சமயங்களிலே சாத்தான் அடியேனை புதிய எருசலேம் சபையை விட்டுப் பிரித்து விட பல தந்திரங்களைக் கையாண்டான். அநேகரிடமிருந்து எந்த சபைக்கானலும் போ ஆனல் ... புதிய எருசலேம் சபைக்கு மட்டும் போகாதே என்று துர் ஆலோசனைகள் கிடைக்கப் பெற்றேன்.

தேவனே இறுதியில் ஜெயம் பெற்ருர். அதினிமித்தமாக அடியேனுடைய கால்கள் எருசலேமின் வாசல்களிலே நிற்கலாயிற்று— சங். 122 : 2.

அடியேன் தேவனுடைய திரு சித்தத்துக்கு என்னை ஒப்புக் கொடுத்து கர்த்தருடைய கிருபையால் *19-6-84* முதல் பம்பாயில் தலைமை சபையில் ஊழியர் பயிற்சியிலுள்ளேன். தமது சித்தத்தின் ஆலோசனைக்குத் தக்கதாக எல்லாவற்றையும் நடப்பிக்கிற அவருடைய தீர்மானத்தின் படியே, நாங்கள் முன் குறிக்கப்பட்டு, கிறிஸ்துவுக்குள் அவருடைய சுதந்தரமாகும்படி தெரிந்து கொள்ளப்பட்டோம்—எபே 1 : 12.

அடியேனுடைய சாட்சியை 'புதிய எருசலேம் சபை செய்தி'யிலே பகிர்ந்து கொள்ளும் படியாக தேவன் அடியேனுக்கு கிருபையும் இரக்கமும் செய்தபடியால் தேவனை மகிமைப் படுத்துகிறேன், வாழ்த்துகிறேன், வணங்குகிறேன். அடியேனுடைய முழுக் குடும்பமும் தேவனுடைய சபையாய் மாறும்படியாக யாவரும் ஜெபிக்கும்படியாகக் கேட்டுக் கொண்டு அடியேனுடைய சாட்சியை இயேசுவின் நாமத்தில் முடிக்கிறேன்.

Eld. Bro. D. M. David Samuel
Bombay.

# JESUS CHRIST'S AUTHORITY AND COMMANDMENT OF REMISSION OF SIN

JESUS CHRIST gave commandments unto the apostles, through the Holy Ghost, after His resurrection—Acts 1 : 1.

The first commandment, which Jesus Christ gave unto His apostles in the day of His resurrection is the authority of remission of sin (Jn. 20 : 23). The same day in which He was risen, when the doors were shut where the disciples were assembled for the fear of the Jews, JESUS suddenly appeared in the midst and said unto them, peace be unto you. Then He breathed on them and said unto them, Receive ye the Holy Spirit : Whosesoever sins ye remit, they are remitted unto them, and whose soever sins ye retain, they are retained.

"When he had so said he showed unto them His hands and His side. Then the disciples were glad, when they saw the Lord. Then Jesus said to them again, peace be unto you : as my Father hath sent me, even so send I you. And when He had said this, He breathed on them and said unto them, Receive ye the Holy Spirit : whose-soever sins ye remit, they are remitted unto them; and whosesoever sins ye retain they are retained (Jn. 20 : 20—23).

In understanding this commandment and doctrine, the christian world is getting perplexed. They give interpretation in their own way and walk in it. The Roman chatholics are of the opinion "whatever may be the life of the servant of God (Teacher), he has the authority to forgive sins, according to the writtings. It is something like : A bishop went for a walk in the beach, and he saw few young boys were playing. And one among them acted as a minister of God and gave baptism in the name of the Father, Son and the Holy Spirit. Then the boys ceased from playing and the bishop declared the baptism is valid, because the baptism service was conducted according to the writtings. Here the boys have neither repented nor confessed their sins and forshook them and the boy who acted as a minister of God need not be a minister of God, even then their baptism is accepted, only because the ceremony was condcuted in order. The Protestant people give divers kind of interpretation for the verse Jn. 20 : 23 and walk accordingly. The Pentecostal people do not have the proper understanding of the authority of Jn. 20 : 23, though they weep and pray for their sins being convicted of them and at times they confess in the midst of the congregation. The groups like Brethern, Baptist etc where the elders govern the church say "Baptism is not essential for salvation," and they proclaim "when a person beleives Jesus Christ, he obtains salvation and then he must take baptism." They behave as if they give much honour unto God, and cast away the word of God, giving self interpretation to Jn. 20 : 23, and they say, "Man has no authority." The independent workers walk in their own way, being initiated by their own spirit, without having any base and not obeying in all things to the word of God. They interpret all the words according the places where they are.

It is not a great matter to wonder. Even the earlier apostles who received direct commandments from God took ten years to understand the commandment, and God led

them forcibly. If the matter is so concerning them how much should be for the present generation. God commanded to the disciples, "Go ye, into all world and preach to all nations and to every creature, the gospel of repentance and make them disciples (Mt. 28 : 19; Mk. 16 : 15). But they thought the salvation is only for the Jews and did not depart from Jerusalem. Due to tribulation, after St. Stephen was killed as martyr, the people of the Jerusalem church were scattered and wherever they went, they preached the gospel only to the Jews, Few went to Samaria and preached gospel to the Samaritans for they were the mixed nation of Jews and Assyrians. Philip, the evangelist preached there and brought many to the faith (Acts 8 : 1-12). But the gospel not yet reached the gentiles. Even after ten years the disciples could not understand the commandment of God.

When the things were so, one day Peter went to the upstairs in house of Simon, the tanner in the city of Joppa at the noon time and started praying Then he fell into a trance and had a heavenly vision. God showed unto Peter that he should not call anything common, what God had cleansed. At the same time, the Holy Spirit commanded him to go with them that shought him, doubting nothing (Acts 10 : 9—20).

Accordingly, he went and preached the gospel unto the household of Cornelius a heathen and joined them into the church by giving baptism. He came back to Jerusalem after staying with them for few days (Acts 10 : 21—48). Then the men of the church at Jerusalem contended with him. But Peter reviewed the matter from the beginning and expounded it in order unto them saying, God saves the gentiles and He led me, what was I that I could withstand God. When they (men who were filled with the Holy Spirit) heard these things, they held their peace, and glorified God saying. Then God had also to the gentiles granted repentance unto life (Acts 11 : 3—18). The gospel started reaching all parts of the world.

Yea, even for the apostles who received direct commandment, took more than ten years to understand this primary commandment, how could then this present day fallen Christians, who received no commandment or authority and have no church, understand the commandment given in the resurrected day of Jesus Christ for these have no apostle. Is it not necessary for an apostle to explain that we may understand, and will not those who received the Holy Spirit understand. Is it not written, the Holy Spirit will bring all things to your remembrance, whatever I (Jesus) said unto you (Jn. 14 : 26). Hence it will be known (brought to remembrance) to only who have received the Holy Spirit (Brought to remembrance only to them who have heard).

Therefore, according to John 20 : 23, the true Church or the true apostle has the authority to grant forgiveness of sin. We are not wondering for this doctrine is not understandable by them who have neither apostlic doctrine nor church. we rejoice since all appose it. We understand that every one is wrong. We thank and praise God for the revelation and the commandment. We believe that after the fall of the earlier church, the foundation is handed over only unto us. The pure gospel, the doctrine of reconcilation is preached perfectly again for the second time from New Jerusalem.

"He that hath ears, let him hear and whosoever will, let him take the water of life freely."

"And he said unto me, Thou must prophesy again about many peoples and nations, and tongues, and kings"—Rev. 10 : 11.

He said unto them, He that hath ears to hear, let him hear"—Mk. 4 : 9.

"The Spirit and the bride say, come. And let him that is athirst come. And whosoever will, let him take the water of life freely"—Rev. 22 : 17.

"The multitudes glorified God, who had given such power unto men"—Mt. 9 : 8.